# சித்தர்களின் வாழ்வியல்

பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கு முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு


**முழுநேர ஆய்வாளர்**

**ப.சுபத்திரா** எம்.ஏ., எம்.எட்.,

(பதிவு எண். **19367/ Ph.D2/ Tamil/ F.T/ July 2012/Date: 24.07.2012**)

**நெறியாளர்**

முனைவர் **ஜெ.ஜெயவாணிஸ்ரீ**

முதுகலை (தமிழ், சமசுகிருதம், ஆங்கிலம், சமூகவியல், சோதிடவியல்), பட்டயப் பயிற்சி (சுவடியியல், கணினியியல், கல்வெட்டியல்), பிஎச்.டி.,






**தமிழ்த்துறை**

**அரசினர் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),**

**கும்பகோணம் – 612 001**


**ஜீலை 2017**

# நெறியாளர் சான்றிதழ்

முனைவர் **ஜெ.ஜெயவாணிஸ்ரீ**

முதுகலை (தமிழ், சமசுகிருதம், ஆங்கிலம், சமூகவியல், சோதிடவியல்), பட்டயப் பயிற்சி (சுவடியியல், கணினியியல், கல்வெட்டியல்)

**ஆய்வு நெறியாளர் மற்றும் உதவிப்பேராசிரியர்,**

**தமிழ்த்துறை,**

**அரசினர் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),**

**கும்பகோணம் - 612 001.**

**"சித்தர்களின் வாழ்வியல்"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு கும்பகோணம், அரசினர் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் 2012 – 2017 ஆம் கல்வியாண்டு வரை என் மேற்பார்வையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளராக **ப. சுபத்திரா** என்பவரால் ஆய்வு செய்து அவரது சொந்த முயற்சியால் உருவாக்கப்பட்டது என்றும், இவ்வாய்வேடு இதற்கு முன் எந்த பட்டத்திற்கும் வழங்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**இடம்: கும்பகோணம்**

**நாள் : .06. 17.** **ஆய்வுநெறியாளர் சான்றொப்பம்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**திருமதி ப. சுபத்திரா, எம்.ஏ., எம்.எட்,**

முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,

அரசினர் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),

கும்பகோணம் - 612 001.

**"சித்தர்களின் வாழ்வியல்"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு கும்பகோணம், அரசினர் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் 2012 – 2017 ஆம் கல்வியாண்டு வரை முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளராக ஆய்வு செய்த காலத்தில் என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: கும்பகோணம்

நாள் : .06. 17.

**நெறியாளர் சான்றொப்பம்** **ஆய்வாளர் சான்றொப்பம்**

**துறைத்தலைவர் மேலொப்பம்**

## நன்றியுரை

ஆய்வு நோக்கில் “**சித்தர்களின் வாழ்வியல்**” என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு என் பணிவான நன்றிகள். கும்பகோணம், அரசினர் மகளிர் **கல்லூரி முதல்வர்** அவர்களுக்கும் என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு காலத்தில் அறிவுரைகள் வழங்கிய **தமிழ்த்துறைத் தலைவருக்கு** என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்விற்குச் சிறந்த வழிகாட்டியாகவும், என்னை நன்முறையில் செம்மைப்படுத்தி ஊக்கமளித்து நெறிப்படுத்திய நெறியாளரான **முனைவர்ஜெ.ஜெயவாணிஸ்ரீ** முதுகலை (தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம், சமூகவியல், சோதிடவியல்), பட்டயப்பயிற்சி (சுவடியல், கணினியியல், கல்வெட்டியல்) அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்ஆய்வுப்பணி செம்மையுற உதவிய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவ்வாய்விற்குத் தேவையான நூல்களை உரிய நேரத்தில் வழங்கி உதவிய கல்லூரித் துறை நூலகத்தார்க்கும், பொது நூலகர் **மதிவானன்** அவர்களுக்கும், கும்பகோணம் சிவகுருநாதன் நூலகத்திற்கும், பாரதிதாசன் பல்கலைக் கழக நூலகத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாரதிதாசன் பல்கலைக்கழக உதவிப்பேராசிரியர் மற்றும் தொலைத்தொடர்பு கல்வி நிறுவனத்தின் பொறுப்பு வகிப்பவருமான **கோசிந்தராஜ்** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை ஈன்று ஆளாக்கியதோடு வாழ்வில் மென்மேலும் எல்லா நிலைகளிலும் வளரத் துணை நிற்கும் என் பெற்றோருக்கும், என் கணவருக்கும் என் சகோதரருக்கும் மற்றும் என் தோழியருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உரிய நேரத்தில் கணினி அச்சு செய்து கொடுத்த 'விநாயகா பதிப்பக'த்தாருக்கும், கணினி மையம் தட்டச்சர் **இரா. செந்தில்குமார்** அவர்களுக்கும் என் உள்ளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றியுடன்

**ப. சுபத்திரா.**

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| ஆ. பெ. இ. | - ஆசிரியர் பெயர் இல்லை. |
| உ. ஆ. | - உரையாசிரியர் |
| குறள் | - திருக்குறள் |
| கு. ஆ. | - குறிப்புரை ஆசிரியர் |
| ப. | - பக்கம் |
| பா. | - பாடல் |
| பக். | - பக்கங்கள் |
| ப. ஆ. | - பதிப்பாசிரியர் |
| ப. ஆ. இ. | - பதிப்பு ஆண்டு இல்லை. |
| தொ. ஆ. | - தொகுப்பாசிரியர். |
| மேலது. | - மேலே குறிப்பிட்ட ஆசிரியர் மற்றும் நூல். |

# முடிவுரை

சித்தர் மரபு என்பது முழுக்க இந்திய மரபுதான் என்பது அறுதியிட்டுக் கூறமுடியும். ஒருவகையில் சித்தர்கள் கடவுளை மறுக்காத கிளர்ச்சிக்காரர்கள். சமயம் என்பது ஒரு நெறிமுறைகளால் ஆன ஒரு நிறுவனமன்று; அஃது ஓர் உள்ளுணர்வு; பரம்பொருளுடனான ஒரு நேர்முகச் சந்திப்பின் அனுபவம் என உணர்த்தப்பட்டுள்ளது.

சித்தர்கள் கூறும் கருத்தை விவரித்துப் புரியும்படி சொல்லாமல் மறைத்துக் கூறியிருப்பதால் பலருக்கு நூல்களின் உண்மை கருத்து புலனாகாமல் போகிறது. இதனால் குழப்பமடைந்து ஆன்மீகமாவது, சித்தர்களாவது என்று விட்டுவிலகி விடுகிறார்கள். அதனால் வேறு வகைகளில் சிக்கித் தவிக்கிறார்கள். வாழ்க்கை அவதிகளுக்குள்ளும் நோய்களுக்குள்ளும் அகப்பட்டு சிரமத்திற்கு ஆளாகிறார்கள். ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்வில் நரை, திரை, மூப்பு, சாக்காடு என்பது மறுக்கமுடியதாத ஒன்றாகும். இதிலிருந்து மனித உடல் உறுப்புகள் அழியாமல் சிதறாமல் பாதுகாக்கும் வழிமுறைகளை யோகம், வைத்தியம், வானியல், ஆன்மீகம் எனும் முறையில் கையாண்டு உலகிற்கு எடுத்து உரைத்துள்ளனர். சமூக நோக்கை உள்ளடக்கிய சித்தர் மெய்யியல் உலக அளவிலான ஒரு புதிய மானுடக் கொள்கையின் ஆரம்பமாக அமைந்துள்ளது என்பது நிருபிக்கப்பட்டுள்ளது.

ஆசனங்கள் பிராணயாமம் எனப்படும் வாசியோகத்திற்கு அடிப்படையாக அமைகின்றன. யோகப் பாதையில் செல்லும் யோகியர்கள் தியான விளைவுகளைப் பெறத் துணை புரிந்த ஆசனங்கள் இக்காலத்தில் உடலுக்கு வலிமையினையும், உள்ளத்திற்குப் பயிற்சியினையும் தருவதற்காகவே பயன் படுத்தப்படுகின்றன என்பது ஆராயப்பட்டுள்ளது.

ஆன்மிகத்தில் ஆழமாகக் கால்கொண்டதாக, எந்தக் கருத்துக்கும், நாட்டுக்கும், சமயத்துக்கும், சமூகக் குழுவுக்கும் கட்டுப்படாமல் ஆன்மிகக் கருவூலமாகத் திகழ்கிறது என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

தீயனவற்றை விலக்கி நல்லனவற்றைக் கொண்டு, வாசியினை நிலைப்படுத்தி, பிறசெயல்களில் கருத்தினைச் செலுத்தாது, ஒப்பற்ற ஒன்றில் நிலைக்கச் செய்து, எந்தவித அசைவுகளுமின்றித் தானே தானாக நின்று, நிருவிகற்ப வாழ்வில் நிலைக்கச் செய்வது என்னும் இவ்வெட்டு அங்கங்களையும் கொண்டதாக விளக்குகின்ற காரணத்தால் இவ்யோகத்தை ‘அட்டாங்கயோகம்’ என்ற நிலையில் சித்தர்கள் விளங்கினர் என்பது தெளிவாகிறது.

பத்திரகிரியாரைக் கள்வனென்று கழுவேற்றும் பொழுது கழுமரம் பற்றி எரிந்ததும், இறைவனின் திருவருள் பெற்ற திருஞானசம்பந்தர் பூம்பாவையின் சாம்பலை மீண்டும் பெண்ணாக்கியதும், திருமருகலில் கண் அரவு தீண்டி இறந்த வணிகன் உடலை உயிர்ப்பித்ததும், அப்பர் அரவு தீண்டிய சிறுவனை உயிருடன் மீட்டதும், சுந்தரர் முதலை உண்ட சிறுவனை வாலிபனாக மீட்டதும், கடுவெளிச் சித்தர் இரும்பை இறைவனைக் கோபித்துப் பிளந்து விழச் செய்ததும் இத்தகைய மரண மாற்றும் சக்தியாலேயே நடைபெறும் என்பது அறிந்துக்கொள்ளமுடிகிறது.

உருமற்ற இறைவனுக்குரிய ‘சிவபெருமான்’ என்ற பெயரை உருவமுள்ள ருத்திரனைக் குறிக்குமாறு சித்தர்கள் கூறிவருவதால் இறைவன் வேறு தெய்வம் வேறு என்ற உண்மை மறைந்துவிட்டது. மனித உடலை இயக்குகின்ற சீவன் என்ற உயிர் சிவலிங்கம் போன்ற ஒளி வடிவமுடையது. உண்ணாக்கு மேலே உச்சிக் குழிக்குக் கீழே அமைந்துள்ள பிரம்ம மந்திரம் என்ற நுண்ணிய நரம்பினுள்ளே சீவன் ஒளிர்கின்றது.

மனிதனுக்கு தூல தேகத்தைப் போலவே, சூக்கும சரீரம் என்ற ஒளி சரீரமும், காரண சரீரம் என்ற பஞ்சபூத தேகமும் உள்ளன. சூச்சும சரீரம் பிரம்ம மந்திரத்தினுள் சீவனுக்குக் கீழே அமைந்துள்ளது. காரண சரீரம் அமைந்துள்ள இடம் பிரம்ம ரகசியமானது.

குரு உபதேசத்தால் காரண சரீரத்தைக் கண்டு ஞானப் பயிற்சி எனும் குண்டலினி யோகத்தின் பயிற்சியினால் சூக்கும சரீரத்தை உயர்த்தி சீவனோடு

உட்புகுவதற்கு பிறப்பை அறுக்கும் நிலையே ‘முக்திநிலை’ என்பதும், சித்தர்கள் ஞானிகள் ஒடுங்குவது தூய்மையான மரணமாகும். மற்ற அனைவரும் உயிர் துறப்பது அசுத்த மரணமாகும் என்பதும் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

ஞானமார்க்கத்தில் ஈடுபடுவோர் கொலை, களவு, போதைப் பொருள் உண்ணல், மாற்றான் மனைவியை அபகரித்தல், பொய்ச் சாட்சியம் கூறுதல் ஆகிய தீச்செயல்கள் செய்தல் கூடாது. சித்தர்களும் ஞானிகளும் மண்ணுக்குள் அடக்கம் செய்யப் பெற்ற பின்னரும், சூச்சும சரீரத்தோடு உலாவருவர்.

ஆழ்வார்களும், நாயன்மார்களும், தாயுமானவரும், முகமதியர்களும், கிறித்துவர்களும் தந்து செல்வது ‘பத்தி’ தரும் ஒருமைப்பாட்டை எண்ணி வியக்கச் செய்வதாகக் கருதமுடிகிறது.

இல்லறநெறி என்னும் நல்லற நெறியில் நின்று உடல், உள்ளம் முதலானவற்றைத் தூய்மை செய்து நோய்களை நீக்கி, நம்முடைய அன்றாடச் செயற்பாடுகளைச் சீர்மைப்படுத்தி, சமுதாய நடைமுறைகளையும் நன்கு உணர்ந்து எல்லோருக்கும் நன்மையளிக்கும் விதத்தில் வாழ்வதே பேரின்பத்தை அடைய வழிவகுக்கும். நம்முடைய ‘பெருவாழ்வு’ வினையும் நிலை நிறுத்துகிறது.

மனித ஆற்றல் மாபெரும் ஆற்றல். ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ளாற்றல்கள் பல புதைந்து கிடக்கின்றன. மனித ஆற்றல், மாபெரும் ஆற்றல் என்பதை நேரடியாக உணர்த்தாமல் மறைமொழியாகச் சமுதாயத்திற்கு உணர்த்தியவர்கள் சித்தர்கள். இத்தகைய ஆற்றலை அகழ்ந்து எடுப்பதே இவ்வாய்வேட்டின் நோக்கமாக அமைந்துள்ளது.

உயிர்ப் பறவையின் கூடாகவும், உணர்வுகளின் வீடாகவும் விளங்கும் உடலை ஊறு வாராமல் காத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகப் பல இருக்கை முறைகளையும் அட்டாங்கயோகம், குண்டலினி முதலான பல யோகங்களையும் உருவாக்கித் தந்த உயிர் வளர் கலைஞர்கள் சித்தர்கள் என்பது ஆராயப்பட்டுள்ளது. மனித உடலில் 72 ஆயிரம் நாடிகள் உள்ளன.

மனிதர்களைக் காட்டும் நோய்நொடிகளும் அத்தனை உள்ளன. அந்நோய்களை நீக்கவல்ல ஓரே மருத்துவம் சித்தமருத்துவம் என்பதை உணர்த்தியவர்கள் சித்தர்கள்.

சாகாக்கலை என்னும் வாழ்க்கைக் கலையே உலகோர்க்கு உணர்த்தியதோடு தாமும் வாழ்ந்துகாட்டிய தவசீலர்கள் சித்தர்கள் என்பதை உணர்த்தும் யோகநெறிகளைக் கைக் கொண்டு வாழ்தல் முறை விளக்கப்பட்டுள்ளது.

இல்லறத்தார், துறவறத்தார் ஆகிய இருதிறத்தார்க்கும் வாழ்வியல் நெறியில் உண்மையான பக்திக்கும், போலியான பக்திக்கும் வேறுபாடு உணர்த்திய ஆன்மிக ஞானிகள் சித்தர்களே என்பதை அறிந்து அவர்தம் வழிநின்று ஒழுகுதல் வேண்டும் என்ற நெறி விளக்கப்பட்டுள்ளது. உருவவழிபாடு, ஆரவாரச் சடங்குகள், பொருந்தாத சம்பிரதாயங்கள், மூடநம்பிக்கைகள் முதலானவற்றை எடுத்துக்காட்டி, பக்திநெறியில் புத்தொளி பரப்பிய புரட்சிப் பக்தியாளர்கள் சித்தர்கள் என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

வான்வெளிச் செல்லுதல் கூடுவிட்டுக் கூடுபாய்தல், பஞ்சலோகங்களையும் பொன்னாக்குதல் முதலான சித்து விளையாட்டுகளையும் செய்து அவற்றின் மூலம் மக்களை ஈர்த்து, ஒழுக்கநெறிகளையும், உடலோம்பும் முறைகளையும் மக்களுக்குக் கற்றுக் கொடுத்த உளவியல் நிபுணர்களாகத் திகழ்ந்தவர்கள் சித்தர்கள் என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

‘ஒன்றே குலம் ஒருவனே தேவன்’ என்பதை உணர்ந்து, சாதிசமயச் சண்டைத் தவிர்த்து ஒருமைப்பாட்டுடன் வாழ முற்படுதல், ‘யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்’ என்னும் பொதுநோக்குப் பெற்று உயர்தல், எளிய அறச் செயல்களை அறிந்து பின்பற்றுதல், இன்சொல் பேசுதல் அறமெனக் கைக்கொள்ளுதல், மக்களுக்குச் செய்யும் தொண்டே இறைவனுக்குச் செய்யும் தொண்டு என்பதை உணர்ந்து, சமுதாயத் தொண்டாற்றும் மனப்பான்மையை வளர்த்துக் கொள்ளுதல் என்னும் பாங்கினை உணர்த்தியவர்கள் சித்தர்கள் என்பது வலியுறுத்தப்பட்டுள்ளது.

ஒழுக்கநெறியே உடலையும், உயிரையும் ஓம்பும் நெறி என்பதை அறிந்து பின்பற்றி வாழ்க்கையைச் செம்மையாக்கிக் கொள்ள இயலும். பகுத்தறிவு நெறி நின்று பொய்யான சடங்குகளையும், போலியான சம்பிரதாயங்களையும் புறந்தள்ளி, உண்மையான பக்திநெறியை உணர்ந்து பின்பற்றலும் இயலும் எனும் மார்க்கத்தைத் தெளிவாக உணர்த்தியவர்கள் சித்தர்கள் என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

சித்தர்களின் தத்துவமாக அட்டமாசித்தி, இரசவாதம் முதலியவற்றால் உடலின் தட்பவெப்பநிலையைச் சீர்ப்படுத்துவதோடு உற்சாகமாகச் செயல்படவும், நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு அணுகாமல் காக்கவும், தம்மைத் தாமே உணர்ந்து, தன்னம்பிக்கையைப் பெருக்கிக் கொண்டு வாழவும் வலியுறுத்தியவர்கள் சித்தர்கள் என்பது அறிவுறுத்தப்பட்டுள்ளது.

மனிதநேயமும், சமத்துவமும் சகோதரத்துவமும் பெருகி, ஓர் உலகு என்னும் இன்றைய கோட்பாடு வெற்றிபெறச் சித்தர்கள் காட்டும் வாழ்வியல் கருத்துகள் பெரிதும் தேவை என்பதே இவ்வாய்வின் வெளிப்பாடும் பயன்பாடும் ஆகும்.

# துணைநூற்பட்டியல்


## மூலச் சான்றுகள்

கோவேந்தன் த. **சித்தர் பாடல்கள்,**
பூம்புகார் பாடல்கள்,
63, பிரகாசம் சாலை,
சென்னை, முதற்பதிப்பு - 1976.

முருகேசன் சி.எஸ். **சித்தர் பாடல்கள் (பெரிய ஞானக் கோவை)**
சங்கர் பதிப்பகம்,
21. பீச்சர்ஸ் கில்டு காலனி,
இராஜாஜி நகர் விரிவு,
வில்லிவாக்கம், சென்னை.
முதற்பதிப்பு - 2004.

## துணைமைச் சான்றுகள்

அங்கமுத்து முதலியார், (ப.ஆ.,) **கருவூரார் மாந்திரிக அட்டமா சித்து**
வெண்பேடு கோவிந்தநாயகர்சன்ஸ் வெளியீடு,
1923.

அப்பாதுரை, கா., (மொ.ஆ.,) **இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு**
கில்பர்ட் சிலேட்டர் கழகம்,
சென்னை- 1, 1976.

அப்பைய தீட்சிதர் **யோக தர்ப்பணம்**
ஓரியண்டல் ரிசர்ச் இண்ஸ்டிடியூட்
மைசூர் - சுவடி எண். B 1021/1.

அப்துல் ரகுமான் (ப.ஆ.மற்றும்கு.ஆ) **குணங்குடியார் பாடற்கோவை**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை, 2002.

அம்பிகானந்தர் **ஞானோதயம்**
தஞ்சை சரசுவதி மகால் நூலகம், தஞ்சை.

அருணாசலம்.மு., **தமிழ் இலக்கிய வரலாறு**
மாயூரம்: காந்தி வித்யாலயம், 1969.

அலிபாவா உ. **சூ.ஃ.பி மெய்ஞ்ஞானி குணங்குடி மஸ்தான் சாகிபு**
சாகித்திய அகாதெமி
புதுடெல்லி, முதற்பதிப்பு - 2012.

அலிபாவா உ. **தமிழில் இஸ்லாமியச் சதக இலக்கியங்கள்**
வளர்தமிழ்ப் பதிப்பகம்,
13 - 1, சையதி சாஹிப் தெரு,
காஜாநகர், திருச்சி, 620 020.
முதற்பதிப்பு - 2007.

ஆறுமுகசுவாமிகள் (பதி): **ஞானவெட்டி,**
பரப்பரம்ம முத்ராச்ரசாலை, சென்னை.

இராசமாணிக்கனார், மா., **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை, 1970.

இராமநாத பிள்ளை.ப., (உரை) **திருமந்திரம்**
கழக வெளியீடு, சென்னை

இராமநாதபிள்ளை.ப., **திருமந்திரம் மூவாயிரம் (முதல் பகுதி)**
கழக வெளியீடு, சென்னை -1. 1962.

இராதாகிருஷ்ணன் **நாடிநூல்,** சென்னை

இராதாகிருஷ்ணன் — **ஆனந்தகந்தம்**
சரசுவதிமகால் நூலக வெளியீடு,
தஞ்சாவூர், 1952.

இராஜரத்தினமுதலியார் — **புலிப்பாணி சோதிடம்,**
**தாய்மகணேசன் - 300**
மலர்மகன் விலாசம் பிரஸ்,
சென்னை - 1, 1963.

இலக்குமணன் — **வேதியியல்**
தமிழ்பாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை.

முனைவர்இளமதி
சானகிராமன், க., — **சித்தர் இலக்கியம்**
கோகுலம், 2, கலைவாணிநகர்,
பெத்திசெட்டிப் பேட்டை
புதுச்சேரி – 8, மறுபதிப்பு - 2007.

இராசாராம் துரை
**(உ.ஆ.,)** — **குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள்**
**(மூலமும் உரையும்),**
முல்லை நிலையம்,
9, பாரதிநகர், முதல் தெரு,
தி. நகர், சென்னை - 17.
முதற்பதிப்பு - 1998.

உத்தமராயன், க.சு., — **சித்தர் அறுவை மருத்துவம்,**
**தேரையர் மருந்துப் பாரதம்**
**(மூலமும் உரையும்)**
தமிழக அரசு வெளியீடு
சென்னை.

ஊரன் அடிகளார் **திருவருட்பா**
சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம்,
வடலூர், 1989.

ஔவையார் **விநாயகர் அகவல்**
இரண்டாம் பதிப்பு - 1958.

கண்ணப்பர், ஆ.இரா., **நம்நாட்டு மூலிகைகள்**
**பாகம் - 1 முதல் 7 வரை,**
**வைத்திய சிந்தாமணி,**
**பரம்பரை வைத்தியம்,**
**சித்த வைத்திய பதார்த்த குணவிளக்கம்,**
மூலிகைமணி வெளியீடு, வேலூர்.

கண்ணுசாமி பிள்ளை, (ப.ஆ.,) **பதார்த்த குணபாடம்**
பி. இரத்தின நாயகர் சன்ஸ் வெளியீடு
சென்னை.

கதிரைவேற்பிள்ளை.நா, **தமிழ்மொழி அகராதி,**
ஏசியன் ஏஜுகேஷனல் சர்வீசஸ்,
10 ஆவது பதிப்பு, சென்னை - 1998.

கல்யாண சுந்தரனார் திரு.வி.க., **பட்டினத்தார் பாடல்கள்**
முல்லை நிலையம்,
சென்னை, 1998.

கிருட்டினன், க.ரா., **மருந்துகளும் பயன்களும்**
நூலாசிரியர் பதிப்பு,
சென்னை.
1977.

கிருபானந்தவாரியார் — **திருப்புகழ் தொகுதி: 1 - 9**
அமிர்தம் வெளியீடு, சென்னை -2.

கிருஷ்ணமூர்த்தி. டி., — **சித்த மருத்துவ வினாவிடை**
வளர்மதி மெடிக்கல் சென்டர்
பொதக்குடி.

குப்புசாமி முதலியார் — **சித்த மருத்துவம்,**
தமிழக அரசு வெளியீடு,
1954.

குப்புசாமி முதலியார் — **சித்த வைத்தியத் திரட்டு**
பாரி நிலையம், சென்னை. 1984.

கோவேந்தன். த. — **சித்தர் பாடல்கள்**
பூம்புகார் பிரசுரம்
சென்னை - 1976.

சண்முகவேலன், — **சித்த வைத்திய வினா விடை**
திருமூலர் மருத்துவ மன்றம் வெளியீடு
சென்னை – 1, 1958.

சண்முகவேலன் ஆ., — **பாலயோகி,**
சக்தி நிலையம்
சென்னை - 10.
1964.

சண்முகடீவலு, ம., — **சித்த மருத்துவ நோய் நாடல்,**
**நோய் முதனாடல் திரட்டு**
தமிழக அரசு வெளியீடு, 1967.

சரவண முத்துப்பிள்ளை.வா (தொ.ஆ.)
**சித்தர் பாடல்கள் - பெரிய ஞானக்கோவை**
திருமகள் விலாசம் அச்சகம்,
சென்னை - 2006.

சிதம்பர ராமலிங்கம் பிள்ளை. வி. & சாம்பசிவப்பிள்ளை. எம்.,
**திருநான்மறை விளக்க ஆராய்ச்சி**
பாரி நிலையம்,
சென்னை - 1969.

சிதம்பரனார், சாமி.
**சித்தர்கள் கண்ட விஞ்ஞானம்**
இலக்கிய நிலையம், சென்னை
4 - ஆம் பதிப்பு, 1974.

சிவகாமி ச.
**தமிழ்ச் சதக இலக்கியம்**
உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்,
33, திருமலை நகர் இணைப்பு,
பெருங்குடி, சென்னை - 96.
முதற்பதிப்பு - 1985.

சிவப்பிரகாச தேசிகர் (உ.ஆ)
**திருமந்திரமாலை 300**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
சிதம்பரம். 1976.

சிவராஜபிள்ளை
**கம்பராமாயணக் கௌஸ்துபம்**
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 1979.

சுந்தரமகாலிங்கம் (ப. ஆ.,)
**கோரக்கர் மலைவாகடம்**
குரு. இராமசாமிக்கோன் வெளியீடு
மதுரை. 1968.

செயராமன் ந. வீ., **சதக இலக்கியங்கள்**
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம், 1966.

சோமசுந்தரம் **கலித்தொகை, குறுந்தொகை,**
**அகநானூறு**
கழக வெளியீடு,
சென்னை, 1975, 1972, 1970.

சோமு. மீ.ப., **சித்தர் இலக்கியம் (மூன்று தொகுதிகள்)**
அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு,
அண்ணாமலை நகர், சிதம்பரம்,
முதற்பதிப்பு - 1988.

தர்மராஜ் நா. **சமூகமும் இயற்கையும்**
முன்னேற்றப் பதிப்பகம்,
மாஸ்கோ நியூ செஞ்சுரி ஹவுஸ் பி.லிட்,
சென்னை - 1983.

தாயுமானவர் **திருப்பாடற்றிரட்டு**
இரத்தின நாயகர்,
சென்னை

திருமூலர் **திருமந்திரம்**
திருவாவடுதுறை ஆதீனம்,
திருவாவடுதுறை,
மூன்றாம் பதிப்பு - 2003.

தியாகராசன். இரா., **தேரையர் மகா கரிசல்,**
**(மூலமும் உரையும்)**

**தேரையர் பாடல் திரட்டு**
**(மூலமும் உரையும்)**
அன்புச் செல்வி அச்சகம்,
சென்னை, 1974.

தியாகராசர்.இரா., **தேரையர் மருந்துப் பாரதம்**
எஸ். எஸ். ஆனந்தம் வெளியீடு
சென்னை - 17, 1975.

தியாகராசர்.இரா., **தேரையர் வெண்பா**
**(மூலமும் உரையும்)**
போகர் ஏழாயிரம்
தமிழக அரசு வெளியீடு, 1974.

தியாகராயர்.ஆர் **போகர் அருளிச்செய்த வரும சூத்திரம் 131**
சித்த வைத்திய சங்கம், தாராபுரம்.

திருமலைசாமி பிள்ளை **அகத்தியர் பரிபூரணம் 400**
**மூலமும் உரையும்**
சரஸ்வதி புத்தக சாலை
கொழும்பு, 1960.

தெய்வநாயகம்,சி.கோ **சித்தர் சிந்தனைகள்,** தஞ்சாவூர் 1979.

நாராயணன், க. **சித்தர் தத்துவம்**
தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1988.

நயினார் முகம்மது சி. **மஸ்தான் சாகிபும் தாயுமானவரும்**
**ஓர் ஒப்பு நோக்கு**
உமறு பதிப்பகம்,
6, பேராசிரியர் குடியிருப்பு,

புதுக்கோட்டை நெடுஞ்சாலை, திருச்சி-20.
முதற்பதிப்பு - 1993.

நாராயணசாமி ஐயர் — **நற்றிணை நானூறு**
கழக வெளியீடு
சென்னை - 1, 1967.

நாராயண வேலுப்பிள்ளை — **திருமூலர் அருளிச்செய்த அற்புதங்கள் (பத்தாம் திருமுறை), பன்னிரு திருமுறைகள்)**
வர்த்தமான் பதிப்பகம்,
சென்னை, இரண்டாம் பதிப்பு - 1998.

பாம்பாட்டிச் சித்தர் — **பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள்**
திருவாவடுதுறை ஆதீனம்,
திருவாவடுதுறை,
மூன்றாம் பதிப்பு - 2003.

பாலகிருஷ்ணமுதலியார் — **மூலிகை ஜால ரத்தினம் பாகங்கள் 1 - 2**
பூ,சு.கு. கோவிந்தராஜ் முதலியார்,
சென்னை, 1958.

பாலசந்தர், ஆ. — மெய்ஞ்ஞான வெளிப்பாட்டில் குணங்குடி மஸ்தான் சாகிப் முகியீத்தீன் சதகம்,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சி -24.
2013.

பாலசுப்பிரமணியன்.சி — **தமிழ் இலக்கிய வரலாறு,**
நறுமலர்ப் பதிப்பகம், சென்னை. 29.

பைகாங்.கே.எம்., **உடலியங்கியல்**
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.

பாஸ்கரன். கே., **குடும்ப வைத்தியம்**
மதுரை முதலியார் பதிப்பு
சென்னை, 1935.

மாடசாமி, ச. **பாம்பாட்டிச் சித்தர்**
'ஓ' பதிப்பகம், மதுரை, 1980.

மணவை முஸ்தபா **இளைஞர் இஸ்லாமியக் கலைக் களஞ்சியம்**
மீரா பப்ளிகேசன்,
ஏ.ஈ. 103, அண்ணாநகர்,
சென்னை - 600 040.
முதற்பதிப்பு - 1991.

மாணிக்கவாசகம், இரா. **நம் நாட்டுச் சித்தர்கள்**
அன்னை அபிராமி அருள் வெளியீடு
சென்னை - 30.
முதற்பதிப்பு - 1978.

முகம்மது அப்துல்லாசாகிபு (ப.ஆ.,) **தேரையர் யமக வெண்பா**
தமிழ்நாடு அரசு வெளியீடு, 1973.

முருகேசமுதலியார்,க.ச., **பொருட்பண்பு நூல் குணபாடம்**
தமிழ்நாடு அரசு வெளியீடு
மூன்றாம் பதிப்பு - 1969.

முருகேசன், சி.எஸ்., **சித்தர்களின் சாகாக்கலை,**
**சித்தர் கண்ட இறைமை**
சங்கர் பதிப்பகம்,

| | |
|---|---|
| | 21, டீச்சர்ஸ் கில்ட் காலனி,<br>வில்லிவாக்கம். சென்னை - 600 049,<br>முதற்பதிப்பு: 2013. |
| ராமசந்திரன்.எஸ்.பி.,<br>(பதி.,) | **அகத்தியர் ஞான அமுதம்**<br>தாமரை நூலகம்,<br>சென்னை - 1995. |
| ராமசுப்பிரமணியம் | **ஸ்ரீஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை**<br>திருமகள் நிலையம்,<br>வெங்கட் நாராயணசாமி,<br>சென்னை – 17, 2003. |
| ராமநாதன் அரு. | **ஞானக்கோவையென வழங்கும்**<br>**சித்தர் பாடல்கள்**<br>பிரேமா பிரசுரம்,<br>35, ஆற்காடு சாலை,<br>கோடாம்பாக்கம், சென்னை,<br>பன்னிரெண்டாம் பதிப்பு - 2004. |
| வடிவேலு செட்டியார்<br>(ப.ஆ.,) | **மூலிகை ஜாலரத்தினம்**<br>பி. இரத்தின நாயகர் சன்ஸ் வெளியீடு<br>சென்னை - 1. |
| வடிவேலு முதலியார்<br>மா. (உ.ஆ.), | **குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள்**<br>**(உரையுடன்)**<br>முல்லை நிலையம்,<br>சென்னை, 2004. |
| வடிவேலு முதலியார் | **சிவவாக்கியர் பாடல்கள் (உரையுடன்)**<br>இரத்தின நாயகர், சென்னை |

வரதராசனார் மு. **திருக்குறள் (உரை),**
கழக வெளியீடு, திருநெல்வேலி. (ஆ.இ)

வில்சன் அமல்ராஜ்.ஜி **கடுவெளிச்சித்தர் பாடல்கள்**
சித்தர் பாடல்கள் ஆய்வகம்,
வேலூர், 2005.

வேங்கடவன் ஸ்ரீவிஷ்ணுப்புராணம்
ஸ்ரீசௌபகப் பதிப்பகம்,
தியாகராயநகர், சென்னை – 17, 2004

வேணுகோபால்.பு.மூ. **உடல் தத்துவம்**
தமிழ்நாடு அரசு வெளியீடு, 1968.

ஹபீப் முஹம்மத் கே.வி.எஸ். (தொ.ஆ) **வேதவரிகளும் தூதர் மொழிகளும்**
இஸ்லாமிய நிறுவன டிரஸ்ட்,
78, பெரம்பூர் நெடுஞ்சாலை,
சென்னை - 600012.
இரண்டாம் பதிப்பு - 1998.

ஆ.பெ.இ., **குர்ஆன்மஜீத்**
திருக்குர்ஆன் (மூலமும் உரையும்)
ஹாஜி முஹம்மது லிட்டரி &
சாரிடபிள் டிரஸ்ட், 'பர்மா ஹவுஸ்'
97, பவளக்காரத் தெரு,
சென்னை - 600 018.

ஆ.பெ.இ., **பதினெண் சித்தர்கள் நாடி சாஸ்திரம்**
இரத்தின நாயகர் சன்ஸ் வெளியீடு
சென்னை, 1938.

ஆ.பெ.இ., **அகஸ்த்தியர் பூரண சூத்திரம்**
தஞ்சை சரசுவதி மகால் நூலகம்.

ஆ.பெ.இ., **யோகஞான சாத்திரத் திரட்டு**
(சித்தர் பாடல்களின் திரட்டு முதல் பக்கம் இல்லாததால் ஆசிரியர், பதிப்பு, தேதி முக்கிய விவரமில்லை. பக். 271 - 502 வரை மட்டுமே உள்ளது) சரசுவதி மகால் நூலகம், தஞ்சை.

**தமிழ்ப் பேரகரமுதலி (ஏழு தொகுதிகள்)**
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 1979.

சித்தர் களஞ்சியம்,
நர்மதா பதிப்பகம்,
இந்திய ஆய்வியல் துறை, கலைப்புலம்,
மலாய்ப் பல்கலைக்கழகம்,
கோலாலம்பூர் 50603.
மலேசியா.

Shanmugavelan, A. **Siddhar's Science of Longevity and Kalpa Medicine,**
sakthi Nilayam, Madras - 10, 1963.

Tamil Lexicin, vol. III, Part I,
Madras University, Madras.

vidyadhar Vaman Bhlde, A cincise sanskrit - English Dictionary. Madras.

சாவி, வார இதழ், 16. 08. 1979.

# பின்னிணைப்பு

## அரிய மருத்துவ மறைமொழிகள்

| **குழூஉக் குறி** | **பொருள்** |
|---|---|
| இரவி | பொன் |
| இரசம் | வேந்தன் |
| மால்மனைவி | அரிதாரம் |
| நாற்றம் | கந்தகம் |
| வழலை, சோதி | மூப்பு |
| சர்க்கரைக் கொல்லி | சிறுகுறிஞ்சான் |
| மாய்க்காய்ப்பால் | அமிர்தம் |
| ஓடும்குதிரை, அகக்கால் | பிராணவாயு |
| ஆனந்தத் தேறல் | யோக அமுரி |
| பிள்ளை வளர்த்தி | வசம்பு |
| தாய் | கடுக்காய் |
| கானக்குதிரை | மாமரம் |
| தோற்பை | உடல் |
| கல் விந்து | சிலாசத்து |
| தண்ணீர் தேற்றி | தேற்றான் கொட்டை |
| பழச்சாறு | எலுமிச்சைச் சாறு |
| அமிர்தப்பால் | தாய்ப்பால் |

## மருந்து வகையும் காலக்கெடுவும்

| **மருந்து வகை** | **காலக்கெடு** |
|---|---|
| தைல வகைகள் | ஓராண்டு |
| மெழுகு, குழம்பு | ஐந்தாண்டுகள் |
| இரசப்பதங்கம் | பத்தாண்டுகள் |
| செந்தூரம் | எழுபத்தைந்தாண்டுகள் |
| நீறு, கட்டு, களங்கு | நூறாண்டுகள் |
| சுண்ணம் | ஐந்நூறு ஆண்டுகள் |
| கற்பம், குரு, குளிகை | காலக்கெடு கடந்தவை. |

## பாதரசப் பகுப்பு முறை

| | |
|---|---|
| இரசம் செய்முறை | - Hydrogyrum |
| இரசச் செந்தூரம் | - Sulphide of Hydrogyrum |
| வீரம் செய்முறை | - Subchloride of Mercury |
| பூரம் செய்முறை | - Perchloride of Mercury |
| அரிதாரம் செய்முறை | - Preparation of areseno sulphide |

## புற மருந்து (மேனாட்டு மருத்துவம்)

| | |
|---|---|
| கீறல் | - Incission |
| குருதி வாங்கல் | - Blood Letting |
| ஒற்றடம் | - Fomentation |
| வர்த்தி வைத்தல் | - Suppositors |
| ஊதல் | - Blowing |
| பீய்ச்சல் | - Syringing and Enemata |
| தொக்கணம் | - Physiotheraphy |
| கட்டுதல் | - Bandaging |
| கலிக்கம் | - Eye drops |
| நாசிகாபரணம் | - Snuffing |
| சட்டிகை | - Cauterisation |
| பொட்டணம் | - Medico Thermal application |
| புகை | - Medicinal Fumigation |
| சீலை | - Gauze |
| பொடி திமிர்தல் | - Bathing Powders |
| மை | - Eye application |
| பற்று | - Poultice |
| வேது | - Vapourisation |
| களிம்பு | - Ointment. |

# முன்னுரை

சித்தர்களின் வாழ்க்கை விந்தைகள் நிறைந்தது. வாழும் காலத்தில் அவர்கள் தன்னலமற்று வாழ பழகிக் கொண்டவர்கள். சாதி பேதத்தைக் கடந்தவர்கள். உலகில் உள்ள அத்தனை உயிர்களும் பசிப்பிணி அற்று, நல்வாழ்வு வாழவேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்கள். சித்தர்கள் ஆரோக்கியமான அறநெறி வாழ்க்கை விசித்திரமானது. அவர்கள் கூறிய பொன்மொழிகள் யாவும் மக்கள் நல்வாழ்வு வாழவழி சொல்லும் மந்திரங்களாக இருக்கின்றன. அதைப் பல இடங்களில் பல வழிகளில் நிறைவேற்றவும் செய்தார்கள். ஆனால் சில நேரங்களில் சித்தநிலையை விலக்கி வைத்தும் வாழ்ந்தார்கள். மக்களின் நலனுக்காகவே அந்த நிலைப்பாட்டை எடுத்திருக்கிறார்கள் என்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது. இவ்வாய்வில் ‘அட்டமா சித்தி’ எனும் நூலில் குறிப்பிடும் 18 சித்தர்களை மையமாகக் கொண்டு சித்தர்களின் வாழ்விடம், காலம், சமாதிநிலை ஆகியன குறித்து இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வு நோக்கம்

சித்தர்களின் வாழ்வியலில் அடிப்படையாகக் கொண்டு மனித சமுதாயத்தை பாதுகாக்கும் வழிமுறையை யோகம், வைத்தியம், வானியல், ஆன்மீகம் ஆகியவற்றை உலகிற்கு எடுத்தியம்பும் வகையில், ‘சித்தர்களின் வாழ்க்கை’ என்னும் இந்த ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வு மூலங்கள்

சித்தர்கள் எண்ணில் அடங்கா வகையில் இருந்தாலும் இவ்வாய்விற்கு உறுதுணையாக ‘அட்டமா சித்தி’ எனும் நூலில் குறிப்பிடும் சித்தர்களை மூலமாகக் கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வு முன்னோடிகள்

தமிழாய்வுலகில் சித்தர்களின் வாழ்வியல் சார்ந்த ஆய்வுகள் மிகக் குறைவாகவே உள்ளன. சித்தர்களின் வாழ்வியல் எனும் தலைப்பிற்கு இணையாக S.குணதீபன் என்பார் 'சித்தர் பாடல்களில் யோக கலைக் கூறுகள்' எனும் தலைப்பில் 2008 - லும், S.லோகித்தா என்பார் 'திருச்சி மாவட்டச் சித்தர்கள்' எனும் தலைப்பில் 2009 - லும் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்டு முனைவர் பட்டத்தினைப் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் வழியாகப் பெற்றுள்ளனர். N.சண்முகவடிவு என்பார் பாரதியார் பல்கலைக்கழகத்தில் 'சித்தர்கள் காட்டும் சமுதாயம்' என்னும் தலைப்பில் 2016 - இல் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். A.பாண்டியன் என்பார் அழகப்பா பல்கலைக்கழகத்தில் 'சித்தர் சிவவாக்கியர்' என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்டு 2015 - இல் முனைவர் பட்டம் பெற்றுள்ளார்.

மேலும், முனைவர் இரா.செல்வகணபதி 'சித்தர் பாடல்கள்', முத்துக்கொத்தள மாரியப்ப செல்வராஜன் 'சித்தர் களஞ்சியம்', காட்டூர் அ. சுந்தரராஜன் 'சித்தர்கள் கண்ட கடவுள்களும் கடவுளும்', C.S.தேவநாதன் 'சித்தர்களில் ஞானவழி', T.N.கணபதி 'தமிழ்ச் சித்தர் மரபு' S.P. இராமச்சந்திரன் 'சித்தர்கள் வரலாறு' நா. சாமிநாதன் 'சித்தர்கள் கண்ட உடல் மாற்றம்' ஆகிய நூல்களை எழுதியுள்ளனர். மேற்படி ஆய்வுகளும் நூல்களும் இந்த ஆய்வின் முன்னோடிகளாக அமைகின்றன.

## கருதுகோள்

சித்தர்கள் கண்டறிந்த யோகம், மருத்துவம், வானவியல், ஆன்மீகம் என்ற முறையில் ஆராய்ந்து சமூகத்திற்கு நெறிகாட்டும் வழியாகப் பயன்படும் வாழ்வியல் முறைகளை வெளிக் கொணர்வதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வு அணுகுமுறை

வரலாற்றுமுறை, பகுப்புமுறை, விளக்கமுறை, ஒப்பீட்டுமுறை, சமூகவியல் அணுகுமுறை ஆகிய திறனாய்வு முறைகளை பின்பற்றி ஆராயப்படவுள்ளது.

## ஆய்வுப்பகுப்பு

இந்த ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை.

இயல்: 1. சித்தர்களின் வாழ்க்கை

இயல்: 2. உடல் நலமும் யோகநெறியும்

இயல்: 3. சித்த வைத்தியமுறைகள்

இயல்: 4. தத்துவமும் அற்புதமும்

இயல்: 5. சமுதாயநிலை

'**சித்தர்களின் வாழ்க்கை**' என்ற முதல் இயலில் சித்தர் விளக்கம், சித்தி பெறும் வழிகள், சித்தர் நிலை, சித்தர் பற்றிய அறிஞர்களின் கருத்து, சித்தர்ர்களின் புறத்தோற்றம், சித்தர்களின் செயல்கள், சித்தர்களின் வரையறை, இலக்கியத்தில் சித்தர்கள், மொழிநடை, நாட்டுப்புறக் கூறுகள், விடுகதை, பழமொழி, மறைபொருட் கூறுகள், புராண இதிகாச கதைகள், இலக்கியச் செய்திகள், யாப்புவகை, அணிநயம், உவமை வகைகள், யோகம் எனச் சித்தர்களின் பாடல்கள் வாயிலாக ஆராய்ந்து இவ்வியலில் விவரிக்கப்படுகிறது.

'**உடல் நலமும் யோகநெறியும்**' என்ற இரண்டாம் இயலில் உயிரைக் காக்க உடல் அவசியமாகும். இவ்வுடல் நீண்டநாள் அழியாமல் காக்க பதஞ்சலியும், திருமூலரும் வகுத்த மார்க்கமே முக்கியமானதென முன்னோர்கள் கருதினர். இவர்கள் உடலைக் காக்க உடற்பயிற்சியும், மனக்கட்டுபாடும் சிறந்ததென குறிப்பிடுகின்றனர். உடலையும் உயிரையும் ஒருங்கிணைப்பதற்கு மனதைக் கட்டுப்படுத்த வேண்டும். மனதைக்

கட்டுப்படுத்துவதற்கு உடற்பயிற்சி எனும் யோகம் முதன்மைப் பெறுகிறது. இவ்வழியைக் கண்டறிந்த சித்தர்கள் பல்வேறு பயிற்சிகளை வெவ்வேறு வடிவத்தில் அனுபவித்து வந்தனர். அதன் வழியாக ஆன்மீக யோகப்பயிற்சி, அட்டாங்கயோகம், அட்டசித்திகள், வாசியோகம் எனப் பயிற்சிப் பெற்று முடிந்த முடிவாக குண்டலினி யோகமே பேரின்பத்தின் வழியென நிரூபித்தும் காட்டியுள்ளனர். இக்கூற்றினை மெய்ப்பிக்கும் வகையில் துறவுநெறி, யோகநெறி, பக்தியோகம், இராசயோகம், யோக சித்தி, ஞானயோகம் என இவ்வியல் விவரிக்கப்படுகின்றன.

'**சித்த வைத்தியமுறைகள்**' என்ற மூன்றாம் இயலில் உலகம் பஞ்சபூதத்தால் இயங்குவது போல நமது உடலும் பஞ்சபூதங்களின் சேர்க்கையால் உருவாக்கப்பட்டதாகும். இதில் சித்தர்கள் நீர், நெருப்பு, காற்று என்ற மூன்றை மட்டுமே மையமாகக் கொண்டு அதனை நமது உடலில் வாதம், பித்தம், கபம் என வரையறை செய்து அதனால் ஏற்படும் நோய்களை மையப்படுத்தி விவரிக்கின்றனர். அவ்வகையில் சித்தர்கள் நோய்களுக்குத் தக்க மருந்துகளை மட்டும் உலகிற்கு அளிக்கவில்லை. உடலை அழியாமல் காக்கத்தக்க கற்ப மருந்துகளையும் அளித்துள்ளனர். இவற்றை முறைப்படி சாப்பிட்டு வந்தால் நரை, திரை, மூப்பு, சாக்காடு போன்றவை அகலும். இறந்தவர்களைக் கூட மீண்டும் உயிருடன் எழுப்பும் ஆற்றல் வாய்ந்த மருந்தையும் கண்டறிந்தனர். குறிப்பாக அழிஞ்சில் கற்பம், சஞ்சீவனி கல்பம், மருந்தும் சோதிடமும், மருந்தும் ஆன்மீகமும், நாடி, வாதம், பித்தம், சிலேத்துவத்திற்கு மருந்துகள், உப்பு, உபரச, பாடாண் வகைகள், உலோகம், நவரத்தினம், கடைச்சரக்கு என மருந்துகளைப் பிரித்து அக, புற வாழ்விற்கு தகுந்தாற்போல் ஆயுள் நீடிக்க வழிவகை ஆற்றியுள்ளனர்.

அவ்வகையில் சித்தர்கள் பயன்படுத்திய மறைமொழி வழிவகை, இக்கால அறிவியல் மறைமொழி, சோதிட மருத்துவப்புலமை, உடலியக்கம்,

உடலின் ஆக்கம், விந்து உற்பத்தி, கரு உற்பத்தி, நோய்நாடல், நோய் அணுகா விதிகள், மருந்தாக்க இயல், பதார்த்த குணம், மருந்து செய்முறை, புடமிடுதல், மருந்தாளுகை, மருந்தியல், தட்பவெப்பநிலை, பத்தியமுறைகள், காயகல்ப முறைகள், இருள்தேகம், கற்பமுறைகள், பொடி, கரிசாலை, வேம்பு, இரசவாதம், உடல் பொன்னாதல், மந்திரம், யோகம், மருத்துவன் இலக்கணம் என இவ்வியலில் விவரிக்கப்படவுள்ளன.

'**தத்துவமும் அற்புதமும்**' எனும் நான்காவது இயலில் பிரபஞ்சத் தோற்றத்தின் உட்கிடையில் எங்குப் பார்த்தாலும் சக்தி. அது ஞாயிறு, திங்களுடன் கலந்து நவமாகப் பிரிந்து, வெட்டவெளியில் இருந்து கொண்டு, இவ்வுலகுக்கு ஆற்றும் ஆற்றல் அளவிடமுடியாததாகும். வெளிக்குள் கடந்து பார்க்கும்போதுதான் வேதாகமங்களின் உட்பொருளும், வெட்டவெளி எனும் பேரமைதியின் தத்துவமும், பரமோன மவுனத்தின் பூரணத்துவத்தில் புரியும். அந்த மரணத்தில் திளைத்திருந்தால் மரணம் இல்லை என்பது சித்தர்களின் குறிப்பாகும். இக்குறிப்பை புரிந்து கொண்டு, இயற்கையை மதித்து நடந்தால் ஓர் ஆத்மாவானது மிகுந்த பலத்துடனும், அற்புத ஆற்றலுடனும் விளங்கும். அற்ப ஆயுளில் அது ஒரு உடலை விட்டுப் பிரிய நேராது. துர்மரணங்கள் ஏற்படாது. அதன் விளக்கமுறையில் தத்துவ விளக்கம், தத்துவங்களின் எண்ணிக்கை, உலகத் தத்துவம், உயிர்த் தத்துவம், உடல் தத்துவம், மனிதத் தத்துவம், மனத்தின் இயல்பு, மனமும் மௌனமும், மனத்தின் வன்மை, சித்தர்களின் முத்திநிலை, சித்தாந்த விளக்கமான தாசமார்க்கம், சத்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம், இன்றையநிலையில் வள்ளலார் உணர்த்திய மரணமிலாப் பெருவாழ்வாக தனித்திரு, விழித்திரு, பசித்திரு, பிறவாநெறி, இறவாநெறி, இறந்தாரை எழுப்புதல், இறந்தார் எழுதல் எனும் நிலையில் இவ்வியல் விளக்கப்படவுள்ளன.

‘**சமுதாயநிலை**’ எனும் ஐந்தாவது இயலில் ஆத்ம ஞானம் பெறும் வரை சாத்திர, தோத்திர படிப்புகள் அவசியம். உலகத்தில் நல்லபடி செழிப்பாக வாழ விஞ்ஞானப் படிப்பும், மற்றெல்லாக் கலைப் படிப்பும் அவசியம். ஆன்மீக நூல்கள் எல்லாம் அதனதனுக்கு எட்டியபடி சரியான உண்மையைச் சொல்வதில் தெளிவு செய்யவே ஏற்பட்டவை. அதிலும் தெளிவுபெற குருவின் உதவியை பெறவேண்டும். அவ்வகையில் நிலையாமை, வழிபாட்டு முறை, சாதி சமய மூடபழக்கவழக்கங்கள், தீயநடவடிக்கையான கொலை, மாது, மது போன்றவற்றில் ஈடுபடுபவரை தங்கள் பாடல்களின் மூலம் தண்டித்தும் கூறியுள்ளனர். இதனால் சித்தர்களின் வாழ்வியல் மனித சமூதாயத்தை நேசிக்கவும், மனிதநேயமிக்க மனிதனாக வாழவும் கூடியதாக இருக்கின்றன. அவ்வகையில் கடவுள் நம்பிக்கை, கல்விநிலை, இறைநிலை, பேதமற்ற சமுதாயம், வீடுபேறு பெறும் வாழ்க்கை, ஆசைகளை அறுத்தல், பெண்ணாசை மறுத்தல், நிலையாமைக் கருத்தறிதல், போலிக் குருக்களைச் சாடுதல், இறைக்கோட்பாடு, சோதி வழிபாடு, அட்டாங்க சித்திகள், சித்தர் அறவியல், சித்த மருத்துவம் எனும் முகமாக இவ்வியல் வடிவமைக்கப் படவுள்ளது.

முடிவுரைப் பகுதியில் இவ்வாய்வின் வழி கண்டறியப்பட்ட முக்கிய செய்திகள் பட்டியலிடப்படுகின்றன. இவ்வாய்விற்கு பயன்படுத்தப்பட்ட நூல்கள், துணைநூற்பட்டியல் தரப்படுகின்றன.

சித்தர்களின் படங்கள், கலைச் சொற்களின் பட்டியல், சித்தர்கள் கையாண்ட மருத்துவ மறைமொழிச் சொற்கள் குண்டலினி விளக்கப்படம், சித்தர்களின் வாழ்விடங்கள், ஆசிரமங்கள் மற்றும் சித்தர்கள் சார்ந்த விளக்கப்படங்கள், இதழ் மற்றும் ஆய்வுக் கட்டுரையில் இடம் பெற்ற கட்டுரைகளும் பின்னிணைப்பாக இடம்பெறவுள்ளன.

## இயல் - 1

# சித்தர்களின் வாழ்க்கை

இயற்கையின் உன்னதம் உயிர்ப்பு. அதில் விளங்கும் அற்புதப் படைப்பு மனிதன். உலகம் உய்யக் கிடைத்த பல உத்திகளில் சித்த வித்தைகள் இரகசியக் கருவூலமாக அமைந்துள்ளன. எடுத்துகாட்டாக, வான்வெளியில் பறத்தல், தன்னுடைய உடலை விட்டு இன்னொரு உடலில் உயிரைச் செலுத்துதல், இறந்தவர்களை உயிர்ப்பித்தல், அணுவைப் போல் மிகவும் மெலிதாகுதல், யானையைப் போல் பெரிதாக்குதல், எண்ணிய இடத்திற்குச் செல்லுதல், தன் இயற்கை நிலைக்கு மாறாகப் புதிய உருவம் கொள்ளுதல், நீரிலும் நெருப்பிலும் நடத்தல் ஆகிய அற்புதச் செயல்களை மந்திரங்களால் செய்யும் ஆற்றல் பெற்றவர்கள் சித்தர்கள். இதனை வெளிப்படையாக உரைப்பது இயலாது என்றாலும் ஒழுக்க அடிப்படையில் பயின்று பலகாலம் செய்வதாலும் பயனடையலாம் என சித்தர்கள் மெய்பித்துள்ளனர்.

சித்தர்களின் எண்ணிக்கையை நம் முன்னோர்கள் 18 என வரையறை செய்துள்ளனர். அவ்வரையறையில் இன்றும் மாறுபாடில்லை. ஆனால் சித்தர்களின் பெயர்களை மட்டும் அவரவர்களின் எண்ணத்திற்குத் தகுந்தாற்போல் குறிப்பிடுவது விந்தையாகும். பல்வேறு காலங்களில் ஒரே பெயரில் வாழ்ந்த அநேகர். சித்தர்கள் பல பெயர்களில் வாழ்ந்த ஒரே சித்தரும் உண்டு. இவ்வகையில் சித்தர்களை நாடு, இனம் எனப் பிரித்துப் பார்ப்பது இன்றியமையானதாக இருந்து வருகிறது. அக்காலத்தில் யோகம், வைத்தியம், வானவியல், ஆன்மீகம் எனப் பிரித்து சித்தர்களை வரையறை செய்தனர். தற்காலத்தில் திருவள்ளுவர், வள்ளலார் போன்றோரை பொதுவியல் நோக்கிலும், சமூக நோக்கிலும் வரையறை செய்து 50-க்கும் மேற்பட்ட சித்தர்களை வரையறை செய்துள்ளனர். ‘சித்தர்’ - சொற்பொருள், சொல்லாட்சி, சித்தி பெறவழிகள், சித்தர்கள் பற்றி அறிஞர்களின் கருத்து, சித்தர்களின் புறத்தோற்றம், சித்தர்களின் செயல்கள், சித்தர்களின் பிரிவு, சித்தர் தொகை,

மொழிநடை, நாட்டுப்புறக் கூறுகள், விடுகதைத் தன்மை, மறைபொருட்கூறுகள், புராண இதிகாசக் கதையாட்சி, இலக்கிய மேற்கோள், யாப்பு, அணிநயம், பழமொழிகளை உவமையாக்கி அமைத்தல் என ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

**சித்தர் - சொற்பொருள்**

சித்து - சிந்தல் - சிந்துதல் - சிந்தனை - சித்து எனப்பெயர் பெற்றது. 'ஸித்' என்ற வடமொழியில் இருந்து வந்தது என்ற கூற்று ஏற்புடையதன்று. சித்து - அறிவு, சித்தர் - அறிவாளர் என்றும் பொருள்படும். அதாவது, சித்துகளைச் செய்ய வல்லவர்கள் சித்தர்கள் எனப்படுவர். **"**ஸித்' என்னும் வடமொழி வேர்ச் சொல்லே 'ஸிது' என்றாகி 'ஸித்த' என்னும் சொல்லாகியது. இச்சொல் எண்வகைச் சித்திகள் கைக்கூடப் பெற்றவர்களைக் குறிக்கின்றது**".**[1] சித்துகள் எட்டு வகைப்படும். இவற்றை அட்டமாசித்திகள் என வழங்குவர். அட்டமாசித்திகளிலும் வல்லவர் சித்தர்கள் ஆவர்.

'சித்தி' என்னும் பெயர்ச் சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி பதினைந்து பொருள்களைத் தருகின்றது".[2] அவற்றுள் கைகூடுகை என்ற பொருளே பொருந்தும். ஏனெனில் இக்கருத்தைத் திருமூலர் எடுத்தாளுகையில்,

**"எழிற் பரங் கைகூடப் பெற்றவர் சித்தர்".**[3]

எனவும், கடுவெளி சித்தர் கூறுகையில்,

**"சீரி லுயரட்ட சித்தி - யார்க்குஞ்**

**சித்திக் குமே சிவன் செயலினால் பத்தி".**[4]

என்ற அடிகளாலும் விளக்கப்படுகிறது. பேச்சுவழக்கில் "போன காரியம் சித்தியானது; சொன்னது சித்தியாச்சு" என்னும் தொடர்களின் பொருளும் விளக்குகின்றது. குறுந்தொகைப் பாடலில்,

**"நிலம் தொட்டுப் புகார் வானம் ஏறார்**

**விலங்கிடு முந்நீர்க் காலிற் கொள்ளார்".**[5]

எனத் தலைவனைக் குறிப்பிடும்போது, 'அவன் நிலந்தொட்டு உள்ளே புகான்; வானம் ஏறான்; கடலில் காலால் நடந்து செல்லான்; என்று முத்தன்மையினைக் காட்டுகின்றன. இதனால் இத்தலைவன் சித்தி பெற்றவன் அல்லன் எனும் கருத்து வெளிப்படுகிறது. "நிலந்தொட்டு புகுதல் முதலிய மூன்று வியத்தகு ஆற்றல்களும் அக்காலத்தில் இருந்திருக்கின்றன".[6] என இரா.மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள் எனும் நூலில் சுட்டிக்காட்டியுள்ளார். எனவே சித்தத்தைத் தமக்குள்ளேயே நிலைப்படுத்திய ஆற்றல்கள் கைவரப்பெற்றவர்கள் 'சித்தர்கள்' எனக் கொள்வதும் பொருத்தமுடையதாக விளங்குகின்றது.

**சித்தர் - சொல்லாட்சி**

தொல்காப்பியத்தில் சித்தர்களின் நிலையை, 'நிறைமொழி மாந்தர்' என்னும் சொல் குறிப்பிடுகிறது.

**"மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்".[7]**

எனும் நூற்பாவில் 'அறிவன்' எனும் சொல்லுக்கு, 'காமம், வெகுளி, மயக்கமில்லாத ஒழுகலாற்றினை இறப்பும், நிகழ்வும் எதிர்வுமென்று மூவகைக் காலத்திலும் வழங்கும் நெறியால் அமைத்த முழுதுணர்வுடையோர்' எனவும், **"கலசயோனியாகிய அகத்தியர் முதலியோரும் அறிவரென்றுணர்க".[8]** எனவும் நச்சினார்க்கினியர் உரை விளக்கத்தால் அறியப்படுகிறது. இதனால் தொல்காப்பியர் 'அறிவன்' என்று கருதினார் என்பது புலனாகிறது. இதனால் சித்தர் என்னும் சொல்லுக்குரிய கருத்திருந்ததேயன்றிச் சித்தர் என்னும் சொல் இல்லை என்பது வெளிப்படுகிறது.

சங்க இலக்கியங்களில் சித்தர் என்னும் சொல் இல்லை; ஆனால் குறுந்தொகையில் சித்தர்களுடைய செயல்பாடுகள் கூறப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. சித்தர் என்னும் சொல் முதன்முதலில் சிலப்பதிகாரத்தில் இடம்பெற்றுள்ளது. நாடுகாண்காதையில், 'சித்தன்' என்னும் சொல் இரு இடங்களில் இடம்பெற்றுள்ளது. இளங்கோவடிகள் அருகப்பெருமானுக்குரிய பெயராக வந்துள்ளதை அடியார்க்குநல்லார் குறிப்பிடுகையில்,

"சித்தன் - கிருதகிருத்தியன் - செயத்தருவனவற்றைச் செய்து முடித்தோன் - கன்மங்களைக் கழுவினோன் என்றும்,

சித்தன் - எண்வகைச் சித்திகளையும் உண்டாக்கியவன்".[9] என்றும் இருவகையாகப் பொருள் கூறுகிறார்.

சமணத்திலும், புத்தத்திலும் சித்திகள் செய்பவர்கள் 'சாரணர்' எனப்பட்டனர். சாரணர் என்பதற்குச் சஞ்சரிப்பவன் எனப்பொருள்படும். இதனால் வானத்தில் செல்லுதல் முதலான அற்புதங்களைச் செய்பவர்கள் சாரணர் எனப்பட்டனர். சித்தர்கள் சைவ, வைணவத்திற்கு மட்டுமல்லாமல் எல்லா மதத்தினருக்கும் உரியவராவர். "மணிமேகலையில் புத்தச் சமயச் சித்தன், 'சாரணன்".[10] என்றும், சித்தி என்பதற்கு 'இருத்தி' என்றும் குறிப்பிடுகிறது. இதனை,

**"அறனெயில் விரித்தாங்கு அளப்பில் இருத்தியொடு".[11]**

எனவும்,

**"எத்திறத் தார்க்கும் இருத்தியும் செய்குவம்".[12]**

எனவும் குறிப்பிடுகிறது. இருத்தி என்பதற்கு 'ரிதி' என்னும் வடசொல்லிலிருந்து வந்ததை ந.மு.வேங்கடசாமி நாட்டார், "இதனை ரிதியென்றும், இது பரிணாமிகம், நிருமானிகமென இருவகையில் தோன்றும் என்றும், ஒவ்வொன்றும் முறையே பதினாறும் இரண்டுமாய் விரியுமென்றும் பௌத்த நூல்கள் கூறுகின்றன".[13] என்று விளக்கம் அளிக்கின்றார். சித்தி என்னும் சொல்லுக்கு 'இருத்தி' என்னும் சொல்லை மணிமேகலை எடுத்தாண்டு இருந்தாலும் இச்சொல் நிலைபெறாமல் சித்தி என்னும் சொல்லே நிலைபெற்றுள்ளது. இராமதேவர் சித்தியை 'மூலி' என வழங்கினாலும் இச்சொல்லும் வழக்கில் இல்லை.

'சித்தி' என்ற சொல்லுக்குத் தொடக்கத்தில் 'கைகூடுதல்' என்னும் பொருளில் தோன்றி காலப்போக்கில் சித்துகளைக் குறிப்பதாகவே வளர்ச்சி பெற்று விளங்குகிறது. இறைவனை 'எண்குணத்தான்' என வள்ளுவர் குறிப்பிடுவார். இதற்கு விளக்கவுரையாக, பரிமேலழகர், "அணிமாவை முதலாகவுடையன எனவும், கடையிலா அறிவை முதலாகவுடையன எனவும்

உரைப்பாரும் உளர்".[14] என்று குறிக்கின்றார். இதனால் இறைவனாகிய சிவபெருமான் அருள் விளையாட்டினர் என்பதால் சித்துகள் செய்பவன் என்று கருதும் மனநிலை ஒருசாரருக்கு இருந்துள்ளமையும் அறியமுடிகிறது. எனவே சித்து எனும் சொல் அருள் விளையாட்டு எனவும் பொருள்படும். மண்ணைப் பொன்னாக்குதல், கூடுவிட்டுக் கூடுபாய்தல், வான்வழிச் செல்லல் முதலிய அருள் விளையாட்டுகள் சித்துகள் என வழங்கப்பெற்றன.

திருமந்திர ஆராய்ச்சி எனும் நூலில் இரா. மாணிக்கவாசகம் கூறுகையில், "மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கினுள் சித்தமே மற்ற மூன்றுக்கும் காரணமாவதால் அச்சித்து என்னும் சொல் சித்தம் என்னும் சொல்லோடு இயைபுடையதாக இருக்கலாம்".[15] என்றும், இச்சித்து "ஒரு விதமான நிலை".[16] என்றும், "இறைவனோடு ஆன்மா இரண்டறக் கலக்கும் அனுபவநிலை".[17] என்றும், "இச்சித்து நிலை அல்லது அனுபவம் எந்நாட்டைச் சேர்ந்த சித்தருக்கும் ஒன்றாகவே இருக்கும் என்றும், இந்த அனுபவத்தில் காலம், நாடு, சமயம், மொழி போன்ற வரம்புகளின் குறுக்கீடு இல்லை".[18] என்றும் கூறுவர்.

"சூடாமணியில் சித்தர்கள் சமண சமயத்தவராகவும், இரட்டைக் காப்பியங்களுக்குப் பின் தேவாரத்தில் சிவனைக் குறிக்கவும்".[19] "சிவனை வழிபடும் ஒரு சாரரைக் குறிக்கவும் இச்சொல் ஆளப்பெற்றுள்ளது".[20] எனத் திருநாவுக்கரசர் தேவாரத்தில் இடம் பெற்றுள்ள செய்தியை இளமதி சானகிராமன் தம் நூலில் சுட்டிக்காட்டியுள்ளது நோக்கத்தக்கது. திருமூலர் தொடங்கி சித்தர் எனும் சொல்லாட்சி நிலைபெற்றுவிட்டது என்பதையும் அறியமுடிகிறது.

**சித்தி பெறும் வழிகள்**

சித்தர்கள் சித்திபெறுவதற்குரிய வழிகளை ஐந்து வகைப்படுத்தியுள்ளனர்.

"1. யோக சாதனைகளில் நன்கு தெளிதல்.

2. 'யுங்கலிசங்' என்னும் மூன்றெழுத்தை இலக்கமுறையில் வணங்குதல்.

3. மௌனத்தில் இருத்தல்

4. அறிவாகிய சுழுமுனையில் மனத்தை ஒருமைப்படுத்தித் தியானித்தல்.

5. முத்திக்கு வித்தான மூர்த்தியைத் தொழுதல்".[21]

முதலானவையாகும்.

## சித்திகள்

யோக சாதனைக்குரிய சித்திகள் எண்வகைப்படும். அவை.

"1. அணிமா: உடலைச் சிறிதாக்கிக் கொள்ளும் திறம்.

2. மகிமா: உடலைப் பெரிதாக்கிக் கொள்ளும் திறம்.

3. கிரிமா: கிரி - மலை. மலை போன்று உடலைத் திடமாக்கிக் கொள்ளும் திறம்.

4. இலகிமா: இலகு - இலேசானது. உடலைப் பஞ்சு போல் இலேசாக்கிக் கொள்ளும் திறம்.

5. பிராத்தி: எதையும் நினைத்த மாத்திரத்தில் அடையும் திறம்.

6. பிரகாமியம்: பர - பிற. பிறர் உடலில் புகுந்து வெளியேறும் திறம்.

7. ஈசத்துவம்: ஒன்றனை அல்லது ஒரு செயலை உருவாக்கிப் (படைத்தல்) பாதுகாத்து (காத்தல்) நிறைவு செய்யும் (அழிக்கும்) திறம்.

8. வசித்துவம்: உலக உயிர்களைத் தன்வயப்படுத்தித் தன் ஆளுகைப்படி நடக்கச் செய்யும் திறம் என்பன அட்டமாசித்திகள்".[22] என்றும், "அட்டசித்தி".[23] என்றும், "எண் சித்தி".[24] என்றும் குறிப்பர். எண் சித்திகளாக, திருமூலர் குறிப்பிடுகையில் அணுசகம், நோன்மை, ககனம், பரகாயத்தேகம், தானாவது, ஆனாதஉண்மை, வியாப்பியம் என்னும் பெயரில் அட்டாங்கயோகமாகக் குறிப்பிடுகிறார். எனவே திருமூலர் காலத்தில் சித்தி என்பது யோகமாகவே இருந்தது புலனாகிறது.

சித்தர் ஞானக்கோவை அல்லது சித்தர் பாடல்கள் எனும் தொகுப்பில் அட்டமாசித்தி என்னும் பெயர் இடம்பெறவில்லை. ஆனால் தனிப்பட்ட சித்தர்களின் நூல் குறிப்புகளில் காணப்படுகின்றன. எண்வகைச் சித்திகள்

அனைவரும் அறிந்தவை என எண்ணி குறிப்பிடாமல் இருந்திருக்கமுடியும். எட்டுச் சித்திகளின் விரிவாக அமைவன அறுபத்து நான்கு சித்திகள் என்னும் குறிப்பும் காணப்படுகிறது. இராமதேவர்,

**“அறுபத்து நால் மூலி எல்லாமாடும்”.**[25]

என விரிக்கிறார். வடலூர் வள்ளலார் “நிலை சேர்ந்த அனுபவம் என்பதை, ஆன்ம ஈடேற்றத்தின் பின்னேகிட்டும் எனவும், அதனைக் கரும சித்தி, யோக சித்தி, ஞான சித்தி என மூன்றாகப் பிரித்தும் காட்டுகிறார்”.[26] பகவத்கீதையும் கருமக்காண்டம், யோகக்காண்டம், ஞானக்காண்டம் எனப் பிரித்துக் காட்டுவது ஒப்புமையுடையதாகும். கருமம், யோகம், ஞானம் என்பவை தெய்வநெறிக் கொள்கையாகும். சித்திகளின் பிரிவுகளைத் ‘திருவள்ளுவரும்’[27] குறிப்பிட்டுள்ளார். மணிமேகலை ‘அளப்பில் இருத்தி’ எனக் கூறுவதால் சித்திகள் அளவற்றன என்பதும் விளங்கும்.

**சித்தர் நிலை**

திருமூலர், சித்தர்களின் நிலையைக் குறிப்பிடுகையில், “சித்தர்கள் என்பவர் சாலோக, சாமீப, சாரூபமாகிய மூன்று பதமுத்திகளையும் கைவிட்டுச் சாயுச்சியமாகிய ஈசத்துவத்தை அடைந்தவர்; பாச இருளைத் துறந்தவர்; மதத்தினையறிந்து எனது, யான் எனும் ஆணவங்களையும் நீக்கி உண்மைத் தன்மையுடன் விளங்குபவர்; சிவத்தைக் கண்டவர்; சுத்தா சுத்தத்துடன் தோய்ந்தும் தோயாதவர்; முத்தர்; முத்திக்கு மூல காரணமானவர்; மூலத்தின் முடிவானவர்; சதாசிவத்தன்மையர்”.[28] என விவரிக்கிறார்.

“சட்டைமுனி, ஞானிக்கும் சித்தனுக்கும் உள்ள வேறுபாட்டை, பிறவிதொறும் தொடர்கின்ற கன்மவினையை முழுவதும் அறுப்பவர். ஞானி பிறவிப்பிணி தன்னை அடையாமல் காப்பவன்”.[29] என விளக்கிக் காட்டுகின்றார். “எழும்பாமல் வாசனையைக் கொன்றோன் ஞானி; ஏகாமல் வாசனையை அடித்தோன் சித்தன்; தெளிந்த இடத்தினைக் கண்டவன்; உயர்ந்த வரையினைப் பானத்தால் உண்டவன்; குளிகையிட்டவன், அறுவரைகளையும் இந்த

உடலுடனேயே மருவியவன்".".[30] என இளமதி சானகிராமன் சுட்டுகின்றார். மேலும், அகத்தியர் குறிப்பிடுகையில், "சாத்திரத்தைச் சுட்டெரிப்பவன், மூச்சே தெய்வம்".[31] எனவும் அகத்தியர் ஞானம் எனும் நூல் விளக்குகிறது.

கருவூரார் இச்செய்தியை, "ஆத்தாளைப் பூசித்தோவனே சித்தன்".[32] எனவும், கொங்கணர் வாலைக் குமரியைப் பூசிக்க "முன்னாளில் விட்ட குறைவேண்டும்".[33] எனவும், காகபுசுண்டர், "ஆருடஞானம் பெற்றவர்களே சித்தர்கள்".[34] எனவும் பாடியுள்ளனர். இராமதேவர் பூஜாவிதி எனும் நூலில்,

**"தாக்கோண விட்டகுறை வாய்ந்த தென்றால்**
**தனியிருந்து பார்த்தவனே சித்தனாமே".[35]**

என்று விட்ட குறைவாய்த்துத் தனிமையில், தன் அனுபவத்தால் அனைத்தையும் கண்டு கொள்பவனே சித்தன் என்று குறிப்பிடுகிறார். வால்மீகரும், "இவ்வுலகம் அனைத்தையும் சிவம் என்று அறிந்தவன் சித்தன்; சிந்தையில் தெளிவு கொண்டவன் சித்தன்; சிவனே அவனென்று உரைக்கும்படி இருப்பவன் சித்தன்".[36] என்று சித்தர்களின் நிலையை எடுத்துரைக்கின்றார்.

எனவே சித்தத்தினை நிலை நிறுத்தியவர்கள், கர்மத்தினை அடக்கித் தெளிந்த இடத்தினைக் கண்டவர்கள்; குளிகை முதலானவற்றை அறிந்தவர்கள்; வாலையைத் தெய்வமாக உடையவர்கள்; யோகச் செயல்முறைகளில் வென்றவர்கள்; சமுதாய மேம்பாட்டினை அதிகம் விரும்புபவர்கள் சித்தர்கள் என்பது மேற்கண்டவற்றால் தெளிவடைய முடிகிறது.

சித்தர்களின் நிலையைக் குறிப்பிடும்போது அறிஞர்கள் பல்வேறு கருத்துகளாகக் கூறுகின்றனர். அதனை ஈண்டு காண்போம். மு. வரதராசனார் குறிப்பிடுகையில், சாதி, சமயவேறுபாடுகளைக் கடந்தவர்கள்; மூடநம்பிக்கைக்கு இடம் அளிக்காதவர்கள்; சடங்குகளோடு ஒட்டிய வழிபாடுகளைப் போற்றாதவர்கள்; தத்துவஞானிகள்; மெய்யுணர்வு பெற்றவர்கள்".[37] எனப் போற்றுகின்றார்.

### சித்தர்களைப் பற்றி அறிஞர்களின் கருத்து

தெ. பொ. மீ. தம் உரையில், “சித்தர்கள் என்றால் சித்தி பெற்றவர்கள். வீட்டின்பம் அடைந்தவர்கள் என்று பொருளாம். அனுபவஞானம் பெற்றவர்கள். ‘மிட்டிக்’ என்பது ஆங்கிலச் சொல்லைக் குறிக்கும். இச்சொல்லுக்கு இணையான பொருளில் சித்தர் என்னும் சொல்லுக்கு, வாசியோகத்தினால் குண்டலியை எழுப்பி அனுபவங்களைப் பெற்று எல்லாமான பொருளில் நிலைத்துச் சித்தி பெறுபவர். எண்வகைச் சித்திகளைப் பெற்றவர்கள்”.[38] எனக் குறிப்பிடுகிறார்.

தமிழ் இலக்கிய வரலாறு எனும் நூலில் மு.அருணாசலம் எழுதுகையில், “பக்திநெறி அன்றி வேறு நெறியில் கடவுளைக் கண்டு தெளிந்து இருவினை ஒப்பு நிகழுங்காலும் உடலோடு உலவுவோர் சித்தர் என்பது ஒரு கருத்து. கடவுளைக் காணமுடியும் என்று கண்டு அறிந்து தெளிந்தவர்கள், அட்டமாசித்தி கைவரப் பெற்றவர்கள் என்ற வெவ்வேறு கருத்துகளும் வழங்கும். ஞானம், இரசவாதம், வைத்தியம், மந்திரம் என்பனவற்றிலும் வல்லவர்கள் என்ற கருத்துமிருக்கிறது. இந்த நெறிகள் ஒன்றுக்கொன்று ஒப்புமை இல்லாவிடினும் எல்லாமே உடலை அழியாமல் காப்பது ஆகிய காயகற்பம் தேடுவது என்ற பொது முயற்சியைக் குறித்தன; சித்தர்கள் எதையும் செய்யலாம்”.[39] என்ற பொருளில் எடுத்துரைக்கின்றார்.

திரு. வி. க. கூறும்போது, “மனிதனிடத்தில் எல்லாம் நிகழ்த்தவல்ல ஓராற்றல் அமைந்திருக்கிறது. அவ்வாற்றல் கைவரப் பெற்றோர் சித்தர் எனப்படுவர். அவர்வழி நின்று இயற்கையும் பணிசெய்யும். அச்சித்தர் கூட்டத்தார், தாங்கண்ட உண்மைகளைப் பின்வருவோருக்குப் பயன்படுமாறு எளியநடையிலும், அரிய நடையிலும் நூல்களாக யாத்துப் போந்தனர்”.[40] எனக் குறிப்பிடுகிறார்.

சித்தர் தத்துவம் எனும் நூலில் “சாக்கியம், சமணம், பௌத்தம், யோகம் முதலிய தத்துவ சமயக் கருத்துகள் தமிழ்நாட்டில் பரவிய காலத்தில் விஞ்ஞானச் சாயல் பொருந்திய பல சிந்தனைகள் இலக்கிய நூல்களிலும் தத்துவங்களிலும் எதிரொலிக்கலாயின. எனினும் வைதீக சமயக் கருத்துகளும்,

சனாதனத் தருமமுமே பெருவழக்காக நிலவின. இவற்றின் ஊடே தம்மாலியன்றளவு உணர்ச்சி பூர்வமாகவேனும் விஞ்ஞானப் பண்பினை வளர்க்க முனைந்தவர் சிலரிருந்தனர். அவரைச் சித்தர் என அழைக்கலாயினர்".[41] என க. கைலாசபதி விவரிக்கின்றார்.

இரா. மாணிக்கவாசகம் கூறுகையில், "சித்தத்தை வென்றதன் காரணமாகச் சாயுச்சியநிலை அடைந்தவர்கள்; இறை அறிவைத் தானாகவே அறியும் ஆற்றலைப் பெற்றவர்கள்; சிவனைச் சித்தனாகக் கொண்டு சமயச் சார்பற்ற நிலையில் பாடியவர்; சிவயோக சித்தியால் சிவனுபவம் பெற்றவர்கள்".[42] எனச் சுட்டுகிறார்.

மீ. ப. சோமு உரையில், "ஒரு சித்தரைப் போல் இன்னொரு சித்தர் இருப்பதில்லை. செயல், பேச்சு, பாட்டு, பழக்கம், உறவுமுறை எல்லாவற்றிலுமே ஒவ்வொரு சித்தருக்கும் ஒரு தனிப்பண்பு இருக்கின்றது. ஒவ்வொருவரும் ஓரொரு நோக்கு ஓரொரு வகை. இந்தச் சித்தர்கள் உலகெங்கிலும் இருக்கிறார்கள். இதற்கு முன்பும் பலர் இருந்தார்கள். அவர்களிலே நம்முடைய கண்ணுக்குத் தெரிந்தவர்கள், தெரியக் கூடியவர் பலர்".[43] என்று குறிப்பிடுகிறார்.

க. மாடசாமி தம் கருத்தினை, "பொய்யான சமய சமூக அமைப்புகளுக்குக் கட்டுப்படாமல் வாழ்ந்து, வாழுமாறு மக்களை வற்புறுத்தியும் ஆரவாரமற்ற தூயதொரு யோகப் பண்பாட்டுக்குத் தமிழ் மண்ணில் வித்திட்டவர்கள் சித்தர்கள்".[44] எனச் சுட்டிக்காட்டுகிறார். சாமி. சிதம்பரனார் கூறுகையில், "அற்புதங்களைச் செய்கின்றவர்கள், மட்டமான உலோகங்களை உயர்ந்த பொன்னாக்கும் திறமையடைந்தவர்கள்; சாகாநிலை பெற்றவர்கள்; அழியாத உடம்பைப் பெற்றவர்கள்".[45] என எடுத்துரைக்கிறார்.

'தமிழும் தத்துவமும்' எனும் நூலில் சோ.ந.கந்தசாமி குறிப்பிடும்போது, "சமணர்கள், சித்தர்களை விடுபட்ட ஆன்மாக்கள் என்றும் இவர்கள் தீர்த்தர் அல்லது தீர்த்தங்கரர் முதன்மையர் என்றும் கூறுவர். உலகு கடந்தநிலை சித்தர்க்குரியது. எண்வகைக் கருமங்களினின்றும் விடுபட்டவர். அவர் எதனின்

படைப்பும் இல்லை. எதையும் படைப்பதில்லை. ஆனந்த சுகத்தை அடைந்தவர்கள். சித்தநிலை என்பது மனம் கடந்தநிலை, வீடு பெற்ற சித்தான்மா. உடம்பின்றிப் பிறப்பின்றி உலகத் தொடக்கமின்றிப் பாலின்றி, அருவமாய் இலங்கும் நிலை".[46] என விளக்குகிறார். சி. கோ. தெய்வநாயகம் தம் உரையில், "நிலையற்ற வாழ்வில் மானுடராய்ப் பிறந்தும், மெய்வருத்தி வாழ்வின் நிலைப்பினைக் கண்டறிந்தும், புத்துலகம் படைத்தவர்கள் சித்தர்கள்".[47] என விவரிக்கிறார். கமில் சுவலயில், "ஆற்றல், வல்லமை, துணிவு, நிறம் ஆகியவற்றை உள்ளடக்கிய சித்தியைக் கைவரப்பெற்ற யோகியரைச் சித்தர் அல்லது மகாசித்தர் என அழைப்பர்".[48] என்கிறார்.

க.த. திருநாவுக்கரசு, சித்தர்நெறி எனும் நூலில், "பக்திநெறியின் விளைவால் சமய உண்மைகள் மறைக்கப்பட்டுச் சமயச் சடங்குகள் பெருகி விடுகின்றன. அந்நிலையில் சமய உண்மைகள் மீது படிந்துள்ள மாசினை நீக்கி, அவற்றிற்குப் புதுமெருகு கொடுத்து மக்களுடைய அன்றாட வாழ்க்கையில் அவற்றினைப் பொருத்திக் காட்டும் பண்பினைச் சித்தர்கள் செய்து உள்ளனர். புறத்தே கண்கொண்டு காண்பர் புல்லியர்; அகத்துக்கண் கொண்டு காண்பதே ஆனந்தம் என்று உணர்த்தினர். இவர்களைக் கட்டற்ற சிந்தனையாளர் எனலாம்".[49] என விளக்குகிறார்.

ஆ. பரமசிவம் 'சித்தர்களும் செய்திகளும்' எனும் தலைப்பில், "சித்தி என்பதற்கு வெற்றி எனப்பொருள் கொண்டு யோக மார்க்கத்தில் நின்று எண்வகைச் சித்திகளில் வல்லமை பெற்றவர்களே சித்தர்கள் எனக் கொள்வது தவறாகாது".[50] எனத் தம் கட்டுரையின் முடிவாகக் குறிப்பிடுகிறார். மேற்கண்ட அறிஞர்களின் கருத்துகளால் சித்தர்கள் அறிவியலை ஆக்கத்திற்குப் பயன்படுத்தி, யோகமுறையை மக்கள் மத்தியில் பரப்பி, சமுதாயக் கீழ்மைச் செயல்களை மாற்ற முனைந்தவர்கள் என்பதும் இறையுடன் ஒன்றும் நிலையால் பக்குவப்பட்டுத் தங்களது அனுபவங்களைப் பாடல்களாக வடிவமைத்துத் தந்துள்ளனர் என்பதும் அறியப்படுகிறது.

**சித்தர்களின் புறத்தோற்றம்**

சிவபெருமானையே சித்தராக எண்ணிய சித்தர்கள் சிவபெருமானுக்குரிய வேடங்களைத் தாமும் புனைந்து கொண்டனர். சிவபெருமானின் புறத்தோற்றத்தைப் பரஞ்சோதி முனிவர் குறிப்பிடுகையில், "தலையில் கற்றைச் சடை, மார்பில் முப்புரிநூல், நெற்றியிலும் உடலிலும் திருநீறு, செவிகளில் தோடு, இடையில் புலித்தோலாடை, தோளில் தீருநீற்றுப்பை, கழுத்தில் மணிமாலைகள், இடத்தோளில் யோகதண்டம், ஒரு கையில் மழு, மறுகையில் பொன் பூணிட்ட பிரம்பு".[51] இப்புறத்தோற்றத்தைச் சித்தர்களும் பின்பற்றினர்; இப்புறத்தோற்றம் மட்டுமே சித்தர்களின் இலக்கணம் அன்று. அவர்களின் அகத்தோற்றமும் செம்மையாக அமையவேண்டும். ஆனால் சித்தர்கள் என்ற பெயரில் பல போலிகள் புறத்தோற்றத்தையே பெரிதும் மேற்கொண்டு நெஞ்சகத்தில் வஞ்சனை உள்ளவர்களாக வாழ்ந்தனர். அவர்களை இராமதேவர், கருவூரார், வால்மீகர், சிவவாக்கியர் முதலியோர் கடுமையாகச் சாடுகின்றனர். இதனை,

**"தானென்ற வுலகத்தில் சிற்சில் லோர்கள்**
**சடைபுலித்தோல் காசாயம் தாவடம்பூண்**
**டூனென்ற வுடம்பெல்லாம் சாம்பல் பூசி**
**உலகத்தில் யோகியென் பார்ஞானி யென்பார்**
**தேனென்ற சிவபூசை தீட்சை யென்பார்**
**திருமாலைக் கண்ணாலே கண்டோ மென்பார்**
**கானென்ற காட்டுக்கு ளலைவார் கோடி**
**காரணத்தை யறியாமல் கதறுவாரே".**[52]

என்றும்,

**"சகலமுமே வந்தவர்போல் வேடம் பூண்டு**
**சடைமுடியுங் காசாயந் தன்னைச் சுற்றி**

**இகலுமன மடங்காமல் நினைவு வேறாய்**
**எண்ணமெலாம் பெண்ணாசை பூசைதானே".**[53]

எனவரும் பாடல்களில் சித்தர்கள் என்ற பெயரில் சில போலிகள் வாழ்ந்து மக்களை ஏமாற்றியமையும் அறியமுடிகிறது.

உண்மையான சித்தர்களின் புறத்தோற்றத்தைப் ‘பட்டினத்தார்’,[54] ‘பத்திரகிரியார்’,[55] ‘சிவவாக்கியர்’,[56] ஆகியோர் பேய்போல் திரிதல், பிணம் போல் கிடத்தல் எனக் குறிப்பிடுகின்றனர். சித்தர்கள் இவ்வுலக வாழ்விலிருந்து வேறுபட்டவர்கள். அவர்களின் மனம் உலகியலிலிருந்து வேறுபட்ட மற்றொரு உலகநிலையை அவாவியதால் அவர்களின் புறத்தோற்றம் இத்தன்மையை உடையதாக அமைந்துள்ளது. இக்கூற்றினைச் சிவவாக்கியர் பாடலில்,

**“சித்த ரென்றுஞ் சிறிய ரென்று**
**மறியொ ணாத சீவர்காள்!**
**சித்த ரிங்கி ருந்தபோது**
**பித்த ரென்றே எண்ணுவீர்;**
**சித்த ரிங்கி ருந்து மென்ன**
**பித்த னாட்டி ருப்பரே;**
**அத்த னாடு மிந்தநாடு**
**மலர்க ளுக்கெ லாமென்றே”.**[57]

என்றும், பித்தர்களைப் போன்று சித்தர்கள் திரிவதை,

**“ . . . கந்தை சுற்றித் திரிவ தென்னே?**
**தேவனைப்போல் விழிப்பதென்னே? சிறியா ரோடும்**
**தெருவிலே நாய்களொடும் விளையாட் டென்னே?**
**பாவனையிற் பித்தரைப்போ ல்லைவ தென்னே?**
**பரமசிவன் போலுருவம் படைத்த தென்னே?**
**ஆவலற்று நின்ற தென்னே?”.**[58]

என்று பாரதி தாம் சந்தித்த குள்ளச் சாமியினைக் குறித்துப் பாடும்பொழுது குறிப்பிடுகிறார். இந்நிலையே சித்தரின் தோற்றமாகவும் இருந்தது.

### சித்தர்களின் செயல்கள்

சித்தர்கள் உணவு, உடை, உறையுள் என்பவைப் பற்றிக் கவலை கொள்ளாதவர்; எவர் சொல்வதையும் செவி மடுக்காதவர்; எவருடனும் பேசாதவர்; பற்றற்றவர்கள் என்றாலும் ஞானம், இரசவாதம், சமாதிநிலை கைக் கூடியவர்களிடம் உறவுகொண்டு வாழ்பவர்கள். அவர்கள் இவ்வுலகில்

இருந்தாலும் ஏதோ ஓர் உலக வாழ்வை எண்ணி அதற்காக மனத்தை ஒருமைப்படுத்திக் கொண்டவர்கள். மனம் பேதுமுற்றது போல் இருந்தாலும், எத்தொழிலைச் செய்தாலும் அவர்களின் உண்மையான குறிக்கோள் ஞானம் அடைதலே. இதனைப் பட்டினத்தார் குறிப்பிடுகையில்,

**"எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்**

**முத்தர் மனமிருக்கும் மோனத்தே".[59]**

என்றும்,

**"நாடே இடைமரு நீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்**

**வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்பம் மேவுவரே".[60]**

என்னும் பாடலின் மூலம் அறியபடுகிறது.

மனிதர்களின் மனத்தின் மாசினைக் கட்டுப்படுத்துவது சித்தர்களின் தொழிலாகும். இதனை அ.ச.ஞானசம்பந்தன் குறிப்பிடுகையில், "எந்த ஒருவனையும் கண்டவுடன் நம்முடைய குரங்கு மனம் சற்று அமைதி அடைகின்றதோ, யாரைக் கண்டபொழுது நம்முடைய கவலைகளை மறந்து ஓரளவு அமைதி அடைகின்றோமோ, யாருடன் இருக்கும்பொழுது காரணம் இல்லாமலும் ஒருவகையான ஆனந்தம் பெருக்கெடுக்கின்றதோ, யாரைக் கண்டவுடன் காணாததைக் கண்டது போன்ற உள்ளுணர்வு உண்டாகின்றதோ அவனே சித்தன் ஆவான். நினையா நம் நெஞ்சை நினைவிப்பதும் அடங்கா மனத்தை அடங்குமாறு செய்வதுமே சித்துகளாகும்".[61] என்று அ.ச.ஞானசம்பந்தத்தின் கூற்றினை இளமதி சானகிராமன் தம் 'சித்தர் இலக்கியம்' எனும் நூலில் குறிப்பிட்டுக் காட்டுகின்றார்.

சித்தர்களின் செயல்களில் சமாதிநிலையில் இருப்பதே முதன்மை பெறுகிறது. உண்ணாமல், உறங்காமல், இடம் பெயராமல், வெயில், மழை, பகல், இரவு எனப் பாராமல் இருப்பதே சமாதிநிலை. அங்ஙனம் சமாதியிலிருந்து பின் வெளிவரும்போது அவர்கள் ஞானத்தால் பெற்ற பட்டறிவுகளை மக்களுக்கு எடுத்து உரைப்பர். இதனைக் கைலாசபதி குறிப்பிடுகையில், "சாக்கியம், சமணம், பௌத்தம், யோகம் முதலிய தத்துவ சமயக் கருத்துகள் தமிழ்நாட்டில் பரவிய காலத்தில் விஞ்ஞானச் சாயல் பொருந்திய பல

சிந்தனைகள் இலக்கிய நூல்களிலும் தத்துவங்களிலும் எதிரொலிக்கலாயின. எனினும், வைதீக சமய கருத்துகளும் சநாதன தருமமே பெருவழக்காக நிலவின. இவற்றினூடே தம்மாலியன்றளவு உணர்ச்சி பூர்வமாக வேணும் விஞ்ஞானப் பண்பினை வளர்க்க முனைந்தவர்".[62] என்று சுட்டிக்காட்டியுள்ளார்.

சித்தர்களின் சமாதிநிலைப் பற்றி மாடசாமி குறிப்பிடுகையில், "பொய்யான சமய சமூக அமைப்புகளுக்குக் கட்டுப்படாமல் வாழ்ந்தும், வாழுமாறு மக்களை வற்புறுத்தியும் ஆரவாரமற்ற தூயதொரு யோகப் பண்பாட்டுக்குத் தமிழ் மண்ணில் வித்திட்டவர்கள் சித்தர்கள்".[63] எனவும், "சமய உண்மைகள் மீது படிந்துள்ள மாசினை நீக்கி அவற்றிற்குப் புதுமெருகு கொடுத்து மக்களுடைய அன்றாட வாழ்க்கையில் அவற்றினைப் பொருத்திக் காட்டும் பண்பினைச் செய்தவர்கள்".[64] எனவும், க.த.திருநாவுக்கரசு விவரிக்கின்றார். பரஞ்சோதி முனிவர், "சைவ எல்லப்ப முதலியார், தாயுமானவரும் இவ்வகையான அற்புதங்களை அவர் தம் பாடல்களில் சுட்டிக்காட்டியதை".[65] இளமதி சானகிராமன் தம் 'சித்தர் இலக்கியம்' எனும் நூலில் குறிப்பிட்டு எடுத்துரைக்கின்றார்.

பாம்பாட்டிச் சித்தர்கள் செய்யும் செயலாக, "எட்டு நாகங்களைக் கையால் எடுத்து ஆட்டுதல்; இந்திரன் உலகினைப் பூமியில் காட்டுதல்; கட்டுக்கடங்காத பாம்பினைக் கட்டுதல்; ஆதிசேடனையும் உள்ளங்கையில் வைத்து நீதியுடன் அடங்கி நிற்கச் செய்தல்; பெரிய தூணைச் சிறு துரும்பாகவும், சிறு துரும்பைப் பெரிய தூணாகவும் மாற்றுதல்; ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும் மாற்றுதல்; எட்டு மலைகளைப் பந்துகளாக எடுத்தெறிதல்; ஏழு கடலையும் குடித்து ஏப்பம் விடல்; மண்டலங்களைக் கையால் மறைத்தல்; வானத்தை வில்லாக வளைத்தல்; தம்மையடைந்து தொண்டு புரிபவர்களுக்குக் குளிகையைக் காட்டுதல்; நெருப்பில் மூழ்குதல்; நீருள் மூழ்கி மூச்சடக்கி இருத்தல்; புலிகளைத் தாக்குதல்; மூன்று உலகங்களையும் பொன்னாக்குதல்; சூரியனைச் சந்திரனாகச் செய்தல்; இந்த உலகத்தினை இல்லாமல் செய்தல்; பிரமனது படைப்புகளைப்

போலப் படைத்தல்; பிரமனையும் அடிமைப்படச் செய்தல்; ஆண்டவனுக்குச் சமமாக வாழ்தல்; புலி, யானை, யாளி, சிங்கம் முதலானவற்றைத் தங்கட்குக் குற்றேவல் செய்யும்படிப் பணித்தல்; கடவுளைத் தங்களுடன் விளையாடச் செய்தல்".[66] என்பனவற்றைச் சித்தர்கள் செய்வனவாகக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். இச்செயல்களைச் 'சித்து விளையாட்டு' என்று கூறினர். கலம்பகத்தில் அமைந்த 'சித்து' என்னும் உறுப்பும் இத்தகைய வியத்தகு செயல்களை உள்ளடக்கியதாகவே புலவர்களால் பாடப்பெற்றுள்ளது.

**சித்தர் வரையறை**

'சித்' என்றால் அறிவு உடையவர்கள் என்று பொருள். சித்தி பெற்றவரைச் சித்தர் எனவும், மெய்ஞானிகள் எனவும் அழைப்பர். கடவுளைக் காண முயல்பவர்களைப் பக்தர் என்றும், கண்டு களித்தவர்களைச் 'சித்தர்கள்' என்றும் தேவாரம் வேறுபடுத்திக் காட்டுகிறது. அஷ்டாதக சித்தர்கள் என்ற பதினெட்டுச் சித்தர்கள் எனும் மரபு தமிழரிடையே வாய்மொழியாகவும், வழக்கு மொழியாகவும் கூறுவது வழக்கமாகவுள்ளது. வரலாற்று ஆதாரங்கள் இந்த எண்ணிக்கையின் பின்னணியில் சில சூச்சமங்கள் உள்ளது எனவும், அந்தச் சூச்சமங்களின் குறியீடு தாம் அந்த எண்களே தவிர அவை எண்ணிக்கையைக் குறிப்பிடுவன அல்ல என்றும் கூறுவர். அச்சூச்சமக் குறியீட்டு எண் 18 என வழங்குவர். வானமண்டலத்திலுள்ள அண்டங்களின் இயக்கத்தை எண் வடிவில் குறிப்பிடுவதே 84 என்றொரு கருத்துமுண்டு. ஏழு கோள்களையும், பன்னிரண்டு இராசிகளையும் பெருக்கி 84 என வழங்கியதாகவும் கூறுவர். சோதிட, மருத்துவ, தத்துவ நூல்களும் இந்த 18 ஆம் எண்ணிற்குத் தனிச் சிறப்புடையதாகவே கருதுகின்றன. 18 தேவர்கள், 18 தர்ம சாத்திரங்கள், 18 யுகங்கள், 18 குற்றங்கள் என பதினெட்டு பதினெட்டாகக் குறிப்பிடுவதன் மூலம் அறியப்படுகிறது. 'பதினெண் சித்தர்' என்பது பலரும் அறிந்த வரையறையாகும். அவ்வரையறையை அகத்தியர் நூலில்

**"பாவென்ற பஞ்சகர்த்தாள் பாதம் போற்றி**
**பண்பான பதினெண்பேர் பாதம் போற்றி".[67]**

எனக் காப்புச் செய்யுளில் குறித்துள்ளதால் அறியப்படுகிறது. எனவே, சித்தருள் ஒருவரான அகத்தியரே பதினெண் சித்தர் என்று ஆட்சி செய்தமையும் உணரமுடிகிறது. இராமதேவர் குறிப்பிடுகையில்,

**"பேரான பதினெட்டுச் சித்த ரெல்லாம்**

**பிரபலமாய்ப் பரிபாஷை யாகச் சொன்னார்".**[68]

எனவும், காகபுசுண்டர் கூறுகையில்,

**" சித்தர் பதினெண்மர் செய்கையிற் றோன்றாத**

**அத்தனருளும் புகண்டன் யான்".**[69]

எனவும், கருவூரார் கூறும்போது,

**"சீர்பெற்றார் பதினெட்டுச் சித்தர் தாமே".**[70]

எனவும், வால்மீகர் குறிப்பிடும்போது,

**"பதினெண்பேர் பாடற்கு".**[71]

எனவும் வரையறையாக உணர்த்துகின்றனர். பதினெண்பேர் என்ற சொல்லாட்சியினைத் தவிர யார்யாரென என்பதைச் சுட்டவில்லை.

'பதினெண் சித்தருள் ஒருவராகத் திருமூலரைச் சேக்கிழார் சித்தராகக் கருதாமல் சைவ அடியார்கள் அறுபத்து மூவரில் ஒருவராகவே பாடியுள்ளார்'.[72] சைவத்தோடும், சிவத்தோடும் தொடர்புடைய நிலையிலேயே பாடியுள்ளார். திருவிளையாடற்புராணம் பாடிய பரஞ்சோதி முனிவர், இடைக்காடர் பற்றிய செய்தியில், "எல்லாம் வல்ல சித்தரான படலம், கல்லானைக்குக் கரும்பருத்திய படலம் ஆகிய படலங்களில் இறைவனின் திருவிளையாடல்களைக் காட்டுகின்றார்".[73] பதினெண் சித்தர்கள் எனும் வரையறைப் பாடலாக இல்லாமல் பொதுவான பாடலாகக் கீழ்க்கண்ட பாடல் விளங்குகிறது.

**"பார்த்திடவே நந்தீசர் மூலத் தீசர்**
**பண்பான அகத்தீசர் சட்டை நாதர்**
**போர்த்திடவே பதஞ்சலியும் கூனக் கண்ணர்**
**கோரக்கர் கமலமுனி சண்டி கேசர்**
**கூர்த்திடவே இடைக்காடர் சிவாய சித்தர்**
**கொங்கணவர் தந்தை போக நாதர்**

**கார்த்திடவே மச்சமுனி பிண்ணாக் கீசர்**

**காலாங்கி சுந்தரரும் காப்பு தானே".**[74]

இப்பாடலால் நந்தி, மூலர், அகத்தியர், சட்டைநாதர், பதஞ்சலி, கூனர், கண்ணர், கோரக்கர், கமலமுனி, சண்டிகேசர், இடைக்காடர், சிவாயசித்தர், கொங்கணர், போகர், மச்சமுனி, பிண்ணாக்கீசர், காலாங்கி, சுந்தரானந்தர் என்போர் அப்பதினெண்மர் என்பதை அறியமுடிகிறது. ஆனால், இப்பாடலால், 'பதினெண்மர்' என்னும் வரையறையின் கருத்து பின்பற்றப்படவில்லை.

'மருத்துவ வரதயோக ஞான சாத்திரம்' என்னும் நூலில், "திருமூலர், இராமதேவர், கும்பமுனி, கொங்கணர், கமலமுனி, சட்டமுனி, கருவூரார், சுந்தரானந்தர், வான்மீகர், நந்திதேவர், பாம்பாட்டி, போகநாதர், மச்சமுனி, கோரக்கர், பதஞ்சலி, தன்வந்தரி, குதம்பை, இடைக்காடர்".[75] எனப் பதினெண்மர் குறிக்கப்படுகின்றனர். 'அபிதான சிந்தாமணி' அகத்தியர், போகர், கோரக்கர், கைலாசநாதர், சட்டைமுனி, திருமூலர், நந்தி, கூன்கண்ணர், கொங்கணர், மச்சமுனி, வாசமுனி, கூர்மமுனி, கமலமுனி, இடைக்காடர், புண்ணாக்கீசர், சுந்தரானந்தர், ரோமரிஷி, பிரமமுனி".[76] எனப் பதினெண்மரைக் குறிக்கின்றது.

தமிழ்ப் பேரகராதி, "திருமூலர், இராமதேவர், கும்பமுனி, இடைக்காடர், தன்வந்திரி, வால்மீகி, கமலமுனி, போகநாதர், மச்சமுனி, கொங்கணர், பதஞ்சலி, நந்திதேவர், போதகுரு, பாம்பாட்டி, சட்டைமுனி, சுந்தரானந்ததேவர், குதம்பைச் சித்தர், கோரக்கர்".[77] என்பார் பதினெண்மர் என்று சுட்டுகின்றது. அபிதான சிந்தாமணியும், தமிழ்ப் பேரகராதியும் இவ்வாறு கொண்டமைக்குரிய சான்றுகளைக் காட்டவில்லை.

என்.கந்தசாமிப் பிள்ளை தாம் எழுதிய 'சித்த மருத்துவ வரலாறு' என்னும் நூலில் பதினெண் சித்தர்களைப் பற்றிப் பன்னிரு வகையான பட்டியல்களைக் காட்டியுள்ளார்".[78] அப்பட்டியல்களை நோக்கினால் ஒரு பட்டியலில் இடம்பெற்றவர்கள் மற்றொரு பட்டியலில் இடம் பெறாமையும்

புதியவர்கள் சேர்க்கப்பட்டமையும் காணமுடிகிறது. இதனால் ‘பதினெண்மர்’ என்ற வரையறை பெயரமைப்பில் ஒருமைப்பாட்டின்மை வெளிப்படுகிறது.

டி.வி. சாம்பசிவம் பிள்ளை ‘தமிழ் - ஆங்கில மருத்துவ அகராதி’யில் பதினெண்மர் பெயரைக் குறிப்பிடுகையில், **“**திருமூலர், புலத்தியர், நந்திதேவர், இடைக்காடர், அகத்தியர், புண்ணாக்கீசர், போகர், புலிக்கேசர், கொங்கணர், அழுகண்ணி, பாம்பாட்டி, குதம்பை, கருவூரார், அகப்பேய், தேரையர், சட்டைமுனி, பூனைக்கண்ணர், காலாங்கி**”.**[79] என என்பேராவார்.

ஏ.கே. இராமச்சந்திர ராவ், ‘இந்திய மருத்துவக் கலைக் களஞ்சியம்’ எனும் ஆங்கில நூலில், **“**அகத்தியர், திருமூலர், போகர், கோரக்கர், சட்டைமுனி, நந்தீசர், கொங்கணர், கமலமுனி, இடைக்காடர், சுந்தரானந்தர், உரோமமுனி, பிரமமுனி, மச்சமுனி, வராகமுனி, கூர்மமுனி, புண்ணாக்கீசர், கைலாசநாதர், கூன்கண்ணர்**”.**[80] என்னும் பதினெண்மரைக் காட்டியுள்ளார்.

முத்துக்கருப்பப் பிள்ளை எழுதிய சித்த மருத்துவ பாடபோதத்தின் முதல் பாடத்தில், **“**அகத்தியர், திருமூலர், காலாங்கி, போகர், புலிப்பானி, சட்டமுனி, மச்சமுனி, இராமதேவர், கமலமுனி, உரோமரிஷி, கருவூரார், இடைக்காடர், சுந்தரானந்தர், அகப்பேய்ச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், தேரையர், யூகிமுனி, யாக்கோபு எனப் பதினெண்மரைக் குறிப்பிட்டு, இரண்டாம் பாடத்தின் இறுதியில் வேறொரு வகையாக,

**“**இராமதேவர், திருமூலர், கும்பமுனி, வான்மீகமுனி. இடைக்காடர், தன்வந்திரி, மச்சமுனி, கமலமுனி, போகர், கொங்கணர், நந்தீசர், பதஞ்சலி, கோரக்கர், சட்டமுனி, பாம்பாட்டி, குதம்பை, கருவூரார், சுந்தரர்**”.**[81] எனப் பதினெண்மரைக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

மேற்கண்டவற்றால் பதினெண் சித்தர்கள் யார்யார் என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. அகத்தியர், திருமூலர், போகர் ஆகிய மூவரை

வரையறைப்படுத்திய அறிஞர்கள் அனைவரும் ஏற்றுக் கொண்டுள்ளனர். ஏனைய சித்தர்களின் பெயர்களைக் குறிப்பிடுவதில் மாறுபாடுகள் புலனாகின்றன.

இப்பதினெட்டு என்னும் எண்ணிக்கையினைக் குறித்து, "சித்தர் கூட்டம் எனக் கணிக்கப்பட்ட காலத்தில் பதினெட்டுப் பேர் இருந்திருக்கலாம். பின் அதுவே மரபாகி வந்திருக்கலாம் எனச் சங்க நூல்களில் பல மன்னர்கள் வள்ளல்களாக இருந்தும் கடையெழு வள்ளல்களே சிறப்பாகப் பேசப்படுவது போல இச்சித்தர் கூட்டத்திலும் சிறப்போடு விளங்கியவர்கள் பதினெட்டுப் பேராக இருந்து பதினெண்சித்தர் என்று குறிப்பிடப் பட்டிருக்கலாம் என்றும், இவ்வெண் ஏதேனும் தத்துவப் பொருளுடன் தொடர்பு கொண்டிருக்கலாம் என்றும், தேவர் கணம், மொழி, நோய், இசைக்கருவி, சாதி, பாட்டு, யுகம், யாகம், புராணம், தருமநூல் முதலிய அனைத்தும் பதினெட்டு வகையினவாதலின் இப்பதினெட்டு என்னும் எண்ணிக்கைச் சிறப்பினால் பதினெண் சித்தர் என்னும் வழக்குத் தோன்றியிருக்கலாம்".[82] என்றும் விளக்குகிறார். அவரே "அகத்தியர் பாடல் மூலம் 'பதினெட்டுப் பேர்' என்னும் மரபு அகத்தியரது மாணவர்கள் பதினெண்மரைக் குறிக்கும் என்பது தெளிவாகிறது".[83] என்கிறார்.

"பதினெட்டு என்னும் குறியிலுள்ள 'எட்டு' என்பது இறைவனின் வடிவத்தையும், 'ஒன்று' என்பது பிரம்மத்தையும் குறிக்க வழங்கிய குறி. பிற்காலத்தில் பதினெட்டு என்ற எண்ணாக்கப்பட்டுப் பதினெண் சித்தர் என்னும் வழக்குத் தோன்றி நிலைத்திருக்கலாம்".[84] எனும் இக்கருத்து ஏற்புடையதாக இல்லை.

முற்காலத்தில் பதினெட்டுத் துறைகள் இருந்து அவ்வத்துறைகளில் முதன்மையாக இருந்த பதினெட்டுச் சித்தர்களும் அவ்வத்துறைகளுக்குத் தலைவர்களாக இருந்திருக்க வேண்டும். பதினெட்டிற்கும் மேற்பட்டிருப்பவர்கள் அந்தப் பதினெட்டுத் தலைவர்களுக்கும் சீடர்களாக இருந்து அவரரவர்களது துறையினை வளர்த்திருக்க வேண்டும்".[85] என்றும் கூறுவர். இக்கருத்து ஏற்புடையதாக இருந்தாலும் ஒருவரது பெயரில் பல துறைப் பாடல்கள் கிடைப்பதால் இதிலும் முரண்பாடு ஏற்படுகிறது.

அறிஞர்களின் விளக்கங்களை நோக்கும்போது பதினெட்டு என்னும் வரையறை விளக்கம் முற்றுப் பெற்றதாகத் தெரியவில்லை. வரையறைப் பெயருக்குரிய உண்மையை உணர்வதற்குப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை என்பதே தெளிவாகிறது.

**இலக்கியத்தில் சித்தர்கள்**

கற்றவர்கள் மட்டுமே பயன்படுத்திய இலக்கியங்களுக்கிடையே பாமரர்களும் மகிழ்ந்து பாடும் வண்ணமும் ஆழ்ந்த பொருளை எளிமையாக உணர்ந்து போற்றும் வண்ணமும், உண்மைக்கு ஏற்பத் தங்களை மாற்றிக் கொண்டு வாழும் வண்ணமும் தாங்கள் பாடிய இலக்கியங்களை நன்கு சிந்தித்து தந்தவர்கள் சித்தர்கள்.

சித்தர்கள் தாங்கள் கண்ட அனுபவங்களை, தத்துவங்களை, உண்மை நிலையை மக்களுக்கு எடுத்துக்காட்டியவர்கள் ஆவர். இலக்கியங்களே மக்களை எளிதில் வயப்படுத்தவல்லன என்பதை நன்கு சிந்தித்துத் தங்களது அனைத்து சிந்தனைகளையும் இலக்கியங்களில் மக்களுக்கு வழங்கியுள்ளனர். உள்ளத்தின் வெளிப்பாடே கவிதையாக விளங்குகிறது என்பதை, 'உள்ளத்துள்ளது கவிதை; இன்பம் ஊற்றெடுப்பது கவிதை' என வரும் வரியால் உணரமுடியும். இதனை நன்குணர்ந்தே சித்தர்கள் பாடியுள்ளனர். உள்ளத்து வெளிப்பாட்டினால் சமுதாயம் நேர்மைப் படவேண்டும்; உயரிய நெறியில் கொண்டு செல்லுதல் வேண்டும் என்னும் நிலையில் பாடல்களின் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர்.

சித்தர்கள் தங்களின் செயற்கரிய செயற்பாடுகளினால் ஓதாமல் உணரும் ஆற்றல் படைத்ததனால் இலக்கியத்தில் பல்வேறு கூறுகளையும் நன்கு உணர்ந்துள்ளனர். இன்றைய நிலையில் ஓர் இலக்கியத்தை ஆய்ந்து அதன்கண் அமைந்துள்ள கூறுகளையும் வெளிப்படுத்தி என்னென்ன கூறுகள் வெளிப்படுமோ அக்கூறுகள் அனைத்தையும் சித்தர் இலக்கியங்களும் பெற்றுள்ளதால் இலக்கியம் குறித்து சித்தர்களின் சிந்தனைகளும் அவர்களது அறிவைப் போலவே பரந்துபட்டு விளங்குகின்றன. சங்க இலக்கியம் முதல் இக்கால இலக்கியம் வரை அனைத்துமே அவ்வக்கால நிலையினைப் படம்பிடித்துக்

காட்ட சித்தர் இலக்கியமோ விண்ணியல், மண்ணியல், மனித உடலியல், உயிரியல், மருத்துவ இயல் முதலான அனைத்துத் துறைகளையும் தன்னகத்தேக் கொண்டு எக்காலத்திற்கும் ஏற்றவகையில் அமைந்து இலக்கிய உலகிற்கே பெருமை நல்கியுள்ளன.

சித்தர்களின் சிந்தனைகளில் முகிழ்ந்த இலக்கியங்களின் சிறப்புகளான மொழிநடை, நாட்டுப்புறக் கூறுகள், விடுகதைத் தன்மை, மறைபொருட்கூறுகள், புராண இதிகாசக் கதையாட்சி, இலக்கிய மேற்கோள், யாப்பு, அணிநலம், பழமொழிகளை உவமையாக்கி அமைத்தல் முதலான முறைகளில் கையாண்டுள்ளனர்.

## மொழிநடை

**"**ஒரு வெளிப்பாட்டின் தன்மையை அல்லது பண்பை வருணிப்பதற்கோ அல்லது பெயரிடுவதற்கோ 'நடை' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றோம்**".**[86] என சி.இ.மறைமலை உரைக்கின்றார். சித்தர்களும் தங்களது மன உணர்வுகளை, பரந்துபட்ட அறிவாற்றலை வெளிப்படுத்திய தன்மையை அவர்களின் பாடல்கள் வெளிக்காட்டுவதாக இருப்பதால் அவர்களும் தனித்த நடையினைப் பெற்றிருப்பதும் புலனாகிறது.

**"**படைப்பாளிக்கு நடை ஒரு சாதனம்; கொள்கைப் படைப்பாளிக்கு ஓர் உத்தேசம். ஒரு படைப்பாளி தன் நடை மூலம் எவ்வித உத்தேசத்தையும் வெளியிடலாம்**".**[87] என எழில்முதல்வன் குறிப்பிடுகின்றார். அம்முறையில் உயர்ந்த இலக்கிய வகைகளைப் புரிந்து கொள்ள இயலாத பாமரர் இடையில், அவர்கள் புரிந்து கொண்ட வண்ணம் வழங்குகின்ற சொற்களைப் பயன்படுத்தித் தம்பாடல் வடிவங்களைச் சித்தர்கள் தந்துள்ளனர். இவர்களின் இலக்கிய நடை நாட்டுப்புற இலக்கிய நடை, கேள்வி நடை, பழமொழி நடை, பேச்சு நடை, வியப்பு நடை, உருவக நடை, குறிப்புத்தொடர் நடை, விளிநடை போன்ற பல்வேறு நடை அமைப்பினைப் பெற்றுத் திகழ்கின்றது.

ஆசிரியரை இனங்கண்டு கொள்ளும் வகையில் அவருக்கே உரியதாக இருக்கும் வெளிப்பாட்டு மொழிப்பாங்கே உடை என்ற கருத்துடன் சித்தர் பாடல்களின் நடை சிறிது மாறுபடுகின்றது. அகப்பேய், குதம்பை, பாம்பாட்டி, இடைக்காடர், அழுகுணி ஆகியோர் பாடல்கள் நீங்கலாகப் பிறர் பாடல்கள் அனைத்தும் பாடியவர்கள் பெயர் இல்லாமல் போயிருப்பின் பாடியவர் எவரென்று தெரியாமலே போயிருக்கும். அந்த அளவிற்குச் சித்தர் பாடல்களில் பல நடையால் வேறுபாடில்லாமல் ஒத்துள்ளன.

சித்தர்களின் பாடல்களை ஏடுகளில் எடுத்தெழுதும் பொழுதே, பாடல்களில் சில கிடைக்காத பொழுதோ மிகவும் எளிமையுடன் இருப்பதால் இவர்களின் நடையினைப் பின்பற்றிப் பலரும் எழுதி இணைந்திருக்க வாய்ப்புள்ளமையைச் சில ‘இடைச்செருகல்கள்’ காட்டுகின்றன. இதனை, **“**சித்தர்கள் தங்களுக்கென்று ஒரு தனிமொழி நடையினை அமைத்துக் கொண்டுள்ளனர். இந்நடையின் செல்வாக்கை உணர்ந்த பிற்காலத்தவர்கள் பலர் இத்தனித்த நடையமைப்பைப் பின்பற்றிப் பாடல்கள் இயற்றியுள்ளனர். இதன் காரணமாகச் சித்தர் பாடல்களில் இடைச் செருகல்கள் சேர்ந்தன**”.**[88] எனவரும் கூற்றினால் அறியமுடிகிறது.

சங்க இலக்கியங்களில் ஆடுஉ, முன்னிலை, மகடூஉ முன்னிலைப் பாடல்கள் இடம்பெறுகின்றன. சித்தர்களும் முன்னிலைப்படுத்திக் கூறும் பாங்கில் பாடல்களை அமைத்துச் செல்கின்றனர். முன்னிலைப் படுத்துதல் ஐவகை நிலைகளில் அமைந்துள்ளன. அவை.

1. பெண்களை முன்னிலைப்படுத்துதல்
2. மக்களை முன்னிலைப்படுத்துதல்
3. தன்னை முன்னிலைப்படுத்துதல்
4. மனம், பிற பொருள்களை முன்னிலைப்படுத்துதல்
5. மாணவனை முன்னிலைப்படுத்துதல்

என்பன. இவற்றுடன் முன்னிலைப்படுத்தாமல் கருத்தை அறிவிக்கும் பாடல்களும் உள. கொங்கணர், குதம்பை முதலானோர் பெண்ணை முன்னிலைப்படுத்துவர்; சிவவாக்கியர் மக்களை முன்னிலைப்படுத்துவர்; கருவூரார், பத்திரகிரியார்

முதலானோர் தன்னை முன்னிலைப்படுத்துவர்; அகப்பேய், பட்டினத்தார், இடைக்காடர் முதலானோர் மனம் மற்றும் பிற பொருட்களை முன்னிலைப்படுத்துவர்; அகத்தியர், சட்டைமுனி முதலானோர் மாணக்கர்களை முன்னிலைப்படுத்துவர்; இடைக்காடர் பட்டினத்தார் இருவரும் மனம் மற்றும் பிற பொருட்கள் இவற்றுடன் தன்னையும் கூற்றாகவும் தம் கருத்துகளை எடுத்துரைப்பர். காகபுசுண்டர், திருவள்ளுவர், வால்மீகர் முதலானோர் முன்னிலைப்படுத்தாமல் நேரிடையாகப் பாடுவர், முன்னிலைப்படுத்திப் பாடுவதன் மூலமே மக்களை எளிதில் தம் வயப்படுத்த முடியும் என்ற சிந்தனையே சித்தர்களை இவ்வாறு இலக்கியம் படைக்கச் செய்தது என உறுதியாகக் கூறமுடியும்.

**நாட்டுப்புறக் கூறுகள்**

சித்தர்கள் பாடல்களில் நாட்டுப்புறக் கூறுகளை மிகுதியும் அமைத்துப் பாடியுள்ளனர். இக்கூற்றினை மெய்பிக்கும் வகையில் மு. வரதராசனார், "பொதுமக்களுக்குப் பயன்படும் வகையில் பாடல்கள் இயற்ற விரும்பிய காரணத்தால் நாட்டுப்புறப் பாடல்களின் வடிவங்களைப் பயன்படுத்திக் கொண்டனர்".[89] எனக் கூறியுள்ளார். இ. கோவரும், "சித்தர் பாடல்களை நாட்டுப்புறப் பாடல்களாகவே கருதினார்".[90] கன்னியாகுமரி மாவட்டத்தில் பாடிய அமுதுணி எனும் பாடலில்,

**"சம்பா அரிசி குத்திச்**
**சாதம் சமைத்திருக்க - பாட்டியம்மா**
**சாப்பிடுவாய் என்று**
**சொல்லி உழக்குழக்கு**
**நெய்யூத்தித் தித்திக்கும்**
**பிட்டமிர்தம் செய்தோமே - நீ**
**தின்னாமல் கொள்ளாமை போனாயே**
**வாழைப்பழம் தின்னால்**
**வாய்நோகும் என்று சொல்லி - பாட்டியம்மா**
**தாழைப்பழம் தின்னதினால்**
**சாவுனக்கு வந்ததுவோ".[91]**

என்று நாட்டுப்புறப்பாடலும், அழுகுணி சித்தர் பாடலில்,

**“சம்பா அரிசியடி சாதம் சமைத்திருக்க**
**உண்பாய் நீயென்று சொல்லி**
**உழக்குழக்கு நெய்வார்த்து**
**முத்துப்போ லன்னமிட்டு முப்பழமுஞ்**
**சர்க்கரையுந் தின்றுகளைப் பாறேனோ”.**[92]

என்றும்,

**“வாழைப்பழந்தின்றால் வாய்நோகுமென்று சொல்லித்**
**தாழைப் பழந்தின்று சாடிவனக்கு வந்ததடி”.**[93]

என்றும் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். தாலாட்டுப் பாடல்கள் வடிவில் சித்தர்கள் தங்கள் பாடல்களை அமைக்கவில்லை. உறங்கிக் கொண்டிருக்கும் மக்களைத் தட்டி எழுப்பும் வகையில் உணர்வு கொண்ட பாடல்களையே பாடிச் செல்கின்றனர். இவர்கள் பாடல்களில் கும்மிப் பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

**“ஆறு படைப்புகள் வீடு கடைசூத்ர**
**அஞ்செழுத்துக்கும் வகையறிந்து**
**கூறுமுயர்வல வேந்தரன் துரைவள்ளல்**
**கொற்றவன் வாழக்கொண் டாடுங்கடி”.**[94]

என்னும் கொங்கணர் பாடலும்,

**“எண்ணைக் கருப்பி இளங்கருப்பி**
**எண்ணைக் கொண்டு போற வானிச்சியே**
**சின்னதுரை மகன் சாராட்டு வருகுது**
**தீவட்டிக்குக் கொஞ்சம் எண்ணை வாரு”.**[95]

என்னும் தென்னாற்காடு மாவட்டக் கும்மிப்பாடலும் ஒத்தியிருப்பதைக் காணமுடிகிறது.

## சித்தர் விடுகதைகள்

நாட்டுப்புறப் பாடல்களில் விடுகதைகள் அமைந்து சிறப்பூட்டுதல் போன்று சித்தர்கள் தங்கள் பாடல்களிலும் விடுகதைகள் அமைத்துள்ளனர்.

சிந்தனைக்கும், நகைப்பிற்கும் உரிய நாட்டுப்புறப் பாடல்களில் இடம்பெறும் விடுகதைகள் சித்தர் பாடல்களில் தத்துவக் கருத்துகளை மொழிந்துள்ளன.

"தத்துவ விடுகதைகள் பெரும்பாலும் பழமொழியுடனோ அல்லது அடிப்படையான உண்மைகளுடனோ நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கும். முற்காலத்தில் தத்துவ விடுகதைகளின் வாயிலாக நாம் மனிதனின் நம்பிக்கைகள், இயற்கை இறந்த நிகழ்ச்சிகளிலும் மற்றும் மனித இனத்தின் முடிவுகள் பற்றிய சிந்தனைகளிலும் பயணம் செய்த போக்கினைக் காண முடிகின்றது".[96] எனக் குறிப்பிட்டுக் காட்டுகிறார் ச.வே. சுப்பிரமணியம். சித்தர்கள் தங்கள் பாடல்களில் அமைத்துள்ள தத்துவ விடுகதைகள் மனித இனத்தின் பிறப்பு, இறப்பு, இனிமேல் இருக்கும் நிலை என்ற போக்கினை உடையது. எடுத்துக் காட்டாகச் சிவவாக்கியர் வினா எழுப்பி, விடை கூறும் அமைப்பில் பாடலாக,

**"கருத்தரிக்கு முன்னெலாம் காயம் நின்ற நெல்லிடம்?**
**உத்தரிக்கு முன்னெலா முயிர்ப்புநின்ற நெல்லிடம்?**
**அருட்டரிக்கு முன்னெலா மாசைநின்ற நெல்லிடம்".[97]**

என வினா எழுப்பி,

**"கருத்தரிக்கு முன்னெலாம் காயம் நின்ற தேயுவில்**
**உத்தரிக்கு முன்னெலா முயிர்ப்புநின்ற தப்புவில்**

**அருட்டரிக்கு முன்னெலா மாசைநின்ற வாயுவில்**
**திருக்கருத்துக் கொண்டதே சிவாயமென்று கூறுவீர்".[98]**

என்று வினாவிற்கு விடையும் அவரே வழங்குமாறு அருளியுள்ளார்.

## மறைபொருட்கூறுகள்

மறைபொருட்கூறுகள் சித்தர் இலக்கியத்திற்குத் தனிச்சிறப்பைத் தருகின்றன. ஒரு சொல்லே மேற்போக்காகப் படிக்கும்போது ஒரு பொருளையும் ஆழ்ந்து அதன் உள்ளீட்டுப் பொருளை அறிந்து கொள்ளும்போது வேறு பொருளையும் தரும் வகையில் அமைத்துள்ள தன்மையே இங்கு 'மறைபொருட்கூறு' எனக் கொள்ளப்படுகிறது. இஃது ஒரு நிலையில்

உள்ளுறையும் இறைச்சியும் போன்றதாகும். இம்மறைபொருட்கூறுகள் குறிப்பில் குறிப்புணர வல்லார்க்கே புரியக் கூடியனவாகக் காணப்படுகின்றன. இவற்றை 'ஏமாற்றும் எளிமை".[99] என்றும் வழங்குவர்.

சித்தர்களின் பாடல்கள் மிக்கச் சிறப்புடன் விளங்குவதோடு ஆழ்ந்த பொருள் உணர்த்தும் குறியீடுகளை அமைத்தும் பாடியக் காரணத்தை, "பல்வேறு வகையான ஆற்றல் தரும் மூலிகைகளையும், வாழ்வை விரும்பும் வரை நீடிக்கும் மூலிகைகளையும் எல்லோருக்கும் விளங்கும் வகையில் கூறினால் அதனால் ஏற்படும் விபரீதத்தை எண்ணிப் பார்க்கவும் முடியாது. ஆகவேதான் நல்வினையால் பக்குவமடைந்தவர்க்கே இந்நூல்கள் கிடைக்கவும் பொருள் விளங்கவும் சொன்னார்கள் என இவர்கள் பாடல்கள் வாயிலாக அறிகிறோம்".[100] என இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம் எனும் நூலில் சுட்டி விளக்குகிறார்.

சித்தர்களின் பாடல்களை ஆழ்ந்து பார்க்கும்போது மக்கள் உலக மாயையில் ஈடுபட்டு அதுவே உண்மையென எண்ணுவதும், உண்மைப் பொருளை எடுத்துரைத்தாலும் ஏற்கும் மனநிலையில் இல்லாமல் இருப்பதும், உண்மையை எடுத்துரைக்கும் சித்தர்களை ஏளனப்படுத்துவதும், மிகச் சிலர் மனஒழுக்கம் கெட்டுத்தகாத செயல்களில் ஈடுபடுவதும், பலர் தன்னைச் சாமியார் என்று சொல்லிக் கொண்டு மக்களை ஏமாற்றுவதும், குறுக்குவழியில் பொருளைப் பெறவிரும்புவதும், பணம் படைத்த சோம்பேறிகள் பெருகி இருப்பதும் ஆகிய காரணங்களால் இங்ஙனம் மறைத்துப் பாடினர் எனக் கருதமுடிகிறது.

சித்தர் பாடல்களில் அகப்பேய், குதம்பை, பாம்பாட்டி, இடைக்காடர், அழுகுணி, சிவவாக்கியர், பத்திரகிரியார், கொங்கணர், வால்மீகர், காகபுசுண்டர் ஆகியோரின் பாக்களில் மறைபொருட்கூறுகள் காணப்படுகின்றன. அகத்தியர், வால்மீகர், காகபுசுண்டர், அழுகுணி இவர்களின் பாடல்களில் மருத்துவ முறைகளும் இரசவாதக் குறிப்பினைத் தருவது போன்றும், யோகக் கருத்துகளைத் தருகின்ற பாடல்களுமாக அமைத்து பாடியுள்ளனர். சித்தர்

பாடல்களில் காணப்படும் மறைப்பொருட்கூறுகள் மூன்று பொருள் பற்றியதாக அமைத்தும் பிரித்தும் பகுத்தும் காட்டமுடியும்.

1. யோகம்
2. இரசவாதம்
3. எழுத்துகளாலும், எண்களாலும் உண்மைப் பொருள் விளங்குதல்.

இம்முப்பொருட்களிலும் மறைப்பொருட்கூறுகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

## யோகம்

யோகத்தைக் குறிப்பிடும் இடங்களில் ஆளப் பெறும் மறைப்பொருட்கூறுகள்

1. உடல் உறுப்புகளைக் குறிப்பவை.
2. அந்தக் கரணங்களைக் குறிப்பவை.
3. வாசி யோகத்தைக் குறிப்பவை.
4. சமாதி நிலையினைக் குறிப்பவை.

என நான்கு நிலைகளில் பகுக்கலாம்.

### 1. உடல் உறுப்புகளைக் குறிப்பவை

சித்தர்கள் உடல் உறுப்புகளைக் கூறும்போது உடல் பற்றிய தத்துவங்களையே பெரிதும் காட்டியுள்ளனர். அவர்கள் உடலை அழியாத நிலைக்குக் கொண்டுவர விரும்பிய அறிஞர்கள் ஆவர். பொய்யான காயத்தைக் காலம் வென்ற காயமாக மாற்றலாம் எனத் துணிந்து காட்டினர். திருமூலர், "உடலைக் குறிக்க முப்பத்தைந்து சொற்களைக் கையாண்டு விவரிக்கிறார்'.[101] அதனைப் போலவே பட்டினத்தார், "எழுபத்தைந்து சொற்களைக் கையாளுகின்றார்".[102] காயப்பதி சித்திரம்[103], பட்டணம், பதி, மெய்[104], வேழமுண்டகனி[105], கோட்டை, வீடு, மண்டபம், தோப்பு, ஆறு, கோபுரம்[106] போன்ற பெயர்கள் உடலைக் குறிக்க வருகின்றன. உடலின்கண் நிறைந்திருக்கும் பஞ்சபூதங்களை நிலைக்காரர்கள், ஆந்தை, கழுகு, முதலை[107] என்றும் ஆறு ஆதாரங்களைப் 'பரிகாரர்கள்'[108] என்றும் குறிக்கின்றனர்.

**“ஒன்பது வாயில்கொள் கோட்டையுண்டேய தன்**

**உள்ளே நிலைக்கார ரஞ்சு பேராம்**

**அன்புடனே பரி காரர்க ளாறுபேர்**

**அடங்கந் தானடி வாலைப் பெண்ணே”**[109]

எனும் இப்பாடலில் ஒன்பது வாயில்கள், உடலிலுள்ள ஒன்பது துளைகளையும் கோட்டை, உடலையும் - நிலைக்காரர்கள் - பஞ்சபூதங்களையும், பரிகாரங்கள் - ஆதாரங்களையும் குறிக்கின்றன. எனவே, ஒன்பது துளைகளையுடைய கோட்டையாகிய இந்த உடலில் பஞ்சபூதங்கள் நிறைந்துள்ளன; ஆறு ஆதாரங்கள் பரிகாரர்களாகச் சேவை செய்யக் காத்திருக்கின்றன; யோகத்தினைச் செய்பவர்களுக்கு அவை உதவும்; எனவே யோகத்தின் வழி கோட்டையினை நிலைநிறுத்தமுடியும் என்ற கருத்தினை இப்பாடல் விளக்குகிறது.

**2. அந்தக் கரணங்களைக் குறிப்பவை**

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்களையும் ‘மகன்கள்’ என்று கொங்கணர் குறிப்பிடுகிறார்.

**“மூத்த மகனாலே வாழ்வுமுண்டே - மற்ற**

**மூன்று பேராலே அழிவுமுண்டு”**[110]

என்னும் வரிகளில் அந்தக்கரணங்களில் முதன்மையானது மனம். அதுவே மகனாகும்; மனம் நம்மைச் செம்மைப்படுத்தவும், நிலைத்த சமாதியை அடைய வழிவகுக்கவும்; வாழ்வு நிலைமைக்கும்; காரணமாகவே மனம் மூத்தமகன் என்று குறிக்கப்பட்டது. புத்தி, சித்தம், அகங்காரம் என்ற மூன்றும் தொடக்க நிலைகள். இவை உலக மாயையில் ஆட்படுத்தி அழிவினையே தரக்கூடியது. எனவே, இம்மூன்றிலும் அழிவு உண்டு என்பது கொங்கணர் வாக்காகும்.

**3. வாசி யோகத்தைக் குறிப்பவை**

கொங்கணர் வாசி யோகத்தைக் குறிப்பிடுகையில்,

**“கையில்லாக் குட்டையன் கட்டிக் கிட்டானிரு**

**காலில்லா நெட்டையன் முட்டிக்கிட்டான்**

**ஈயில்லாத் தேனெடுத்து உண்டுவிட்டான் அது**

**இனிக்கு தில்லையே வாலைப் பெண்ணே”**[111]

எனவரும் பாடலில் கையில்லாத குள்ளமனிதன் தழுவுகின்றான்; கால் இல்லாத நெட்டை மனிதன் முட்டுகின்றான்; ஈயில்லாத தேனினை எடுத்து உண்டான்; அது இனிக்கவில்லை என விளக்குகிறார். இங்குக் கைகள் இடகலை, பின்கலை நாடிகளைக் குறிப்பனவாகக் கொள்ளவேண்டும். இவ்விரண்டு நாடிகளிலும் வருகின்ற வாயுவினை நிறுத்த இரண்டும் சும்மாவிருக்கும்; இந்நிலையே கட்டிக் கொள்ளுதல் எனப்படும். இரண்டு நாடிகளிலும் வருகின்ற வாயுவைச் சுழுமுனையின் ஊடே செலுத்த உள்ளொலிச் சுவாசங்கள் வராது. இதனையே 'காலில்லா' என்கிறார். இங்குச் சுழுமுனையே நெட்டையனாகும். சுழுமுனையின் வழிச் சென்ற வாயு உச்சியில் சென்று முட்ட காயப்பாலானது ஒழுகும். அதனை யோகியர் சுவைப்பர். இப்பாடலின் மூலம் இடகலையிலும், பிங்கலையிலும் சென்று வந்த வாயுவைச் சுழுமுனையில் வரச்செய்து கும்பித்து மேலேற்றி உச்சியில் இருக்கும் காயப்பாலினை உண்ணுதல் என்னும் வாசியோகம் உணர்த்தப்படுகிறது. வாசியோகம் என்பது மூச்சுக்காற்றினைக் கட்டுப்படுத்திக் கொண்டு காயப்பாலை உண்ணுவதாகும். காயப்பாலே இங்கு 'ஈயில்லாத்தேன்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. குட்டையன், நெட்டையன், ஈயில்லாத்தேன் என்பன மறைபொருட்கிளவிகள் எனும் நுட்பமான கருத்தை உணர்த்துகின்றது.

**4. சமாதி நிலையினைக் குறிப்பவை**

சமாதி நிலையினைக் குறிக்கக் கொங்கணர் தம் பாடலில்,

**"கோழிக் கறுகாலுண் டென்றுசொன் னேன்கிழக்**
**கூனிக்கு மூன்றுகா லென்று சொன்னேன்;**
**கூனிக்கி ரண்டெழுத் தென்றுசொன் னேன்முழுப்**
**பானைக்கு வாயில்லை யென்று சொன்னேன்**
**ஆட்டுக் கிரண்டுகா லென்றுசொன் னேனம்**
**மானைக்குப் பானைக்கு நிற்கு மேல்சூல்**
**மாட்டுக்குக் காலில்லை யென்றுசொன் னேன்கதை**
**வகையைச் சொல்லடி வாலைப் பெண்ணே"**[112]

எனவரும் இப்பாடலில் சமாதியினைக் குறிக்க எழுந்த மறைபொருட்கூற்றில் அமைந்த பாடலாகும். இப்பாடலில் கோழி - உண்ணாக்கு, அதற்குக் காலில்லை; கிழக்கூனி - வாசி; மூன்று கால் - இடகலை, பிங்கலை, சுழுமுனை

நாடிகள்; கூனிக்கிரண்டெழுத்து - அம்சம் எனும் ஒலி; இவ்வொலி ‘அஜபா’ எனப்படும். யோகப்பயிற்சியின் மூலமாக வாசியினைச் சுழுமுனையில் வரச்செய்து, ‘அம்சம்’ எனும் ஒலியினை உள்ளத்தில் நினைக்கச் சமாதி கிட்டும். சமாதி எனும் சொல்லை ‘முழுப்பானை’ என்ற சொல்லால் குறிக்கின்றார். வாயில்லா முழுப்பானை வெளி உலகில் தொடர்பில்லாமல் இருக்கும் நிலையைக் குறிப்பதாகும். சூல்மாடு, சூல் உடலுக்கு உள்ளேயே இயக்கம் கொண்டிருப்பதைப் போலச் சமாதியில் இருப்பவர்கள் வெளியுலகில் தொடர்பு கொள்ளாமல், வெளிக் காற்றினையும் சுவாசிக்காமல், மூச்சுக் காற்றை உள்ளுக்குள்ளேயே சுழன்று கொண்டிருக்கும் நிலையினைப் பெற்றிருப்பர். இவ்வாறு யோகப் பயிற்சியின் முடிவு நிலையான சமாதியினைக் கொங்கணர் மறைபொருட்கூறாகச் சுட்டுகிறார்.

## இரசவாதம்

சாதாரண உலோகங்களைப் பொன்னாக மாற்றுவது இரசவாதம் என்பர். சித்தர்கள் இரசவாதம் செய்வதில் வல்லவராக இருந்துள்ளனர் என்பது பொதுவான கருத்தாகும். கலம் பல உறுப்புகளில் ஒன்றான ‘சித்து’ என்பது இரசவாதத்தையே குறிக்கும். சித்தர்கள் இவ்வுடலைக் கைலாய தேகமாக மாற்றும் இரசவாதத்தில் வல்லவர்களாக விளங்கினர். இதனைச் சிவவாக்கியர் குறிப்பிடுகையில்,

**“நல்லவெள்ளி யாறதாய் நயந்த செம்பு நாலதாய்**
**கொல்லு நாக மூன்றதாய் குலாவு செம்பொ னிரண்டதாய்**
**வில்லினோசை யொன்றுடன் விளங்க வூத வல்லிரேல்**
**எல்லையொத்த சோதியான தெட்டுமாற்ற தாகுமே”**[113]

எனவரும் பாடலில், “வெள்ளி என்னும் பிருதிவியின் மூலம் ஆறு மாத்திரை அளவும், செம்பாகிய அப்புவில் நான்கு மாத்திரை அளவும், நாகம் என்னும் தேயுவில் மூன்று மாத்திரை அளவும், செம்பொன் என்னும் வாயுவில் இரண்டு மாத்திரை அளவும், வில்லோசை என்னும் ஆகாயத்தில் ஒரு மாத்திரை அளவும் நின்று சரத்தை ஊத வல்லமை உடையவரானால் அளவு கடந்த சர்வ வரனானவன் எட்டு மாற்றுள்ள பொன்னாக வெளிப்படுவான்”[114] என வடிவேலு முதலியார் இப்பாடலுக்கு விளக்கம் அளிக்கின்றார். இப்பாடலில் மறைபொருட்

கூறாக, வெள்ளி, செம்பு முதலான பொருட்கள் பயன்படுகின்றன. இக்கருத்தினையே மதுரை வாலைசாமி குறிப்பிடுகையில்,

**“வாதஞ் செய்ய அறியாமல் ரச**
**வாதம் செய்கிறோ மென்று சொல்லிச்**
**சூதங் கெந்தி புடத்தி விட்டாலதிற்**
**சொர்ணம் விளையுமோ ஞானப் பெண்ணே”**[115]

என விவரிக்கிறார். வாதத்தைப் பயிலும் முறை அறியாதவர் இரசவாதம் செய்ய முயன்று பாதரசத்தையும், கெந்தகத்தையும் சேர்த்தால் பொன்னைக் காணமுடியாது. வாதம் என்பது யோகத்தைக் குறிக்கும். யோகம் செய்யத் தெரியாதவர்கள் இரசவாதம் செய்ய முற்படுகின்றனர் என்பது இதன் பொருளாகும். புடம் போடுதல் என்பது உலோகங்களைத் திருத்துவதாகும். நெருப்பின் மூலஆமா, கதிரவன் முன்வைத்தோ மருந்துகளை அளவாகக் கலப்பதற்குப் ‘புடம் போடுதல்’ என்றுபெயர். இங்குப் ‘புடம் போடுதல்’ என்பது மனத்தைத் திருத்துவதாகும். நெருப்பு என்பது யோகப்பயிற்சி. யோகப்பயிற்சி செய்பவரின் உடல் மிகுந்த வெப்பமாக இருக்கும். இதனையே வாலைசாமி குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். இவர் பாடலில் இரசவாதம் என்பது உடலை நிலையாக்கும் பேராற்றல் என்பது பெறப்படும். இக்கருத்தைச் சூரியானந்தர் காரத்தையும், சாரத்தையும் சுட்டுகையில்,

**“காரம் என்பது நாதம்;**
**சாரம் என்பது விந்து;”**[116]

இவ்விரண்டையும் ஒன்றாக்க வேண்டும் என விவரிக்கிறார். இக்கருத்தை ஒப்புநோக்கும் வகையில்,

**“காரத்தைக் கட்ட அறியார்கள் கடும்**
**சாரத்தை நீற்றினஞ் செய்யாமல்”**[117]

எனவரும் பாடலில் காரமாகிய நாதத்தினை உள்ளுக்குள்ளேயே கேட்க வேண்டும். மேல் சாரமாகிய விந்துவினை மேலேற்ற வேண்டும் என ஒரே கருத்தினை முன் வைக்கின்றார்.

**எழுத்துகளாலும், எண்களாலும் உண்மைப் பொருளை விளக்குதல்**

சித்தர்கள் உண்மைப் பொருளை அ, எ, ம, ந, சி என்னும் எழுத்துகளால் உணர்த்தியுள்ளனர். அ, உ எனும் எழுத்துகள் இரண்டையும் அறிந்தவர்களுக்குத் துன்பம் என்பது இல்லை என்பதை,

**"எட்டி ரண்ட றிந்தோர்க் கிடரில்லை குயிலே".**[118]

என்று இடைக்காடர் குறிப்பதனால் அறியப்படுகிறது. இவை இரண்டும் நெருங்கிய தொடர்புடையது. இரண்டையும் ஒன்றாகக் கருதமுடியும். இவ்விரண்டும் ஓரே உண்மையைப் புலப்படுத்துவனவாகும்.

'அ' எனும் எழுத்து, அடிப்படையாக உள்ள வாழ்வுச் சக்தியை உள்ளவாறே உணர்த்தும். இதனைத் தத்துவமாகக் குறிக்கையில்,

**"அகாரம் அத்தனையும் அகப்பேய் அங்கென்று எழுந்ததடி".**[119]

'அ' எனும் எழுத்து 'அங்' என்ற ஒலியாக வந்துள்ளமையால் அறியப்படுகிறது.

**"உகாரம் கூடியடி அகப்பேய் உருவாகி வந்ததடி".**[120]

என்பதில் 'அ' கரம் என்பது விந்து. 'உ' கரம் என்பது நாதம்; இவ்விரண்டும் கூடியதால் 'உரு' உண்டாயிற்று என்பது சித்தர்களின் கருத்தாகும். எட்டு, இரண்டு என்பவை யோகத்தில் தனஞ்செயன், பிராணன் முதலான வாயுக்களால் வாதத்தில் அப்புவையும் உப்புவையும் வைத்தியத்தில் பூரத்தையும் வீரத்தையும் குறிக்கும்".[121] என இரா.மாணிக்கவாசகம் சுட்டிக்காட்டுகிறார்.

"ம' எனும் எழுத்தைச் சித்தர்கள் பல இடங்களில் குறித்துள்ளனர். 'ம' கரம் மௌனத்தை அளிப்பது. இம்மகரம் 'உ' கரத்திற்கும் இடையிலுள்ள நிலையாகும். 'அனுபவம்' என்ற பொருளையும் தருவதாகும். ஞான மார்க்கத்தில் நுழைபவர்களுக்கு இது புலனாகும். இது ஞானத்தின் மூலம் என வழங்குவர். இதனையே 'மாயை, மலம்' எனும் பொருளில் வழங்குகின்றனர். 'சி' என்பது மூலம். "அ, உ, ம, சி இந்நான்குமே வெட்டவெளியான அம்பலத்தில் உள்ளவை".[122] என சிவவாக்கியர் குறிப்பிடுகிறார். ஐம்பத்தோர் எழுத்துகளையும் சித்தர்கள் எழுத்தாக எழுதுகையில்,

**"அஞ்செழுத்தாய் எட்டெழுத்தாய் ஐம்பத்தோர் அட்சரமாய்".**[123]

எனப் பட்டினத்தார் கூறுவார். சிவவாக்கியரும்,

**"அம்பத் தொன்றே அக்கரம் அடங்கல்".**[124]

எனவும்,

**"அத்தி வரையாடி அகப்பேய்**
**ஐம்பத்தோர் கண்டோயே அகப்பேய்**
**மெய்யென்று நம்பாதே".**[125]

என சித்தர்கள் பாடலால் தெளிவடைகிறது.

ஐம்பத்தோர் எழுத்துகள் உண்டாகிய வரலாற்றிற்கு, "பிரணாயாமத்தின் விளைவாக மேலெழும் குண்டலினி அமுதநிலையை அடைய ஆறு ஆதாரங்களிலும் பொருந்திக் கடக்கும். ஒவ்வொரு ஆதாரத்தில் பொருந்தும் போதும் அவ்வாதாரத்தைச் சுற்றியுள்ள இதழ்களில் அதிர்வு ஏற்படும். இவ்வாதங்களுக்கு முறையே 4, 6, 10, 12, 16 என இதழ்களின் எண்ணிக்கை குறிக்கப்படும். இவ்விதழ்களில் ஏற்படும் அதிர்வின் விளைவாக ஒலி தோன்றும். இவ்வொலியைக் குறிக்கும் வகையில் வடமொழி வரி வடிவங்களில் குறித்து வருகின்றனர். 50 இதழ்களுக்கும் 50 வடமொழி எழுத்துகள் விளங்குகின்றன. அனைத்து ஒலிகளுக்கும் காரணமாகிய ஓம் எனும் பிரவணஞ்சலியினையும் சேர்க்க இவ்வொலி குறிக்கும் எழுத்து 51 ஆகும்".[126] என்று விளக்கமளிப்பர். இவ்வாறு எழுத்துகளினாலும் எண்களினாலும் உண்மைப் பொருள்களை உணரும்படிச் செய்வது சித்தர்களின் இலக்கியமாகக் கருதமுடியும்.

### புராண இதிகாசக் கதைகள்

சங்க இலக்கியங்களில் புராண இதிகாசக் கதைகள் பங்காற்றுவது போல் சித்தர்களின் பாடல்களிலும் இதிகாசக் கதைகள் இடம்பெறுவதைக் காணமுடிகிறது. மக்கள் பயன்பாட்டில் நிலவும் கதைகளைப் பயன்படுத்தி இலக்கியங்கள் படைப்பது போல சித்தர்களும் அதனை உணர்ந்து சீரிய இலக்கியச் சிந்தனைக்குச் சான்றளிக்கின்றனர். கொங்கணர் பாடலில்,

**"உற்றது சொன்னக்கா லற்றது பொருந்தும்**
**உண்டோ உலகத்தில் அவ்வை சொன்னால்".**[127]

என்ற மகாபாரதத்தின் அடியினை எடுத்தாண்டுள்ளார். அருச்சுனன், ஆண்டிற்கு ஒருமுறை உண்ணும் சுமித்திரமுனிவரின் நெல்லிக்கனியினைத் திரௌபதி விருப்பத்தினால் பறித்தான். அக்கனியைப் பறித்ததால் விளைப்போரும் துன்பத்தைச் சுற்றியிருந்தோர் அவனிடத்தில் கூறினர். இந்நிலையில் என்ன செய்வதென்று குருவாகிய கண்ணனிடத்தில் அருச்சுனன் கேட்டான். கண்ணனும், திரௌபதியும் பஞ்சபாண்டவர்களும் தங்கள் மனத்தில் உள்ளதை ஒளிக்காமல் கூறினால் பறித்த கனி மீண்டும் மரத்தில் பொருந்தும் என்று கூற அனைவரும் தங்கள் மனத்தில் உள்ளதைக் கூறினர். பழம் சென்று மரத்தில் சேர்ந்தது".[128] இக்கதையில், உண்மையான குரு அனைத்தையும் அறிவார் என்ற புலப்படுத்தப்படுகிறது. சிவவாக்கியர், இராமாயணக்கதையில் வரும் இராமன் ஏழு மரா மரங்களையும் துளைத்தச் செய்தியினை,

**"கார கார கார கார காவலூழி காவலன்**
**போர போர போர போர போரில் நின்ற புண்ணியன்**
**மார மார மார மார மரங்களேழு மெய்தசீ**
**ராம ராம ராம ராம ராம வென்னும் நாமமே".[129]**

எனும் பாடலின் வழியாகச் சுட்டுகிறார்.

பட்டினத்தார் சிறுத்தொண்டரின் கதையினைச் சிறப்பிக்கையில்,

**"வாளால் மகவரித் தூட்டவல்**
**லேனல்லேன்; மாது சொன்ன**
**சூலால் இளமை துறக்கவல்**
**லேனல்லேன்; தொண்டுசெய்து**
**நாளாறிற் கண்ணிடந் தப்பவல்**
**லேனல்லேன்; நானினிச்சென்று**
**ஆளால தெப்படியோ . . .".[130]**

என்ற பாடலில் வாளால் மகவரிந்தூட்டிய சிறுத்தொண்டரின் கதையும்; மனைவி சொன்ன சாபத்தால் இளமை துறந்த திருநீலக்கண்ட நாயனாரின் கதையும்; கண்ணிழந்து அப்பிய கண்ணப்ப நாயனாரின் கதையும் அறுபத்து மூவர் வரலாறான பெரியபுராணத்திலிருந்து எடுத்தாண்டுள்ளமையும் புலனாகிறது.

**இலக்கியச் செய்திகள்**

முன்னோரின் கருத்துகளை எடுத்தாளுதல் இலக்கிய ஆசிரியர்களின் இயல்பாகும். அவ்வகையில் சித்தர்களும் இலக்கிய மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளனர். பட்டினத்தார் திருக்குறளின் சிறப்பினைக் குறிப்பிடுகையில்,

**"குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே**

**உடம்பொடு உயிரிடை நட்பு".**[131]

எனும் திருக்குறளுக்கேற்ப, **"உயிர் எனும் குருகு விட்டோடும் குரம்பை".**[132] எனக் குறிப்பிடுகிறார். நிலத்தின் தன்மைக்கேற்பவே நீரும் அமையும் என்பதை,

**"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்**

**கினத்தியல்ப தாகும் அறிவு".**[133]

எனும் திருவள்ளுவரின் குறளினை,

**"செம்புலப் பெயல் நீர்போல".**[134]

என்று செம்புலப் பெயல் நீராரும் கூறுவர். இக்கருத்தினை ஏற்றுப் பாடுவதுபோல,

**"அப்பென்றும் வெண்மைய தாயினும் ஆங்கு இந்நிலத்தியல்பாய்த்**

**தப்பின்றியே ருணவேற்றுமைதான் பல சார்தலினால்".**[135]

என்று பட்டினத்தார் குறிப்பிடுகிறார். தமக்குத் துன்பம் வருங்காலத்தில் ஆமை தன்னுள் தன் உறுப்புகளை அடக்கிக் கொள்வதைப் போல மனிதர்களும் தன் புலன்களை அடக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். அவ்வாறு கற்றுக் கொள்வது இனி வருகின்ற பிறவிகளுக்கும் பயன்தரும் என வள்ளுவர்[136] கூறும் கருத்தினை,

**"ஆமை வரும் ஆள்கண்டு ஐந்தடக்கம் செய்தாற்போல்**

**ஊமை உருக்கொண்டு ஒடுங்குவது மெக்காலம்".**[137]

எனப் பத்திரகிரியார் பாடுவதும் நோக்கக் கூடியதாகும். இஃது, 'ஒருமையுள் ஆமைபோல்' என்னும் குறளின் ஒருமித்த கருத்தாகும்.

**"பூ இடைப்படினும் ஆண்டு கழிந்தன்ன**

**நீருறை மகன்றில் புணர்ச்சிபோல".**[138]

என்று தன் துணைவியின் பூ இடைப்பட்ட காலம் பிரிவினையும் தாங்காது நிமிட நேரத்தை ஓர் ஆண்டைப்போல் எண்ணிக் கலக்குகின்ற அன்றில் துணையுடன் உள்ள போதே இன்புறுவதைப் போல துணையைப் பிரிந்த போதே என்னால் அருள் நூலைத் தொடரமுடியும். எனவே நான் அருள் நூலைத் தொடர்ந்து கொள்ள அருள்புரி என்பர். இதனைப் பத்திரகிரியார்,

**“இணைபிரிந்த போதில்அன்றி இன்பமுறும் அன்றிலைப் போல்**
**துணைபிரிந்த போதுஅருள் நெறிதொடர்ந்து கொள்வது மெக்காலம்”**

(பத்திர. பா. 216)

என்ற பாடலால் விளக்குகிறார். அன்னம் புனலைப் பிரித்து உண்பதை நாலடியார்,

**“கல்வி கரையில கற்பவை நாள்சில**
**மெள்ள நினைக்கிற் பிணிபல - தெள்ளத்தி**
**னாராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்**
**பாலுண் ருருகிற் றெரிந்து”.**[139]

என்னும் பாடலின் கருத்தைப் பத்திரகிரியார்,

**“அன்னம் புனலைகருத்து அமிர்தத்தை உண்பதுபோல்**
**என்னை வகுத்து உன்னை இனிக் காண்பது எக்காலம்?** (பத்திர.பா. 205)

என்று பாடுவதன் மூலம் அறியப்படுகிறது.

## யாப்பு வகை

சித்தர்கள் யாப்பு வகையாக,

1. மரபிலக்கண அடிப்படையில் அமைந்தவை.
2. மரபிலக்கணத்தில் என்றும் நெகிழ்ந்து அமைந்தவை

என்னும் இருவகையிலும் தங்களது பாடல்களைப் பாடியுள்ளனர்.

### 1. மரபிலக்கண அடிப்படையில் அமைந்தவை

குறள் வெண்பா, குறள் வெண்செந்துறை, நேரிசை வெண்பா, நேரிசை ஆசிரியப்பா, நிலைமண்டல ஆசிரியப்பா, இணைக் குறள் ஆசிரியப்பா, அறுசீர் எண்சீர் விருத்தங்கள், கட்டளைக் கலித்துறை, கலிநிலைத் துறை,

கலித்தாழிசை, கலிவிருத்தம், தரவு கொச்சகம் ஆகிய மரபு யாப்பு வடிவங்களைச் சித்தர்கள் தங்கள் பாடல்களில் கையாண்டுள்ளனர்.

**குறள் வெண்பா**

"வெண்பாவின் பொது இலக்கணத்தோடு மாறுகொள்ளாது பொருந்திய இரண்டடியால் வருவது குறள் வெண்பா. இதனை ஒரு விகற்பக் குறள் வெண்பா, இருவிகற்ப குறள் வெண்பா எனப் பிரிப்பர்".[140] எனக் காரிகை உரையாசிரியர் சுட்டிக்காட்டுகின்றார். இக்குறள் வெண்பாவைப் பயன்படுத்திக் காகபுசுண்டர் பதினாறு குறட்பாக்கள் குறிப்பிட்டுள்ளார். இவையனைத்தும் "ஒரு விகற்பக் குறள் வெண்பாக்கள் ஆகும். ஒரு பாடலில் றகர ரகர எதுகையும், மற்றொரு பாடலில் கரக நகர எதுகையும் இடம் பெற்றுள்ளன. இருபாடல்கள் உயிரெதுகை கொண்டவை (காகபுசுண்டர், குறள், 4, 7, 13, 16) யாக அமைந்துள்ளன.

**குறள் வெண்செந்துறை**

குறள் வெண்பாவின் இனங்களுள் ஒன்று குறள் வெண்செந்துறை, இரண்டடியாய்த் தம்முள் அளவொத்து விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் உடையதாய் வருவது. பட்டினத்தாரின் அருட்புலம்பலும் இறந்த காலத்து இரங்கலும் பூரணமாலையும் இடைகாடரின் பலரோடு கிளத்தலும் இவ்வகையில் அமைவன. இதனை,

**"அன்றுமுதல் இன்றளவும் அறியாப் பருவமதில்**
**என்றும் பொதுவாய் இருந்த நிராமயன்காண்".** (பத்திர. பா. 216)

பத்திரகிரியார் இறந்த காலத்திரங்கள் எனும் பாடல் வழி விவரிக்கின்றார்.

**நேரிசை வெண்பா**

இரண்டு குறள் வெண்பாவாக நடுவு முதற்றொடைக்கேற்ற தனிச்சொல்லால் அடி நிரம்பிச் செப்பலோசை வழுவாது முதல் இரண்டடியும் ஒரு விகற்பமாகக் கடை இரண்டடியும் மற்றொரு விகற்பாவாகவரினும்

நான்கடியும் ஒரு விகற்பமாகவரினும் இருகுறள் நேரிசை வெண்பா எனப்படும். இதனைப் பட்டினத்தாரின் பூரணமாலை எனும் பாடல் மூலம் அறியமுடிகிறது.

**“காற்றுடனே சேர்த்து கனலுருவைக் கண்டவழி**
**மாற்றி யினிற்பிறக்க வாராதே - ஏற்றபடி**
**ஓடி அலையாதே ஓங்காரத் துள்ளொளியை**
**நாடியிருப் போம்மனமே நாம்”.** (இடைக்.)

எனும் பாடலில் இடைக்காடர் பலரொடு கிளத்தல் எனும் தலைப்பின் கீழ்ப் பாடியுள்ளார். இ.்.து இருவிகற்பத்தால் வந்த இருகுறள் நேரிசை வெண்பா. “திருவள்ளுவரின் ஞானப் பாடல்களும் பட்டினத்தார் தம் தாயாருக்கு இறுதிக்கடன் செய்யும் போது பாடிய பாடல்களும் இவ்வகையைச் சேர்ந்தவை”.[141] எனப் பொன். சவுரிராதன், யாப்பும் பொருளும் எனும் நூலில் சுட்டிக்காட்டியுள்ளார்.

### ஒரு விகற்பாவால் வந்தவை

பட்டினத்தார் அருட்புலம்பலாக,

**“வருத்தும் பொழுதுகாண் மாயையாய் நெஞ்சே**
**வருத்தும் குணமாக வந்து - வருத்தும்**
**இருவி னைத்தொ டக்கறும் ஏழ்வகைப்பி றப்பாம்**
**கருமலத்தி ருக்கறுங் காண்”** (பட்டின. பா. 48)

எனும் பாடலின் வழி ஒரு விகற்பாவில் பாடியுள்ளார். இவையன்றி பல விகற்பாவில் திருவள்ளுவர் ஞானம் நூறு எனும் பாடல்கள் அமைந்துள்ளமையும் காணமுடிகிறது. பட்டினத்தார் தாயாருக்குத் தகனக்கிரியைச் செய்கையில்,

**“ஒன்பதுவாய்க் கூட்டை யுறுதியென்று நெஞ்சே**
**ஐம்புல னேயென் றணுகாதே - இன்பமுடன்**
**சிற்பரத்தி னுள்ளே தெளிந்தபர மானந்தத்**
**துட்பொருளே மெய்யென் றுணர்”** (பட்டின.)

எனப் பாடியுள்ளதன் வழியும், மேலும் பல இடங்களில் 1-6, 8-10, 1-30 வந்தமையால் அறியமுடிகிறது. பட்டினத்தார் ஆசிரியப்பாவிற்குரிய பொது இலக்கணத்தோடு பொருந்தி நின்று எல்லா அடியும் தம்முள் அளவொத்து

நாற்சீர் அடியாய் அமைகின்ற நிலைமண்டல ஆசிரியப்பாவினை, பட்டினத்தார் தாயாருக்குத் தகனக்கிரியை செய்கையில் (பா. 83) எனும் பாடலிலும், ஆசிரியப்பாவிற்கு உரிய பொது இலக்கணத்தோடு பொருந்தி நின்று ஈற்றயலடி முச்சீரான் அமையப்பெறும் நேரிசை ஆசிரியப்பாவினை, பட்டினத்தார் ஞானம் எனும் பகுதியில் (பா. 11, 16, 21, 37, 76, 80, 87, 89) எனும் பாடலிலும், ஆசிரியப்பாவிற்குரிய பொது இலக்கணத்தோடு பொருந்தி நின்று, ஈற்றடியும் முதலடியும் நாற்சீரின் குறையாமல் வந்து இடையில் முச்சீர் கொண்ட சிந்தடியான் அமைகின்ற இணைக் குறள் ஆசிரியப்பாவினை, பட்டினத்தார் ஞானம் எனும் பகுதியில் (பா. 11) அமையும்படிப் பாடியுள்ளார்.

## விருத்தப்பாக்கள்

சித்தர்கள் பெரும்பாலும் விருத்தப்பாக்களையே கையாண்டுள்ளனர். ஐந்து சீர்களுக்கு மேற்பட்ட கடிநெடிலடி நான்காகத் தம்முள் அளவொத்து வருவன ஆசிரிய விருத்தமாகும். 'குறையில் தொல்சீர்' என்ற காரிகை நூற்பாவைச் சிறப்பித்து வருவதால் எண்சீர் மிக்க சீரான் வரும் ஆசிரிய விருத்தங்கள் சிறப்பற்றதாகும் என்பதற்கு ஏற்ப பட்டினத்தார் முதலாவது கோயிற்றிரு அகவலாகப் (808) பாடவில்லை. அறுசீர் விருத்தத்தினை அகத்தியரும், பட்டினத்தாரும் ஒவ்வொரு பாடல்களில் கையாளுகின்றனர். சிவவாக்கியர் தமது அனைத்து பாடல்களையும் அறுசீர் விருத்தத்திலேயே அமைத்துள்ளார்.

**"மனமது செம்மை யானால் மந்திரஞ் செபிக்க வேண்டா**
**மனமது செம்மை யானால் வாயுவை வுயர்த்த வேண்டா**
**மனமது செம்மை யானால் வாசியை நிறுத்த வேண்டா**
**மனமது செம்மை யானால் மந்திரஞ் செம்மை யாமே"**

பட்டினத்தார் மூன்றாவது கோயிற்றிரு அகவலாகப் (பக். 82 - 83) பாடியுள்ளார். இவ்விருத்தங்களில் 'மனமது செம்மையானால்' என்பது நான்கு வரிகளிலும் மடக்காக வந்துள்ளது.

எண்சீர் விருத்தத்தினை அகத்தியர், கருவூரார், உரோமமுனிவர், காகபுசுண்டர், திருவள்ளுவர், திருமூலர், சட்டைமுனி, சூரியானந்தர், இராமதேவர், நந்தீசுவரர், வால்மீகர், பாம்பாட்டி ஆகியோர் பயன்படுத்தியுள்ளனர். அகத்தியர் ஞானம் (1), பட்டினத்தாரின் பொதுப் பாடல் (66), சிவவாக்கியர்

பாடல் (1-527), அகத்தியர் ஞானம் (1- 13, 1 - 9. 2 - 5, 1 - 6, 1 - 16), கருவூரார் பூஜா விதி (1 - 30), உரோமமுனிவர் ஞானம் (1 - 13), காகபுசுண்டர் ஞானம் (1 - 79), உபநிடதம் (1 - 31), காணியம் (133), திருவள்ளுவர் ஞானம் (காப்புச் செய்யுள்), திருமூலர் நாயனார் ஞானம் (1 - 11), சட்டைமுனி ஞானம் (1 - 4), முன் ஞானம் நூறு (11 - 20), பின் ஞானம் நூறு (1 - 101), சூரியானந்தர் சூத்திரம் (1 - 13) இப்பாடல்கள் கருத்தினை விரிவாகப் பாடுவதற்கு எண்சீர் விருத்த யாப்பையே மிகுதியாகப் பாடியுள்ளனர்.

**கட்டளைக் கலித்துறை**

**“**ஐஞ்சீரடி நான்காய் வருவது கலித்துறை. இக்கலித்துறையில் நேரசையில் தொடங்கினால் ஒற்று நீக்கி அடிக்குப் பதினாறு எழுத்தும் நிரையசையில் தொடங்கினால் ஒற்று நீக்கிப் பதினேழு எழுத்தும் கொண்டதாகப் பாடல்கள் அமையும். இவ்வியல்பால் வெண்பாவுக்குரிய தளை வரவேண்டும்**”.**[142] என்ற விதியைப் பின்கண்ட சித்தர்கள் கையாண்டுள்ளனர். கட்டளைக் கலித்துறையில் பட்டினத்தார், திருவேகம்பமாலை (1 - 42), திருத்தில்லை (1 - 63), இடைக்காடர் (23), திருவள்ளுவர் ஞானம் (1 - 2; 5 - 9) ஆகிய பாடல்களில் பாடியுள்ளதால் அறியமுடிகிறது.

**“ஓடாமற் பாழுக் குறையாமல் ஓரங் உரைப்பவர்பாற்**
**கூடாமல் நல்லவர் கூட்டம் விடாமல்வெங் கோபநெஞ்சில்**
**நாடாமல் நன்மை வழுவாமல் இன்றைக்கு நாளைக்கென்று**
**தேடாமல் செல்வத் தருவாய் சிதம்பர தேசிகனே”** (பட்டின. தில்லை. 4)

எனப் பட்டினத்தார் திருத்தில்லைப் பதிகத்தில் பதிவிட்டுள்ள இப்பாடல் நேரசையில் தொடங்கி ஒற்று நீக்கிப் பதினாறு எழுத்தில் அமைந்துள்ளது.

**கலிநிலைத்துறை**

**“பாரோ நீரோ தீயோ வளியோ படர்வானோ**
**ஆரோ நானென் றாய்வுறு கின்றேன் அறிவில்லேன்!**
**பாரோ நீரோ தீயோ வளியோ படர்வாளோ**
**ஆரோ நானென் றாய்வுறு கின்ற ததுநீயே!”** (பட்டின. 64)

எனப் பட்டினத்தார் திருத்தில்லைப் (64) பாடலால் உணரமுடிகிறது.

## கலித்தாழிசை

இரண்டடியும் பலவடியும் வந்து, ஈற்றடிமிக்கு அல்லாதவடி தம்முள் ஒத்தும் ஓவ்வாதும் வருவது கலித்தாழிசையாகும்".[143] என்ற விதியை அழுகுணிச்சித்தர் பாடல்களில் மட்டும் காணப்படுகிறது. நான்கு சீர்களைக் கொண்டு மூன்றடியும் மூன்று சீர்களைக் கொண்டு ஈற்றியலடியும் இறுதியடி இருசீரினைக் கொண்டும் காணப்படுகின்றன.

**"மூலப் பதியடியோ மூவிரண்டு வீடதிலே**
**கோலப் பதியடியோ குதர்க்கந் தெருநடுவே**
**சாலப் பதிதனிலே தனலாய் வளர்த்தகம்பம்**
**மேலப் பதிதனிலே என்கண்ணம்மா**
**விளையாட்டைப் பாரேனோ!"** (அழுகுணி. 1)

என்பது அழுகுணிச் சித்தரின் கலித்தாழிசைப் பாடலாகும்.

## கலிவிருத்தம்

நாற்சீரடி நான்காக வருவது கலிவிருத்தம். இவ்விருத்தப் பாக்களைப் பட்டினத்தார் தாயாருக்குத் தகனகிரியை செய்கையில் (7) பாடிய ஓரே பாடலாகும். இடைக்காடர் காப்புச் செய்யுளிலும் மேற்கொண்டுள்ளனர்.

## தரவு கொச்சகம்

ஒரு தரவு மட்டிலும் வருவது 'தரவு கொச்சகக் கலிப்பா'வாகும். இவ்வகையினைப் பட்டினத்தார் நெஞ்சோடு புலம்பல் (1 -37), இடைக்காடர் நாராயணக் கோனார் கூற்று (11 - 12), திருவள்ளுவர் ஞானம் (3, 4) ஆகியோர் கையாண்டுள்ளனர்.

## மரபிலக்கணம் அல்லாதவை

சித்தர் பாடல்கள் பெரும்பாலும் 'சிந்து' என்னும் ஒருவகை யாப்பைச் சேர்ந்ததாகக் காணப்படுகின்றன. சிந்து என்பது கலிப்பாவின் இனத்தைச் சேர்ந்ததாகும்".[144] எனப் புலவர் குழந்தைக் குறிப்பிடுகிறார். சிந்துக்கான இலக்கணத்தைக் குறிப்பிடுகையில்,

1. ஓரடியில் மோனைத் தொடையெடுப்பின் முன்னும் பின்னும் உள்ள அரையடிச் ‘சிந்தியல் அடி’ என வழங்கப்படும். அம் முதல் அரையடியின் ஈற்றில் பெரும்பாலும் தனிச்சொல் வரும்.

2. சிறுபான்மை இரண்டாவது அரை அடியின் ஈற்றில் தனிச்சொல் வரும்.

3. மிகச் சிறுபான்மை தனிச்சொல் இன்றியும் வரும்.

4. குறளடி முதல் எல்லா அடியிலும் வரும். தளை வரையறை இல்லை.

5. மோனைத் தொடையெடுப்பின் முன்னும் பின்னும் உள்ள அடிகள் அதாவது தனிச் சொல்லுக்கு முன்னும் பின்னும் ஒத்து வருதல் சமநிலைச் சிந்து எனப்படும்.

6. இவ்வாறு வரும் வியநிலைச் சிந்து எனப்படும். இவை சித்தர்கள் பாடல்களில் பொருந்தியுள்ளன.

**“சற்றே பிரமத்திச்சை தாண்டவக்கோனே! - உன்னுள்**

**சலியாமல் வைக்கவேண்டுந் தாண்ட வக்கோனே”** (இடைக். 20)

இடைக்காடர் நாராயணக்கோனார் கூற்றில் முதல் அரையடியின் ஈற்றில் தனிச்சொல் பெற்று அமைந்துள்ளன.

**“தொல்லைப் பிறவி தொலைத்தார்க்கு முத்திதான்**

**இல்லையென் றூதுகுழல் - கோனே**

**இல்லையென் றூதுகுழல்”** (குதம்பை. 1-32)

என்பன போன்ற இரண்டாவது இணையடியில் தனிச்சொல் பெற்று அமையப் பாடியுள்ளார்.

### தனிச்சொல் இன்றி வருதல்

**“எல்லாப் பொருள்களையு மெண்ணப் படிபடைத்த**

**வல்லாளன் றன்னை வருத்தறிநீ புல்லறிவே”** (இடைக். 67)

என இடைக்காடர் சித்தர் தனிச்சொல் இன்றிப் பாடியுள்ளார்.

### சமநிலைச் சிந்து

தனிச்சொல்லுக்கு முன்னும் பின்னும் உள்ள அடிகள் ஒத்து வருவது சமநிலைச் சிந்தாகும். இதனை அகப்பேய் சித்தர் பாடுகையில்,

**“நஞ்சுண்ண வேண்டாவே - அகப்பேய்**

**நாயகன் தாள் பெறவே**

**நெஞ்சு மலையாதே - அகப்பேய்**

**நீயொன்றுஞ் சொல்லாதே”** (அகப்பேய்)

தனிச்சொல்லுக்கு முன்னும் பின்னும் இரு சீர்களைக் கொண்ட அடியாக இருந்தால் இதனை இருசீர் இரட்டைச் சமநிலைச் சிந்து என்பர்.

தனிச்சொல்லுக்கு முன்னும் பின்னும் உள்ள அடி முச்சீர் அடியாக இருக்குமனால் இதனை முச்சீர் இரட்டைச் சமநிலைச் சிந்து என்பர்.

**“அஞ்ஞானம் போயிற்றென்று தும்பீபற - பர**

**மானந்தங் கண்டோமென்று தும்பீபற!**

**மெய்ஞ்ஞானம் வாய்த்ததென்று தும்பீபற - மலை**

**மேலேறிக் கொண்டோமென்று தும்பீபற!”** (குதம்பை. 31)

**நாற்சீர் ஒற்றைச் சமநிலை**

நான்கு சீர்களைக் கொண்டு இரண்டடியில் முடியும். இத்தகைய நாற்சீர் ஒற்றைச் சமநிலைச் சிந்துப் பாடல்களும் அமைந்துள்ளன.

**“இருவினையாம் மாடுகளை ஏகவிடு கோனே! - உன்**

**அடங்குமன மாடொன்றை யடக்கிவிடு கோனே!”** (இடைக். 113)

எனும் பாடல்களால் அறியமுடிகிறது.

**விறநிலைச் சிந்து**

தனிச் சொல்லுக்கு முன்னும் பின்னும் உள்ள அடிகள் ஒவ்வாது வருதல் வியநிலைச் சிந்தாகும்.

**“தன்னை யறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்குப்**

**பின்னாசை ஏதுக்கடி? - குதம்பாய்**

**பின்னாசை ஏதுக்கடி?”** (குதம்பை. 31)

இச்சிந்துப் பாடல்கள் ‘கண்ணி’ என்று குறிக்கப்படுகிறது. இரண்டடிகள் கொண்டது ஒரு கண்ணி. இக்கண்ணிகளில் இசைநயம் செறிந்திலங்கும். சித்தர்கள் எங்கும் சுற்றி வருபவர்கள். அவர்கள் தம் கருத்துகளைப் பரப்ப இத்தகைய இசை யாப்பினை மேற்கொண்டுள்ளனர்.

### கும்மி

இச்சிந்து முறைகளை விடுத்துக் 'கும்மி' முறையிலும் சித்தர்கள் பாடல்களை இயற்றியுள்ளனர். மதுரை வாலைசாமி ஞானக்கும்மியும், கொங்கணரின் வாலைக்கும்மியும் இவ்வகையில் அடங்கும். கும்மியினை வெண்பாவின் இனம் என்பர். வெண்டளை பிழையாமல் ஓரே எதுகையுடைய எழுசீர்க் கழிநெடிலடி இரண்டு வருவது. அடியின் முதற்சீரிலும், ஐந்தாம் சீரிலும் மோனை வரும். இயற்சீர் வெண்டளையும் வெண்சீர் வெண்டளையும் அல்லாது வேறு தலை வராது. ஈற்றுச்சீர் பெரும்பாலும் விளங்காய்ச் சீராக வரும்".[145] இது கும்மியின் பொது இலக்கணமாகக் கூறப்படுகின்றது. இவ்விலக்கணம் முழுமையும் பொருந்தி வருவது கொங்கணரின் வாலைக்கும்மியில்,

**"வாசிப் பழக்க மறியவே ணுமற்று**
**மண்டல வீடுகள் கட்டவேணும்;**
**நாசி வழிக்கொண்டு யோகமும் வாசியும்**
**நாட்டத்தைப் பாரடி வாலைப் பெண்ணே!"** (கொங்கணர். 28)

இடம்பெறும் பாடலால் அறியப்படுகிறது. கும்மி என்று பெயரிடப் பெறாமல், பாடலைப் பாடும்பொழுது கும்மிக்குரிய ஓசையினைப் புலப்படுத்தும் பாடல்களையும் சிந்தின் வகை எனக் கொள்வர். கடுவெளிச்சித்தரின் பாடல்கள் இவ்வகையில் அடங்கும்.முதலடியில் மூன்று சீர்களையும் தனிச்சொல்லையும் பெற்று இரண்டாமடியில் நான்கு சீர்களைப் பெற்று விழுமிய ஓசையுடன் நடப்பதைக் காணமுடிகிறது. இதற்குச் சான்றாக,

**"சாபங் கொடுத்திடலாமோ? - விதி**
**தன்னை நம்மாலே நடுத்திட லாமோ?**
**கோபங் கொடுத்திட லாமோ? - இச்சை**
**கொள்ளக் கருத்தைக் கொடுத்திடலாமோ?"** (கடுவெளி. 1)

கடுவெளிச் சித்தரின் பாடல் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

### குறள் வெண்பா

குறள் வெண்செந்துறை, நேரிசை வெண்பா, நேரிசை ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக் குறளாசிரியப்பா, அறுசீர் வெண்சீர் விருத்தங்கள், கட்டளைக் கலித்துறை, கலிநிலைத்துறை, கலித்தாழிசை, கலிவிருத்தம், தரவு கொச்சகம் முதலான மரபு யாப்பு வடிவங்களைப்

பயன்படுத்தியும் எளிய மக்களும் புரிந்து கொண்டு பாடும் விதத்தில் சந்தங்களை வேறுபடுத்திச் சிந்து, கும்மி போன்றவற்றைப் பயன்படுத்தியும் இருவேறு நிலைகளில் சித்தர்கள் இலக்கியங்களை வடித்துள்ளனர்.

**அணிநலம்**

கருத்து விளக்கம் பெறுவதற்காகத் தக்க ஒப்புமையுடன் அமைவது உவமை. உவமையணி ஒன்றே சங்கத்தமிழ் இலக்கியத்திற்குச் சிறப்பாக அமைந்து தமிழ் மக்களுக்கே உரியதாகத் தொல்காப்பியர் காலம் முதற்கொண்டு விளங்குகிறது. “உவமையின் வகைகளை வினை, பயன், மெய், உரு என்ற நான்காகப் பிரிப்பர்”.[146] எனத் தொல்காப்பிய நூற்பா எடுத்துரைக்கிறது. சித்தர்களும் இந்நான்கு உவமைகளையும் தங்கள் பாடல்களில் எடுத்து இயம்பியுள்ளனர்.

**வினையுவமை**

சித்தர்கள் வினை பற்றிய உவமைகளைப் புதுமையோடு தருவர். தாம் பெற்ற மக்களைக் காக்கும் வகையறியாமல் உலகியலில் அகப்பட்டு வருந்தும் மக்களுக்கு, பட்டினத்தார் கூறும்போது,

**“பூப் பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்**
**பொலபொலெனக் கலகலெனப் புதல்வபுகளைப் பெறுவீர்**
**காப்பதற்கும் வகையறியீர் கைவிடவும் மாட்டீர்**
**சுவர் பிளந்த மரத்துளையில் கால் நுழைத்துக் கொண்டே**
**ஆப்பதனை அசைத்துவிட்ட குரங்கதனைப் போல**
**அகப்பட்டீர்; கிடந்துழல அகப்பட்டீரே!”** (பட்டின. பொது. 2)

எனும் பாடலில் பூமியில் பிறந்து பொலபொலவென்று வெளியில் வருகின்ற புற்றீசல்களின் செயல் மிகுதியான குழந்தைகளைப் பெறுகின்றவரின் செயலுக்கு உவமையாக்குகின்றார்.

குரங்கு மரக்கிளையிலுள்ள பிளவில் காலை வலிய நுழைத்துக் கொண்டு, அந்தப் பிளவை மூடுகின்ற வழியினைத் தானே அசைத்துவிட்டு,

வெளியே காலை எடுக்க இயலாமல் துன்பமடைவதைப் போல இல்லற இன்பத்தினை அனுபவிக்க விரும்பி, இல்லறத்தில் அகப்பட்டுப் பின் தம் மக்களைக் காக்கும் திறன் அறியாமல் துன்பப்படுகின்ற செயலை எடுத்துரைக்கின்றார்.

**பயன் உவமம்**

சித்தர்கள் பயன் உவமையை மிகுதியாகக் கையாண்டு உள்ளனர். எடுத்துக்காட்டாகப் பட்டினத்தார் பாடலில்,

**“கல்நெஞ்சின் உள்ளே கழுநீலம் பூத்தாற்போல்**
**என்நெஞ்சின் உள்ளே இணையடிகள்**
**வைத்தாண்டி”** (பட்டின. பொது. 2)

என்ற பாடலில் கல்லின் இடையில் கழுநீலமலர் மலர்ந்து பயன்தருவது போல் தம்முடைய நெஞ்சமாகிய கல்லில் தம் இணையடிகளை வைத்து தம்மையும் பயனுடைய ஒரு பொருளாக்கி விட்டான் என்று குறிப்பிடுகிறார்.

**மெய் உவமம்**

சித்தர்கள் மெய் உவமத்தை வினைக்கு அடுத்தாற்போல் மிகுதியாகக் கையாண்டுள்ளனர். மெய்யுவமம் என்பது வடிவவுமாகும். இதனைச் சிவவாக்கியர் பாடலில்,

**“எள்ளகத்தில் எண்ணெய் போல எங்குமாகி எம்பிரான்**
**உள்ளகத்தி லேயிருக்க ஊசலாடும் மூடர்காள்”** (சிவவாக்கியர். 397)

எனவரும் இப்பாடலில் எள்ளில் எண்ணெய் இந்தப் பகுதியில் தான் இருக்கிறது என்று கூற இயலாது. அந்த எள் முழுவதிலும் பரந்து காணப்படுவது போல் எங்குமாக உள்ள இறைவன் உடலில் உறைகின்றான். இதனை அறியாமல் ஊசலாடுகின்ற மூடர்களாகக் காணப்படுகின்றனர். இறைவன் என்பவன் தனியே ஓரிடத்தில் இல்லை. இது மெய்யுவமம் ஆகும்.

**உரு உவமம்**

‘உரு’ என்பது நிறம். சித்தர்கள் வேண்டிய இடங்களில் இந்த உரு உவமத்தினைப் பயன்படுத்தியுள்ளனர். இடைக்காட்டுச்சித்தர் கையாளுகையில்,

**"காய்ந்த இரும்பு நிறங் காட்டுதல்போல் ஆத்துமத்தை**

**வாய்ந்திலங்கச் செய்து வளம் பெறுநீ மடஅனமே!"** (இடைக். 90)

என்ற பாடலில் கொல்லன் உலைக்களத்தில் உலையில் இடப்பட்ட இரும்பானது நல்ல செம்மை நிறம் காட்டுவது போல, இறைவனது அருள் நினைவென்னும் உலைக்களத்தில் உன்னுடைய 'ஆத்மா' வாகிய இரும்பினை இட்டு இலங்கச் செய்து ஒலி பெற்று வளமை அடைதல் வேண்டும் என விவரிக்கின்றார். உரோமமுனிவரும் தன் அனுபவத்தை விளக்கும்போது,

**"சொரூபசித்திக் கடையாளம் ஏதென்றக் கால்**

**சுடர்போலத் தோள்றுமடா தூலதேகம்"** (உரோம. 12)

இப்பாடலில் இறைவனின் அனுபவத்தைப் பெற்றவர்கள் உடல் தீபத்தைப் போல சுடர்விட்டு தெரிவர் என விளக்குகிறார்.

## உவம உருபுகள்

உவம உருபு என்பது ஒரு பொருளுக்கும் மற்றொரு பொருளுக்கும் உள்ள ஒப்புமையைக் காட்டக் கூடியதாகும். தொல்காப்பியர் முப்பத்தாறு".[147] உவம உருபுகளைக் கூறியுள்ளார். மொழி வளர்ச்சியில் உவம உருபுகள் பெருகியுள்ளன. 'தொல்காப்பியர் உவம உருபுகளை வினை, பயன், மெய், உரு என நான்கு வகைப்படுத்திக் காட்டுவதோடு இன்ன உவம உருபுகள் இந்த வகையைச் சாரும் என்று உறுதியாகக் கூறுவர். அத்தகைய வரையறை சங்க காலத்தில் இல்லை என்பது தெளிவு. அவை நெகிழ்ச்சி அடைந்து மாறியும் வந்துள்ளன".[148] என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இக்கருத்தினை இ.சுந்தரமூர்த்தி குறிப்பிடுகையில், "வள்ளுவர் பயன்படுத்திய உவம உருபுகள் பலவும் தொல்காப்பியரின் வரையறையினின்றும் மாறி வந்துள்ளமையைக் காணலாம். ஓர் உவமத்தில் எடுத்தாள வேண்டிய உருபு பிறிதோர் உவமத்தில் வரப் பெறுவதையும் காணலாம்".[149] என்ற கருத்து பொருத்தமுடையதாகும்.

சித்தர்களின் பாடல்களில் வினை, பயன், மெய், உரு என்ற நான்குவகை உவமைகளில் பல்வேறு உருபுகள் வந்துள்ளன. அவை.

**"என்ன, போல், போலே, போல,**

**அதுபோல, என, வாறு (ஒக்கும்)**

**வண்ணம் ஆம், போலும், போன்ற,**
**போலவே, ஒத்த, இப்படியே, அனைய,**
**ஒப்பாக, என்றே, என்று, இல்,**
**ஆக ஒக்கும் என்பனவாம்"**

என வரும் நூற்பாவில் என்ன, எனவே, என்று, என்றே - என்பன 'என' என்பதன் அடிப்படையில் வரும். அனைய - என்பது அன்ன என்னும் உவம உருபின் அடியாகப் பிறந்து வந்துள்ளன. போல், போலே, போலவே, போலும் என்பன 'போல' என்னும் உவம உருவின் அடியாகத் தோன்றியதாகும். எனவே, மேற்கண்ட உருபுகளை, **என, அன்ன, போல, ஒப்ப, ஆறு, வண்ணம், இல், ஆல், ஆய்** என்னும் வடிவங்களில் அடக்கமுடியும்.

தொல்காப்பியர் கூறும் உருபுகள் அன்ன, போல, ஒப்ப என்ற மூன்றுமே ஆகும். சித்தர் பாடல்களில் தொல்காப்பியர் சொல்லாத உருபுகள் (அனைய, என, வாறு, இல், ஆக, ஆறு, ஆய் மிகுதியாகக் கையாளப்பட்டுள்ளன. இவற்றுள் 'அனைய' என்பது 'அன்ன' என்பதன் அடியாகத் தோன்றியது**".**[150] எனப் பேராசிரியர் தம் உரையில் குறிப்பிட்டுள்ளார். 'என' என்னும் உவம உருபினை அவர் உருவின் பொருளில் வந்த செயவென எச்சமாகக் காட்டுவர்.

பேச்சு வழக்கினையே மிகுதியாகப் பயன்படுத்தும் சித்தர்கள் பேச்சு வழக்கில் பயன்படுகின்ற உவமைகளையும் தம் பாடல்களில் எடுத்தாண்டுள்ளனர். பேச்சு வழக்கில் உவமையும், உருவகமும் பலவகையில் பயன்படுவதை**".**[151] அறிஞர் ரிச்சார்டும் குறிக்கின்றார். சித்தர்கள் தங்கள் பாடல்களை அறவுரைகளாக அமைப்பதால் உவமைகளை மிகுதியாகப் பயன்படுத்தி உள்ளனர். அறவுரைகள், பொன்மொழிகள், பழமொழிகள் ஆகியவற்றில் உவமைகளின் செல்வாக்கையும் அதிகம் பார்க்கமுடிகிறது. அறவுரை புகட்டும் சித்தர்கள் மக்கள் அறிந்த ஒன்றினைக் கொண்டே அவர்களுக்கு உண்மைப் பொருளை உணர்த்த விரும்பியதால், மக்கள் தம் வாழ்க்கையில் அன்றாடம் காணுகின்ற பொருள்களையே உவமைப் பொருள்களாக அமைத்துள்ளனர்.

“மேலாகப் பார்ப்பதற்கு வெவ்வேறு போலக் காணப்படும். இவ்வுலகப் பொருள்கள் உண்மையில் ஒரு தொடர்பை உடையன. முதலில் அத்தொடர்பு விளங்காவிடினும் நன்கு ஆராய்ந்தால் விளங்காமற் போகாது. வடிவாலும், உருவாலும், பண்பாலும் பெரும்பான்மையாகப் பொருள்கள் தொடர்பு பட்டிருந்தலை எவ்வளவு அறிவு விசாலமும் ஆழமும் உடையதாகிறது”.[152] என்று எடுத்துரைக்கின்றார். சித்தர்கள் பொருள்களின் தொடர்பை நன்கு அறிந்து உவமைகளைச் சிறப்பாகக் கையாண்டுள்ளனர்.

சித்தர் பாடல்களில் அமைந்துள்ள உவமைகளைச் சமுதாய உவமைகள், தத்துவ உவமைகள், ஒரு பொருளுக்குப் பல உவமைகள், பல பொருளுக்கு ஓர் உவமை, ஓர் உவமையையே பலரும் மேற்கொள்ளுதல் எனும் பிரிவுகளில் ஆராய்வோம்.

**சமுதாய உவமைகள்**

வேங்கையினைப் பிடிப்பதற்காக நடுக்காட்டில் ஆட்டினைக் கட்டி வைப்பர். அதன் குரல் கேட்டு அதனை உண்ணும் ஆசையுடன் ஓடிவரும் வேங்கை. அஃது ஆட்டிற்குப் பக்கத்தில் வெட்டப்பட்டிருக்கும் குழியில் அல்லது விரித்திருக்கும் வலையில் விழும். பின்னர் ஒளிந்திருப்பவர்கள் அதனை வந்து பிடித்துக் கொள்வர். அதனைப் போலச் செல்வங்களைக் காட்டி மதியினை மயக்கிப் பிறவியாகிய பெருங்குழிக்குள் தள்ளப்பட்டிருப்பர். இந்நிலையை,

**“ஆடுகாட்டி வேங்கையை அகப்படுத்து மாறுபோல்**
**மாடுகாட்டி என்னை நீ மதிமயக்கம் ஆகுமோ?”** (சிவவாக்கியர். 51)

எனச் சிவவாக்கியர் பாடலால் விளக்குகிறார். பருத்திப் பொதி வைத்து அழுந்த அழுந்த வாங்கிப் பின் பருத்துக் காணப்படுவதைப் போல, வயிறு பருக்கத் தங்கள் வயிற்றுக்கே உணவினை இடுகின்ற ஈகைத் தன்மை இல்லாத மக்களைக் காட்டும் பட்டினத்தார்,

**“பருத்திப் பொதியினைப் போல் வயிறு பருக்கத் தங்கள்**
**துருத்திக்கு அறுசுவை போடுகின்றார் துறந்தோர் தமக்கு**
**இருத்தி அழுதிட மாட்டார்”** (பட்டின. 16)

என இகழ்ந்து உரைக்கின்றார்.

நாற்றம் அடிக்கின்ற மீனை எத்தனை முறை கழுவினாலும் அதன் நாற்றம் அதனை விட்டுப் போகாது. அதுபோலப் பல நதிகளில் மூழ்குவதால் மலங்களால் ஆகிய இவ்வுடலின் மலத்தினை நீக்க இயலாது என்பதை,

**"நாறுமீனைப் பலதரம் நல்ல தண்ணீரால்**
**நாளும் கழுவினும் அதன் நாற்றம் போமோ?**
**கூறும் உடல் பலநதி யாடிக் கொண்டதால்**
**கொண்டமலம் நீங்காதென்று ஆடு பாம்பே!"** (பாம்பாட்டி. 65)

எனப் பாம்பாட்டிச்சித்தர் பாடலால் சமுதாயக் கருத்துகளை எளியமுறையில் விளக்கி இருப்பதை காணமுடிகிறது.

## தத்துவ உவமைகள்

இயற்கைப் பொருள்களின் வாயிலாகச் சித்தர்கள் தத்துவத்தை உணர்த்தினர். மக்கள் தங்கள் வாழ்க்கையில் அன்றாடம் காணும் பொருட்களைக் கொண்டே நோய் தீர்க்கும் கசப்பான மருந்தினை இனிப்பான தேனில் கலந்து காட்டுவது போல உயர்ந்த தத்துவக் கருத்துகளை எடுத்துக்காட்டியுள்ளனர். இத்தத்துவ உண்மைகள் சைவ சித்தாந்த சாத்திர நூல்களிலும் இடம் பெற்றுள்ளன.

குளவி புழுவைக் கொண்டு வந்து தம் கூட்டிலடைத்து அதற்கு எப்பொழுதும் நாதத்தினை ஓதிக் கொண்டிருப்பதால் அப்புழுவும் குளவியாகி சித்தாந்தத்தினை எழுப்பிப் போகும். அதனைப் போல வேட்டுவனாகிய இறைவனே உயிர்களுக்கு வேண்டிய உருவினைக் கொடுத்துத் தன்னுடன் இணைத்துக் கொள்கிறான் என்பதை மெய்கண்டதேவ நாயனார் தனது சிவஞானபோதம் எனும் நூலில்,

**"வேட்டுவனாம் அப்புழுப்போல் வேண்டுருவைத்**
**தான்கொடுத்துக் கூட்டானோ மண்போற் குவிர்த்து".**[153]

என இரண்டாம் அதிகாரம் முதற்சூத்திரத்தில் உதாரணச் செய்யுளின் மூலம் விவரிக்கின்றார். இதேபோல் சிவவாக்கியார் கூறுகையில்,

**"பச்சைமண் பதுப்பிலே புழுப்பதித்த வேட்டுவன்**
**நிச்சமும் நினைந்திட நினைந்த வண்ணம் ஆயிடும்**

**பச்சைமண் இடிந்துபோய்ப் பறந்து தும்பி ஆயிடும்**

**பித்தர்காள் அறிந்துகொள் பிரான் இயற்று கோலமே"**(சிவவாக்கியர். 103)

என்று பாடியுள்ளார். வேட்டுவனாகிய குளவி தான் கொண்டு வந்து கூட்டிலடைத்த புழுவினை நினைக்க அப்புழுவும் தும்பியாகிப் பறக்கும். அதனைப்போல இறைவனும் உடலாகிய கூட்டில் உயிரை அடைத்து அவ்வுயிரைத் தன் வசமாக்க நினைக்க, அவ்வுயிரும் இறையுடன் கலக்கும் என்ற கருத்தில் இப்பாடல் அமைந்துள்ளது. அவ்வுவமையைப் பத்திரகிரியார்,

**"கூட்டில் அடைப்பட்ட புழுகுளவி உருக்கொண்டது போல்**

**வீட்டில் அடைப்பட்டுள்ளருவை வேண்டுவதும் எக்காலம்?"**(பத்திரகிரி. 166)

என்றும், இடைக்காடர்,

**"குளவி புழுவைக் கொணர்ந்து கூட்டில் உருப்படுத்தல் போல்**

**வளமுடைய என்மனத்தை வசப்படுத்து மடவனமே"** (இடைக். 88)

என்றும் குறிப்பிடுகின்றனர். உலகில் பற்றற்ற நிலையை அடைவதற்கு,

**"நீரிலே முளைத் தெழுந்த தாம ரையி னோரிலை**

**நீரினோடு கூடி நின்றும் நீரி வாதவாறுபோல்**

**பாரிலே முளைத்தெ ழுந்த பண்டி தப்ப ராபரம்**

**பாரினோடு கூடிநின்ற பண்பு கண்டி ருப்பீரே"** (சிவவாக்கியர். 307)

எனவரும் பாடலில், நீரில் முளைத்த தாமரையின் இலை நீரில் கூடியிருந்தும் நீருள் ஒட்டாத தன்மையினைப் போல . . . இவ்வுலகில் முளைத்த இந்தப் பராபரம் உலகத்தில் கூடியிருந்தும் அத்துடன் ஒட்டாமல் இருக்கின்ற பண்பினை அறிந்து அதன்படி இவ்வுலகத்துடன் நீங்களும் பற்றற்று இருங்கள் எனச் சிவவாக்கியர் குறிப்பிடுகிறார்.

### ஒரு பொருளுக்குப் பல உவமைகள்

ஒரு பொருளைக் குறிக்கப் பல உவமைகளைக் கையாளுகின்ற தன்மை சித்தர்களிடத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றது. இந்நிலையினைப் பட்டினத்தார் குறிப்பிடுகையில், "உடலைக் குறிக்கக் குரம்பை, கானகம், பேழை, பெட்டகம், சீறூர், கட்டளை, பாண்டம், துண்டம், தோட்டம், பஞ்சரம், பம்பரம், மரக்கலம், துருத்தி, பந்தம், பட்டம், கட்டை, விருந்து, சருகு, கிழங்கு, பூனை, பனிக் கூட்டம், இந்திர சாபம், நீர்க்குமிழி, நீர்மேல் எழுத்து, கனவில் காணும் காட்சி, மரம், சிறுகுடிசை, இருவினைக்கூடு, சட்டகம் என்பன போன்ற

எழுபத்தைந்து உவமைகளைக் கையாண்டுள்ளனர்".[154] இக்கருத்தைப் பத்திரகிரியார், பதினெட்டு இடங்களில் உவமையாகவும், கொங்கணர் பத்து இடங்களில் உவமையாகவும் கையாண்டுள்ளனர். "இறைவனிடத்தில் பற்றுக் கொள்ளவேண்டும் என்ற ஒரு செயலுக்காகச் சேய், செவிடு, ஊமை, பேய் போல் இருக்கவேண்டும்".[155] என்கிறார் பத்திரகிரியார். வால்மீகர், யோகம் கைவரப் பெற்றதாகச் சொல்லி மௌனமாய் ஞானம் வந்தது எனத் திரியும் போலிகளைக் காக்கை, பித்தர், மிருகம் போன்றவற்றுடன் ஒப்புமைப் படுத்துகிறார்".[156] பட்டினத்தார், தம்மிடம் செல்வமிருந்தும் தானம் செய்யாமல் வைத்துக் கொள்ளும் கொடுக்காத மனிதன் பயனற்றவராவர் என்பதனை,

**"காயாமரமும் வறளாங்குலமும் கல் ஆவும் என்ன**
**ஈயாமனிதரை ஏன் படைத்தாய்?"** (திருவேகம்பமாலை, பா. 21)

எனும் பாடலில் தானம் கொடுக்காத மனிதரை ஏன் படைத்தாய் எனச் சாடுகின்றார். காயாத மரத்தினால் எப்பயனும் இல்லை; கல்லினால் ஆகிய பசுவினால் எப்பயனுமில்லை; இவற்றைப் போல ஈயாத மனிதனிடம் செல்வம் இருப்பதால் எப்பயனுமில்லை என்று சுட்டிக்காட்டுகின்றார். ஈயா மனிதருக்கு மூன்று உவமைகள் ஓரே பாடலில் சுட்டுகின்றார்.

காகபுசுண்டர் உபநிடதம் எனும் நூலில், தூய உடலில் சூட்சும உடல் மறைந்திருக்கும் தன்மையினை எள்ளுக்குள் எண்ணெய், வித்துக்குள் ஈரம், பூவிற்குள் வாசம், பாலிற்குள் நெய், முட்டைக்குள் விண்ணகம் எனும் உவமைகளால் உணர்த்துகிறார்".[157] இங்ஙனம் ஒரு பொருளுக்குப் பல உவமைகளை மேற்கொள்ளுவதன் மூலம் அப்பொருளை வலியுறுத்துகின்ற தன்மையும் அதன் இன்றியமையாமையும் வெளிப்படுகின்றன.

## பல பொருளுக்கு ஓர் உவமை

ஒரு பொருளுக்குப் பல உவமைகளைக் காட்டிய சித்தர்கள் பல பொருளுக்கு ஓர் உவமையினையும் எடுத்துக்காட்டுகின்றனர். பலருக்கு நன்கறியப்பட்ட பொருளையே பல பொருளுக்குரிய ஓர் உவமையாகக் கொள்ளுகின்றனர்.

### ஓர் உவமையையே பலரும் மேற்கொள்ளுதல்

நாயின் தன்மையை, பட்டினத்தார் - அலைகின்ற மனத்திற்கும் (1), அகத்தியர் - மக்களது கத்துதலுக்கும் (5), இடைக்காடர் - பொறிப்புலன்களை அடக்காத தன்மைக்கும் (93) உவமையாக்கியுள்ளனர். நீர் மேல் குமிழி, எள்ளில் எண்ணெய், பாலில் நெய், சிலந்தியிடை நூல், நீரும் உப்பும் போன்ற உவமைகளைப் பலரும் கையாளுகின்றனர். இத்தகைய உவமைகள் முன்னோரால் ஆளப்பட்டு வந்த தன்மையைக் கருதிச் சித்தர்கள் பலரும் எடுத்தாண்டுள்ளனர் என்று கொள்வதற்கும் இடமுண்டு.

### நீர் மேல் குமிழி

நீரின் மேல் தோன்றுகின்ற குமிழ் நிலையில்லாதது; உடன் அழிந்துவிடக் கூடியது. இதைப்போலவே உடலும் வாழ்வும் நிலையானவை அல்ல; அழிந்துவிடக் கூடியவை எனும் கருத்தை,

**“நீர்மேல் குமிழிபோல் நிலையற்ற காயம் இதைத்**
**தாரம் என்றெண்ணி நான் தட்டழிந்தேன் பூரணமே”** (பட்டின. 82)

என்றும், பத்திரகிரியார் குறிப்பிடுகையில்,

**“நீரில் குமிழி போல் நிலையற்ற வாழ்வை விட்டுன்**
**பேரில் கருணைவெள்ளம் பெருக்கெடுப்ப தெக்காலம்”** (பத்திர. 62)

என்றும் சித்தர்கள் கையாண்டுள்ள பாங்கினைக் காணமுடிகிறது.

### பாலில் நெய்

இவ்வுடலாகிய பாலினை யோகச் செயல்முறைகளால் தயிராக்கிப் பெறும் ஞானத்தால் அதனைக் கடைந்து, பலமுறை சமாதியிருந்து உடலைக் காய்ச்சி, இவ்வுடலுள் நெய் போல இருக்கின்ற இறைவனைக் காணவேண்டும் என்ற கருத்தில் ‘பாலின்கண் நெய்’ என்னும் உவமையினைக் கையாண்டுள்ளனர். இதனைப் பட்டினத்தார் பாடலில்,

**“பாலின்கண் நெய் இருந்தாற் போலப் பரஞ்சோதி**
**ஆலிங்கனம் செய்து அறவிழுங்கிக் கொண்டான்டி”** (பட்டின. 114)

என்றும், சிவவாக்கியர்,

**“பாலுண் நெய் கலந்தவாறு பாவிகாள் அறிகிலீர்”** (சிவவாக்கியர். 14)

என்றும், திருவள்ளுவர்

**"நாலு பொருளுள் நற்பொருளின் ஆற்றியப்**

**பாலுமது நெய்யெனவும் பார்".**[158]

எனக் குறளிலும் பாலில் நெய் போல் இறைவன் உறைந்து இருப்பதை நேரிடையாகக் காணாது மறைப்பொருளாலே உணரமுடியும் என்பதைப் பாலில் நெய் போன்ற பாங்கினை எடுத்துரைக்கின்றனர்.

**சிலந்தியிடை நூல்**

சிலந்திப்பூச்சியின் உடலிலுள்ளேயே அதன் தேவையை நிறைவு செய்கின்ற 'நூல்' இருப்பதைப் போல் இறைவனும் உடலினுள் உள்ளிருந்து பயனளிக்கின்றான்; ஆனால் இதனை எவரும் உணர்வதில்லை என்ற பொருள்பட இவ்வுவமையினைக் கையாண்டுள்ளார். காகபுசுண்டர் பாடலில்,

**"சிலந்தியிடை நூல்போல் சீவசெந்துக் குள்விருந்து"** (காகபுசுண்டர். 15)

என்றும், பட்டினத்தார் பூரணமாலையில்,

**"சிலந்தி யுடை நூலும் போலக்**

**கூறுமதனங்கள் போற் குறியைக்காணே"** (பட்டினத்தார். 42)

எனவரும் பாடல்களால் கருத்தினைப் புலப்படுத்துகிறது.

**நீரும் உப்பும்**

நீரில் உப்பினைக் கலக்கும்போது இரண்டும் ஒன்றாகிப் பிரித்துப் பார்க்க இயலாது. ஓரே கலையைப் பெற்றது போல் சிவனும் திருமாலும் இணைந்த நிலையில் இறையுடன் இணையவேண்டிய தன்மையினையும் காட்டுவர். இக்கருத்தை மையமாகக் கொண்டு சிவவாக்கியர் குறிப்பிடுகையில்,

**"நாழி யப்பும் நாழியுப்பும் நாழியானவாறு போல்**

**ஆழி யோனு மீசனு மமர்ந்து வாழ்ந்திருந்திடம்"** (சிவவாக்கியர். 14)

என்றும், இடைக்காடர் அன்னத்தோடு கிளத்தல் எனும் பாடலில்,

**"அப்புடனே யுப்புச்சேர்ந்த தளவுசரி யானதுபோல்**

**ஒப்புறவே பிரமமுடன் னொன்றிநில்லு மடலனமே"** (இடைக்காடர். 94)

என்றும், அகப்பேய் நீருடன் உப்பும் சேர்ந்து அதனுடன் இரண்டறக் கலந்திருப்பதைப் போல இறைவனில் கலந்து இருப்பதை உணர வைக்கின்றார்.

**பழமொழிகளை உவமைகளாக அமைத்தல்**

முன்னோர்கள் தங்கள் வாழ்க்கையின் அனுபவங்களைக் கூறுகையில் பழமொழிகளையும் கையாண்டுள்ளனர். அப்பழமொழிகள் எண்ணங்களை வலியுறுத்திச் சொல்லப் பலராலும் பயன்படுத்தப்படுகின்றன. சித்தர்கள் பழமொழிகளை உவமையாகவும் தந்துள்ளனர். 'காய்த்தமரம் கல்லடிபடும்' என்ற பழமொழியை வினை கொண்ட உடல் தண்டனை பெறும் என்பதற்கு உவமைப்படுத்தும் பாம்பாட்டிச் சித்தர் கையாளுகையில்,

**"காய்த்த மரம் அதுமிக்க கல்லடிபடும்**
**கன்மவினை கொண்டகாயம் தண்டனை பெறும்"** (பாம்பாட்டி. 66)

என்னும் பழமொழியைத் தம் பாடலில் கையாண்டுள்ளதைக் காணமுடிகிறது.

நன்கு காய்த்த மரத்தில் இருக்கின்ற காய்களையும் கனிகளையும் பெறுவதற்காக மக்கள் கல்லினை விட்டு எறிவர். காய்களைக் காய்த்ததனால் அம்மரம் அடிகளைப் பெறுகின்றது. அதைப்போல, சென்ற பிறவியில் செய்த வினைகள் வந்து முற்றுமானால் அவ்வினைக்குத் தக்க தண்டனைகளை இவ்வுடல் பெற்றுத் துன்பத்தினை அனுபவிக்கும் என்பது பாடலின் கருத்தாகும்.

"ஏட்டுச் சுரக்காய் கறிக்கு ஆகுமா?" என்ற பழமொழியை, மனிதர்கள் கதிபெறப் பல இடங்களிலும் திரிவதற்கு ஏற்றதாக ஆட்சி செய்கின்றார் பாம்பாட்டிச்சித்தர். ஏட்டில் பாடமாக இருக்கும் சுரைக்காயினை வெட்டி எடுத்துக் கறி சமைக்க இயலாது; இதனைப் போல் காசி, இராமேசுவரம் முதலான இடங்களுக்குச் சென்றால் புண்ணியம் கிடைக்கும் என்று சிலர் ஏட்டிலே எழுதி வைத்திருப்பதைப் படித்துவிட்டுக் காசி, இராமேசுவரம் திரிந்தாலும் முத்தியினை அடைதல் இயலாது இக்கருத்தினை உரோமமுனிவர் ஞானம் எனும் நூலில்,

**"தாமொன்று நினைக்கையிலே தெய்வமொன்று**
**தானினைந்த தன்மையல்லோ விதிகள் தாமே"** (உரோம. 13)

எனும் பாடலால் விவரிக்கிறார். அதாவது, நாமே அனைத்திற்கும்; தம்மால் நடக்கின்ற செயல்களே அனைத்தும்; தாம் நீண்ட நாட்கள் வாழ்வோம்; தாம்

பெற்றிருக்கும் செல்வமெல்லாம் தமக்கே சொந்தமானவை போன்ற நினைவுகள் மனிதர்களுக்கு உரியன. இருப்பினும், இறப்பு வந்து எய்வதும், காலச்சூழல்களும் மனித மனங்களின் மாறுபாடுகளும், ஊழ்வினை உறுத்துவந்து ஊட்டுவதும் மனிதர்களின் அத்தகைய நினைவுகளைப் பொய்யாக்குகின்றன. அப்பொழுதே 'விதி வலிது' என்ற எண்ணம் ஏற்படுகின்றது. இதனையறிய முடியாமல் மாயையில் ஆட்பட்டு 'அனைத்தும் நம்மால்' என்று மனிதர் நினைக்கின்றனர். இவைபோன்ற கருத்துகள் பழமொழியில் மிகுதியாக இடம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

"ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாயிரு" என்ற பழமொழிக்கேற்ப சித்தர்களது நினைவு எக்காலத்திலும் மோகத்தை விட்டு அகலாது என்ற கருத்தைப் பட்டினத்தார் திருக்குற்றாலம் எனும் தலைப்பில்,

**"எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்**
**முத்தர்மனம் இருக்கும் மோனத்தை - வித்தகமாய்க்**
**காதி விளையாடி யிருகைவீசி வந்தாலும்**
**தாதி மனம் நீர்க்குடத்தே தான்"** (பட்டினத்தார். 29)

எனும் பாடலின் வழி சீவன் முத்தர்கள் எத்தகைய அவத்தைகளைப் பட்டாலும் தங்கள் மனத்தில் எப்பொழுதும் மோகத்தையே நினைத்திருப்பர். இச்செய்கை, தலையில் நீர்க்குடங்களைச் சுமந்து கொண்டு இருக்கும் பெண் இரு கைகளையும் வீசிக் காய்களைப் போட்டுப் பிடித்துக் கொண்டு விளையாட்டினைப் பற்றாது தலையில் இருக்கும் நீர்க்குடங்களையே நினைத்துக் கொண்டிருப்பது போலாகும் என விவரிக்கிறார்.

"கழுவிக் கழுவி ஊற்றினாலும் கவிச்சு நாற்றம் போகாது" என்ற பழமொழியினை மேற்கொண்டு "நாறுமீனைப் பலமுறை கழுவினாலும் நாற்றம் போகாது" (பாம்பாட்டி. 65) என்ற பாடலில் பதிவு செய்துள்ளார். அதாவது, நாற்றம் அடிக்கின்ற மீனை பலமுறை நல்ல நீரில் கழுவினாலும் அதன் உடலுடன் இணைந்த நாற்றம் அதனை விட்டுப் போகாது. அதுபோல ஆணவம், கன்மம், மாயை எனும் மலங்களினால் ஆகிய உடல் பல நதிகளில் நீராடுவதால் அதன் மலங்களை விட்டு நீங்காது. இவ்வுண்மையினை அறியாத மக்கள் புண்ணிய நதிகள் இருக்கும் இடங்களுக்கு எல்லாம் சென்று நீராடுவர்.

இவற்றால் தன்னைப் பிடித்த மலங்கள் நீங்காது என்பதனை மீனின் வாயிலாக அறிந்து கொள்ள வேண்டும். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டே இப்பழமொழி கையாளப் பட்டுள்ளது.

உடல் நாற்றம் தன்மையது என்பதை, ''நாற்றக் கூபம் நலமில்லா மட்பாண்டம்'' என்ற பழமொழி விவரிக்கிறது. ''நாய்க்கு ஒரு சூல் அதற்கொரு மருத்துவச்சியா?'' என்ற பழமொழி உடலும் நீக்கிரையாவதற்கு அன்றி இருப்பதற்கல்ல என்பதை பட்டினத்தார் குறிப்பிடுகையில்,

**“தாய்க்கொரு சூலும் அதற்கோர் மருத்துவம் நாட்டிலுண்டோ?**
**பேய்க்கொரு ஞானம் பிடிபடுமோ? பெருங் காச்சிரங்காய்**
**ஆக்குவ ரார்?அ.். தருந்துவா ரார்? அது போலுடம்பு**
**நீக்கிரை யாவதல் லாலேலுக் காம்? இதைச் செப்புமினே?”** (பட்டின. 57)

எனவரும் பாடலால் விவரிக்கிறார். எனவே, இத்தகைய இலக்கியங்களில் உவமை, பழமொழி எனப் பயன்படுத்தி மக்களின் உணர்வுகளைத் தூண்டியுள்ளனர். இலக்கியக் கூறுகளின் வழி தங்களது சிந்தனைகளுக்கு அமைப்பு முறையாலும், பொருள் அடிப்படையிலும் வடிவம் கொடுத்து சிறந்த வாழ்வியலைப் படைத்து மொழியை வளப்படுத்தியுள்ளனர் என்பதை மேற்கண்ட கருத்துகளால் அறியமுடிகிறது.

# அடிக்குறிப்புகள்

1. Accomlished, affected, comleted, obtained, acquried, succeeded. "A Semi - divine suposed to be of great purity and holiness and particularly characterized by eight supermatural faculties called siddhis- vidyadhar Vaman Bhlde, A cincise sanskrit - English Dictionary. P. 1132.

2. Tamil Lexicin, vol. III, Part I, Madras University, P. 1412.

3. திருமூலர், திருமந்திரம், பா. 1234.

4. கடுவெளிச்சித்தர், பா. 18.

5. வெள்ளி வீதியார், குறுந்தொகை, பா. 130.

6. இரா. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், ப.10

7. தொல். களவியல். நூற்பா. 14.

8. நச்சினார்க்கினியர் (உரை), தொல். புறத்திணையியல், பக். 214 - 217.

9. அடியார்க்கு நல்லார் (உரை), சிலம்பு. நாடுகாண் காதை, 10: 177 - 183.

10. மணிமேகலை. 16: 15.

11. மேலது. 21: 166.

12. மேலது. 26: 61.

13. ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உரை), மணிமேகலை. 26:61:394.

14. பரிமேலழகர் (உரை), திருக்குறள், ப. 9.

15. இரா. மாணிக்கவாசகம், திருமந்திர ஆராய்ச்சி, ப. 35.

16. Spurgeon. P.E. Mysticism in English Literature, P. 2.

17. A.C. Bonquet, comparative Religions, P. 288.

18. Rudolfe otto, Mysticism East and West, P. 13.

19. திருநாவுக்கரசர் தேவாரம், பா. 16, 34, 128, 407, 857.

20. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 15.

21. மேலது.

22. சட்டைமுனி, முன்ஞானம் தூது, பா. 77.

23. காகபுசுண்டர், ஞானம், பா. 56.

24. திருமூலர், திருமந்திரம், மூன்றாம் தந்திரம். பா. 629.

25. இராமதேவர், பூஜா விதி, பா. 4
26. இராமலிங்கர், திருவருட்பா (உரை), ப. 304
27. திருவள்ளுவர், ஞானம், பா. 14.
28. திருமூலர், திருமந்திரம், பா. 2485, 2486.
29. சட்டைமுனி, முன்ஞானம் நூறு, பா. 56.
30. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 17
31. அகத்தியர் ஞானம், பா. 7, 53.
32. கருவூரார் பூஜா விதி, பா. 18.
33. கொங்கணர் வாலைக்கும்மி, பா. 73.
34. காகபுகண்டர், உபநிடதம், காப்புச்செய்யுள்.
35. இராமதேவர், பூஜா விதி, பா. 3
36. வால்மீகர், சூத்திரஞானம், பக். 2-3.
37. மு. வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 190.
38. தெ.பொ. மீ. மீனாட்சிசுந்தரனார், கலைக்களஞ்சியம், ப. 643.
39. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு (14 - ஆம் நூற்றாண்டு), ப. 339 - 343.
40. திரு. வி. கலியாணசுந்தரனார், தமிழ்ச்சோலை அல்லது கட்டுரைத்திரட்டு, பக். 317 - 323.
41. க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், சித்தர் தத்துவம், ப. 184 - 185.
42. இரா. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், பக். 24 - 32.
43. மீ. ப. சோமு, தினமணி கதிர், தினமணி இணைப்பு, மகளிர் சிறப்பிதழ், 15. 4. 1984, ப. 32.
44. க. மாடசாமி, பாம்பாட்டிச் சித்தர், ப. 1.
45. சாமி. சிதம்பரனார், சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம், ப. 19.
46. சோ. ந. கந்தசாமி, தமிழும் தத்துவமும், பக். 64 - 65.
47. சி. கோ. தெய்வநாயகம், சித்தர் சிந்தனைகள், ப. 1.
48. V. Kamil Zvelebil, The Poets of Powers, P. 128.
49. க.த. திருநாவுக்கரசு, சித்தர்நெறி, சித்தாந்தம், ப. 78.
50. ஆ. பரமசிவம், சித்தர்களும் செய்திகளும், தமிழ்ச் சித்தர் தத்துவக் கருத்தரங்கு, தாராபுரம், 1984, ப. 2.

51. பரஞ்சோதி முனிவர், எல்லாம் வல்ல திருவிளையாடற்புராணம், சித்தரான படலம், பா. 3 - 6.

52. கருவூரார் பூஜா விதி, பா. 16.

53. வால்மீகர், சூத்திரஞானம், பக். 2 - 3.

54. பட்டினத்தார், பொது, பா. 35.

55. பத்திரகிரியார், மெய்ஞ்ஞானப் புலம்பல், பா. 7 - 8.

56. சிவவாக்கியர் பாடல்கள், பக். 513 - 520.

57. மேலது, பா. 507.

58. பாரதியார் பாரதியார் கவிதைகள், பா. 25.

59. பட்டினத்தார், திருக்குற்றாலம், பா. 29.

60. பட்டினத்தார், திருவிடைமருதூர், பா. 1.

61. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 25.

62. க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம் (சித்தர் தத்துவம்), ப. 184 - 185.

63. க. மாடசாமி, பாம்பாட்டிச் சித்தர், ப. 1.

64. க.த.திருநாவுக்கரசு, சித்தர் நெறி (சித்தாந்தம்), ப. 78.

65. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 26.

66. பாம்பாட்டிச் சித்தர், சித்தர் பாடல்கள், பா. 25 - 34.

67. அகத்தியர், காப்புச் செய்யுள்.

68. இராமதேவர், இராமதேவர் என்ற யாகோபு வைத்திய வாத சூத்திரம் 400, காப்புப் பாடல்.

69. காகபுகண்டர், குறள். 6.

70. கருவூரார், பூஜாவிதி, பா. 23.

71. வால்மீகர், சூத்திரஞானம், பா. 11.

72. சேக்கிழார், திருத்தொண்டர் புராணம், திருமூல நாயனார் புராணம்.

73. பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற்புராணம், திருவாலவாய்க் காண்டம், இடைக்காடர் பிணக்குத் தீர்த்த படலம்.

74. பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற்புராணம், கூடற்புராணம், 1 - 2.

75. கருவூரார், கருவூரார் பல திரட்டு, பா. 10.

76. சித்த மருத்துவம், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், ப. 27.

77. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதானசிந்தாமணி, பக். 637 - 638

78. தமிழ்ப் பேரகராதி, தொகுதி - 4, பாகம் - 1, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, பக். 24 - 76.

79. N. Kandhasamy Pillai, History of Siddha Medicine, P.345 - 346

80. T. N. Sambasivam Pillai, Tamil English Dictionary of Medicine, Chemistry. Botany and Allied Science, Vol.III, P. 90

81. முத்துக்கருப்பப்பிள்ளை, சித்த மருத்துவப் பாடபேதம், முதல் பாடம், இரண்டாம் பாடம், மதுரைத் தமிழ்ச் சங்கம்.

82. இரா. மாணிக்கவாசகம், நம் நாட்டுச் சித்தர்கள், ப. 98.

83. இரா. மாணிக்கவாசகம், சித்தர்கள் சொன்னவை, ப. 33.

84. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 31.

85. யோகி. இராமையா (பதி), பாபாசி போகர் கண்ட யோகம் (கிரியா), மூன்றாம் நூல், ப. 21.

86. சி.இ.மறைமலை, இலக்கியக் கொள்கைகள், ப. 35.

87. எழில். முதல்வன், புனை கதைவளம், ப. 9.

88. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 66.

89. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 190.

90. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 67.

91. க. சண்முகசுந்தரம், தமிழ் நாட்டுப்புறப் பாடல்கள், ப. 36.

92. சித்தர் பாடல்கள், அழுகுணிச்சித்தர், பா. 4.

93. மேலது. பா. 9

94. கொங்கணர், வாலைக்கும்மி, பா. 109.

95. மே.கு.ரா.சேலம் மாவட்டக் கும்மி பாடல்கள், ப. 179.

96. ச. வே. சுப்பிரமணியம், தமிழில் விடுகதைகள், ப. 42.

97. சிவவாக்கியர், பா. 164.

98. மேலது. பா. 165.

99. இரா. மாணிக்கவாசகம், சித்தர் பரிபாஷை அகராதி, ப. 19.

100. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 70.

101. இரா. மாணிக்கவாசகம், திருமந்திர ஆராய்ச்சி, ப. 171.

102. மேலது.

103. அழுகணி, பா. 29, 30.

104. குதம்பை, பா. 29, 32.

105. அகப்பேய், பா. 30.

106. கொங்கணர், வாலைக்கும்மி, பா. 30, 40, 52, 53, 60, 62.

107. மேலது, பா. 30, 36, 53, 57.

108. மேலது, பா. 30.

109. மேலது.

110. கொங்கணர், வாலைக்கும்மி, பா. 45.

111. மேலது, பா. 48.

112. கொங்கணர், வாலைக்கும்மி, பா. 97, 98.

113. சிவவாக்கியர், பா. 181.

114. மா. வடிவேலு முதலியார் (உரை), சிவவாக்கியர் பாடல் 500, ப. 148,

115. மதுரை வாலைசாமி, கானக்கும்மி, பா. 119.

116. சூரியானந்தர், சூத்திரம், பா. 2.

117. மதுரை வாலைசாமி, கானக்கும்மி, பா. 124.

118. இடைக்காட்டுச் சித்தர், பா. 86.

119. அகப்பேய், பா. 152.

120. மேலது.

121. இரா.மாணிக்கவாசகம், சித்தர்கள் கண்ட சிறுநீர் மருத்துவம், பக். 158 - 159.

122. சிவவாக்கியர், பா.401.

123. பட்டினத்தார், நெஞ்சோடு புலம்பல், பா. 23.

124. சிவவாக்கியர், பா. 70.

125. அகப்பேய், பா. 222.

126. இரா. மாணிக்கவாசகம், நம் நாட்டுச் சித்தர்கள், ப. 63.

127. கொங்கணர், வாலைக்கும்மி, பா. 101.

128. வில்லிப்புத்தூரார், பாரதம், ஆரணிய பருவம், பழம் பொருந்து சருக்கம், பா. 15 - 22.

129. சிவவாக்கியர், பா. 114.

130. பட்டினத்தார், திருக்காளத்தி, பா. 3.

131. திருக்குறள். 338.

132. பட்டினத்தார், கோயிற்றிருவகவல், 20.

133. திருக்குறள். 452.

134. குறுந்தொகை. 40.

135. பட்டினத்தார், திருவேகம்பமாலை, பா. 20.

136. திருக்குறள், 126.

137. பத்திரகிரியார், மெய்ஞ்ஞானப் புலம்பல், பா. 20.

138. குறுந்தொகை. 57

139. நாலடியார், 135.

140. பொன். சவுரிராசன், யாப்பும் பொருளும், பா. 20.

141. மேலது, பா. 39 - 40

142. யாப்பருங்கலக்காரிகை, பா. 125.

143. பொன். சவுரிராசன், யாப்பும் பொருளும், பா. 60.

144. புலவர் குழந்தை, தொடையதிகாரம், ப. 257.

145. மேலது. ப. 81.

146. தொல். பொருள். நூற்பா. 272.

147. மேலது. நூற்பா. 12 - 16.

148. இரா. சீனிவாசன், சங்க இலக்கியத்தில் உவமைகள், ப. 74.

149. இ.சுந்தரமூர்த்தி, திருக்குறள் அணிநலம், ப. 48.

150. பேராசிரியர் (உரை), தொல். உவமையியல், ப. 72.

151. ``It should not be overlooked that metaphor and simile the two may be considered together - have a variety of function in speech'' - I.A. Richards, Principles of Literary Citicism, P. 239.

152. அ. ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப. 147.

153. மெய்கண்ட நாயனார், சிவஞானபோதம், உதாரணச் செய்யுள்.

154. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 98.

155. மேலது.

156. வால்மீகர், சூத்திரஞானம், பா. 4.

157. காகபுசுண்டர், உபநிடதம், பா. 15.

158. திருக்குறள். 12.

## இயல் - 2

# உடல் நலமும் யோகநெறியும்

முன்னோர்களால் போற்றிப் பரவப்பட்ட 'கடவுள்' பற்றிய நம்பிக்கை இன்றைய நிலையில் பலரிடத்திலும் காண்பது அரிதாகவுள்ளது. மக்களிடத்தில் கடவுள் நம்பிக்கை அற்றும் விட்டது. இந்நிலையில் சித்தர்கள் மந்திரம், மருத்துவம், இரசவாதம், யோகம், ஞானம் எனப் பலவழிகளில் ஆய்ந்து உலகிற்குப் பயன்படும்படி ஆராய்ந்து விளக்கியுள்ளனர். இவர்கள் இறப்பை வென்றவர்களாகவும், அச்சத்தை அறியாதவர்களாகவும், ஆன்மாவை உடலிலிருந்து பிரித்தும், உடலை ஆன்மாவிலிருந்து பிரித்து ஆற்றலெனக் கூடுவிட்டுக் கூடு பாயும் முறையில் ஆற்றல் பெற்றவர்களாகவும் விளங்கினர். அவ்வகையில் கடவுட்கொள்கை, துறவுநெறி, யோகநெறி, பக்தியோகம், இராசயோகம், ஞானயோகம் போன்ற யோகநிலைகளை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### துறவுநெறி

இவ்வுடல், உயிர், இவ்வுலகம், பொருள்கள் முதலான பலவற்றின் மீதும் உள்ள விருப்பங்களைத் துறந்து செல்லுகின்ற நெறியே துறவுநெறி என்று வழங்குவர். இதனைத் திருவள்ளுவர்,

> **"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
> **இறந்தாரை எண்ணிக் கொண்டற்று".**[1]

எனத் துறவுநிலையை விவரிக்கின்றார். இதனைத் தொல்காப்பியர் குறிப்பிடுகையில்,

> **"காமம் சான்ற கடைக்கோட் காலை**
> **ஏமம் சான்ற மக்களொடு துலன்றி**
> **அறம் புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
> **சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே".**[2]

என்ற நூற்பாவில் இல்லறத்தைச் சிறப்புடன் முடித்துத் துறவினை மேற்கொள்ளும் வழியினைக் காட்டுவர். எனவே, 'துறவு' என்பது இல்லறத்திற்குப் பிறகே என்பது வெளிப்படையாகிறது. இவ்வழியினைப்

பின்பற்றியே வள்ளுவரும் இல்லறத்திற்குப் பின்னரே துறவறவியலை அமைத்துள்ளார். வள்ளுவர், துறந்தவர்களின் பெருமையினை, ''நூல்களின் துணிவே பற்றறற்றவர்களின் பெருமையினைப் பேசுவது மறக்க இயலாத ஒன்றாகும். அளக்க முற்படுவதோ உலகில் இதுவரை பிறந்து இறந்தவர்களை எண்ணிக் கணக்கிடுவது போன்றதாகும். இவர்கள் இம்மை, மறுமை எனும் இரண்டிலும் அறநெறிகளை மேற்கொண்டனர். 'அறிவு' என்னும் அங்குசத்தால் ஐம்பொறிகளாகிய யானைகளை அடக்கிக் காக்க வல்லவர்கள். மேலான வீட்டு உலகிற்கு வித்துப் போன்றவர்கள். ஆசைகளை ஒழித்த இவர்களது வலிமைக்கு இந்திரனே போதிய சான்றாவான். பிறரால் செய்வதற்கு அரிய செயல்களைச் செய்யும் வல்லமை படைத்தவர்கள் இவர்கள் உரைக்கும் சொற்களே இவ்வுலகிற்கு மந்திரங்களாகும் பயன்பாட்டினைத் தருவதாகும்.

'குணம்' என்னும் குன்றேறி நின்றவர்கள் இவர்கள். எனவே, இவர்களது சினத்தைக் காத்தல் என்பது இயலாது. இவர்கள் எல்லா உயிர்களிடத்தும் செம்மையான அருளை மேற்கொண்டு ஒழுகும் பண்பினர். எனவே, 'அந்தணர்' என்று கூறப் பெறுவர் எனப் பத்து நூற்பாக்களில் எடுத்து இயம்பியுள்ளார்.

**துறவறவியல்**

தவநெறியில் ஒழுகுகின்றவர்களாக அருள் உடையவர்களாக வாய்மை மொழி புகன்றவர்களாக இருப்பதுடன் 'அவா' அறுத்தவர்களாகத் துறவியர் இருத்தல் வேண்டும். புலாலையும், கூடா ஒழுக்கத்தினையும், வெருளுதலையும் நீக்கி, கள்ளாமையினையும், இன்னா செய்யாமையினையும், கொல்லாமையினையும் மேற்கொண்டவராக வாழ்தல் வேண்டும். உண்மைத் தன்மையினை அறிந்தவர்களாக இருத்தல் வேண்டும். இதற்கு இலக்கணம் வகுத்த குணங்குடி மஸ்தான் பாடலில்,

**''நினைப்பும் விளிப்பும் நீத்தலுந் தனிப்பும்**
**அனைத்தினு மடைத்திட் டாய்ந்து நோக்கி**
**விரத மவுனம் விருப்பொடு வெறுப்பெனும்**
**இரத மமையா தெழுந்துவெட் டகமும்**
**பற்றிய தவநிலை பதித்த பெருநிலை**
**அற்றிய மேன்மைத் துறவா கையினால்**

**அத்துற வியல்பினை யாண்டகை யருள்கென**

**வெத்திறத் தினுங்குளை யிரந்திரந் துயர்ந்தது".[3]**

என்னும் பாடல் வழியாக அறியமுடிகிறது. துறவுநிலையை அடைய வேண்டி அவர், காமக்குரோதங்கள், ஆசைகள், பாசங்கள், அலைதல், மனமாயைகள் முதலானவை ஒழியவேண்டும். ஓரிருள் இருக்கவேண்டும். வாசியோகம் பயிலுதல் வேண்டும். பத்தி, சித்தி, முக்தி முதலான அனைத்தும் கைகூடவேண்டும். சருகு, இலை, காய்கனிகளையும் உண்டு காட்டில் வாழ்தல் வேண்டும். மெய்க்கனலை மூட்டும் வித்தை அறிதல் வேண்டும். அஞ்ஞான மூடத்தைத் துறக்கவும் மெய்ஞ்ஞான ஆனந்தத்தைப் பெறவும் அருள் செய்தல் வேண்டும். தங்கத்தையும் செங்கல் என்று எண்ணித் தள்ளுகின்ற தன்மையைத் தரவேண்டும் என்று தன் இறைவனாகிய முகைதீன் சல்லல்லாகு சலீமிடம் வேண்டுகிறார்.

ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் தன்மையுடையவர்களைப் பெரியபுராணத்தின் வாயிலாகவும் அறியமுடியும். உலகின் மெய்ப்பாட்டினை அறிந்து உண்மையாகத் துறக்கின்ற துறவியர் தங்களையும் நாட்டினையும் காக்கும் வன்மையராவர் என்பது இயல்பு. எந்தப் பொருளின் மீதும் பற்றற்று, விருப்பு வெறுப்பற்று, உறக்கமும் விழிப்புமற்று இருக்கின்ற அவர்கள் உண்மை ஞானம் கைவரப் பெற்றவர்கள். அதனால் அவர்கள் விரிந்த காட்சியுற்று உலக நடைமுறையினை எடுத்து இயம்புகின்றனர். மக்களுக்கு உண்மை எது? பொய் எது? என்று விளக்கிக் காட்டுவர்.

மக்கள் படும் துன்பங்களையும், துயரங்களையும் துடைத்தெறிவர். எல்லோரையும் ஒன்றுபோல் பாவிப்பதால் இவர்கள் எல்லோருக்கும் நன்மைகளையே செய்வர். இவர்கள் இருக்கின்ற இடத்தில் வானம் நன்கு பொழியும். பூமியும் நன்கு விளையும். மக்கள் அறவழியில் நடப்பர். எனவே, தங்கள் நலம் கருதாமல் காட்டிலே வசிப்பவராயினும் நாட்டு மக்களுக்கு நலம் பயப்பதால் இவர்கள் அனைவரையும் காக்கும் வன்மையர் என உறுதியாக உரைக்கமுடியும். சங்க இலக்கியங்களும் உண்மைத் துறவியரின் மேன்மையினை எடுத்தியம்புகின்றது.

சித்தர்களிடத்தில் அருட்தன்மை நிறைந்திருக்கும். இவர்கள் ஊன் உணவை உண்ணுவதில்லை. ஆதலால் அனைத்து உயிரினங்களும் இவர்களை வணங்குகின்றன. இவர்கள் தங்கள் உடலையோ, உயிரையோ பெரிதாக நினைப்பதில்லை. அதனால் 'இன்பத்தையும்' விரும்புவதில்லை. உறுதிப்பொருளை அடையும் குறிக்கோளை உடையவர்கள் என்பதால் அதனை அடையும் வழியிலேயே செல்வர். சினத்தை இவர்கள் கொள்வதில்லை. அதனால் தங்களுக்கு வந்தத் துன்பத்தைப் பொறுப்புடன் ஏற்று மற்ற உயிர்களுக்கும் துன்பம் செய்வதில்லை. உடலிலும், உள்ளத்திலும் தூயராக விளங்குவதால் இவர்கள் இருக்கும் இடத்தில் பகைமை இருப்பதில்லை. தீமை செய்யும் பகைவரை அடக்குவதும் நன்மை செய்பவர்களை உயர்ந்த செல்வம் உடையவராகச் செய்வதும் இவர்களால் முடியும். இவர்கள் இத்தகைய சக்தியினை அடைவதற்குக் காரணம் இவர்கள் தங்ககளது பொறிபுலன்களை அடக்கி இருப்பதேயாகும். இக்கருத்திற்கு அரண்செய்யும் விதமாக, "ஆத்ம சக்தியைப் பலவாறாகச் சிதறச் செய்யும் எல்லா இந்திரியங்களையும் அடைத்து விட்டால் அப்போது சகல சக்திகளும் ஓரே இடத்தில் அமைதியாக ஆனந்தமாகக் கூடி நின்று, மிகுந்த சக்தியுடன் உலகுக்கு நல்லது செய்யும்.

ஆத்ம ஞானம் பெற்ற முனிவர்களின் சக்தியே இதற்கும் திருஷ்டாந்தம். எல்லா உலகங்களுக்கும், எல்லா காலங்களிலும் சென்று அவர்கள் செய்திகளைத் தெரிந்து கொள்ளும் ஆற்றல் பெற்றவர்கள். நம் காதுக்குக் கேட்கின்ற ஒலிகளை ஆகாயத்தில் கேட்டு வேத மந்திரங்களைக் கொடுத்தவர்கள். "எப்படி ஆசையை அடக்குவது? எப்படி மனத்தை நிறுத்துவது? எப்படி நிலைத்த ஆனந்தத்தை அடைவது? என்று கேட்கின்றவர்கள் அந்த வேதங்கள் சொன்னபடி நடந்தாலே போதும், முடிவில் பேரானந்தம் அடையலாம். இதற்குப் பரமே வரன் அனுக்கிரகம் செய்வானாக".[4] என்று சங்கராசாரிய சுவாமிகள் கூறுவதை இளமதி சானகிராமன் தன் நூலில் சுட்டிக் காட்டுகிறார்.

**சிவானந்தர் கருத்து**

காம்யாணாம், கர்மணாம், நயாசம், சன்யாசம் என ஆசை வயப்பட்டுச் செய்யப்படும் கர்மங்கள் விடுவதுதான் சன்யாசம் அல்லது துறவுநிலை

என்கிறார். சந்நியாசம் என்றால் கர்மத்தை முற்றும் துறந்த நிலையன்று. ஐம்புலன்களையும், வாழ்வையும் இறைவழி பாட்டிற்கென்று ஆசையை மடைமாற்றி, திசை திருப்பி வாழ்தலே சந்நியாசம் என்பர். இக்கருத்தினை இடைக்காடர்,

**“இல்லறமே அல்லலாம் என்று ஆடுமயிலே**
**இல்லவர்க்கு முத்தி சித்தி இல்லை மயிலே!**
**நல்லறமே துறவறங் காணு மயிலே - சுத்த**
**நாதாந்த வெட்டவெளி நாடு மயிலே”.**[5]

என்னும் பாடலின் வழி எத்தகைய எதிர்பார்ப்புகளுமின்றி மக்களுக்கு நன்மைகளைப் புரிகின்ற துறவற நெறியே நல்லறமாகும் எனத் தெளிவிக்கின்றார்.

பட்டினத்தார் இந்நெறியை விளக்குகையில், “கானல் நீரை உண்மை நீர் என்று எண்ணிச் சொல்வதைப்போல இவ்வுலக வாழ்வினையும் உண்மை வாழ்வே என்று எண்ணி உலகத்தில் மூடர்கள் களிப்பர். உண்மைநிலையினை அறிந்தவர்கள் வீணாக வம்பு பேசுவதைச் செய்யமாட்டார்கள். மெய் இன்பத்தையே நாடுவார்கள்”.[6] என்னும் கருத்தின் மூலம் விவரிக்கின்றார். பற்றுகளைத் துறக்கும் நெறியே பெருநெறி எனும் கருத்தினைப் பாம்பாட்டி சித்தர் குறிப்பிடுகையில்,

**“மணக்கோலம் கொண்டு மிக மனமகிழ்ந்துமே**
**மக்கள் மனை சுற்றத்தோடு மயங்கி நின்றாய்**
**பிணக்கோலம் கண்டு பின்னும் துறவா விட்டால்**
**பிறப்புக்கே துணையாம் என்று ஆடுபாம்பே”.**[7]

எனும் பாடலில் மணக்கோலம் கொண்டு மிகுதியும் மனம் மனமகிழ்ந்து மக்கள், இல்லம், சுற்றம் எனக்கூடி வாழ்ந்தவர்கள் பின்னர் பிணக்கோலம் கொண்டு போவதைக் கண்ட பின்னரும் துறவினை ஏற்காவிட்டால் பிறவிக்கே வித்திடும் என விளக்குகிறார். பகவத்கீதையின் கருத்தில், “புறப்பொருள்களில் மனம் பற்றாதவன் ஆத்மாவில் இன்பம் எய்துகின்றான். பிரம்ம சமாதியில் மனத்தையுடைய அம்மனிதன் அழியாத சுகத்தையடைகிறான்”.[8] இதற்கு

விளக்கமாக ஸ்ரீஇராமகிருஷ்ணர் கூறுகையில், புறத்தில் பொறிகள் வாயிலாக வரும் போக சுகங்கள் நிறையற்றவை. அவை சிற்றின்பம் எனப்படுகின்றன. சுகத்தில் சுத்தியடைந்த அந்தக்கரணம் ஆத்மானந்தத்தை அனுபவிக்கிறது. அது தேயாமல் தெளிவடைவதால் அதற்குப் பேரின்பம் என்று பெயராகும் என்கிறார். அதாவது, பற்றுக்களைத் துறக்கும் பொழுதே 'பேரின்பம்' வாய்க்கப் பெறுகின்றது என்பதைத் தெளிவாக்குகின்றார்.

அவத்தை நிலைகளையும், இவ்வுலக மாயையையும் ஒழித்தவர்கள் என்பதால் உலகத்தவர்கள் போல் இருந்தாலும் அவர்களை எந்தப் பற்றுதலும் பற்றுவதில்லை. இதனைப் பட்டினத்தார்,

**"மாத்தான் அவத்தையும் மாயா புரியின் மயக்கத்தையும்**
**நீத்தார்தமக் கொரு நிட்டையுண்டோ? நித்தம் அன்பு கொண்டு**
**வேர்த்தால் குளித்து பசித்தால் புசித்து விழி துயின்று**
**பார்த்தால் உலகத்தவர் போல் இருப்பர்பற்று அற்றவரே".**[9]

சித்தர்கள் உலக வாழ்வில் மனிதர்கள் போல் தோன்றினாலும் பற்றற்று இருப்பர் என விளக்குகிறார். அவரே துறுவியர்களுக்கு எதனைக் குறித்தும் கவலையில்லை என்பதை,

**"உடை கோவனம் உண்டு**
**உறங்கப் புறந்திண்ணை யுண்டு உணவிங்கு**
**அடைவாய் இலை உண்டு,**
**அருந்தத் தண்ணீருண்டு அருந்துணைக்கே**
**விடையேறும் ஈசர் திருநாமம் உண்டு**
**இந்த மேதினியில்**
**வடகோடு உயர்ந்தென்ன தென்கோடு**
**சாய்ந்தென்ன வான்பிறைக்கே".**[10]

எனவும், அனைத்தையும் துறந்த பின்னர் இறைவன் தானே வந்து ஆட்கொள்வான் என்பதை,

**"விட்டேன் உலகம்; விரும்பேன்;**
**இருவினை; வீணருடன்**
**ஒட்டேன்; அவர் உரை கேட்டும் இரேன்;**

**மெய்கெடா நிலை**

**தொட்டேன்; சுகதுக்கம் அற்றுவிட்டேன்;**

**தொல்லை நான்மறைக்கும்**

**எட்டேன்; எனும்பரம் என்னிடத்தே**

**வந்து இங்கு எய்தியதே".**[11]

எனும் பாடலால் விளக்குகிறார். திருமூலர் இக்கருத்தினைக் குறிப்பிடுகையில்,

**"மேல் துறந் தண்ணல் விளங்கொளி கூற்றுவன்**

**நாள் துறந் தார்க்கவன் நண்ப வைரவிலி**

**கார் துறந் தார்க்கவன் கண்ணுத லாய்நிற்கும்**

**பார் துறந் தார்க்கே பதஞ்செய லாமே".**[12]

என எடுத்துரைக்கின்றார். துறவியர்க்குப் பூசைகள், நேமங்கள், நிட்டைகள் முதலான எவையும் கூடத் தேவையில்லை. பிச்சை எடுத்தே இவர்கள் உண்ணுவர். 'நமசிவாய' மந்திரத்தை வாயில் உச்சரித்துக் கொண்டு திருநீற்றினை உடல் முழுவதும் பூசிக் கொண்டும், கந்தை ஆடையினை உடுத்திக் கொண்டும் அலைவர். உணவிட்ட இடத்தில் உண்டு, புறத்திண்ணைகளில் படுத்துறங்கிப் பைத்தியங்களைப் போல் இவர்கள் திரிந்தாலும் இவர்களது எண்ணமெல்லாம் இறைவனையே நாடியிருக்கும். உலகத்தவர்கள் போல் இருந்தாலும் எதிலும் பற்றற்றவர்களாக இவர்கள் இருப்பர் என விளக்கியுள்ளார்.

எதிலும் பற்றற்று பரமனுக்கு நிகராக நிற்கும் இத்துறவு நிலையினைச் சில போலி மனிதர்கள் பயன்படுத்திக் கொண்டு மக்களை ஏமாற்றுகின்றனர். இக்கருத்தினை மெய்ப்பிக்கும் சிவவாக்கியர்,

**"காவியுஞ் சடைமுடி கமண்டங்க ளாசனம்**

**தாவுருத்தி ராட்சம் யோகத் தண்டு கொண்ட மாடுகள்**

**தேவியை யலைய விட்டுத் தேசமெங்கும் சுற்றியே**

**பாவியென்ன வீடிடலாம் பருக்கை கேட்டலைவரே".**[13]

என்றும்,

**"முத்திசேரச் சித்தியாங்க முன்னவிப்பேன் யாரெனச்**

**சத்தியங்கள் சொல்லியெங்குஞ்சாமி வேடம் பூண்டவர்**

**நித்தியம் வயிறு வளர்க்க நீதிஞானம் பேசியே**

**பத்தியாய்ப் பணம்பறித்துப் பாழ்நகரில் வீழ்வரே".**[14]

என்றும் பாடிப் போலித் துறவிகளைச் சாடுகின்றார். இத்தகைய பொய்யர்களினாலேயே உண்மைத் துறவியர் ஏளனப்படுத்தப்படுகின்றனர்.

காவியுடை, கமண்டலம், சடைமுடி, உருத்திராக்கம் என்னும் இத்தகைய அலங்காரங்களுடன் வளம்வரும் போலிகள் பெண்களை வசியப்படுத்துதல், கற்பழித்தல், இல்லங்களில் பொருட்களைத் திருடுதல், பொய்கூறுதல், மக்களின் அறிவை மயக்கிப் பொருளைப் பறித்தல் முதலான பல்வேறு தீய செயல்களில் ஈடுபட்டனர். செல்வந்தர்களாக்குவேன்; பிள்ளைவரம் தருவேன் என்றெல்லாம் கூறி ஏமாற்றினர். போலிகளது இத்தகைய கீழான இழி செயல்களால் இத்தகைய உடை உடுத்திக் கொண்டு வரும் எவரையும் உலகத்தவர் நம்புவதில்லை. உலகியல் நடப்பு நிலைகளைப் புரிந்து கொண்ட துறவியர் தங்களுக்கென்று தனியான உடைகளையோ அன்றி அணிகலன்களையோ கொள்வதில்லை. கந்தை ஆடையினை மட்டுமே உடுத்துகின்றனர். பசித்தால் பிச்சையெடுத்து உண்டனர். இப்படிப்பட்ட உண்மைத் துறவியரை நாம் அடையாளம் காணுதல் வேண்டும்.

பக்தி நிலையில் கூட 'இறைவன் மாட்டு' பற்றுதல் இருக்கும். யோக நிலையிலும் யோகச் செயல் முறைகளிலும் உடலை வன்மையாக்கும் முயற்சிகளிலும் எண்ணத்தைச் செலுத்த வேண்டிவரும். ஆனால் முழுமையான எந்த நினைவுமற்றத் துறவு நெறியோ மிகமிக உயர்ந்ததாக இவ்வுடலுடனேயே பரமாத்மாவுடன் இணைந்திருக்கச் செய்யும்.

உண்மைத் துறவியர் என்று பேசப்படுபவர் பொருள் இல்லாமையினால் துறந்தவர்கள் இல்லை. பொருள்களின் உண்மைத் தன்மை அறிந்து, அது மனத்தில் ஆழப் பதிந்ததாலும், அருள் இல்லாமல் போய்விடுமோ என்பதாலும் துறந்தவர்கள் எனக் கூறப்படுகிறது. பட்டினத்தாரும், பத்திரகிரியாரும் உண்மைத் துறவியர்க்கு முழுமையான எடுத்துக் காட்டானவர்கள் ஆவர். உண்மையான, நேர்மையான துறவுநெறியில் பக்தி, யோகம், ஞானம் முதலான அனைத்தும்

தாமே கைகூடும். பட்டினத்தார், பத்திரகிரியார், குணங்குடி மஸ்தான் சாகிபு, வள்ளலார் போன்றோரின் பாடல்கள் அனைத்தும் யோக ஞான முறைகளைத் தெரிவிக்கிறது என்பது வெளிப்படை.

துறவியரின் தூயநிலையை விளக்க இடைக்காடர்,

**"பற்றிரண்டும் அறப் பண்புற்றேன் நண்புற்றேன்**
**பாலையும் உட்கொண்டேன் வேலையாம் கண்கொண்டேன்**
**சிற்றின்பம் நீக்கினேன் மற்றின்பம் நோக்கினேன்**
**சிற்பரம் சேர்ந்திட்டேன் தற்பரம் சார்ந்திட்டேன்".**[15]

எனத் தூயநிலையைத் தூயோனோடு தூயோராய்ப் பேரின்பப் பெருவாழ்வை எய்தி நிற்பர் என உறுதியளிக்கின்றார்.

### யோகநெறி

இறைவனைச் சென்றடைய உதவும் நெறியில் யோகநெறியும் ஒன்றாகும். இந்நெறியில் செல்லத் துறவினை மேற்கொள்ள வேண்டும் என்ற கட்டாயமில்லை. இக்கருத்தை வலியுறுத்த பட்டினத்தார் பூரணமாலையில்,

**"சரியை கிரியா யோகம்தான் ஞானம் பெறாமல்**
**பரிதிகண்ட மதியதுபோல் பயனழிந்தேன் பூரணமே".**[16]

எனும் பாடலில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகளுள் 'யோகம்' மூன்றாவது இடத்தில் நிற்கிறது.

**சரியை:**

சரியை என்பது தள்ள வேண்டியதைத் தள்ளி, கொள்ள வேண்டியதைக் கொள்வதாகும். இறைவனுக்கு உடலால் வேண்டிய தொண்டுகள் புரிவதாகும். இத்தொண்டினைச் செய்தால் இறைவனது உலகத்தில் சென்று வாழலாம். இங்ஙனம் இறையுலகில் வாழ்வதையே 'சாலோகமடைதல்' என்பர்.

**கிரியை:**

கிரியை என்பது இறைவனை எண்ணி மலர் சாத்துதல், மந்திரங்கள் செபித்தல் போன்ற பூசை முறைகளில் ஈடுபடுவதாகும். இச்செயலைச்

செய்வதால் இறைவனுக்கு அருகாமையில் சென்று சேர்வர். இங்ஙனம் இறைவனுக்கு அருகாமையில் சென்று சேர்வதைச் 'சாமீபம்' என்று கூறுவர்.

**யோகம்:**

யோகம் என்பது மனம், மொழி, மெய்யினால் யோக சாதனங்களில் ஈடுபட்டு அட்டாங்கயோகம் பயின்று இறைவன் 'உருவை' அடைவதாகும். இங்ஙனம் இறைவனின் உருவை அடைவதைச் 'சாரூபம்' அடைதல் என்பர்.

**ஞானம்:**

ஞானம் என்பது அனைத்திலும் அறிவு நிரம்பியவராக விளங்குவதாகும். ஞானத்தால் இறைவனுடன் இரண்டறக் கலந்து நிற்பர். இங்ஙனம் இறையுடன் இரண்டறக் கலந்து நிற்பதையே 'சாயுச்சியம்' என்பர்.

இந்நான்கு நெறிகளும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையன. 'சரியை' நெறியில் நிற்கும் சாதாரண மக்கள் இறக்கும்பொழுது சாலோகத்தை அடைவர். கிரியை செய்வதற்காக மீண்டும் இவ்வுலகத்தை அடைந்து உடலெடுப்பர். கிரியை நெறியில் இருக்கும்பொழுது இறந்தவர் மீண்டு உடலெடுத்து 'யோகம்' புரிவர். யோக நிலையில் இறப்பவர் மீண்டும் உடலெடுத்து 'ஞானம்' புரிவர். ஞானத்தால் இறையாக விளங்குவர். இறப்பு, பிறப்பு என்பதெல்லாம் இந்நிலையில் அழிந்துவிடும். இப்பெருநிலையின் தொடர்ச்சியையே சிவவாக்கியர்,

**"தெளிந்தநற் சரியைதன்னில் சென்றுசா லோகம்பெறும்**
**தெளிந்தநற் கிரியைதன்னில் சேரலாஞ் சாமீபமே**
**தெளிந்தநற் யோகந்தன்னில் சேரலாருஞ் சாரூபந்**
**தெளிந்த ஞானம் நான்கினுள் சேரலாஞ் சாயுச்சியமே".**[17]

என்னும் பாடலில் தெளிவுப்படுத்துகிறார். இதனையே சட்டைமுனி,

**"தாங்கி நின்ற சரியையிலே நின்று சடம்வீழின்**
**தப்பாது கிரியையுள்ளே சாரப்பண்ணும்**
**வாங்கி நின்ற கிரியை விட்டு விழுந்ததனால்**
**மகத்தான உடலெடுத்து யோகம் பண்ணும்**

**ஓங்கி நின்ற யோகம் விட்டு விழுந்ததனால்**

**உத்தமனே! உயர்ந்து நின்ற ஞானந்தோற்றும்**

**பாங்கில் நின்ற அச்சென்மம் மவுனமுத்தி**

**பதிலாக வாய்ந்தவர்கள் அறிந்து கொள்ளே".**[18]

என விவரிக்கிறர்ர். ஆன்மா இறையோடு கலப்பதற்கு எடுத்துக்கொள்ளும் முயற்சியான யோகத்தை பலவாறு வரையறை செய்கிறார் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் குறிப்பிடுகையில், "யோகம் என்பது மனிதன் முதலில் தன்னுடைய உடலையும் உள்ளத்தையும் இறுதியில் இயற்கை முழுவதையும் தன்வயப்படுத்துவதற்கான வழியை வகுக்கும் விஞ்ஞானம் ஆகும். ஆன்ம விடுதலை பெறும்வழி மட்டுமேயாகும்".[19] என அவரின் கூற்றை எடுத்துக்காட்டுகிறார் இளமதி சானகிராமன்.

அலைகின்ற மனத்தின் அகப்புறக் கருவி கரணங்களினின்றும் வேறுபடுத்தி அலையாது நிறுத்தி, இம்மை மறுமையினின்றும் நீக்கி இவ்வுடலோடு இறையுடன் ஒன்றுவிப்பது யோகப் பயனாகும். யோகிகள் இவ்வுடலையே 'யோக மூலம்' என்று கூறுவர். இக்கருத்தைச் சட்டைமுனி பாடலில்,

**"நகார முதல் யகாரம் நிற்கும்**

**அவ்வளவும் யோகத்தின் மூலமாச்சு".**[20]

என ஞானம் நூறு பகுதியில் குறிப்பிடுகிறார். அதாவது, 'நமசிவாய' என்ற மந்திரத்தை உள்ளடக்கிக் குறிப்பிடுவதை அறியமுடிகிறது. இம்மந்திரம் தான் உடலாகி நிற்கின்றது என்பதைச் சிவவாக்கியர்,

**"நவ்விரண்டு காலதாய் நவின்றமவ் வயிறதாய்**

**சிவ்விரண்டு தோளதாய் சிறந்தவவ்வு வாயதாய்**

**பவ்விரண்டு கண்ணதா யமர்ந்துநின்ற நேர்மையிற்**

**செவ்வையொத்து நின்றதே சிவாயமஞ் செழுத்துமே".**[21]

என்ற பாடலில் ந - இரண்டு கால், ம - வயிறு, சி - தோள், வ - வாய், ய - இரண்டு கண் என்ற இந்த நேர்மையில் 'சிவாயம்' அல்லது 'உடல்' நிற்கின்றது என்ற குறிப்பினைப் பெறமுடியும்.

மனித உடலே யோகம் செய்வதற்குச் சிறந்த முறையாகும். மனித உடல் இல்லாமல் போனால் யோகம் செய்ய இயலாது. யோகச் செயல்கள் இல்லாமல் போனால் ஞானத்தை அடைதல் இயலாது. ஞானத்தை அடையாமல் போனால் ஞான வடிவான இறைவனை அனுபவிக்க முடியாது. இறைவடிவாகிய ஞானத்தினை அனுபவிக்கவே மனிதப் பிறவிகள் தோன்றியுள்ளன. சரீரம் எடுத்ததே சமாதிக்காகவே என்று சித்தர்கள் கூறுகின்றனர். அடுத்த பிறவியும் மனிதப் பிறவியாகவே அமையும் என்பது நிலையில்லை. அதனால் இப்பிறவிலேயே யோகச் செயல்களினால் மேன்மையடைய வேண்டும் என்பதே சித்தர்களின் விருப்பமாகும்.

துறவியரை விடச் சித்தர்களே யோகச் செயல்முறைகளுக்கு முதன்மை அளிக்கின்றனர். இவர்கள் யோகத்தின் வழிப்பெறும் அனுபவங்களில் இன்பம் காணுகின்றனர். அந்த இன்பத்தை அனுபவிக்க மேலும் மேலும் யோகச் செயல்முறைகளுக்கு உதவுகின்ற இவ்வுடலைப் பெரிதாகப் போற்றுகின்றனர். இந்த உடம்பு இல்லாமல் போனால் பிறகு ஒன்றுமேயில்லை. எனவே, உடம்பு அழியுமுன்பே இறையைக் கண்டு உணர்தல் வேண்டும். உடம்பிலுள்ள மதியமுதப் பாலினை உண்டு இறவாப் பெருநிலை அடைதல் வேண்டும் என்பதை,

**"உடம்பழிந்த பின்மனமே ஒன்றுங்கிடையா**
**துடம்பழியு முன்கண் டுணரா - துடம்பிற்**
**கருநிறத்தைச் சேர்த்துக் கருமலை சிற்றற்றுப்**
**பருகுகலை மதியப் பால்".**[22]

என ஞானம் எனும் நூலில் பட்டினத்தாரும், பத்திரகிரியாரும் குறிப்பிடுகையில்,

**"உப்பிட்ட பாண்டம் உடைந்து கருக்கொள்ளு முன்னே**
**அப்பிட்ட வேணியனுக் காட்படுவ தெக் காலம்".**[23]

என மெய்பாட்டிலும் விவரிக்கிறார். திருவள்ளுவர் ஞானம் எனும் நூலில்,

**"தேக மொழியால் சித்திபெறு ஞானம்**
**யோகசித்தி பூசை விதி யுண்".**[24]

எனப் பாடலில் குறிப்பிடுவதன் மூலம் இவ்வுடலை விட்டு உயிர் பிரிந்துவிட்டால் பின்னர் முத்தி என்பது கிடையாது. பிரிந்த உயிர் வினைக்குத் தக்க

உடலினை எடுக்கும். உயிரை இவ்வுடலுடன் ஒன்றாக்கி இறையுடன் கலக்கவேண்டும். உயிர் இந்த உடலுடன் இரண்டறக் கலக்க வேண்டுமெனில் அதற்குத் தகுந்த வழிகளில் நடக்க வேண்டும். மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் யோகம் பயிலுதல் வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றனர்.

'முன்னேறுவதற்காகத் தான் நீ உடலை எடுக்கிறாய்' உடலை விட்டதும் முன்னேறும் காலம் முடிந்து விடுகிறது. உண்மையான முன்னேற்றம் யோகநெறியின் மூலமே முடியும். அதாவது அதுதான் மிக அதிகளவு உணர்வு உள்ளதும் துரிதமுமான முன்னேற்றம், யோக சாதனை செய்யாவிடின் நமது முன்னேற்றம் இயற்கையின் கதியிலேயே போய்க் கொண்டிருக்கும். சாதாரணமாக நீண்ட நெடுங்காலம் ஆகும் ஒன்றை யோகத்தில் மிகக் குறுகிய காலத்தில் செய்துவிடமுடியும். இந்த உடலுடன் இருக்கும் போதுதான் முன்னேற்றம் எய்தமுடியும். அதனால் நாம் உடலில் இருக்கும்போதே அந்த நல்வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். மேற்கண்ட கருத்தை இடைக்காடர் குறிப்பிடுகையில்,

**"தேகம் இழப்பதற்குத் தவம் செய்தென்? செபம் செய்தென்?**

**யோகம் மட்டும் செய்தால் என்? யோசிப்பாய் கள் மனமே?".**[25]

எனும் பாடலில் தவம், செபம் முதலியன செய்தும் இறந்து தானே போவர். எந்த நம்பிக்கையின் அடிப்படையில் யோகத்தின் மீது நம்பிக்கை வைப்பது என்பது, கேட்பது போல் இருப்பதாகக் குறிப்பிடுகிறார்.

தேகத்தில் ஞானத்தை உண்மையைக் காணவேண்டும். அதனைப் பொய் என்று கூறக்கூடாது. 'உண்மை மெய்' என்பதை அறிந்தால் அதன்வழி ஆக்கி வீடுபேறு அடையமுடியும். இந்த உடலிலேயே மெய்யினைக் கண்டு கொள்ளவேண்டும். கற்கின்ற கல்வியெல்லாம் வெளித் தோற்றத்திற்குப் பயனளிக்கும் இல்லையெனில் உயிரை உடம்புடன் பிணிப்பதற்கு வழிவகுக்காது இது ஊனக்கல்வி, ஊண் கல்வி. பேரின்பத்தை அடைவிக்கும் யோகக் கல்வியே ஞானக்கல்வி. இதனால் இறவாப் பெருநிலையாம் பேரின்பப் பெருவாழ்க்கை அடைய வைக்கும் யோக முறைகளைப் பின்பற்றவே யோகியர் விரும்பினர் என்பதையும் அறியமுடிகிறது.

## யோகத்தின் வகைகள்

சுமார் 25 யோகங்கள் பண்டுதொட்டு நிலவுகின்றன. அதில் பகவத்கீதையில் இடம்பெறும் 18 யோகங்களைக் குறித்துக் காண்போம். அவை.

**1. மந்திரயோகம்**

மந்திரம் என்றால் எண்ணத்தின் கருவி. மந்திர செபம் உள்ளடக்கமானது. சத்தம் மற்றும் ஒலியினால் ஆனது.

**2. லகிதயோகம்**

மந்திரங்களை எழுதிப் படிப்பது.

**3. சபயோகம்**

மந்திரங்கள் மீண்டும் மீண்டும் உச்சரிப்பது.

**4. அஜபாயோகம்**

அஜபா என்பது சுவாசத்தின் ஒலியாகும். தன்னுணர்வின்றி மீண்டும் மீண்டும் உச்சாடனம் செய்வது. ஒவ்வொரு உயிரும் தன்னுணர்வின்றிச் சுலோகம் என்ற மந்திரத்தைச் சுவாசிப்பதாகும்.

**5. தந்திர யோகம்**

சக்தியை வசப்படுத்த ஆளும் திறன்

**6. ஹதயோகம்**

ஹ - சூரியன், ட - சந்திரன்; சக்தி மற்றும் உறுதி என்று பொருள்.

**7. இராசயோகம்**

அட்டாங்கயோகம் பதஞ்சலி முன் விளக்கப்பட்ட யோகாவின் எட்டுக்கட்டங்கள், மனத்தை முறையாகக் கட்டுப்படுத்தல்.

**8. ஞான யோகம்**

தத்துவ விசாரணை, ஆன்மிக அறிவு.

**9. பக்தியோகம்**

இறைவனைப் பணிந்து உணர்வுகளையெல்லாம் அவனுக்கே அர்ப்பணித்துச் சேவை புரிதல், அன்பு மற்றும் பக்தியினால் வருவது.

**10. எந்திர யோகம்**

வடிவம் மற்றும் உருவம், லயம் மற்றும் தெய்வீக அண்டசக்தி.

**11. சப்தாங்க யோகம்**

சத்கிரியைகள், ஆசனங்கள், முத்திரைகள், பிரத்தியாகாரம், பிராணாயாமம், தியானம், சமாதி ஆகியன.

**12. பூரண யோகம்**

ஸ்ரீ அரவிந்தர் அருளியது.

**13. பாசுபத யோகம்**

புராணங்களில் கூறப்பட்ட பதி, பசு, பாசம்.

**14. பஞ்சதாங்கா யோகம்**

பதினைந்து அம்சங்களைக் கொண்டது.

**15. மகாயோகம்**

ஹதயோகம், இராசயோகம், லயயோகம், மந்திரயோகங்களை இணைத்துப் பழகுவது.

**16. சபரிசயோகம்**

சிவபுராணத்தில் கூறப்பட்ட மந்திர உச்சரிப்புடன் கூடிய சுவாச ஒழுங்குப்படுத்துதல்.

**17. சித்த யோகம்**

சித்தர்களால் தோற்றுவிக்கப்பட்டு தந்திரங்களால் விளக்கப்பட்டது.

**18. சதனங்கயோகம்**

ஆறு அங்கங்களைக் கொண்டது.

1. சுவாசத்தை ஒழுங்குப்படுத்துதல்
2. புலன்களால் உணர்த்தப்படுகிறது.
3. தியானம்.
4. ஆராய்தல்.
5. பெருமகிழ்ச்சி. அவற்றில் ஒன்று அடயோகம் அல்லது ஹடயோகம் எனப்படும். இவ்யோகம் இன்றைய நிலையில் பெரியளவில் கற்றுக் கொடுக்கப்படுகிறது. உடலினை வலிமைப்படுத்துவது என்ற முறையில் பயிற்சி அளிக்கப்படுகிறது. இந்த யோகத்தை, இன்று இராசயோகம், தியானம் முதலியவற்றுடன் தொடர்புபடுத்திக் கற்பிக்கின்றனர். அடயோகம் என்பது உடலினை நிலைத்திருக்க வைப்பதாகும். காகபுசுண்டர் தம் ஞானத்தில்,

**“பாரப்பா நாக்கையுந்தான் அண்ணாகக் கேத்திப்**
**பாரினிலே பார்த்தவர்க்குப் பலிதமில்லை**
**ஆரப்பா கண்வெடிக்கும் தேகம் போகும்**
**ஹடயோகம் என்பார்கள் ஆகாதப்பா?”.**[26]

என அடயோகத்தினை வெளிப்படுத்துவர். 'உடலினை வலிமைப் படுத்துவதேயன்றி உளத்தினைப் பாதுகாப்பதல்ல. அடயோகிகள் நீண்டநாட்கள் வாழ்வார்கள். 100 ஆண்டுகள் என்பது அவர்களுக்கு சாதாரணமான ஒன்றாகும். 150 ஆண்டுகள் வரையிலும் ஒரு மயிர்கூட நரைக்காமல் இளமையுடனும் சுறுசுறுப்புடனும் வாழ்ந்து காட்டுவார்கள். சுருக்கமாகச் சொல்லப்போனால் நல்ல உடல் நலமுள்ள மிருகம் என்றும் கூறமுடியும். இவற்றின் மூலம் அடயோகம் மட்டுமே தனிப்பட்ட ஒரு யோகமாக நின்று இறை அனுபவத்தைப் பெற முடியாது.

இன்றைய நிலையில் பெருவாரியான மக்களால் பேசப்பட்டும், பயன்படுத்தப் பெற்றும் வருபவை பக்தியோகம், இராசயோகம், ஞானயோகம் என்னும் மூன்றுமே ஆகும். 'குண்டலினி யோகம்' என்பது தனியான ஒன்றாகப் பேசப்பெற்றாலும் இராசயோகப் பிரணாயாமத்துடன் தொடர்புடையதாக அமைவதால் அக்கூற்று இங்கே விளக்கப்படவில்லை.

**பக்தியோகம்**

'பக்தி' என்பது அன்பு என்னும் பொருள்படும். உயிர்களிடத்துச் செலுத்தும் அன்பு. அன்பு என்ற பெயரிலும் இறைவனிடத்துச் செலுத்துகின்ற அன்பு 'பத்தி' என்ற பொருளிலும் கையாளப்படுகின்றது. பக்தியே எல்லா யோகங்களுக்கும் அடிப்படையாக அமைகின்றது. இறைப் பேற்றுக்குரிய வழியை அடைவதற்கு மனிதன் மேற்கொள்ளும் செயற்முறைகளே வழிபாடு எனப்படும். வழிபாடு என்பது முன்னோர் காட்டிய வழிக்கண்படுதல் என்ற பொருண்மையது. வழிபாடு என்ற சொல் தொழுதல், வணங்குதல் எனும் பொருளில் வழங்கப்படுகிறது.

**பக்தியின் வகைகள்**

**1. சரவண பக்தி**

தெய்வீகப் பெயர்களைக் கேட்டல், இறைவனின் சிறப்பான குணங்களான திருவிளையாடல்களைச் சொல்லக் கேட்டல் சரவணபக்தி எனப்படும். (எ.கா: பரீட்சித்து மகராசனின் பக்தி.

**2. நாம சங்கீர்த்தன பக்தி**

ஒரு தனிப்பட்ட தெய்வத்தின் புகழ் பாடுதல், இறைவனின் திருநாமத்தைப் பாடுவதாகும். (எ.கா: நாரதர் மகாபிரபு, மீரா, தியாகராச சுவாமிகள் புகழ் பாடுதல்.

**3. சுமரணை பக்தி**

அத்தெய்வத்தையே தியானித்தல். முனிவர்களைப் போல ஈசுவரனின் திருவிளையாடல்களை நினைவு கூர்வது.

**4. பாத சேவன பக்தி**

கடவுளின் பாதங்களில் சேவை செய்வது. ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தியை விடாமல் பின்பற்றி அவருக்குத் தொண்டு செய்த இலட்சுமணன் பக்தியை குறிக்கும்.

**5. அர்ச்சனை பக்தி**

அர்ச்சனை மூலமாகச் சடங்குகள் செய்து வழிபடுதல். ப்ருதுராசள், அம்பரிவுன் இவர்களைப் போல் இறைவனை வழிபடுவது. வந்தனை செய்து பக்தி கொள்வது.

**6. வந்தனை**

கடவுளின் உருவச்சிலை முன் வணக்கம் செய்தல். அக்கூரர் உத்தவர் போல இறைவனை வந்தனை செய்து பக்தி செய்வது.

**7. தாச பக்தி**

ஓர் அடிமையைப் போல் கடவுளுக்குப் பணி செய்தல். அனுமன், கருடன் இவர்களைப் போல ஒரு வேலைக்காரனாக இருந்து பகவானுக்குப் பணிவிடை செய்வது.

**8. சாங்கிய பக்தி**

அர்ச்சுனனைப் போலவும், சுக்ரீவனைப் போலவும் பகவானுக்கு உற்ற தோழனாக இருப்பது.

**9. ஆத்ம நிவேதனம்**

மகாபலியும், கண்ணப்ப நாயனாரும் தங்களையே இறைவனுக்கு அர்ப்பணித்தது போல் அர்ப்பணித்தல்.

இந்தப் பக்தி வகைகள் அனைத்திற்கும் அடிப்படை அன்புதான். இறைவன் மீது கரை காணாத காதல், எதையும் எதிர்ப்பார்க்காத அன்பு.

பக்தியுடன் செயல்களை அர்ப்பணிப்பதே யோகம் என்பதாகும். மகாகவி காளிதாசர் (அம்மன்), கண்ணப்பர், மார்க்கண்டேயன், நந்தனார் (சிவன்), செயதேவர், சைதன்யம், துக்காராம், மீரா (கண்ணன்), புரந்தரதாசர், பிரகலாதன் (நாராயணன்), தியாகராசர் முதலானோர் இறைவனை நினைத்ததுமே முத்திப்பேறு அடைந்தவர்கள். நெஞ்சம் நெகிழ்ந்தவர்கள். இவர்களின் அடிப்படையே தன்னை இழப்பதாகும் என்பதை வழிகாட்டியவர்களாவர்.

செயல்கள், சிந்தனைகள் அனைத்திற்கும் இறைவனையே பொறுப்பாக்கி உயரிய உள்ளமுடன் ஒன்றுபடுவதே பக்தியோகமாகும். இதனைச் சிவவாக்கியர்,

**"பாத்திரம் அறிந்து மோன பத்தி செய்ய வல்லிரேல்**

**சூத்திரப் படியாவருஞ் சுத்தராவ ரங்ஙனே".**[27]

எனும் பாடல் வழி அறியப்படுகிறது. பகவத் கீதையில் இச்செய்தியானது,

**"மகிழ்தலும் வெறுத்தலும் துன்புறுத்தலும் அலாவுற்று நின்றி**

**நன்மை தீமைகளைத் துறந்த பக்தனே எனக்குப் பிரியமானவர்".**[28]

என்றும், 'தூயவனாக, திறமை உடையவனாக, ஓரம் சாராதவனாக, துயரமற்றவனாக, காமிய கர்மங்களைத் துறந்தவராக, என்னிடத்துப் பக்தி பண்ணுபவன் எனக்கு இனியவன் ஆகிறான்'.[29] என்றும், 'உயிர் அனைத்திடத்தும் வெறுப்பின்றி, நட்பும் கருணையும் உடையவனாக, மமகாரம், அகங்காரம் அற்று, இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதி, பொறுமை படைத்து, எப்பொழுதும் சந்தோசமாக இருப்பான். இவன் யோகியாக, தன் அடக்கம் உடையவனாக, திடநிச்சயம் உள்ளவனாக, என்னிடத்து மனம், புத்தியைச் சமர்ப்பித்தவனாக யார் எனப் பக்தனாகிறானோ அவன் எனக்குப் பிரியமானவன்'.[30] என்றும், 'பகையையும், நட்பையும் அங்ஙனம் மானத்தையும் அவமானத்தையும் நிகராக்கிக் குளிர் வெப்பம், இன்பதுன்பம் இவற்றை ஒப்பாக்கிப் பற்றற்று இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் ஒன்றாகக் கருதும் மௌனி, கிடைத்ததில் திருப்தி அடைபவன், இருக்க இடம் தேடாதவன், உறுதியான உள்ளமுடையவன், பக்திமானாகிய அம்மனிதன் எனக்கு உகந்தவன்'.[31] என்றும், 'சிரத்தையுடைய எவ்வன்பர் என்னையே கதியாகக்

கொண்டு அமிர்தம் போன்ற இத்தர்மத்தை ஈண்டு உரைத்தபடி கடைப்பிடிக்கின்றார்களோ அவர்களே எனக்கு மிகவுமினியவர்".[32] என்றும் சூத்திர விளக்கம் அளித்த சித்பவனாந்தரின் கூற்று நோக்கத்தக்கதாகும். இவரின் கூற்றுப்படியே இவ்வுலகம், இவ்வுலகிலுள்ள அனைத்துப் பொருள்கள், இந்த உடல், அதன் இளமை முதலான அனைத்தும் அழிந்துவிடும். இறைவன் மட்டுமே அழியாதவன் என்ற உண்மை அறிவு வரப்பெற்றுப் பற்றற்ற நிலையில் பரமனைப் பற்றி உண்மை நின்றவர்கள் பக்தியோகியர் ஆவர்.

பக்தர்களுக்கே முக்திகிட்டும் என்றும், பக்தியே முத்திக்கு வழி என்றும் சித்தர்கள் கூறுவர். இக்கருத்தின்படி சிவவாக்கியர்,

**"பத்தர்களுக் கல்லாது முத்தி கிட்டுமோ?".**[33]

என்றும்,

**"பக்தியோடரன்பதம் பணிந்தி டாத பாவிகாள்**

**முத்தி யின்றிப் பாழ்நரகில் மூழ்கி வெந்தலைவரே".**[34]

என்றும் தெளிவடையச் செய்துள்ளார். இறைவனைப் பக்தியுடன் பணிதல் வேண்டும் என்பதைப் பத்திரகிரியார்,

**"தித்தியென்ற கூத்தும் திருச்சிலம்பி னோசைகளும்**

**பத்தியுடன் கேட்டுப் பணிவதினி எக்காலம்?".**[35]

என்ற வினாவால் விளக்குகிறார்.

மணிவாசகரும் பக்தி வேண்டுமெனவும், பக்தர்களே பணிமின்கள் எனவும், அவ்வாறு பணிபவர்களை இறைவனே வழிய வந்து பக்தி செய்து ஏற்பான் எனவும் தமது பாடலில் பாடிச் செல்வார். இப்பாடல்களானது,

**"பாருரு வாய பிறப்பற வேண்டும்**

**பத்திமையும் பெற வேண்டும்".**[36]

என்ற எண்ணப் பதிகத்திலும்,

**"பத்தர்காள் இங்கே வம்மின்**

**நீர் உங்கள் பாசந்தீரப் பணிமினோ".**[37]

எனச் சென்னிப்பத்திலும்,

**"பத்திமையும் பரிசுமிலாப் பசு பாசம் அறுத்தருவி".**[38]

எனக் கண்டப்பத்திலும்,

**பக்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாரும் வண்ணம்".**[39]

என அச்சோப் பதிகத்திலும் பாடியுள்ளார். 'இறைவனை நெஞ்சத்தில் எண்ணாவிடில் எத்துனைப் புண்ணியங்கள் செய்தாலும் பயனில்லை. எத்துனைத் தவப்பயன் இருப்பினும் பக்தியில்லை எனில் அது பாழ்படும்'.[40] என்கிறார் பாம்பாட்டிச் சித்தர். மாணிக்கவாசகரைப் போல கடுவெளிச் சித்தரும் பத்தியும் சிவனாரின் செயலால் தான் முடியும்'.[41] என்றும், பக்தியே சித்தியாகும்; அதனை ஈட்டிச் சமயங்களை ஓட்டவேண்டும்'.[42] என்றும், பக்தியும் விசுவாசமுமே மனிதர்களுக்கு நட்பாக வேண்டும்".[43] என்றும் பாடியுள்ளார்.

மாணிக்கவாசகர் பக்தியோகத்தில் ஈடுபடும் பக்தர்கள் தங்களை வருந்தியேனும், இறை அனுபவத்தில் திளைக்க விரும்புகின்றனர். கல்லும் கசிந்து உருகுமாறு அவர்களது அழுகை அமைகின்றது. தன் தாயினைக் காணாத பிள்ளை எங்ஙனம் ஏங்கித் தவித்துக் குரலெழுப்பி அழுமோ அவ்வண்ணமே இவர்களும் இறைவனாகிய தாயினைக் காணாது ஏங்கி அழுகின்றனர். அழுதால் அவனைப் பெறமுடியும் என்பதைத் தங்களுக்குப் பின் வருகின்றவர்களுக்கும் எடுத்துக் காட்டுகின்றார்.

'நான் உன்னை வந்து அடையுமாறு எனக்கு அருள் செய்க!' என்று வேண்டும்போது,

**"யானே பொய் என் நெஞ்சம் பொய் என் அன்பும் பொய்**
**ஆனால் வினையேன் அழுதால் அழுதால் உன்னைப் பெற லாமே**
**தேனே அமுதே கரும்பின் தெளிவே தித் திக்கும்**
**மானே அருளாள் அடியேன் உனைவந் துறுமாறே".**[44]

என்ற பாடல்வழி உணர்த்துகிறார். இப்பாடலில் மாணிக்கவாசகர் தன்னைப் பொய்யனெனக் கூறி இறையிடம் வேண்டுவது நோக்கத்தக்கதாகும். தான் அழுது; தன்னைக் கண்டு கொள்ளும்படி வேண்டுபவர்.

**"மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து**
**விரையார் கழற் கென்**
**கைதான் தலைவைத்துக் கண்ணீர்**
**ததும்பி வெதும்பி யுள்ளம்**
**பொய்தான் தவிர்ந்து உன்னைப் போற்றி**
**சய சய போற்றி யென்னுங்**
**கைதான் நெகிழவிடேன் உடையாய்**
**என்னைக் கண்டு கொல்லே".**[45]

என்ற பாடலில் விவரிக்கின்றார். தாயுமானவரோ தம் பாடலில்,

**"அங்கையொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப**
**அன்பினா லுருகி விழிநீ**
**ராறாக வாராத முத்தியான தாவேச**
**ஆசைக் கடற்குண் மூழ்கிச்**
**சங்கர சுயம்புவே சம்புவே எனவுமொழி**
**தழுதழுத் திடவணங்குஞ்**
**சன்மார்க்க நெறியிலா துன்மார்க்க னேனையுந்**
**தண்ணருள் கொடுந் தாள்வையோ?".**[46]

எனும் பாடலில் மலர்களைத் தூவி அன்பினால் உடலெல்லாம் புளகிப்ப உருகி, விழிநீர் ஆறாகப் பெருக, உன்னைக் காணவேண்டும் என்ற ஆசைக் கடலுள் மூழ்கி சங்கர சுயம்புவே சம்புவே என்று மொழி தழுதழுக்க வணங்குகின்ற நன்னெறிக் கண் செல்லாத என்னை நீ உன்னுடைய குளிர்ச்சி பொருந்திய அருளினைக் கொடுத்து ஆட்கொள்வாயா? என்னும் பொருள்பட கூறுகிறார்.

பட்டினத்தார் குறிப்பிடுகையில், நன்மைகள் வேண்டுமெனில் நெஞ்சே! நீ அவனையே, மனத்தில் நினைத்து, வழியால் புனல் சிந்தி விம்மியழு எனும் குறிப்பை,

**"ஒழியாப் பிறவி எடுத்து ஏங்கி உழன்ற நெஞ்சே**
**அழியாப் பதவிக்கு அவுடதம் கேட்டி! அநாதியனை**

**மழுமாள் கரந்தனை மால்விடையானை மனத்தில் உள்ளி**

**விழியால் புனல் சிந்தி விம்மியழு நன்மைகள் வேண்டும் என்றே".[47]**

எனும் பாடலும்,

**"நீரார்ந்த மேனி உரோமம் சிலிர்த்து உளம் நெக்கு நெக்குச்**

**சேராய்க் கசிந்து உருகி நின் சீரடிக்கே மாறாத்**

**தியானமுற்று ஆனந்தமேற் கொண்டு மார்பில் கண்ணீர்**

**ஆறாய்ப் பெருகக் கிடப்ப தென்றோ? கயிலாந்தனே?".[48]**

எனும் திருக்கைலாயப் பகுதியில் பாடியுள்ளார். மேலும் தமக்கு என்று எந்தவிதப் பற்றுதலும் இலலாதவர்கள் இறைவனையே பற்றி நிற்பதால் அவ்விறைவனையே காணவும், கூடவும் விழைவர். இதனை,

**"கையார ஏற்று நின்று அங்ஙனந் நின்று கரித்துணியைத்**

**தையாது உடுத்து, நின சந்நிதிக்கே வந்து சந்ததமும்**

**மெய்யார நிற்பணிந்து உள்ளே உரோமம் விதிர் விதிர்ப்ப**

**ஐயா என்று ஓலம் இடுவது என்றோ? கயிலாந்தனே".[49]**

எனத் தன் நிலையை உணர்ந்து இறையடி சேர்வதன் பொருட்டு மனத்தால் நினைந்து உருகும் நிலையை நினைத்துப் பாடுகின்றார். குணங்குடி மஸ்தான் சாகிபும் இந்நிலையைப் பாடுகையில்,

**"என்ன செய்யப்போகிறேனென்று பாவிதா**

**னிரவுபக லாய முழுவனோ**

**ஏமசா மம்மென்றி லாதுதேம் பித்தேம்பி**

**யெரியமூச் செறித் தழுவனோ**

**கன்னலமு தேசீனி கற்கண்டு சர்க்கரைக்**

**கட்டியே யென்றழுவனோ**

**கண்ணாட்டி யானவென் கண்மணியே யென்றுதான்**

**காண்பனோ வென் றழுவனோ**

**நன்னேய ராயக்கு மூதுபத நம்பியு**

**நாளுமே நோந் தழுவனோ**

**நைந்தழுது நொந்தவடி யேனுமுமை நம்பினே**

**னன்பு கொண் டாளு தற்கே".[50]** என உளம் உருகி வேண்டுகிறார்.

கிறித்தவர்கள், "என்தேவனே, என்தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர்? எனக்கு உதவி செய்யாமலும், நான் கதறிச் சொல்லும் வார்த்தைகளைக் கேளாமலும் ஏன் தூரமாயிருக்கீறீர்? என் தேவனே நான் பகலிலே கூப்பிடுகிறேன். உத்தரவு கொடீர். இரவிலே கூப்பிடுகிறேன், எனக்கு அமைதியில்லை".[51] என இறைவனின் அருளைப் பெற உருகி அழைத்து விடை காணுகின்றனர்.

பத்தியோகியர் சிலரின் நிலையை ஆண்டாள் பாடுகையில்,

**"கோவிந்தா, எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு**
**உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்**
**மற்றை நம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்".**[52]

என திருப்பாவையில் தம்மை இறைவனிடத்தில் ஆட்கொண்டதைக் குறிப்பிடுகிறார்.

மணிவாசகர் திருப்பெருந்துறையிலுள்ள இறைவனை அன்பின்றிப் பெறமுடியாத நிலையை,

**"தேவதேவன் மெய்ச்சேவகன்**
**தென்பெருந்துறை நாயகன்**
**மூவராலும் அறியொ ணாமுத லாய**
**ஆனந்த மூர்த்தி யான்**
**யாவராயினும் அன்பரன்றி அறியொ**
**ணாமலர்ச் சோதியான்".**[53]

என்றும், தாயுமானவர் மழையினை வருவித்து இராமேசுவர மக்களின் பசிக்கொடுமையைப் போக்கியப் பாங்கினை,

**"சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத்**
**தெய்வம் பிறைசூடுத் தெய்வமெனி - லைவரைலென்**
**றானந்த வின்பில் லழுந்துவது முத்தியெனில்**
**வானங்காள் பெய்ம்மின் மழை".**[54]

என மக்களின் துயர் தீக்க இறைவனின் துணைநாடியதும் குறிப்பிடப்பட்டுள்ளது. சீறாப்புராணம் மேலை நாகூர் புக்கப்படலத்தில்,

**"நாயக னொருவ னுண்டு நளிபுக ழிமையோ ருண்டு**
**தூயநல் வேதமுண்டுத் துலக்கிய நபிமா ருண்டு**
**மாயதோர் காலமுண்டு மரர்வினை யிரண்டுண்டென்று**
**நேயநல் லுறுதி யுள்ளோர் நினைப்பரோ வேறு மாதோ?".[55]**

என இசுலாமியக் கோட்பாட்டின் அடிப்படையிலும் இறைவனை வேண்டும் பாங்கினைக் காணமுடிகிறது.

கிறித்துவத்தில் சங்கீதம் எனும் பகுதியில், "என் முகத்தைத் தேடுங்கள் என்று சொன்னீரே, உம்முடைய முகத்தைத் தேடுவேன் கர்த்தாவே என்று என் இருதயம் உம்மிடத்தில் சொல்லிற்று. என்றும் . . . நீரே எனக்குச் சகாயர்; என் இரட்சிப்பின் தேவனே, என்னை நெகிழ விடாமலும் என்னைக் கைவிடாமலும் இரும்".[56] என்றும், 'என் தேவனாகிய கர்த்தாவே உம்மை என்றென்றைக்கும் துதிப்பேன்".[57] என்றும் வணங்குவர்.

பக்தியோகியர் இறைவன் மாட்டுத் தாம் கொண்ட அன்பினை வெளிப்படுத்துவதற்கு நாயக நாயகி பாவனையையும் கைக் கொள்கின்றனர். இவ்வகையில் மாணிக்கவாசகர் திருக்கோதும்பியில்,

**"நான் தனக்கு அன்பின்மை நானும்தானும் மறிவோம்**
**தானென்னை ஆட்கொண்டது எல்லாருந் தாமறிவார்**
**ஆனகருணையும் அங்குற்றே தானவனே**
**கோனென்னைக் கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பி".[58]**

எனவரும் பாடலில் தம்மைத் தலைவியாகவும், இறைவனைத் தலைவனாகவும் வைத்து அகத்துறைப் பாடல்களைப் பாடி திருக்கோவையார் எனும் நூலை இயற்றியுள்ளார். பட்டினத்தாரும் பாடுகையில்,

**"முன்னே வினையெல்லாம் முழுதும் அறுத்தாண்டி**
**தன்னை அறியவே நான் ஒருத்தி ஆனேன்டி".[59]**

என்றும்,

**"சும்மா இருக்கவைத்தான் சூத்திரத்தை நான் அறியேன்**

**அம்மா! பொருள் இது வென அடைய விழுங்கினேன்டி".**[60]

என்றும் இறைவனைத் தலைவனாக வைத்துப் பாடிப் பரவச நிலையை அடையும் விதத்தில் செயல்பட்டுள்ளார். பட்டினத்தாரின் அடியொற்றிச் சொல்லும் பத்திரகிரியாரும்,

**"பருவத் தலைவரொடும் புல்கி இன்பம் கொள்வதற்குத்**

**தெரிவைப் பருவம் வந்து சிக்குவதும் எக்காலம்?".**[61]

என்றும், அக்கருத்தைத் தாயுமானவர் பைங்கிளியைத் தூதனுப்பித் தம் நிலையைத் தெரியப்படுத்த,

**"ஆவிக்கு ளாவியெனு மற்புதனார் சிற்சுகந்தான்**

**பாவிக்குங் கிட்டுமோ சொல்வாய் நீ பைங்கிளியே".**[62]

என்றும், வள்ளலார் இறைவனைக் கணவராக்கி,

**"கண்கலந்த கணவர் எனைக் கைகலந்த தருணம்**
**கண்டறியேன் என்னையும் என் கரணங்கள் தனையும்**
**என் கலந்த போகம் எலாம் சிவபோகம் தனில்ஓர்**
**இறை அளவென்று ரைக்கின்ற மறை அளவின் றறிந்தேன்**
**விண்கலந்த திருவாளர் உயிர் கலந்த தருணம்**
**விளைத்துயர் தீர்ந் தடைந்த சுகம் நினைத்திடுந் தோரெல்லாம்**
**உண்கலந்த ஆனந்தப் பெரும்போகம் அப்போ**

**துற்றதென எனை விழுங்கக் கற்றது காண் தோழி'.**[63]

எனத் திருவருட்பாவில் அவருடன் புணர்ந்தபோது பெற்ற பேரின்பத்தைப் புகழ்வர். இருபதாம் நூற்றாண்டைச் சேர்ந்த பாரதியோ, தன்னைத் தலைவியாக்கிக் காணும் இன்பத்தையும் ஒருங்கே படைத்துப் புரட்சியினைச் செய்கின்றார். இறைவனைக் கண்ணனாகக் கொண்டு காதல் புரிபவர். கண்ணமாவாகக் கொண்டும் காதல் புரிகின்றார்,

**"வீணையடி நீ யெனக்கு மேவுவிரல் நானுக்கு**
**தாரையடி நீ யெனக்குத் தன்மதிய நானுனக்கு**
**வீரமடி நீயெனக்கு வெற்றியடி நானுனக்கு மின்பமெல்லாம்**

**ஓருருவ மாய்ச் சமைத்தாய் உள்ளமுதே கண்ணம்மா'.**[64]

எனும் பாடலில் தன்னுடைய மனக்கருத்தினை இவ்வண்ணம் வெளிப்படுத்திய பாரதி பத்தியினால் ஏற்படும் பயன்களைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார். இதனை,

**“பக்தியி னாலே - இந்தப்**
**பாரினி லெய்திடும் மேன்மைகள் கேளடீ!**
**சித்தந் தெளியும் - இங்குச்**
**செய்கை யனைத்திலும் செம்மை பிறந்திடும்,**
**வித்தைகள் சேரும் - நல்ல**
**வீர ருறவு கிடைக்கும் மனத்திடைத்**
**தத்துவ முண்டாம் - நெஞ்சிற்**
**சஞ்சல நீங்கி உறுதி விளங்கிடும் . . .**

எனத் தொடங்கி காமப் பிச்சை அடித்து விழ்த்தலாம்; தாமசப் பேயையும் அடித்திடலாம்; தீமையை எண்ணித் தேம்பும் பிசாசைத் திருகி எறியலாம்; பொய்யினை வீழ்த்தி உண்மை நாமத்தினால் நன்மைகள் பெறலாம்; ஆசையைக் கொல்வோம்; அச்சத்தைப் பொசுக்குவோம்; பாசத்தை அறுப்போம்; பராசக்தியை வணங்குவோம்; ஈசனைப் போற்றுவோம்!

இன்பம் அனைத்தையும் அடைவோம்; சோர்வுகள் போகும்; பொய்ச் சுகத்தினை நீக்கி மெய்ச் சுகத்தினை எய்தலாம்; நற்பார்வைகள் தோன்றும்; பாம்புக்கடி விடமும் கூட நீங்கும்; செல்வங்கள் சேர்ந்து மகிழ்ச்சி விளையும்; பிணி தீரும்; பல இன்பங்கள் சேரும்; கல்வி வளரும்; பல காரியங்களும் கையகப்படும்; வீரம் ஓங்கும்; அல்லல்கள் ஒழியும்; நல்ல ஆண்மை உண்டாகும்; அறிவு தெளிந்திடும்; மறையினைப் போலப் பயனுடையதாக நாம் சொல்லும் ஒவ்வொரு சொல்லும் அமையும்; தெய்வ வாழ்க்கையினை நாம் இப்புவியிலேயே பெற்று மகிழ்ந்திடலாம். இவையெல்லாம் உண்மை பத்தியினால் தான் விளையும்! சோம்பல் அழியும்; நமது உடல் நாம் சொன்னபடி கேட்கும். நம்முடைய தலையானது (முடி) சிறிதும் தாழ்தலின்றி நல்ல கோபுரம் போல நிமிர்ந்து நிற்கும். நம்மிடையே இருக்கும் வீணான வீம்புகள் அனைத்தும் போகும். நம்முடைய தோள்கள் பருக்கும். நம்மிடையே இருக்கும் பொய்ப் பாம்பு மடியும். மெய்ப் பரத்தினை வென்ற நல்ல நெறிகள் உண்டாகும். நம்முடைய சந்நதிகள் வாழும். நம்மிடையே இருக்கும்

மனக்குழப்பங்கள் கெட்டு நமக்கு வலிமைகள் வந்து சேரும். நாம் என்ன சொல்கின்றோமோ அஃது அப்படியே நடக்கும். எவ்வாறெனில்,

**"இந்தப் புவிக்கே - இங்கோர்**
**ஈசனுண் டாயின் அறிக்கையிட் டேனுன்றன்**
**கந்தமலர்ந்தாள் - துணை;**
**காதல் மகவு வளர்ந்திட வேண்டும் - என்**
**சிந்தை யறிந்தே - அருள்**
**செய்திட வேண்டும்".**[65]

என்றால் அருள் எய்திடும், என்னும் விதத்தில் ஆம் என்று முடிக்கின்றார். இக்கருத்தினையே ஆழ்வார்களும், நாயன்மார்களும், தாயுமானவரும், முகமதியர்களும், கிறித்துவர்களும் தந்து செல்வது 'பத்தி' தரும் ஒருமைப்பாட்டை எண்ணி வியக்கச் செய்கின்றது. இவ்வாறாக ஆற்றாது அழுது, அவனன்றித் தான் இலனாக, அவன் ஒருவனையே நினைத்து, அவனுக்கே ஆட்பட்டு, அவனுடன் இரண்டறக் கலந்து பேரின்பத்தை அடைந்த நிலையினையும் பக்தியாளர்களின் பாடல்கள் தெரிவிக்கின்றன. பேரின்பப் பெருநிலையைப் பேரன்பு கொண்டவர்கள் அடைந்திடுவர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருநீலகண்ட நாயனார், திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருநீலநக்க நாயனார், காரைக்கால் அம்மையார், ஆண்டாள், மீரா, இராமகிருஷ்ண பரமகம்சர், வள்ளலார், ஸ்ரீமத் மத்வாச்சாரியார் போன்ற பக்தியாளர்கள் பூத உடலுடனேயே இறையுடன் கலந்துப் பேரின்ப வாழ்வு பெற்றவர் என்பது பக்தியின் நிறைவை வெளிப்படுத்துகின்றன.

### இராசயோகம்

அனைத்து யோகங்களையும் தம்முள் கொண்டதாக, அனைத்திற்கும் அப்பாற்பட்ட ஒன்றாய், தலைமை வாய்ந்தததாக இருப்பதால் இராசயோகம் எனப் பெயர் பெற்றது. இறைவனே இப்பெயரை வைத்ததாகச் சட்டைமுனி குறிப்பிடுகிறார். இதனை,

**"உரைக்கவல்லோ ராசயோகம் வைத்தானீசன்**
**உண்டுடுத்துத் திரிவதற்கோ சொன்னானையன்**
**மறைக்கவா சனைகிரி கொள்ளு மென்றான்**

**மகத்தான தட்சணாமூர்த்தி யாசான்**

**நிறைக்கவல்லோ யோக முதல் ஞானஞ் சொன்னான்**

**நிற்கவிட மற்றநிர் மலமாஞ் சோதி".**[66]

என்ற பாடலால் 'முன் ஞானம் நூறு' எனும் பகுதியில் இராசயோகத்தை விளக்குகிறார். அதாவது, தீயனவற்றை விலக்கி நல்லனவற்றைக் கொண்டு, வாசியினை நிலைப்படுத்தி, பிறசெயல்களில் கருத்தினைச் செலுத்தாது, ஒப்பற்ற ஒன்றில் நிலைக்கச் செய்து, எந்தவித அசைவுகளுமின்றித் தானே தானாக நின்று, நிருவிகற்ப வாழ்வில் நிலைக்கச் செய்வது என்னும் இவ்வெட்டு அங்கங்களையும் கொண்டதாக விளக்குகின்ற காரணத்தால் இவ்யோகத்தை 'அட்டாங்கயோகம்' என்று கூறுவர். சட்டைமுனி இவ்யோகத்தை 'அப்பியாச மார்க்கம்' என்கிறார். அப்பியாச மார்க்கம் என்றால் 'பயிற்சிப்பாதை' என்று பொருளாகும். இ∴து இயமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டு அங்கங்களையும் உடையது. யோகங்களிலேயே மிகவும் சிறந்தது இந்த அட்டாங்கயோகமே என்றும், அதுவே உண்மை வழி என்றும் சித்தர்கள் கூறுகின்றனர். இம்மார்க்கத்தைக் கடுவெளிச் சித்தர் குறிப்பிடுகையில்,

**"ஒப்பரும் அட்டாங்க யோகம் - நன்றாய்**

**ஓர்ந்தறி வாய வற்றுண்மை சம்போகம்'.**[67]

எனவும்,

**"அட்டாங்க யோகம் அறிந்த மெய்ஞ் ஞானிக்கு**

**முட்டாங்கம் ஏதுக்கடி - குதம்பாய்**

**முட்டாங்கம் ஏதுக்கடி'.**[68]

என அட்டாங்கயோகக் குறிப்பை வரையறுப்பதன் மூலம் அறியப்படுகிறது. காகபுசுண்டர் இராசயோகத்தின் பெருமையைக் குறிப்பிடுகையில், "அறுபத்து நான்கு யோகநெறிகள் இருக்கின்றன என்று நம்பி அவற்றைத் தேடி அலைந்து அழிந்தவர்கள் பலர். இருப்பினும் இந்த இராசயோகத்தின் சிறப்பை உணர்ந்தவர்கள் கோடிக்கொருவர் தான்".[69] என்கிறார். கற்பவாழ்க்கையினை எய்தமுடியும் எனவும் விளக்குகிறார். உயிர்களைப் படைக்கும் தொழிலை நிமிடத்தில் செய்யமுடியும். சித்பவானந்தரும் இதனை மகாயோகம் என்று

குறிப்பிட்டு, "மகாயோகத்தைப் பழகுகிற யோகி ஒருவன் தானும் ஜகத் முழுவதும் ஈசுவர சொரூபம் எனக் காண்கிறான்".[70] எனவே, இதுதான் யோகங்களுள் மிக உயர்ந்தது என்கிறார். திருமூலர் அட்டாங்க யோகத்தின் எட்டு அங்கங்களாக, 1.இயமம் (நன்னடக்கை), 2.நியமம் (நற்செயல்), 3.ஆசனங்கள் (இருக்கை), 4.பிராணாயாமம் (மூச்சுப்பயிற்சி), 5. பிரத்தியாகாரம் (உடலிலுள்ள சிறப்பு இயக்கம், 6.தாரணை (மனம் அடக்கம்), 7. தியானம் (தன் மனத்தினை அடக்குதல் 8.சமாதி நிலை (இரண்டறக் கலத்தல்) எனக் குறிப்பிடுகிறார். திருமூலர் அட்டாங்கயோகத்தின் மூன்றாம் தந்திரத்தில் குறிப்பிடுகையில்,

**"இயம நியமமோ எண்ணிலா ஆதனம்**
**நயமுறு பிரணாயா மம்பிரத்தி யாகாரம்**
**சயமிகு தாரணை தியானம் சமாதி**
**அயமுறும் அட்டாங்க ஆவது ஆமே".**[71]

எனப் பாடலாக இயற்றியுள்ளார். காஞ்சிப் புராணம் உபதேச காண்டத்தில் எட்டு அங்கங்களைச் சட்டைமுனிக் குறிப்பிடுகையில்,

**"கேளப்பா ஏமத்தைச் சொல்லவே நானும்**
**கெடியான நேமமுடனா சனங்கொண்டு**
**வாளப்பா பிராணாயாமம், பிரத்தியாகாரம்**
**மகத்தான தியானமொடு தாரணைகேளு**
**தாளப்பா சமாதியுடை நிட்டை பங்கம்**
**தனித்தனியே சொல்லுகிறேன் நன்றாய்ப்பாரு".**[72]

என்று பாடி எட்டு அங்கங்களையும் விரிவாகக் கூறுகிறார்.

### 1.இயமம் (நன்னடக்கை)

இஃது ஏமம் என்றும் கூறப்படும். தீயனவற்றில் எண்ணத்தைச் செலுத்தாமல் இருப்பதே இயமம் எனப்படும். இது பத்து தன்மைகளையுடையது. சாதியைக் கைவிடல், ஆசைகளை அழித்தல், எல்லாவற்றையும் ஒன்றாகப் போற்றுதல், நித்தியம் கைக்கொள்ளுதல், சரீர வருத்தம் போக்கல், பிறரது பொருள்களைக் கைப்பற்றுதலை விடுத்தல், பிறரையும் தம்மைப் போல எண்ணுதல், சமயம் பொய் எனத் தள்ளுதல், பூரணம் நாம் என்று எப்பொழுதும்

நினைத்திருத்தல், நம்மால் ஆவதும், அழிவதுமில்லை என்ற எண்ணத்துடன் இருத்தல் என்பன அப்பத்துத் தன்மைகள் ஆகும். இதனைத் திருமூலர் இயமமானது தீயனவற்றைச் செய்யாமல் நல்லனற்றைச் செய்யும் குறிக்கோளுடன் தன்னடக்கமாக வாழ்வது. அங்ஙனம் வாழ வேண்டிய நெறிமுறையை,

**“கொல்லான், பொய்கூறான், களவு .லான், எக்குணத்தும்**
**நல்லான் அடக்கம் உடையான் நடுச் செய்ய**
**வல்லான், பகுத்து உண்பான், மாசுஇலான், கள்காமம்**
**இல்லான் இயமத்து - இடையில் நின்றானே”.**[73]

எனும் பாடலில் உயிர்களைத் துன்பம் செய்யாமலும், கொல்லாமலும், பொய் கூறாமலும், பிறர் பொருளைக் களவாடமல் நல்ல குணங்களுடன் அடக்கமுடையானும் ஆகிய இருவருக்கும் மாறுபட்ட கருத்து இருந்து வாக்குவாதம் சண்டையிட்டுக் கொள்வோருக்கு நடுநிலையாக இருந்து நீதியை எடுத்துரைக்கும் அறிவுடையவனாக விளங்குபவனும், பகிர்ந்துண்டு குற்றமற்றவனாகவும், கள் உண்ணாமல், காம இச்சைகளுக்கு உட்படாமலும் இருக்கக் கூடிய ஒருவரே இயமநெறிக்கு உட்பட்டவனாவன் என்றும் கூறுகிறார்.

**“ஊன்நீர் வழியாக உள்நாவை ஏறிட்டு**
**தேன்நீர் பருகி, சிவாயநம என்று**
**கான்நீர் வரும்வழி கங்கை தருவிக்கும்**
**வான்நீர் வரும்வழி வாய் தறிவீரே”.**[74]

நாவின் வழியாக உண்ணாக்கை மேலே செலுத்தி, அதனால் ஊற்றெழுந்து வரும் அமுதத்தைப் பருகிச் ‘சிவாயநம’ எனச் சிந்தித்து இருப்பார்க்குக் காத்தலைச் செய்கின்ற ஒளி நீர்ப் பிரவாகம் போல் முகத்தின் முன் பெருகும். அந்நீரானது கங்கை உச்சம் தலையில் பாய்வதைப் போல் அறிந்து கொள்ளமுடியும் என நல்லெண்ணம் உடையார் செய்யும் செயலாக விவரிக்கிறார்.

## 2.நியமம் (நற்செயல்)

இது நேமம் என்றும் வழங்கப்படும். நியமித்த விதிமுறைகளைத் தவறாமல் செய்து நல்லனவற்றைக் கைக் கொள்வதே நேமம் அல்லது நியமம்

எனப்படும். உண்மை, பொய் என்பனவெல்லாம் பூரணமே என்று உணர்தல், இந்த உலகம் பொய் என்று வெறுத்தல், குரு சொல்லே பூரணம் என்று கருதுதல், குருவுக்குத் தட்சணை கொடுத்துக் கற்றல், பராபரத்தைத் தன் தேகம் போல் எண்ணுதல், சகல நூல்களையும் வீண் என்று ஒதுக்குதல், விரக்தி மனப்பான்மையினை விரட்டி அடித்தல், குருவின் பின்னால் நிழலைப் போலவே நின்று சச்சிதானந்தனாகத் தேவிக்கு உபசரித்து வென்று உணர்வது சிரவணமாகும். அப்படி உணர்ந்ததையும் விட்டுப் பிறவி நோய் தீர்த்து நிற்றல், அப்படி நிற்கும் பொழுதும் எழுகின்ற ஆசைகளை விடுத்துக் குருவினது உபதேசப்படி நடத்தல், உலகக் காரியங்களை விட்டதற்குக் கலங்காமல் இருத்தல், அதன்கண் நிலைத்து நிற்றல் என்னும் பத்துத் தன்மைகளையுடையது நியமம். இமயத்திற்கும், நியமத்திற்கும் திருமூலர் பத்துப் பத்துத் தன்மைகளைக் குறிப்பிடுவர். திருமூலர் பாடலில்,

**“தூய்மை அருள் ஊன்சுருக்கம் பொறை செவ்வை**
**வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றவை**
**காமம் களவு கொலையெனக் காண்பவை**
**நேமிஈர் ஐந்தும் நியமத்த கனமே”.**[75]

தூய்மை, கருணை, குறைந்த உணவு, பொறுமை, நேர்மை, உண்மை, உறுதியுடைமை ஆகியவற்றை வளர்த்தலும், மற்ற காமம், களவு, கொலை போன்ற குற்றங்களைச் செய்யாமல் பத்துத் தன்மைகளையும் உடையவர் நியமத்தில் அடங்குவர். யோகம் பற்றிய குறிப்புகள் தொல்காப்பிய நச்சினார்க்கினியர் உரையில் இடம் பெற்றுள்ளன. வாகைத் திணைக்குரிய உரையில் பொது இலக்கணம் கூறும்போது, “யோகம் செய்வார்க்குரிய எட்டு அங்கங்களையும் குறிப்பிடு கின்றார். இயமம் என்பது பொய், கொலை, களவு, காமம், பிறர் பொருளை விரும்புதல் முதலான ஐந்து வகைகளையும் விடுதலை அடக்கியது எனவும், நியமம் என்பது பெற்ற பொருட்களைக் கண்டு மகிழ்தல், வெறுக்கத்தக்கவற்றை மிகுதியும் வெறுத்தல், கற்க வேண்டியவற்றைக் கற்றல், தூய்மை உடையோராய் இருந்து பூசை முதலான இறைவழிபாட்டினை விடாமல் செய்தல், தனது குருவுக்குத் தட்சணைக் கொடுத்துக் கற்றல் என்னும் ஐந்தும் ஆம்”.[76] என்றும் கொல்லாமை, பொய்யாமை, கல்லாமை, பொறிவழிச் செல்லாமை, ஏலாமை ஆகிய ஐந்தும் யோகாசனத்தில் ‘நியமம்’ என்னும் பெயர்

பெற்றுள்ளன என்றும் தூய்மை, மகிழ்வு, அறநூல்களைக் கற்றல், தவம், இறைவனிடம் தன்னை ஒப்படைத்தல் முதலானவற்றை உடையவன் நியமத்தன் என்றும் கூறுவர்.

### 3.ஆசனங்கள் (இருக்கை)

ஆசனம் என்பது 'இருக்கை' என்றும் பொருள்படும். உடலிலுள்ள நாடி, நரம்பு, இடுப்பு, மூட்டுகள் முதலிய உறுப்புகளைச் சீராக இயங்கச் செய்யப்படும் முறையாகும். இவற்றில் பல ஆசனங்கள் உள்ளன. இதில் பத்மாசனம், சுகாசனம், பத்திரசனம், குக்குட ஆசனம், சிம்மாசனம் என்பன உடலிலுள்ள குறைபாடுகளை நீக்க தற்காலத்தில் நோய்களுக்கு ஏற்பவும் அதனை நிவர்த்தி செய்யவும் தகுந்த ஆசனங்களைக் கூறியுள்ளனர். உடலினை நிலைப்படுத்த இந்த ஆசனம் மிகுதியாகப் பயன்படும். நிலையாக ஓரிடத்தில் நில்லாத மனத்தினை, உடலை, நிலைப்படுத்துவதன் மூலம் ஓரளவு நிலைக்குக் கொண்டு வரமுடியும். இதனை,

**"நிற்றலிருத்தல் கிடத்தல் நடத்தலென்**
**றொத்த நான்கி னொல்கா நிலைமையோ**
**டின்பம் பயக்கும் சமய முதலிய**
**வந்தமில் சிறப்பினா சனமாரும்".**[77]

என வரும் நூற்பாவால் நச்சினார்க்கினியர் விளக்குகிறார். உரோமமுனிவர் மூச்சறிந்த வடிவே யோகம் என்று கூறி ஐந்து பாடல்களில் கோத்திகா ஆசனம், ஒட்டியான பந்தம், பத்திர ஆசனம், முத்திராசனம், கோமுகாசனம், வீராசனம், பற்பாசனம், மயூராசனம், சுகாசனம் முதலான ஆசனங்களின் அமைப்பு முறைகளையும் கூறியுள்ளார். சித்தர் ஞானக் கோவையில் தொகுக்கப்பட்ட பாடல்களில் ஆசனங்கள் மிகுந்த செய்திகள் இடம் பெறவில்லை. திருமூலர் திருமந்திரத்தில் மிகுதியான ஆசனங்கள் உண்டு என்று குறிப்பிட்டு எட்டு ஆசனங்களைக் குறிக்கின்றார். பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி, சொத்திரம், பத்திராசனம், குக்குடாசனம், சிம்மாசனம் என்பவற்றின் இலக்கணங்களை மட்டும் கூறுவர்.

**"பங்கயம் அதிபரந்த பல் ஆதனம்**
**அங்குள வாம்இரு நாலும் அவற்றினுள்**

**சொங்கு இல்லை ஆகச் கவத்திகம் எனமிகத்**

**தங்க இருப்பத் தலைவனும் ஆமே".[78]**

பதுமாசனம் முதலாகப் பரந்துப்பட்ட ஆசனங்கள் அங்கு உள்ளனவாம். அவற்றுள் சோர்வு இல்லாமல் கவத்திகாசனம் முதலாக எட்டிலும் நிலைத்து இருக்கத் தலைவனாக விளங்குவர். பத்ம ஆசனத்தைக் குறிப்பிடும் போது,

**"ஓரணை அப்பதம் ஊருவின் மேல் ஏறிட்டு**

**ஆர வலித்து அதன் மேல் வைத்து அழகுறச்**

**சீர்திகழ் கைகள் அதனைத்தன் மேல்வைக்கப்**

**பார்திகழ் பத்மா சனமெனல் ஆகுமே".[79]**

என்பதில் வலது தொடையின் மேல் இடது பாதத்தையும், இடது தொடையின் மேல் வலது பாதத்தையும் உள்ளங்கால் மலர நன்றாக இழுத்துப் பொருத்தி இதன் மேல் இரு கைகளையும் மலர்த்தி வைப்பது பத்மாசனமாகும் என்கிறார்.

**4.பிராணாயாமம் (மூச்சுப்பயிற்சி)**

மூச்சினைக் கட்டுப்படுத்தல் அல்லது முறைப்படுத்தலே பிராணாயாமம் எனப்படும். மூச்சினை வசப்படுத்திக் கட்டுப்படுத்தும் பரிபூரண விஞ்ஞானக் கலை என்பர். பிராணாயாமம் என்பது வெளியே இருக்கும் காற்றை எட்டு மாத்திரை அளவு சுழுமுனை நடுவில் நிறுத்திப் பிறகு முப்பத்திரண்டு மாத்திரையளவு பிங்கலை வழியாக விடுவதாகும். இப்பிராணாயாமத்தைச் சபத்தியானங்களுடன் செய்வது சகர்ப்பம் என்றும் வழங்கப்படுகிறது. "உடலிலுள்ள வெப்பம்தான் உயிர்வாழ்க்கைக்கு அடிப்படை. அந்த அளவைத் தருவது மூலாதாரத்தில் எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்கும் குண்டலினி சக்தியே. அந்தச் சக்தியினை மென்மேலும் வலுவடையச் செய்தோமானால் அந்த அனல் எப்பொழுதும் இருக்கும். நாமும் இவ்வுடலுடன் நீண்டநாட்கள் வாழலாம். அந்தச் சக்தியினை வலுவடையச் செய்யும் முறைகள்தாம் பிராணாயாமம், ஆசனம், தியானம், போன்றவை. உடலில் அக்னி இருந்தால் மரணம் கிடையாது. மனிதர் உயிரைப் பாதுகாக்க விரும்பினால் அதில் எப்போதும் இயக்கம் ஏற்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். அதற்குப் பிராணாயாமம் அவசியம்".[80] என்ற குறிப்பினை ரா.சு.பத்மநாபன் பாரதி புதையல் எனும் நூலில் விளக்குகிறார். ஒரு

நாழிகை 360 முறை சுவாசிக்கப்படுகிறது. $2^{1}/_{2}$ நாழிகை ஒரு மணி. 60 நாழிகை ஒருநாள். ஒருநாளுக்கு 21600 முறை சுவாசிக்கப்படுகின்றது. அதில் 7200 சுவாசங்கள் வீணாக்கப்படுகின்றன. 14400 திரும்ப வருகின்றன. நடக்கும்போது 24 அங்குலங்களும், ஓடும்போது 42 அங்குலங்களும், பெண் போகம் செய்யும்போது 50 அங்குலங்களும், தூங்கும்போது 60 அங்குலங்களும், சாப்பிடும்போதும், வாந்தியாகும் போதும் 18 அங்குலங்களும் போகின்றன. அதனால் ஆயுளானது 120 வயதுக்கும் குறைய நேரிடுகின்றது. அதனைப் போக்கி நீண்ட நாட்கள் வாழ்ந்து இறையுடன் கலந்திடவே இந்தப் பிராணாயாமம் செய்யப்படுகின்றது.

**பிராண வாயு**

சக்தியின் வெகு நுண்ணிய உருவங்களில் ஒன்று காற்று. மனித உடலை ஊடுருவியுள்ள இந்த உயிர்ச் சக்தி. இதன் பணிகளை ஐந்து வகைகளில் முறைப்படுத்தப்பட்டுள்ளன.

**பிராமணர்**

உயிர்ச் சக்தி எனப்படும். இதயப் பகுதியில் அசைந்து சுவாசத்தைக் கட்டுப்படுத்துகிறது.

**அபானன்**

வயிற்றின் கீழ்ப்பகுதியில் அசைந்து மலம், சிறுநீர் இவற்றை வெளியேற்றும் பணியைக் கட்டுபடுத்துகிறது.

**சமானன்**

சீரண நெருப்பை மூட்டிச் சீரணத்திற்கு உதவுகிறது.

**உதான**

மார்புப் பகுதியில் இருந்து கொண்டு காற்று மற்றும் உணவு உட்கொள்வதைக் கட்டுப்படுத்துகிறது.

**வியானன்**

முழுஉடலையும் ஊடுருவிச் சென்று உணவு மற்றும் காற்று இவற்றில் இருந்து பெறப்படும் சக்தியை உடல் முழுவதும் பரவச் செய்கிறது.

நாகன் - வயிற்றிலுள்ள இறுக்கத்தை ஏப்பத்தின் மூலம் சரிசெய்கிறது.

**கூர்மன்**

இது கண்களுக்குள் தூசு மற்றும் அதிகமான ஒளி அலை புகுவதைத் தடுக்கும் வகையில் கண்ணிமைகளின் அசைவுகளைக் கட்டுப்படுத்துகிறது.

**கிருகரன்**

இது நாசித் துவாரங்களிலோ, தொண்டையின் உள்ளோ பொருட்கள் உட்புகுவதைத் தும்மல் மற்றும் இருமல் மூலம் தடுக்கிறது.

**தேவதத்தன்**

இது களைத்துப் போன உடலுக்குள் கொட்டாவி மூலம் பிராணவாயுவைச் செலுத்தி அனுப்புகிறது.

**தனஞ்சயன்**

இ∴து இறந்த பின்னரும் உடலுக்குள் இருந்து கொண்டு சில சமயங்களில் உடலை ஊதி உப்ப வைக்கிறது. இது பத்து வாயுக்கள் எனப்படும்.

**பிராணாயாமம் செய்யும் முறைகள்**

அதிகாலையில் எழுந்து இறைவனை வணங்கி, குரு சொல்லிக் கொடுத்த ஆசனத்தில் கிழக்கு முகம் நோக்கி அமர்ந்து, நாக்கினை உள்மடித்து உண்ணாக்கைத் தொடும்படிச் செய்யவேண்டும். குரு சொல்லிக் கொடுத்த அளவுகளின்படி, அவரது முறைகளைப் பின்பற்றி இடகலையில் பூரித்துப் பிங்கலையில் இரேசிக்க வேண்டும். இன்றைய கும்பகம் வேண்டாம் என்கின்றனர். நன்கு பயிற்சி செய்தபின்பு கும்பகம் செய்தலே நலமாகும். வாசியோகப் பயிற்சிக்கு முன் ‘நாடிசுத்தி’ செய்யப்படவேண்டும். பூரக, கும்பக, இரேசக அளவுகளைத் திருமூலர் பதினாறு, அறுபத்திநாலு, முப்பத்திரண்டு என்றும், அகத்தியர் பதினாறு, கட்டு, நான்கு என்றும், வாலைச்சாமி முப்பத்திரண்டு, அறுபத்தினான்கு, பதினாறு என்றும் குறிக்கின்றனர். அவரவர் அனுபவப்படி மாத்திரைகளையும் அங்குலத்தையும் பயன்படுத்துவதால் இந்த மாறுபாடு எழுகிறது. பூரிக்கும் பொழுது ‘ஹம்’ எனும் ஒலியினையும், இரேசிக்கும் பொழுது ‘சம்’ எனும் ஒலியினையும் பயன்படுத்துவர். சிலர் அ, இ என்றும் சிலர் சீ, சி என்றும் சிலர் வங், யங் என்றும் பயன்படுத்துவர். இவ்வொலியினையே ‘அஜபா’ என்றுரைப்பர். வாய்விட்டுச் செபிக்கக் கூடாது

என்பது அதன் பொருள்”.[81] இவ்வொலியினை அகத்தியரும், காகபுசுண்டரும் குறிப்பிடுகின்றனர். தொடக்கக் காலத்தில் அதிகாலையிலும், சூரியன் மறைகின்ற மாலையிலும் தவறாது பிராணாயமம் செய்தல் வேண்டும் எனும் வாசியோக முறையினை அகத்தியர்,

**“பாரப்பா உதயத்தி லெழுந்திருந்து**
**பதறாமல் சுழுமுனையில் மனத்தைவைத்துக்**
**காரப்பா பரிதிமதி யிரண்டு மாறிக்**
**கருவான சுழுமுனையி லுதிக்கும்போது**
**தேரப்பா அண்ணாக்குள் நின்றுகொண்டு**
**தியங்காமற் சுழுமுனைக்குள் அடங்கும்பாரு**
**சீரப்பா பதினாறில் எட்டும் நான்கும்**
**சிதறாமல் மூன்றுமொன்றாய்ச் சேர்ந்து போமே”.**[82]

இக்கருத்தை மையப்படுத்தித் திருமூலர் கூறுகையில்,

**“ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்**
**காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை**
**காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்**
**கூற்றை உதைக்கும் குறியது ஆமே”.**[83]

இடது வலது என இரு புறங்களிலும் காற்றை உள்ளே இழுக்கும்போது நமது சுவாசப்பைகள் விரிவடைகிறது. இக்கணக்கை அறிந்தவர்கள் மக்கள் கணக்கில் குறைந்தவர்களே. இதனையறிந்து மூச்சுப் பயிற்சி செய்பவர்கள் நீண்டநாள் வாழ்வார்கள். எமனுக்கும் நாம் பயப்பட வேண்டியதில்லை. இதில் கணக்கு என்றால்,

**“வாமத்தில் ஈரெட்டு மாத்திரை பூரித்தே**
**ஏமுற்ற முப்பத்திரண்டும் இரேசித்துக்**
**காமுற்ற பிங்கலை கண்ணாக இவ்விரண்டு**
**ஓமத்தால் எட்டெட்டுக் கும்பிக்க உண்மையே”.**[84]

இப்பாடலில் இடப்பக்கமாக 16 மாத்திரை நேரம் மூச்சையிழுத்து 32 மாத்திரைகளை உள்ளே அடக்கி வைத்திருந்து வலப்பக்கமாக மூச்சை மெதுவாக 64 மாத்திரை நேரம் மெதுவாக விடவேண்டும். இம்முறையே

கணக்காகக் கூறி, இதனைச் செய்ய வழியும் கூறுகிறார். அதனால் கடைப்பிடிப்பவர் அடையும் பயனாக,

**"அண்டம் சுருங்கில் அதற்கோர் அழிவில்லை**
**பிண்டம் சுருங்கில் பிராணன் நிலைபெறும்**
**உண்டி சுருங்கில் உபாயம் பலவுள**
**கண்டம் கறுத்த கபாலியும் ஆமே".**[85]

இப்பாடலில் ஒரு மனிதனுடைய உடல் இளைத்துவிட்டது என்று வருந்த வேண்டியதில்லை. உடல் இளைத்தால் நாம் நீண்ட நாள் வாழலாம். உடலுக்கு அழிவில்லை. வயிறு சிறுத்து இருந்திருந்தால் மூச்சுவிட ஏதுவாகும். உணவு குறைத்து உண்ணும்போது உடல் எளிதாக இயங்க இயலும்.

**காயப்பால்**

இந்த வாசியோகமே பரப்பிரம்மம் ஆக்குவது. வாசியோகத்தால் எழும் குண்டலினி ஆறு ஆதாரங்களையும் கடந்து மேற்செல்லும் போது உடலில் ஏற்படும் வெப்பத்தினால் காயப்பால் உருகி உண்ணாக்கின் வழி கீழே ஒழுகும். நாக்கினை உள்மடித்து வாசியோகம் பயிலும்போது அப்பாலானது நாவினையடைய யோகியர் அதனைக் சுவைத்துக் காயசித்தி அடைவர். அந்தப் பாலினால் ஆன்மப் பசியானது தணியும். ஆன்மா வலுவடைந்து செயற்கரிய செயல்களைச் செய்யும் நன்மை பெறுவர். காயப்பாலினை மதியமுதப்பால் என்றும் கூறுவர்.

காயப்பாலின் வெட்டவெளியாகிய உடலான தலை மண்டையில் வளருவது; தொய்வில்லாதது; தன்னை உண்பவர்களுக்கு நாள்தோறும் பசியினைப் போக்குவது; ஆட்டுப்பால், மாட்டுப்பால் போல நாறுகின்ற தன்மையற்றது; அண்ணாக்கின் மேல் வளருவது; அவ்விடத்தில் ஊறுவது; விண்ணாட்டிலும் இதனைப் போன்ற பாலில்லை; இந்தப் பால் நம்மை இறவாமல் காக்கும்; வேகாமல் தடுக்கும்; தொல்லை வினைகளைப் போக்கும்; நெடுநாட்கள் இருக்கச் செய்யும்; கொல்ல வருகின்ற எமனை விலக்கும்; அந்நிலையில் இறப்பும் பிறப்பும் அற்றுவிடப் பரசிவம் தோன்றும்; நிலையுள்ள 'மெய்' கிட்டும். யோகியர் இதுபோன்ற நிலையினை அடையவே விரும்புவர். நாள்தோறும்

இப்பாலினை உண்டு இருப்பர். இதன் காரணமாகவே மனித உடலை விரும்புவர். பத்திரகிரியார் இந்நிலையை,

**"மூலநெருப்பை விட்டு மூட்டி நிலாமண்டபத்தில்**

**பாலை இறக்கி உண்டு பசி ஒழிவது எக்காலம்?".**[86]

என்று பாடி காயப்பாலை உண்டு பசி நீங்க வேண்டும் என்ற தம் கருத்தைப் புலப்படுத்துகிறார். யோகியானால் சடத்தைப் போற்று, ஞானியானால் சடத்தை நீக்கு என்ற கருத்து உடையவர்களாக இருந்ததனால் பட்டினத்தார் இந்த உடலொடு இருப்பது அருவருப்பே என்கிறார். திருவுந்தியார் பாடலில்,

**"காயத்துள் மெய்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே**

**மாயக்கள் உண்டாரென்று உந்தீபர**

**வறட்டுப் பசுக்கள் என்று உந்தீபர".**[87]

எனும் பாடலில், உடலின்கண் இருக்கின்ற மெய்ஞ்ஞானமாகிய மதியமுதப் பாலினை உண்ணாமல் உலகில் கிடைக்கின்ற மாயக் கள்ளினை மக்கள் உண்டு வீணாகக் கெடுகின்றார்கள். இவர்கள் வறட்டுப் பசுக்கள் என்கிறார். மனித உடலில் பால் இருக்கின்றது. அந்தப் பாலினைக் கறந்து உடலினை இறவாமல் காக்க வேண்டும். மனித உயிர்கள், ஆன்மாக்கள் 'பசுக்கள்' என்ற சைவ சித்தாந்தத்தில் கூறப்பட்டுள்ளன. பசுக்களில் ஆண்பசு, பெண்பசு என்ற வேறுபாடில்லை. மனித உடல் அமைப்பு ஆண்கள் என்றும், பெண்கள் என்றும் கூறப்பட்டாலும் ஆன்மாக்கள் எனும்போது 'பசு' என்ற பொதுப் பெயரே அமைகின்றது. எனவே, எவரும் முறையானப் பயிற்சியினை விருப்பமுடன் செய்தால் காயப்பாலினைக் கறக்கலாம். காயப் பாலினால் சித்திகள் கிட்டும்; அந்தச் சித்திகளை அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் எனும் எட்டுக்குள் அடக்குவர். அவை.

"1. **அணிமா:** உடலை அணுவைப் போல் சிறிதாக்கிக் கொள்ளுதல்.

2. **மகிமா:** உடலை மேருவைப் போல் பெரிதாக்கிக் கொள்ளுதல்.

3. **கிரிமா:** கிரி - மலை. மலை போன்று உடலைத் திடமாக்கிக் கொள்ளுதல்.

4. **இலகிமா:** இலகு - இலேசானது. உடலைப் பஞ்சு போல் காற்றைவிட இலேசாக்கிக் கொள்ளுதல்.

5. **பிராத்தி:** எதையும் நினைத்த மாத்திரத்தில் எவ்வுலகமும், எவ்விடமும் அடைதல்

6. **பிரகாமியம்:** பிறர் உடலில் புகுந்து வெளியேறுதல்.

7. **ஈசத்துவம்:** ஒன்றனை அல்லது ஒரு செயலை உருவாக்கி (படைத்தல்) பாதுகாத்து (காத்தல்) நிறைவு செய்யும் (அழிக்கும்) எனும் ஐந்தொழிலையும் செய்தல்.

8. **வசித்துவம்:** உலக உயிர்களைத் தன்வயப்படுத்தி தன் ஆளுகைப்படி நடக்கச் செய்தல். ஏழுவகைத் தோற்றமாகிய தேவர், மானிடர், நரகர், மிருகம், பறப்பன, ஊர்வன, மரம் முதலியவற்றைத் தன்வயப்படுத்தல் என்னும் தன்மைகளை உடையன.

**பிராணாயமம் பயிற்சி முறை**

பிரணாயமத்தின் முறையில் அதிகாலையில் குரு கற்றுக் கொடுத்த ஆசனத்தில் அமர்ந்து நாக்கினை உள்மடித்து இடகலையில் பூரித்துப் பிங்கலையில் இரேசித்தல், நாடி சுத்தி செய்தல், பதினாறு மாத்திரை உள்ளிழுத்து முப்பத்திரண்டு மாத்திரை வெளியிடல், பூரித்து இரேசிக்கும் பொழுதே நாதத்தில் நினைவினைச் செலுத்துதல், இடகலை நாடியின் உள்ளே காற்றினைப் பூரித்து மூலத்தில் உச்சந்தலையினைத் தொட்டுத் தலையினைச் சுற்றி மறுபடியும் பிங்கலையின் வழியே இரேசித்தல், அப்பொழுது மூலாக்கினியாகிய பாம்பு எழுந்து நாடிகளின் வழி மீண்டும் மூலத்தினை அடையச் செய்தல் ஆகியவை பிரணாயாமத்தின் நிலைகளாகும்.

இவ்வாறு படிப்படியாகச் செய்து கொண்டே வந்து, இதில் முன்னேற்றம் அடைந்த பின்பு கும்பகம் செய்யவேண்டும். அப்படிச் செய்து வரும்போது உடலில் வியர்வை வெளிப்படும்; நடுக்கம் தோன்றும்; உடல்மேல் எழுவதுபோல் தோன்றும்; இதில் குறியாகப் பிராணாயாமத்தின் பயன்களை முழுமையாக அடையமுடியும். பிராணாயாமம் பயிற்சிகளைப் பயிலும் போது உடல் வியர்க்குமானால் ‘அதமம்’, என்றும், நடுங்குமானால் ‘மத்திமம்’ என்றும், தரையை விட்டு எழும்புமானால் ‘உத்தமம்’ என்றும் கூறப்படுகிறது.

**பிராணாயாமத்தைக் கடைப்பிடிக்காதவர் நிலை**

திருமூலர் குறிப்பிடுகையில்,

**"கூடம் எடுத்துக் குடிபுக்க மங்கையர்**
**ஓடுவர் மீளுவர் பன்னிரண்டு அங்குலம்**
**நீடுவர் எண்விரல் கண்டிப்பர் நால்விரல்**
**கூடிக் கொளின் கோல அஞ்செழுத்து ஆமே".[88]**

எனும் பாடலில் நடனமாடக் கூடிய இரு மங்கையர் ஒரு மேடையில் நடனமாடும்போது 12 அங்குலம் கால்களைப் பின்னே வைப்பதுமாக ஆடிக்கொண்டே செல்வர். அவ்வாறு செய்கையில் மேடையை விட்டுக் கீழே விழநேரிடும். இவ்வாறு இல்லாமல் முன்னேயும் பின்னேயும் மாறிமாறி வைத்து ஆடினால் கீழேவிழ நேரிடாது. இதுபோல நாம் பன்னிரண்டு அங்குல மூச்சு வெளியே விடவும். எட்டு அங்குல மூச்சு உள்ளே இழுத்துக் கொண்டே இருப்பதால் நம்முடைய சுவாசப்பைகள் முற்றிலும் விரிவடையாமல் சுவாசிக்கும் திறனும் குறைந்து கொண்டே வருகிறது. இப்படி நீண்டநாள் வாழும் மனிதனுக்குச் சுவாசம் உள்ளே செலுத்துவதே திருவைந்தெழுத்தின் வடிவாக எடுத்துக்காட்டுகிறார்.

**"உச்சியில் ஓங்கி ஒளிதிகழ் நாதத்தை**
**நச்சியே இன்பம் கொள்வார்க்கு நமனில்லை**
**விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்குத்**
**தச்சும் அவனே சமைக்க வல்லானே".[89]**

எனும் பாடலால் சிரசின் மேல் பிரமத்தில் நீங்கி விளங்கும் நாத ஒலியை விரும்பி இன்பங்களைப் பெற்றவர்களுக்கு இறப்பில்லை. மேலான விரித்த சுடராகவுள்ள அக்கினி, சூரியன், சந்திரன் ஆகிய மூன்று உலகினுக்கும் அச்சதா சிவமூர்த்தியை இணைத்து அருள்புரிகிறார். அதனைக் காணவிரும்பி கண்டு இன்புறுவோர்க்கு இறப்பில்லை.

**பிராணாயாமத்தின் பயன்கள்**

உரோமமுனிவர் குறிப்பிடுகையில், "பாவங்கள் அகலும்; மும்மலங்கள் அழிந்து போகும்; நாடிகள் சுத்தமாகும். ஆதாரம் சித்தியாகும்; தசநாதம் கேட்கும்; பூரணமும் காரணமும் பொருந்தும்; சொரூபனில் பிராணக்கலை சொலிக்கும்; பிராணாயாமம் வெற்றி அடைந்ததெனில் பேரண்டம்தான் தானாகும்; தன்னைத்தானே அறியும் நிலையில் தொண்ணுற்றாறு தத்துவங்களையும் அறியலாம்".[90] என்று பரிபாசையில் குறிப்பிட்டுள்ளார்.

முதியவர்களும் இளமை பெற்று நரை, திரை நீங்கிச் சிவந்த மேனியுடன் திகழ்வர்.[91] நோய்களற்றுச் சித்தியும் எய்துவர்.[92] இறவாப் பெருநிலை அடைந்து இறையுடன் வாழ்வர்.[93] ஐம்பூதங்களின் வடிவங்களைக் காண்பதுடன் பரப்பிரமமும் ஆகுவர்.[94] தவம் கைகூடும் சிவக்காட்சி காண்பர்.[95] நாம் சிவனில் ஒன்றாகலாம்.[96] முத்தி பெறலாம்.[97] காயப்பாலினை உண்ணுவதால் காயசித்தி பெற்றுச் சீவனைச் சிவத்தன்மையாக முடியும்.[98] தவமயக்கம் ஒழிந்து தீயும் காற்றும் மூலத்தினின்றும் எழும்பும்.[99] இப்பிராணாயாமத்தின் வழிப்பெறும் பயன்களாகத் திருமூலர், திருமந்திரமும்,[100] இப்பிராணாயாம யோகத்தினையே 'குண்டலினி யோகம்' என்றும் கூறுவர். மூலமாகிய நெருப்பை மேலெழச் செய்து சந்திர மண்டலத்தில் உண்டாகும் பாலை இறக்கியுண்டு பசியாற வேண்டும்.[101] குண்டலினியை உணர்வால் எழுப்பிச் சுழுமுனையின் முகப்பைத் திறக்குமாறு செய்து மூலாதாரத்தில் உள்ள குண்டலினியை எழுப்பிக் கபாலத்தில் முட்டச் செய்து, அங்குள்ள ஒளிமயமான சிவனை இரேசகபூரகக் கும்பகத்தான் நிறுத்தி நான்கு நாழிகை அளவேனும் இதயத்தில் நினைக்க வேண்டும்.[102]

குண்டலினியை பட்டினத்தார் பூரணமாலையில் 'வாலை'[103] எனவும், அழுகணி 'கண்ணம்மா'[104] எனவும், அழைப்பர். மூலத்துள் அமர்ந்துள்ள வாலையைப் போற்றும் அறிவு வேண்டுகிறார் பத்திரகிரியார்.[105] மூலப்பகுதியில் இருந்தும் எழுந்த குண்டலினி சக்தி நடுவில் கம்பமாயுள்ள சுழுமுனை வழிச் சென்று மேலைப் பகுதியாகிய உச்சந்தலையில் விளையாடுவதைக் காணவேண்டும் என்கிறார் அழுகுணி.[106] மூலக்கனலை மூக்கு நுனியே உள்ள நெற்றிப் புருவநடுவில் சேர்க்க வேண்டும் என்றும், கீழைத் தலமான உச்சியில் ஒளிரும்படிச் செய்து, அதனால் ஞானசொரூபம் கண்டு இறையுடன் சேர்ந்தோம் என்றும் பாடுகிறார்.[107] பாம்பாட்டிச்சித்தர். காலனை வெற்றி கொள்ளுமாறு செய்பவள் வாலைப் பெண்ணே என்பர்.[108] கொங்கணர். குண்டலினி சக்தி சொரூபமாக உள்ளது. அதனை எழுப்பிச் சுழுமுனையில் ஏற்றிப் பிடரியின் வழி

செலுத்தி நெற்றிப் புருவநடுவிலுள்ள சிவனைக் காணவேண்டும்.[109] என்று காகபுசுண்டரும் குறிப்பிடுகின்றனர்.

சட்டைமுனி, “மூலாதாரத்திலுள்ள குண்டலினி சக்தியினைப் பிராணாயாமத்தினால் கிளப்பினால் சூரியனது கோடிக்கதிர்களைப் போல ஒளி தோன்றும். கண்டமாகிய விசுத்தியில் ‘அங்’ என்று ஊணினால் மௌனத்தை நாட்டினால் சாம்பவியினைக் கண்டு கொள்ளலாம். அப்படிக் காண்பவனே சிவயோகி”.[110] இதுவே யோகமார்க்கம் என்பர்.

## 5. பிரத்தியாகாரம் (உடலிலுள்ள சிறப்பு இயக்கம்)

பிராணாயமத்தினால் உட்கொண்ட வாயுவினை நிலைநிறுத்திச் செயலற்றுப் புறக்காரிய நிகழ்ச்சிகளை ஒதுக்கி இருத்தல் பிரத்தியாகாரம் ஆகும்.

**“பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாம**
**லொருவழிப் படுப்பது தொகைநிலை யாமே”.**[111]

என்பது தொல்காப்பியர் பொருளதிகார நூற்பாவிற்கு நச்சினார்கினியரின் உரையாகும். எல்லாப் பதங்களினின்றும் நீங்கி, மனத்தில் எந்தப் பற்றினையும் நினையாமல் அறிவுப் பாதையில் செல்ல வேண்டும். உலகச் செயல்முறைகள் அனைத்தும் நரகம் என்று எண்ணிச் செயல்களையெல்லாம் ஒதுக்கி விடுதல் வேண்டும். உலக நிகழ்ச்சிகளை அவன் வெறும் பார்வையாளனாகவே பார்க்கின்றான் என்று நினைத்துக் கொள்ளவேண்டும். இந்த உலகம் பொய்யானது என்பதால் உலக முயற்சிகளிடத்தும் விளைவுகளிடத்தும் ஆசை வைத்தல் கூடாது. நிரந்தரத்தினையே எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். ஒன்றான ஒரு பொருளோடு தன்னை முழுமையாகவே மாறிவிட வேண்டும். இதுவே பிரத்தியாகாரம். இதனை,

**“நிரந்தரமு நினைவாய்**
**காரண காரியங்க ளெல்லாந் தளிர்த்துப் போட்டு**
**ஒன்றான வொரு பொருளாய் நின்றாயானால்**
**உத்தமனே பிரத்தியா காரமாச்சே”.**[112]

எனக் காட்டுகின்றார். சட்டைமுனி, புற உலக நிகழ்ச்சிகளை ஒதுக்குதலையே பிரத்தியாகாரம் என வழங்குவர். உடலில் மூல ஆதாரங்கள் என்று ஆறு ஆதாரங்களைக் குறிப்பிடுகிறார் திருமூலர்.

1. மூலாதாரம் (குதம்).
2. சுவாதிட்டானம் (தொப்புள்)
3. அநாகதம் (இதயம்)
4. மணிபூரகம் (நாபி)
5. விசுத்தி (அடிநா)
6. ஆக்ஞை (நெற்றி) என்பனவாகும்.

## 1. மூலாதாரம் (குதம்).

மூலாதாரம் என்பது மலங்கழி வாயிலுக்கும் கருக்கழி வாயிலுக்கும் இடையில் முக்கோண வடிவில் இருப்பது. இம்முக்கோணத்தில் செந்நிறமான நான்கு இதழ்த் தாமரைமலர் ஒண்றுண்டு. அதில் வட்டவடிவான குண்டலினி சக்தியுள் செவ்வொளி தோன்றும். எழுத்தோசையாகிய நாதமே இதற்கு வட்டவடிவாகக் கொள்ளப்படுவதால் குண்டலினி எனப் பெயர்பெற்றது. 'கோலித்த குண்டலனீ' என்பதால் வட்டமாக வளைந்து நிற்பது உலகியலில், அறிவு புருவநடுவாகிய மேலிடத்தும் அறியாமல் மூலதாரமாகிய கீழிடத்திலும் உள்ளதாகக் கருதபடுவதால் குண்டலிப் பாம்பு தனது அறிவுக்கு நிலைக்களனாகிய தலைமை அறியாமைக்கு இடமாகிய நெற்றியிலும் வைத்துத் தலைகீழாகக் கிடந்து உறக்கத்தில் ஆழ்ந்துள்ளது. இவ்வாறு தலைகீழாகச் சுருண்டு கிடக்கும் பாம்பை மூலாதாரத்தில் அடங்கியுள்ள அக்கினியைத் தீக்கடைக்கோல் கொண்ட தீயை எழுப்புவதுபோல், பிரணாயாம பிரத்தியாகாரங்களால் மூண்டெழுந்து தாக்க அக்குண்டலிப் பாம்பு கண் விழித்து எழுந்து தலை மேலாகவும் (சுழிமுனையில்) வால் கீழாகவும் சுழன்று இயற்கை நிலையில் நிற்கும் என்பதை யோகநூலில் திருமூலர் எடுத்துக்காட்டுகின்றார்.

## 2. சுவாதிட்டானம் (தொப்புள்)

இறைவனது அருவுருவத் திருமேனியாகிய இலிங்கத்தை வழிபடுவது போல, அகத்தே யோகத்தில் பேரொளிப் பிழம்பாகக் கொண்டு

தியானிக்கப்படும். ஆறு ஆதாரங்களிலும் நிறைந்து நிற்பினும் - குறிப்பிட்ட குறி இடமே அ∴து இருக்கும் இடம் என்பதால், ஆறு இதழ்த் தாமரை வடிவமாகிய இது சுவாத்திட்டானாம் எனப் பெயர் பெற்றது.

சோதியின் இயல்பு கீழிருந்து மேல்நோக்கி எழுவதாதலின் பிரத்தியாகாரப் பயிற்சியால் இதுமேல் நோக்கி வளர்ந்து காட்டும் மனத்தை மூலாதாரத்தில் நிறுத்திப் பயின்றபின், இவ்விடத்து நிறுத்திப் பயிலவேண்டும். இங்குக் கீற்றுப் போன்று விளக்கொளி புலப்படும். இதனையே மகிழ்ந்து தொடர்ந்து பயின்றால் அட்டமாச்சித்திகளையும் தரும் சித்தயோகம் தானே வந்து அடையும். உடம்பிற்கும் அழிவில்லை.

### 3. அநாகதம் (இதயம்)

பன்னிரண்டு இதழ்த் தாமரை வடிவாகிய இருதயத் தானம். இதற்கு வரவற்றது எனப் பொருள். மனத்தின் இடமாதலின் இங்கு மனத்தை ஒருநிலைப்படுத்தித் தியானிக்க வல்லோமாயின் அட்டமாசித்திகளைப் பயனாகவுடைய ‘ஹடயோகம்’ சித்திக்கும். உடம்பு, நரை, திரை, மூப்பு இன்றி நெடுங்காலம் வாழவல்ல யோகமாகிய ‘இராஜயோகம்’ சித்திக்கும். இன்று உலகில் யோக அமைப்புகள் பல இவ்வழியையே கடைப்பிடிக்கின்றன. இதையெல்லாம் ஞானத்தைப் பயிலாதது. அதற்குத் தடையாகும். ஆதலின் சிவயோகமல்லாத பிற யோகங்களை ஞானத்தைப் பெற விரும்புவோர் நாடுவதில்லை.

### 4. மணிபூரகம் (நாபி)

உத்தித் தானமே மணிபூரகம். வாயுவைக் குறிக்கும் இடமாதல் இதற்கு மணிபூரகம் எனப் பெயராயிற்று. மனத்தை இவ்விடத்தே நிறுத்திப் பயிலவேண்டும்.

### 5. விசுத்தி (அடிநா)

பதினாறு இதழ்த் தாமரை வடிவாகிய கண்டனத் தானம். இதற்கு மிக்கத் தூய்மை என்றுபொருள். ஞானநெறியில் தலைப்படுவார். சுவாதிட்டானத்தே

பெற்ற கீற்றொளியைச் சோதிச் சுடரொளியாக விளக்கத்தக்கது. பேரானந்த இன்ப உணர்வு அனுபவம் அங்குக் கிடைத்து ஞான நாட்டம் மிக்கவராகத் திகழ்வர்.

**6. ஆக்ஞை (நெற்றி)**

ஈரிதழ்த் தாமரை வடிவாகிய ஆக்ஞைகளுக்குப் புருவம் நடுவே நிலைக்களன். அறிவிற்கு நிலைக்களன் என்பது இதன் பொருளாகும். இலாடஸ்தானம் என்றும் கூறுவர். மாணவனே விசுத்திக்கு மேலும் செல்ல விரும்பினால் கும்பகத்தால் நின்ற வாயு கீழே போகாமல், எருவாய் புழையை இறுக அடைந்து அதாவது அவ்வாயு மேல் அண்ணத்திலுள்ள துணை வழியாக மூக்குத் துளையை அடைந்து புறப்படுமாறு மனத்தைத் துளையிடத்தே வைத்துப் புருவ நடுவில் நிற்கும். அக்காற்று, கண், காதுகள் வழியாகவும் புறப்படும் என்பதால் கண்களை இமைக் கொட்டாமல் விழித்திருக்க வேண்டும். இதனையே பாடல்களாக,

**1. இறைவன் குடிப்புகுதல்**

**“நாபிக்குக் கீழே பன்னிரண்டு அங்குலம்**
**தாபிக்கும் மந்திரம் தன்னை அறிகிலர்**
**தாபிக்கும் மந்திரம் தன்னை அறிந்தபின்**
**ஊவிக்கொண்டு ஈசன் குடிபுகுந்தாயே”.**[113]

உந்திக்கு கீழே 12 அங்குலத் தொலைவில் உள்ளது மூலாதாரம். அங்கே நிறுத்தித் தியானிக்கும் மந்திரத்தை மக்கள் அறியார். அதை அறிந்தால் இறைவன் நம் உடம்பினுள் குடிப்புகுவான்.

**2. குண்டலி சக்தி**

**“மூலத்து இருவிரல் மேலுக்கு முன்நின்று**
**பாலித்த மேனிக்கு இருவிரல் கீழ்நின்று**
**கோலித்த குண்டலி உள்எழு செஞ்சுடர்**
**ஞாலத்து நாபிக்கு நால்விரல் கீழதே”.**[114]

மூலாதாரத்திற்கு இரண்டு விரற்கிடை மேலுமாக, குறிக்கு இரண்டு விரற்கிடை கீழுமாக, சுருண்ட வடிவத்தில் ஒரு கடல் உள்ளது. அது குண்டலி ஆகும். அ∴து உந்திக்கு நான்கு விரற்கிடை கீழ் உள்ளது.

### 3. பெரியயோகம்

**"நாசிக்கு அதோமுகம் பன்னிரண்டு அங்குலம்**
**நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்**
**மாசித்த மாயோகம் வந்து தலைப்பெய்யும்**
**தேகத்துக்கு என்றும் சிதைவு இல்லையாமே".**[115]

மூக்கிற்குக் கீழே 2 அங்குலத் தொலைவில் உள்ளது. நெஞ்சப் பகுதியில் 'அநாதகம்' என்னும் ஆதாரம் உள்ளது. அதில் சிந்தையை நிறுத்தினால் பெரிய யோகநிலை கைகூடும். உடம்பு அழியாது.

### 4. ஒளிக்காட்சி

**"சோதி இரேகைச் சுடரொலி தோன்றிடின்**
**கோதில் பரானந்தம் என்றே குறிக்கொண்மின்**
**நேர்திகழ் கண்டத்தே நிலவொளி எய்தில்**
**ஓதிய தன்உடல் உன்மந்தம் ஆமே".**[116]

மின்னற்கொடி போன்று ஒளி யோகிக்குத் தோன்றினால் மேலான ஆனந்தம் விளையும். கழுத்தில் உள்ளதாகிய விசுத்தி என்ற ஆதாரத்தில் நிலவொளி தோன்றினால் உடம்பு பெருங்களிப்புக்கு இடமாகும்.

### 5. காலத்தை வெல்ல

**"மூலத் துவாரத்தை முக்காரம் இட்டிரு**
**மேலைத் துவாரத்தின் மேல்மனம் வைத்திரு**
**வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு**
**காலத்தை வெல்லும் கருத்து அதுதானே".**[117]

அபானவாயு வெளியேறும் மலவழியை அடைத்து, தலையிலுள்ள பிரமாந்திரம் என்னும் வாயிலை நினைந்து, அகவெளியில் உணர்வைச் செலுத்தினால் நீ காலத்தை வெல்லமுடியும்.

**6. குண்டலியை நினைக்க**

**“எருவிடும் வாசற்கு இருவிரல் மேலே**
**கருவிடும் வாசற்கு இருவிரல் கீழே**
**உருவிடும் சோதியை உள்க வல்லார்க்குக்**
**கருவிடும் சோதி கலந்து நின்றானே”.**[118]

மூலாதார அருகிலுள்ள குண்டலினி சக்தியைத் தியானிப்பவர்க்கு, இறைவன் அவர்தம் உணர்வில் உடம்பில் கலந்து காட்சியளிப்பான்.

**7. உனக்குள்ளே பார்**

**ஒருகால் உபாதியை ஒண்சோதி தன்னை**
**பிரித்துணர் வந்த உபாதிப் பிரிவை**
**இரைந்து உணர்வுன்னல் கரைதல் உள்நோக்கல்**
**பிரத்தியகாரப் பெருமையது ஆமே”.**[119]

மாயையின் வலிமையை ஒடுக்குதலும், சிவத்திலிருந்து உன்னைப் பிரித்துக் காணுமாறு செய்யும் தற்போதத்தைக் கரைப்பதும், அவனையே உணர்தலும், புலன்வழி நோக்காமல் உள் முகமாக நோக்குதலும் பிரத்தியாகாரமாகும்.

**8. ஒரு வகைக் குடும்பம்**

**“புறப்பட்ட வாயுப் புகாவிடா வண்ணம்**
**திறப்பட்ட நிச்சயம் சேர்ந்துடன் நின்றால்**
**உறப்பட்டு நின்றது உள்ளமும் ஆங்கே**
**புறப்பட்டுப் போகான் பெருந் தகையோனே”.**[120]

நிலையானதாகிய பரம்பொருளை உறுதியாகப் பற்றி விடாமல் நின்றால் வெளியேறிய மூச்சுக்காற்று மீண்டும் உடம்பினுள் புகாது. இதுவே ஒருவகை கும்பகம். உயிருணர்வை எய்தமுடியும். இறைவன் இவ்வுணர்வில் என்றும் இருப்பான். இரண்டு புருவங்களின் மத்தியில் இரண்டு இதழ் போன்ற ஆக்ஞை எனச் சொல்லுவர். இவ்வகையில் திருமூலர் அவ்வகை இடங்களை எளிமையாக விளக்கிக்காட்டுகிறார்.

**6.தாரணை (மன அடக்கம்)**

உடல் ஆசனங்களால் பக்குவப்படுத்தப்பட்ட பின் மனம் பிராணாயமத்தின் சுடரால் சுத்தப்படுத்தப்பட்ட பின்னர் புலன்கள் பிரத்தியாகாரத்தால் கட்டுக்குள் கொண்டு வரப்பட்ட பின்னர் பயிற்சியாளர் தாரணா என்ற ஆறாவது கட்டத்தை எட்டவேண்டும். இங்கே அவன்தான் முழுமையாக ஆழ்ந்துள்ள ஒரு தனிப்புள்ளி அல்லது பணியில் முற்றிலும் ஒருமுகப்படுத்தப்பட்டு இருக்கிறான். இந்த முழு ஈர்ப்பு நிலையைப் பெறுவதற்கு மனம் அமைதிப்படுத்தப்பட வேண்டும்.

இந்நிலையைத் திருமூலர் விவரிக்கையில், "பொறிபுலன்களில் செல்லாது அடங்கிய மனத்தினை ஒரு வசதி நிறுத்தி உள்முகமாக ஆராய்தல் 'தாரணை' எனப்படும். உயிர்ப்புப் பயிற்சியால் மூல வழியினை அடைத்து உயிர்க்காற்றை எழுப்பிப் புருவநடுவாகிய இடைவாசலைத் திறந்து, இனிது நோக்கி, அசைவின்றி இருக்கவேண்டும். மண் முதலான தத்துவங்களை ஒன்றில் ஒன்று ஒடுக்கிச் சிவபதத்தைச் சிந்தித்தல், பதங்கள் ஐந்தைப் புலன்களில் ஒடுக்கிப் புலன்களை அந்தக் கரணம் நான்கில் ஒடுக்கி, அந்தக் கரணங்களை மாயையில் ஒடுக்கி, மாயையை ஆன்மாவில் ஒடுக்கி, ஆன்மாவைச் சிவத்தில் ஒடுக்குதல்".[121] தாரணை என்பர். விளக்கத்திற்கு ஒரு பாடல் மட்டும் குறிக்கப்படுகிறது.

**"கலந்த உயிருடன் காலம் அறியின்**
**கலந்த உயிரது காலின் நெருக்கம்**
**கலந்த உயிரது காலது கட்டிக்**
**கலந்த உயிருடன் காலமும் நிற்குமே".**[122]

உடலில் உயிர் கலந்துள்ள கால எல்லையை அறியின் அக்கால எல்லை பிராணன் இயக்கத்தால் அமைந்துள்ளது. இவ்வகையான இயக்கத்தைக் கட்டி நிறுத்திவிட்டால் உயிருடன் பொருந்திய காலமும் அறிவின்றி நிற்கும். அக்கருத்தையொட்டிச் சட்டைமுனி குறிப்பிடுகையில், "மறைந்திருக்கும் மாயை, மாயை இன்பம், சுத்தசைதன்யம் இம்மூன்றையும் அறிவதே தாரணை. மாயை அழிவுக்குக் கொண்டு செல்லும். வினைகளினால் பெறுகின்ற மகிழ்வினால் மாயவின்பம் தோன்றும். முன்னர் உள்ள நிலைகளில் உலகப் பொருள்களால் பெறும் இன்பம் பருமையானது. பின்னர் அது நுண்மையாகும். கடைசியாக

மனிதன் தம் உண்மையை உணரும்போது உலகப் பொருள்களை உணர்வின் வெளிப்பாடாகவே பார்க்கிறான்".[123] என விவரிக்கிறார்.

'மனத்தினையொரு வழி நிறுத்துவ பொறைநிலை' என்பது உரைச் சூத்திரம். "சும்மா இருக்கும் பொழுதும் மாயைகளினால் துன்பம் நேரும். அவற்றை உணர்ந்து, விலக்கி மனத்திடப் பெறுதல் வேண்டும். மனத்தினைக் கீழ் நோக்காவண்ணம் சுழுமுனையின் வழிப் பரவெளியைப் பார்த்து இருத்தலாகிய தாரணையினால் ஆனந்த சோதியினைக் காணலாம். மூலாதாரம், துவாதசாந்தப் பெருவழி இரண்டையும் இணங்கச் செய்தால் இளையோனாகலாம். குண்டலியினைச் சுழுமுனையில் தாரணை செய்தால் ஊழிக்காலம் வாழலாம். மனத்திடத்தால் குண்டலியைப் பிரமரந்திரம் வரை முட்டுதல் வேண்டும். அப்படிச் செய்ய உண்மைப் பரம்பொருளை அடையலாம்".[124] என நச்சினார்க்கினியர் தம் உரையில் விளக்கமளிக்கிறார்.

### 7. தியானம் (தன் மனத்தினை அடக்குதல்)

தாரணையினால் மனமானது ஒரு பொருளில் நிலைத்த பின் அந்த நிலையிலிருந்து மாறாமல் இருப்பது தியானம். அதாவது தண்ணீர், தான் இருக்கும் பாத்திரத்தின் வடிவத்தை எடுத்துக் கொள்வது போல மனம் ஒரு பொருளைப் பற்றி எண்ணமிடும்போது அந்தப் பொருளின் வடிவமாகவே மாறிவிடுவது போலாகும். புறச்செயற்பாடுகள் அனைத்தையும் அகற்றி ஒரு பொருளை மட்டுமே நினைத்திருத்தல், அதிகாலையில் எழுந்து புருவ மத்தியில் கண்களை ஊன்றி மூலத்தினை நினைத்து தியானித்தால் முத்தியும், சித்தியும் கிடைக்கும் என்கிறார் சிவவாக்கியர்,

**"காலமேயெ ழுந்திருந்து கண்கள் மூன்றில் ஒன்றியே**
**மூலமேநி னைப்பீராகில் முத்தி சித்தியாகுமே".[125]**

எனும் பாடலால் அறியமுடிகிறது. இக்கருத்தை முன்நிறுத்தி திருமூலர் திருமந்திரத்தில்,

**"நாட்டம் இரண்டு நடுமூக்கில் வைத்திடில்**
**வாட்டமு மில்லை மனைக்கு மழிவுமில்லை**

**ஓட்டமு மில்லை உணர்வுல்லை தானில்லை**

**தேட்டமு மில்லை சிவனவன் ஆமே".**[126]

தியானமுறையை இப்பாடலில் நம்முடைய எண்ணத்தையும், பார்வையையும் புருவமத்தியில் வைத்து தியானம் செய்வோமானால் இந்த உடம்பில் வாட்டம் இல்லை. உடலும் அழிவதில்லை. ஓட்டமாக யாரையும் தேடி ஓடவேண்டியதில்லை. நன்மை, தீமை, மகிழ்ச்சி, வருத்தம் என்ற உண்மையும் விட்டு விடுவோம். 'நான்' என்ற அகந்தையும் விட்டு நீண்டநாள் வாழலாம் என விளக்குகிறார். தியான நிலையே சமாதிநிலைக்கு வழிகோலும் என்பதை,

**"நிறுத்திய அம்மனநிலை திரியாமற்**

**குறித்தஅப் பொருளோடு கொளுத்த நினைவே".**[127]

எனும் பாடலில் மாயை, மாயை இன்பம், சுத்தசைதன்யம் எனும் மூன்று நிலைகளும் தாரணையில் போய்விட, ஆகாயம் போல எங்கும் ஓடி எங்கும் மறைந்திருக்கும் பொருளைக் கண்டு அதனையே தீர்த்த மூர்த்தியாக எண்ணித் தியானம் பண்ணுதல் வேண்டும் என விவரிக்கிறார். அனைத்துச் சித்தர்களும் தியானநிலையினையே வெகுவாகப் பாடியுள்ளனர். இதயம், புருவநடு, மூக்குறுமுனை எனும் இம்மூன்று இடங்களிலும் மனத்தினை நிறுத்தித் தியானிப்பதே மிகுதியாக இடம்பெற்றுள்ளது.

## தியானம் செய்யும் முறைகள்

அதிகாலையில் எழுந்து கண்கள் மூன்றில் ஒன்றுதல் வேண்டும்.[128] ஐந்தெழுத்தை மனத்தில் இருத்தித் தியானித்தல் வேண்டும்.[129] மேனியிலுள்ள மயிர் சிலிர்க்க உள்ளம் கசிந்து உருகி இறைவனது திருவடிகளையே எப்பொழுதும் தியானிக்க வேண்டும்.[130] அகவழிபாடே தியானம்[131] மேல்வாசலாகிய உச்சித் துளையைத் திறந்து இதயத்தில் சிவனைப் பார்த்தல்[132] உண்ணாக்கில் அண்ணாக்கை ஏற்றிப் பிடரி வழியாகத் தியானித்தல்[133] நெற்றியினைப் பற்றி அங்கேயே உழலுகின்ற நீலநிறமுடைய உயர்ந்த விளக்கினைத் தியானித்து அதற்கு மேலுள்ள ஒளியினையும் அறிதல்[134] பரப்பிரமத்திடம் விருப்பம் வைத்து அதைத் தொய்வின்றி நெஞ்சில்

நினைத்தல்[135] சிவனை உள்ளத்தில் எண்ணுதல்[136] குண்டலினியின் உள்ளமர்ந்த சிவனைச் சிந்தித்துச் சூரிய சந்திர அக்கினி மண்டலங்களைப் பார்த்தல்[137] மூக்குநுனி, புருவநடு, இதயம் என்னும் மூன்றிடங்களிலும் முறையே மனத்தை நாட்டித் தியானிக்கவேண்டும். குருநாதர் மொழிந்த மந்திரத்தினை ஆறு ஆதாரங்களிலும் முறையாகத் தியானிக்க வேண்டும்.

## தியானத்தின் படிகள்

தியானித்தலில் ஆறு படிகள் உள்ளன. அவை. எந்நினைவுமின்றி இருத்தல், ஒரு பொருளின் ஒரு சிறு பகுதியை மட்டும் எண்ணுதல், முழுப் பொருளையும் எண்ணியிருத்தல், முழுப் பொருளின் செயற்பாட்டினை நினைவிலிருத்தல். அத்துடன் தன்னையும் இணைத்து மகிழ்தல். உருவமற்ற ஒரு பொருளினை எண்ணுதல். மேலேயுள்ள இவ்வாறினையும் தொடர்ந்து நினைத்திருத்தல் என்பனவாம். இத்தியானத்தினைக் காலையிலும், மாலையிலும் குறைந்தது இருபது நிமிடங்கள் செய்தல் வேண்டும். இப்படி முறையாகச் செய்யும்பொழுதே உண்மையான தியானப் பலனை நாம் அடையமுடியும்.

## தியானத்தின் பயன்கள்

தியானத்தால் சித்தர்கள் பெற்றவை. முத்தியைப் பெறலாம். ஒப்பற்ற ஆனந்தம் வாய்க்கும். சிவனைப் பார்க்கமுடியும். மௌனம் நிருவிகற்ப வாழ்க்கை யோகசித்தி கைகூடும். சிவனுடன் ஒன்றமுடியும். அழியாமல் இருக்கமுடியும். உயர்ந்த காரண சொரூபத்தை அடையமுடியும். அனாதியாக முடியும். காலனைத் திகைத்து ஓடச் செய்யும். கோடிக் காலம் குறைவிலாது வாழமுடியும். “முக்கோண வடிவ ஓர் இரும்புச் சட்டத்தின்மேல் ஒரு வட்டவடிவமான இரும்புச் சட்டியை வைத்து, அதில் தீ வளர்த்து, அவன் எதிரே அசைவின்றியிருக்க கீழே ஒரு பலகையிட்டு அதன்மேல் இருந்து, வலக்காலை இடத்தொடையின் மேல் ஏற்றி நிமிர்ந்திருத்தல் வேண்டும். கைகளிரண்டும் முழங்காலின் மேல் வைத்துக் கொள்ளவேண்டும். சட்டியில் எரியும் ஒளி வடிவினை நன்றாய்ப் பார்த்து வணங்கி நினைவிலேற்றிய பின், கண்ணை மூடிக் கொண்டு மூலத்தின் கண் உள்ள முக்கோணத்தினையும் அதிலிருந்து எழுந்தெரியும் குண்டலினி ஒளியினையும், நினைத்து வழிபடவேண்டும்.

அதன்பின் அங்கிருந்து ஏறி, நெஞ்சத் தாமரையுள் அசையும் ஒளி வடிவாகிய அம்பலக் கூத்தனை வழிப டவேண்டும். அதன்பின் அங்கிருந்தேறி புருவத்திடைவெளியில் அவ்வொளியின் உச்சியிலே, சிவந்த நிறமுடைய அப்பனும் வெண்ணிற நிறமுடைய அம்மனும் ஒருங்கிணைந்திருக்கும் வடிவினைக் கருத்தூன்றி வழிபட்டு, முடிவில் திருநீறு அணிந்தெழுதல் வேண்டும்".[138] என்று அழகரடிகள் மறைமலையடிகளால் வரலாற்று மாட்சி எனும் நூலில் சுட்டிக்காட்டியதை இளமதி சானகிராமன் எடுத்தாண்டுள்ளார்.

## 8. சமாதி நிலை (இரண்டறக் கலத்தல்)

சமம் + ஆதி எனப்பிரித்து, ஆதிக்குச் சமமாக, பிரமமாக இருத்தல் எனும் பொருள்படும். அட்டாங்க யோகத்தின் இறுதிநிலையாகும். இந்நிலையில்தான் யோகத்தின் பயனும் எண்வகைச் சித்திகளும் கைகூடுகின்றன. தியானத்தின் உச்சக்கட்டத்தில் சமாதி நிலைக்குள் புகுந்து செல்லுகிறான். இதில் அவன் உறக்கத்தில் இருப்பது போல அவனது உடலும், புலன்களும் ஓய்வாக இருக்கின்றன. அவன் விழித்திருப்பது போல அவனது மனமும் திறன்களும் விழிப்புடன் இருக்கின்றன. எனினும் அவன் உணர்வு நிலையைத் தாண்டிச் சென்றுவிட்டான். சமாதி நிலையில் உள்ள ஒருவர் முழுவதும் உணர்வு நிலையிலும் விழிப்புடன் இருக்கிறார் என்பது பொருளாகும்.

"உடல், பொருள், ஆவி எனும் மூன்றையும் மறந்து கல்லைப் போல் மண்ணைப்போல் கிடப்பது சமாதி. சித்தர்கள் பலமுறை சாதிக்குள் இருப்பர்".[139] என்பதைப் போகர் சத்தகாண்டத்தில் குறிப்பிட்டுக் காட்டுகிறார். இதனைத்தான்,

**"ஆங்கணம் குறித்த வாய்முதற் பொருளொடு**

**தான் பிறனாகாத் தகையது சமாதி".**[140]

என உரை சூத்திரம் விளம்புகின்றது. யோகப் பயிற்சியால் சுழுமுனையை அடைந்து அங்குத்துரிய அறிவால் ஈர்க்கப்படுவர். பின்னர் அறிவின் மேற்பகுதிக்குச் சென்று பேரண்டத்துள் நுழைவர். இந்நிலையில் அமுதப் பாலினால் கற்பகம் உண்ணுவர். பூரணத்தை அடைவதால் உடல்

நிர்க்குணமாகும். உடல் தன் விழிப்பை இழக்கும் இப்போது குளிகையைப் பெறுவர். தூண்டப்பட்ட ஒளிப்பிழம்பு உடலுள் தோன்றும். உடல் மேலும் மேலும் நுண்மையாகும். மேலும் ஏறி மௌனத்தைப் பெறுவர். இதுவே சமாதி.

கொங்கணரும் முழுப்பானை, சூல் மாடு எனச் சமாதியின் நிலையினைக் குறியீட்டில் குறிக்கிறார். 'முழுப்பானைக்கு வாயில்லை' என்பது சமாதியில் புற உலகத்தின் தொடர்பின்றி உள்ளுள் வாழ்வதைக் குறிக்கும். சமாதிநிலை என்பது பானைக்குள் பானை இருக்கும் நிலையாகும். தனக்குள் தான் வாழ்வதைச் 'சூல்மாடு' என்றும் குறிப்பர். இதனைக் கொங்கணர்,

**"அம்மானைக்குப் பானைக்கு நிற்குமேல் சூல்**

**மாட்டுக்குக் காலில்லை என்று சொன்னேன்".**[141]

என்ற பாடலில் கால் என்பது வாசியைக் குறிக்கும். சமாதி நிலையில் சுவாசம் வெளியில் நடைபெறுவது இல்லை என்பதையே இங்குக் குறிக்கின்றார். இக்காலத்தில் கல்லறைகளைச் சமாதி என்பர். இறப்பின் போது எல்லாம் வெளியே போய்விடும். சமாதியில் எல்லாம் உள்ளே இருக்கும் இறப்பில் உடல் அழியும். சமாதியில் உடல் அழியாது. இறந்தவர்கள் அதே உடலுடன் மீண்டும் வர இயலாது. சமாதி நிலையில் இருப்பவர்கள் மீண்டும் அதே உடலுடன் வெளிவருவர். இறந்தவர்கள் அதே உடலுடன் வர இயலாது என்பதையே சிவவாக்கியர்,

**"கறந்த பால் முலைப்புகா;**
**கடைந்த வெண்ணெய்மோர் புகா**
**உடைந்து போன சமாதி**
**ளோசை யுயிர்களும் உடற்புகா**
**விரிந்த பூஉதிர்ந்த காயும்**
**மீண்டும் போய் மரம்புகா**
**இறந்தவர் பிறப்ப தில்லை**
**யில்லை யில்லை யில்லையே".**[142]

என்ற பாடலின் வழி தெளிவுபடுத்துகிறார். சமாதியில் இருப்பவர்கள் மீண்டும் எப்பொழுது வேண்டுமானாலும் வெளியில் வரமுடியும். இறப்பில் அனுபவங்கள் கிட்டுவதில்லை. முற்பிறவி என்ன என்பது கூட அறிய முடிவதில்லை.

சமாதியிலுள்ள அனுபவங்கள் கிடைக்கின்றன. ஞானம் பெறப்படுகின்றது. எனவே சமாதியில் இருப்பதையே சித்தர்கள் விரும்புவர். திருமூலர் சமாதி நிலையைக் குறிப்பிடுகையில்,

**“சமாதி செய்வார்க்குத் தரும்பல யோகம்**
**சமாதி வேண்டாம் இறையுடன் ஏகில்**
**சமாதிதான் இல்லை தானவன் ஆகில்**
**சமாதியில் எட்டெட்டுச் சித்தியும் எய்துமே”.**[143]

எனும் பாடலில் சமாதியில் இருப்பவர்க்குப் பல யோகங்கள் சித்திக்கும். எப்போதும் இறைவனோடு ஒன்றியிருக்கின் சமாதிகள் வேண்டாம். ஆன்மாவாகிய தான் சிவமேயானால் சமாதி தேவையில்லாததாகும். சமாதியினால் அறுபத்து நான்கு கலை ஞானங்களும் வந்து பொருந்தும் என்கிறார்.

### சமாதியின் வகைகள்

சமாதி ஐந்து வகைப்படும். அவை: தத்துவாலய சமாதி. சனிகற்ப சமாதி, நிர்விகற்ப சமாதி, சஞ்சார சமாதி, ஆரூட சமாதி என்பன.

### 1. தத்துவாலய சமாதி

யோகப்பயிற்சியால் பாரமார்த்திகன் பிரமநிலையை அடைய அறிவு வடிவில் பிரமம் இருப்பது போலாகும். சட்டைமுனி, அதிட்டான சைதன்யம்' என்ற தொடரைக் கையாளுகின்றார். இத்தொடர், “உண்மையை உண்மையாக உணர்வதைக் குறிக்கும். இந்நிலையில் குகைக்குள் இருக்கும் தீபம் போல் மாறுவர். அதனால் அசையாமல் எரிவதைப் போலிருப்பர். ‘நான்’ என்னும் பேரண்டமாக மாறுவர். தோற்றமில்லா உடலை அடைவர். இதுவே தத்வாலய சமாதி. சனிகற்ப சமாதியடைய தத்துவாலய சமாதியில் இருக்கவேண்டும்”.[144] என்று குறிப்பிடுகிறார்.

### 2. சனிகற்ப சமாதி

தத்துவாலய சமாதியில் இருக்கும்போது “யோகப் பயிற்சியோடு மட்டுமே தொடர்பு இருக்கும். இந்நிலையில்தான் என்ன? என்பதை நன்றாக ஆராய்ந்து

கொள்ள வேண்டும். அதில் தெளிந்தால் அந்நிலை சனிகற்ப சமாதி நிலையாகும். இதனைத் திரிசாணு வித்தை".[145] எனக் குறிப்பர்.

### 3. நிர்விகற்ப சமாதி

தத்துவங்களை மறந்து கவலையற்று இருந்தால் புற ஒலி கேட்காது. உள் இருப்பதெல்லாம் அற்புதமாக இருக்கும். எந்நினைவும் அன்றி இருக்கும். காலை, சித்தம் உண்மை வடிவில் நுழையும். இதுவே பூரணத்தில் நிர்விகற்பமாகும். "சமாதியில் தடுமாறும்போது பாசம் பற்றும். அப்போது சடங்குகளையும், உலகையும் கனவாக எண்ணிப் பாசத்தை நசுக்கினால் ஏகமாக நிற்கும். பிரபஞ்ச விகற்பம் என்னும் மலத்தை ஓட்டினால் அநுபோக நிருவிகற்ப சமாதியை அடைவர். அப்போது சொரூபத்துள் ஈர்க்கப்படுவர். உடல் தோற்றமில்லாத தோற்றம் பெறும். இந்நிலையையே அநுபோக நிருவிகற்ப சமாதி என்பர்".[146] எனச் சட்டைமுனி குறிப்பிடுகிறார்.

"யோக சாதனையினால் மகாகாச நிருவிகற்ப வாழ்க்கை உண்டாகாது. அதனால் ஆணவம் நீங்கியது. சகளாதீதம் கடந்து களாதீதத்தில் இணைந்தேன். மனமும் அதனுள் சேர்ந்தது. பகலிரவில்லாத வெளிக்கப்பால் சென்றேன். பந்தமற்ற மோட்சப்பதம் பெற்றேன்".[147] என்று காகபுசுண்டர் குறிப்பிடுகிறார்.

### 4. சஞ்சார சமாதி

சட்டைமுனி "நான் ஏகம்' என்னுள் எல்லாம் உள்ளது; இதற்கு மேல் ஏதும் இல்லை என்ற கருத்துடன் ஒருவர் இருக்கவேண்டும். இன்பதுன்பங்களை ஒன்றாகக் கருதி நீக்கவேண்டும். மனத்தை வலிவுடையதாக்கித் 'தான்' என்பதில் நிலைபெற்று இருப்பதே சஞ்சார சமாதியாகும்".[148] எனக் குறிப்பிடுகிறார்.

### 5. ஆரூட சமாதி

சஞ்சார சமாதியில் இருக்கும்போது தொய்தம் என்பது தான் என்பதன் உண்மை வடிவம் தோன்றும். இதை உணர்ந்து மலைபோல் உறுதியாக இருக்க வேண்டும். கற்பம் பிடர்க் கண்டத்தை அடையும். இந்நிலையில்

வாசனை என்ற உலக அனுபவங்களைப் பிரித்து விடமுடியும். கன்மம், ஆசை, மோகம் மூன்றும் சமாதியைத் தகர்ப்பவை, யோகப் பயிற்சியை இவை அழிக்கும். தொடர்ந்த யோகப் பயிற்சி சரியான அறிவுக்கு வழிகாட்டும். யோகப் பயிற்சி இல்லையெனில் இந்திரியங்கள் சமாதிக்கு எதிராக நடக்கத் தொடங்கும். சமாதிப் பாதையை அவை மூடும். அவற்றை வெறுப்பதன் மூலம் மட்டுமே சரியானது. இந்திரியங்களைச் சமாதிப் பாதையைப் போடப் பழக்க வேண்டும் என்கிறார். இவை மட்டுமின்றிச் சாலம்ப யோகம், நிராலம்ப யோகம் என்பனவற்றைக் காகபுசுண்டர் குறிப்பர். நிராலம்பம் என்பது சோகத்தைப் போக்கும். சொரூபத்தின் அடைவிக்கும். பெருவெளியினையும் நிட்டையினையும் கூட்டுவிக்கும். உபதேசம் பெற்றவர்களே இதன் உண்மையினை அறிவர்".[149] எனக் குறிப்பிடுகிறார்.

### சமாதிநிலையின் பயன்

பித்தரும் அறிவு பெறும் எனும் நிலையை திருமூலர் திருமந்திரத்தில் குறிப்பிடுகையில்,

**"அஞ்சனம் போள்று உடல் ஐஅறும் அந்தியில்**
**வஞ்சக வாத அறும்;மத்தி யானத்தில்,**
**செஞ்சிறு காலையில் செய்திடில் பித்தறும்**
**நஞ்சறச் சொன்னோ நரைதிரை நாசமே".[150]**

எனும் பாடலில் காலை செய்யும் பிராணாயாமத்தினால் வாதநோய் வராது. மாலை செய்யும் பிராணாயாமத்தினால் சுவாச நோயான வியாதி நீங்கும். மேலும், பிராணாயாமத்தினால் தலைமுடி நரைத்தலும் முகத்தில் தோல் சுருங்காமலும் இருக்கும்.

**"அண்டம் சுருங்கில் அதற்கோ அழிவில்லை**
**பிண்டம் சுருங்கில் பிராணன் நிலைபெறும்**
**உண்டி சுருங்கில் உபாயம் பலவுள**
**கண்டம் கறுத்த உபாயம் ஆமே".[151]**

ஒரு மனிதனுடைய உடல் இளைத்துவிட்டது என வருந்த வேண்டியதில்லை. உடல் இளைத்தாலும் நாம் நீண்டநாள் வாழமுடியும். அழிவில்லை. வயிறானது பெருத்து இருந்தால் மூச்சு விடுவதற்குச் சிரமப்படுவான். வயிறு சிறுத்து

இருந்தால் மூச்சுவிட ஏதுவாகும். உணவு குறைத்து உண்ணும்போது உடல் எளிதாக இயங்க இயலும்.

### யோகசித்தி

எண்வகை யோகநிலையில் நின்று பெறுகின்ற பலன் யோகசித்தியாகும். யோகசித்தி அடைய வேண்டுமெனில் மௌனத்தைக் கடைப்பிடிக்கவேண்டும். மௌனம் இல்லாமல் போனால் சித்திகளைக் கூட்டுவிக்கும்".[152] என்பது சித்தர் கருத்தாகும். மௌனம் வாய்க்க வேண்டுமெனில் மனத்தைச் செம்மைப் படுத்துதல் வேண்டும். மனம் செம்மைப்பட நல்லொழுக்க நெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். மௌனம் வேண்டுமென்பதை,

**"வாய் சமத்துப் பேசாதே மௌனத் தூன்று".**[153]

என்று கருவூராரும், இடைக்காடர்

**"பேசாது இருந்து பெருநிட்டைச் சாரு".**[154]

என்றும்,

**"மூகைபோல் இருந்து மோனத்தைச் சாரு".**[155]

என்றும் குறிப்பிடுவதால் அறியப்படுகிறது. "காமப்பாலினை உண்டால் யோகசித்தி பெறமுடியும்".[156] என்பதைச் சட்டைமுனி குறிப்பிடுவார். இறைமீது கொள்வது காதல், உடல்மீது கொள்வது காமம், உடலின்மீது காமம் கொண்டு அதனை வாசியோகத்திற்கு ஆட்படுத்தி, காயப்பாலினைச் சுரக்கச் செய்து உண்டால் யோகம் சித்தியாகும். இதனைப் போகர்,

**"கண்டு கண்டு சதாநித்தம் மூலம்பாரு**
**காமத்தை விண்ணென்ற மதியிலேற்று".**[157]

என விளக்குகிறார். அழுகுணிச்சித்தர் குறிப்பிடுகையில்

**"காமமலர் தூவக் கருத்தெனக்கு வந்ததடி**
**பாமவலி தொலைக்கப் பாசவலி கிட்டுவதில்லை**
**பாமவலி தொலைக்கப் பாசவலி கிட்டுமென்றால்**
**காமமலர் மூன்றும் என் கண்ணம்மா கண்ணெதிரே நில்லாவோ".**[158]

எனவரும் பாடலில் இடகலை, பிங்கலை, சுழுமுனை இம்மூன்றையுமே காமமலர் என்று குறிப்பதாகக் கொள்ளுதல் வேண்டும்.

## யோகம் பயில்வோர் நிலை

யோகம் பயில்வோர் நினைத்த உணவுப் பொருட்களை எல்லாம் உண்ணுதல் கூடாது. "பத்தியத்தினைக் கடைப்பிடிக்க வேண்டும். காய்கறிகள், பஞ்சரசம், பரமான்னங்கள் முதலானவற்றை மட்டுமே உண்ணுதல் வேண்டும். சர்க்கரை, காரம், புளிப்பு இவற்றை அறவே ஒதுக்கவேண்டும். தேன், தக்காளி, எலுமிச்சை முதலானவற்றை ஏற்கலாம். எவரிடத்தும் சென்று இரத்தல் கூடாது. அவரவர்கள் கருமத்தினை ஒளிவறச் செய்தல் வேண்டும். தன்னால் இயன்ற அளவு பிறர்க்கு நன்மை செய்தல் வேண்டும். தன்னிடம் உள்ள சினத்தினைக் காத்தல் வேண்டும். சித்தர் குரு நூலை வாசித்தல் வேண்டும்".[159] என்று வால்மீகர் சுட்டிக்காட்டுகின்றார்.

## முழுயோகி

காகபுசுண்டர் முழுயோகி யார் என்பதை, "உண்மையான யோகி, ஐம்பொறிகளையும் அடக்கியாளும் தன்மை பெற்றவர். மாயை தொடர்பான அனைத்தையும் நீக்கியவர். புறச் செயல்முறைகளை வெறுத்தவர். யோகத் தத்துவத்தில் உள்ள அனைத்துச் செயல்முறைகளையும் செய்பவர். எப்பொழுதும் சாதனையில் விருப்பம் உடையவர். சாதனைகளைத் தவறாது செய்து சைதன்யத்தில் முத்தியடைபவர். மும்மூட்கத்துவம் அறிந்த மூர்த்தியாவார். ஆறிடங்களில் உள்ள ஆறு ஆதாரங்களையும் கண்டவரே மும்மூல யோகியாவார்".[160] என விவரிக்கிறார். வாசியினை யோகமாகப் பயிலுதல் வேண்டும். வாசி என்பது ஒரு செயற்பாடு. இயக்கம் அதன் பண்பு. அ∴து இயங்கிக் கொண்டே இருக்கும். நிற்பதல்ல. இந்நிலையில் மௌனத்தைக் கடைப்பிடிக்கவேண்டும். இந்த மௌனம் ஆறு நிலைகளைப் பற்றிக் கூறிய இடத்தில் விளக்கப்பட மௌனமாகும். பேச்சற்ற நிலையாகும். மௌனம் கடைப்பிடிக்கப்பட்ட பின்பு அறிவைத் தழுவி அகண்டத்தில் நடனமிடும். அண்டந் தொடங்கிய புவனமான புதுமை வரை பார்த்துப் பின்,

சமாதிக்குள் நுழையமுடியும். இப்படி நுழைபவரே முழுயோகியாவார். பின்னர் ஞானத்தைப் பெறுவர். கொங்கணர் இக்கருத்தை,

**“யோகி யென்றால் சையோக மல்ல மல்ல**

**உத்தமனே சிவயோகி ராஜயோகி**

**யோகி யென்றால் அடயோகி யோகி யல்ல**

**யொன்றாகக் கண்டிருந்த ஞான யோகி**

**யோகியென்றா லாசையுள்ளோன் யோகியல்ல**

**யுருப் பெற்ற ராசயோகி சித்த யோகி**

**யோகி யென்றால் கர்ம முற்றோன் யோகியல்ல**

**ஒரு நொடிக்குள் பூமிகற்றுங் குளிகையோரே”.**[161]

என்று யோகியின் தன்மையினைப் பாடியுள்ளார். இல்லறத்தில் ஈடுபட்டுள்ளவர் யோகம் பயிலமுடியும். அதனால் மிகுந்த நன்மையினையே அடைவர். இல்லறத்தில் உள்ளவர்களும் யோகம் பயில்வதால், தனது காரியங்களில் புண்ணிய பாவங்களைச் செய்தாலும் அவைகளினால் பற்றப்பட மாட்டார்கள். பிரணவத்தின் சத்தத்தால் சித்திகள் உண்டாகும். இக்கருத்தைச் சித்தர் பாடல்களில் இணைக்கப்பட்டிருக்கும் சிவயோகசாரம் எனும் நூலில், “கிடைத்ததில் சந்தோசம் உடையவனாகவும், உள்ளே கொஞ்சமும் பற்றில்லாதவனாயும் கால வரம்புகளும் உள்ளனவாயும் யோகசாதனத்தில் பொருந்தி இருப்பான்”.[162] எனக் கூறப்பட்டுள்ளது.

சிவானந்தர், சிறந்த யோகியினால் இவ்வுலகுக்கு மிகுந்த நன்மையே ஊதுபத்தியிலிருந்து நறுமணம் வாழ்வது போல், யோகத்தில் பூரணத்துவத்தை அடைந்த ஒரு யோகியிடமிருந்து இனிய ஆன்மிக மணம் நாற்புறமும் பரவும். அவனது புன்முறுவலில் ஒரு பிரத்தியேகக் கவர்ச்சியுண்டு. அவனது இதயத்திலிருந்து எழும் வார்த்தையில் பெரும் ஆற்றலுண்டு. அவன் தொடர்பு கொள்ளும் ஒவ்வொருவரிடத்தும் அவன் ஒரு பிரத்தியேகமான பதிலை ஏற்படுத்துகின்றான் எனக் குறிக்கிறார்.

யோகச் சாதனைகளின் வழி, பொய்யுடல் என்று கூறப்படுகின்ற இவ்வுடலை மெய்யுடையதும் ஒலியுடைய துமாக்கி ஒப்பற்ற ஒருவனாகிய

பரம்பொருளுடன் இருந்து சமாதியில், ‘அவனே தானே’, ஆகி, பேரின்பப் பெருங்கடலுள் ஆழ்ந்திருப்பர் யோகியர் என்பதும் பெறப்படுகிறது.

**ஞானயோகம்**

ஞானம் என்பது அறிவு; உண்மை என்றும் பொருள்படும். சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்றையும் கடந்தவிடத்தும், துறவு, பத்தி என்ற நிலைகளைக் கடந்தவிடத்தும் பெறுவது ‘ஞானம்’ என்பர். இவ்வுடல் உயிர், உலகம், இறை போன்ற அனைத்தையும் குறித்த உண்மைத் தன்மையினை அறிதலே ‘ஞானம்’ என்று கூறுவர். யோகத்தின் முடிவில் அதன் விளைவாக அமைகின்ற ஞானம் முற்செய்த தவத்தால் அமையும்”.[163] எனச் சிவஞான போதம் எனும் நூல் குறிப்பிடுகிறது. மேலும் இந்நூலில், ‘‘படிமுறையானன்றி’ ஒவ்வொரு பிறவியில் செய்த தவத்தான் அமையாது முற்பிறவிகளிலே செய்து வந்த தவமாகிய சரியை, கிரியை, யோக, விசேடத்தார் குரவனுணர்த்தியவாறு சிவஞானங் கண்ணாகக் கொண்டறிவதாகிய சாதன அறிவானது ஐயந்திரிபின்றி விளங்கும்”.[164] என விளக்குகிறார். இதனையே சட்டைமுனி,

**“தானென்ற மேருவைத்தான் பூசை செய்வார்**
**சாபமிட்டால் அண்டரண்டம் தீயா வேரும்**
**தேனென்ற மேருவுக்குத் தீட்சை வேண்டும்**
**சிறுபிள்ளையா மொருவன் தீண்டப்போகா**
**வானென்ற மேருவைத்தான் பூசை செய்தோர்**
**வாய்திறந்தே உபதேசம் சொன்னா ராகிற்**
**கோனென்ற சித்தி கவன சித்தி**
**கொள்ளையிட்டான் அவன்சீடன் கூறினானே”.**[165]

என்ற பாடலில், சற்குரு மூர்த்தியை அடைந்து ஆனந்தத்தை அனுபவிக்கின்ற நிலை எதுவோ அதுவே ஞானமாகும். மறுபிறப்பற்றது என உணர்ந்தால் ஞானம் அடைந்தவர்கள் பிறவாப் பெருநெறியுடையவர் எனத் தெரிவிக்கின்றார். இதனை,

**“ஞான மறிந்தோர்க்கு நமனில்லை”.**[166]

எனத் திருவள்ளுவரும் ஞானம் எனும் நூலில் குறிப்பிடுவதன் மூலம் அறியமுடியும். சட்டைமுனி முன் ஞானத்தில்,

**"தாமப்பா 'அ' கார 'உ' காரம் தொட்டு**

**சாதகமாய் மகாரவரை ஞானமூலம்".**[167]

என்று சட்டைமுனி கூறுவதன் மூலம் 'ஓம்' எனும் பிரணவ மந்திரமே ஞானத்தின் மூலம் என்பதனை அறியமுடிகிறது. ஞானத்தினைச் சித்தர்கள் மௌனத்தால் அறிவர்**".**[168] மௌனம் குரு காட்டும் 'ம' காரத்தினால் அமைகின்றது என்பதை,

**"மகாரமல் லோமுத்தி யாசான் சுட்டி**

**வழிகாட்டு முறைமையது ஞானமார்க்கம்**

**மகாரமல் லோஅடக்கியிந்த நாதத்தாண்டி**

**மருவிநின்ற இடமல்லோ கேசரி மைந்தா**

**மகாரமென்ன மேலெழுந்தே யென்பார் மாண்பர்**

**மாட்டுவதைப் பூசன்றெழுந்த தென்றுகாணார்**

**மகாரமென்ன மகாரவித்தை யதீத வித்தை**

**வாய்திறந்து பேசாதே மௌன மாமே".**[169]

என்ற பாடலால் அறியமுடியும். உண்மையான குருவினை அடைந்தாலன்றி ஞானத்தினை எய்துதல் இயலாது என்பதை,

**"குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக்**

**குருடுங் குருடுங் குறி விழு மாறே".**[170]

என்று திருமூலர் தெரிவிக்கிறார். இக்கருத்தைத் திருமூலநாயனார் ஞானம் எனும் நூலில்,

**"ஈசனையே ஆசானாகக் கொள்பவர்களே கயிலாயத்தினை எய்தலாம்".**[171] என்றும், பாம்பாட்டிச் சித்தர் கூறுகையில்,

**"உண்மைக் குருவின் அவசியத்தையும் அவரது செயல்களையும் காட்டுவர்".**[172] என்பதால் ஞானத்தை அறியமுடியும்.

## உண்மைக் குருவின் உருவம்

குருவின் உடல் சுடர் போலத் தோன்றும்.

காயகல்ப முறைகளைப் பின்பற்றி உடலினைக் கற்பகாலங்கள் கடந்தும் அழியாமல் வைத்திருப்பர்.

வலிமைக்குப் பெயர் போன வச்சிரத்தினைவிட வலிமை வாய்ந்த உடலினை உடையவர்.

**உண்மைக் குருவின் செயல்கள்**

பொய் மதத்தினை இல்லை என்றாக்கியும் பொய்க் குருக்களைத் திருத்தி அவர்களுக்கு மெய்ம்மதம் இன்னதென்று காட்டியும் அதன்வழி நடப்பிப்பவர்.

வேதம், வேதம் கடந்த பொருள் இவற்றை உணர்த்தும் போதப் பொருள் இன்னது என்று தெளிந்தும் மக்களுக்குப் போதனை செய்பவர்.

ஆணவ மலத்தால் மறைப் புண்டிருக்கும் மக்களுக்கு, உள்ளங்கை நெல்லிக்கனி போல இருக்கும் பொருவினைக் காட்டுபவர்.

கூடுவிட்டுக் கூடுபாயும் தன்மையுடையவர்.

வீடு பெறுகின்ற வழியினை மக்களுக்கு மேன்மேலும் காட்டுவர்.

இரவு பகலற்ற விடத்தேயிருந்து மும்மலங்களையும் கொல்லச் செய்பவர்.

எட்டுத் திசைகளையும் அண்டவெளியினையும் அடக்கிய குளிகையோடு ஆடி விரைவில் வட்டமிட்டு வலம் வருகின்ற தன்மையுடையவர்.

குருவில்லாமல் எதனையும் கற்றுக் கொள்ள முடியாது. கற்றுக் கொள்ளவும் கூடாது என்பதைச் சிவவாக்கியர்[173], சட்டைமுனி[174], இடைக்காடர்[175] ஆகியோர் குறிக்கின்றனர். குருவின் இன்றியமையாமையைச் சுவாமி சித்பவானந்தர் குறிப்பிடுகையில், "மனிதனிடத்துத் தெய்வீக ஆற்றல்கள் புதைந்து கிடக்கின்றன. அரும்பெரும் காரியங்களைச் செய்து சாதிக்கின்ற வல்லமைகள் பல அவனிடத்து மறைந்து கிடக்கின்றன. அனுக்கிரகம் என்று சொல்லப்படும் அருள் உதவி சான்றோர் ஒருவரிடமிருந்து நல்ல ஆத்ம சாதகன் ஒருவனுக்குக் கிட்டுமாகில் அவனுடைய தெய்வீகச் சக்திகள் தோற்றத்துக்கு வருகின்றன. பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழக் கூடிய விழிப்புநிலை அவனுக்கு உண்டாகிறது. ஆத்ம சாதனத்தில் அவனுக்கு முன்னேற்றம் வந்தமைகிறது".[176] என்பதன் வழி ஆத்ம விழிப்பிற்காக ஒருவனுக்குக் 'குரு'வை இன்றியமையாதவர் ஆக்குகின்றார்.

"விட்டகுறை வாய்த்து சற்குருவும் கிடைத்தவர் தீக்கைகளைப் பெறுவர். தீக்கைகளினால் பிரமாண்டம், பிண்டம், அண்டம், படைப்பு முதலான பலவும் நன்றாகத் தெரிந்து கொள்வர். பிரமத்தினால் ஆன்ம தத்துவம் முதலான வாசனைகள் அனைத்தும் போய்விடும். 'சூட்சாதி பிராந்தி' என்று சொல்லப்படும். மாயா சத்தியானது தொடராமல் சேர்வதுதான் சொரூப ஞானம்; இதனை அடைந்தவர்கள் காணுகின்ற அனைத்தையும் இறை எனக் கண்டு கொள்வர். 'குரு'வுக்கு வேண்டிய தொண்டுகளைச் செய்து வேதாந்தங்களைக் கற்றுக் கொண்டு வருபவர்களுக்கு அனுபவ ஞானமானது கைகூடும். நதியினைக் கடக்க ஓடம் வேண்டும் போல உண்மை ஞானத்தினை அறியக் குழு இன்றியமையாததாகும். காகபுசுண்டரும், "குருவில்லாமல் பிறவற்றால் கற்றுக் கொள்வோம் என நினைத்தல் வீணானதாகும்".[177] என்கிறார்.

வயதுப்பட்டால் ஞானம் போய்விடும்.[178] மேலாறு தலங்களுக்கு நடுவில் இருப்பது ஞானசக்தி, அவ்விடமே கேசரியாகும். கேசரியினை அடைந்துவிட்டால் பிறப்பு இறப்பு முதலிய அனைத்தும் கடந்துபோகும்;[179] ஞானத்தினை அளிப்பது ஞானசக்தியே[180] ஆகாயம், சஞ்சிதம், பிதாரத்வம் ஆகிய இம்மூன்றும் யோகமெய்தி முத்திபெற்று ஞானத்தால் புகுந்தவர்களுக்கே வசமாகும்[181] சிவபோக ஞானம் கைவரப் பெற்றால் இவ்வுடல் அழிவினையடையாது.[182] ஞானம் கைவரப் பெற்றும் 'இந்திரியச் சார்பினால்' ஞானத்தினை இழந்தவர் உண்டு.[183] மேகத்தினையும் கோபத்தினையும் இந்திரிய வெளிப்பாட்டினையும் தடுத்து, விந்தினை மேலேற்றியவர்களே உண்மை ஞானத்தினை அடைவர். ஞானம் கைவரப் பெற்றவர்கள் பலகோடி கற்பகாலங்கள் வாழ்பவர். தாங்கள் கண்ட காட்சிகளை எவரிடமும் கூறமாட்டர்கள். இதனையே கண்டவர் விண்டிலர், விண்டவர், கண்டிலர்[184] என்று பாம்பாட்டிச்சித்தர் குறிப்பிடுகிறார்.

உண்மை ஞானியர் அண்டமதைக் கண்டு புகுந்து உச்சியிலுள்ள நடுத்தீபத்தைக் கண்டவர். அங்குள்ள சுத்த சிவகங்கையில் நீராடித் திருநாமங்களை இட்டுக் கொண்டு மணமெனும் மலரினையே அன்புடன்

இறைவனுக்குச் சார்த்தி அவனுக்குள் வேதங்கள் எல்லாம் அடங்கியதைக் கண்டு சத்தியே புத்தியாகத் தெளிந்தவர்.[185] பத்தியினால் மனமடங்கிய நிலையில் நிற்பவர். பாழில் மனத்தை விடாதவர்.[186] மனத்தில் அழுக்கில்லாத ஞானிகள் மாறுபட்ட இடத்தில் இருந்தாலும் பிறப்புகளை அறுத்திருப்பர். ஞானிகளுக்கு எந்தவிதமான நினைவுகளும் இருப்பதில்லை[187] எனச் சிவவாக்கியர் குறிப்பிடுகிறார். பட்டினத்தார் இதனை, “மாத்தான வத்தையும் மாயாபுரியின் மயக்கத்தையும் நீத்தவர்கள் இவர்கள், இறைவன்பால் அன்புகொண்டு வேர்த்தால் குளித்துப் பசித்தால் புசித்து, பார்த்தால் உலகத்தவர் போல இருப்பர்[188] எனவும்,

**“பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்து இட்ட பிச்சையெல்லாம்**
**நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று நன்மங்கையரைத்**
**தாய்போல் கருதித்த மர்போல் அனைவர்க்கும் தாழ்மை சொல்லிச்**
**சேய்போல் இருப்பர் கண்டீர் உண்மை ஞானம் தெளிந்தவரே**[189]

என்று ஓவியமாக்கிக் காட்டுவர். “வெட்டவெளியினை மெய்யென்று இருப்பவர்கள்; மெய்ப்பொருளைக் கண்டவர்கள்; காணாமல் கண்டு கருத்தோடு இருப்பவர்கள்; வஞ்சகமற்று வழிதன்னைக் கண்டவர்கள்; ஆதாரமான அடிமுடி கண்டவர்கள். நித்திரை கெட்டு நினைவோடு இருப்பவர்கள்; தந்திரமான தரத்தில் நிற்பவர்கள்; சத்தியமான தவத்தில் நிற்பவர்கள்; நாட்டத்தைப் பற்றி நடுவனைச் சேர்ப்பவர்கள்; முத்தமிழ் கற்று முயங்குபவர்கள்; உச்சிக்கு மேலும் சென்று உயர்வெளி கண்டவர்கள்; வேகாமல் வெந்து வெளியொளி கண்டவர்கள்; சாகாமல் தாண்டித் தனிவழி போனவர்கள்; அந்தரத்தில் அசைந்தாடுபவர்கள்; ஆனந்தம் பொங்கி அறிவோடிருப்பவர்கள்; சித்திரக் கூடத்தைத் தினம் தினம் காண்போர்கள்; முக்கோணத்தில் முனைந்தவர்கள்;

அட்டதிக்கெல்லாம் அலைந்தாடுபவர்கள்; முத்தி பெற்று உள்ளம் முயங்குபவர்கள்; அல்லலை நீக்கி அறிவோடு இருப்பவர்கள்; அட்டாங்கயோகம் அறிந்தவர்கள்; வேகம் அடக்கி விளங்குபவர்கள்; மாத்தானை வென்று மலைமேல் இருப்பவர்கள்; செத்தாரைப் போலத் திரிபவர்கள்; கண்டாரை நோக்கி கருத்தோடு இருப்பவர்கள்; காலனை வென்ற கருத்து அறிவாளர்கள்;

மாங்காய்ப் பாலுண்டு மலைமேல் இருப்பவர்கள்; பட்டணம் சுற்றிப் பகலிலே திரிபவர்கள்; தன்னையறிந்த தலைவனைச் சேர்ந்தவர்கள்; பத்தாவுடன் பதியில் இருப்பவர்கள்".[190] என்று பாடுவர் குதம்பைச்சித்தர். இத்தன்மை வாய்ந்த மெய்ஞானியர் இறைவனை எங்கும் எதிலும் காண்பவர்கள்; நாமே 'இறை' என்பதையும் அறிந்தவர்கள். தன்னை உணர்ந்த ஞானியர் இறைவனைத் தனியாகக் காண்பதில்லை. இறைவனைத் தன்னுள்ளே கண்டு மகிழ்வர்.

**"பார டங்க வுள்ளதும் பரந்த வான முள்ளலும்**
**ஓரி டமு மின்றியே யொன்றி நின்றவொண் சுடர்**
**ஆரி டம்மு மின்றியே யகத் துளும்பு றத்துளும்**
**சீரி டங்கள் கண்டவன் சிவன் தெரிந்த ஞானியே".**[191]

என்று சிவவாக்கியர் இறைவனைத் தன்னுள் காணும் தன்மையை விரித்துரைப்பர். மலர்கள் தூவி வழிபட்டது, மந்திரங்கள் செபித்து, நீரிறைத்து வணங்கியது, சிவாலயங்களைச் சுற்றி வந்தது முதலான செயல்கள் அனைத்தும் வீண் என்பதை ஞானியர் உணர்வர். இறைவனது இருப்பிடத்தை அறிந்தவர்கள், வேதம் சொன்ன பொருளாகிய இறைவனை வணங்குதலே அன்றிக் கண்ட கோயில்களுக்குச் சென்று 'தெய்வம்' என்று வணங்குவதில்லை".[192] ஆதியான இறைவனே அனைத்து உருவமாகவும் அமைந்துள்ளான்.

இதனை உணர்ந்து இறையுடன் கூடி மீண்டும் உருப்பெற்றுச் சோதியான ஞானியாகிச் சுத்தமாக இருப்பர். பேரறிவுப் பிழம்பாக விளங்கும் ஞானியர் சோதியும் தாங்களும் ஒன்றே என்று உணர்வர். அருவமாய் இறைவனை அனைத்துப் பொருள்களிலும் காணுவர்.

**இரண்டற்ற தன்மை**

நான் வேறு என்றில்லாமல் இரண்டற்ற தன்மையையே சித்தர்கள் விரும்பினர். இதனை,

**"அனைத்துமாய் அகண்மமாய் அனாதிமுன் அமைதியாய்**
**எனக்குள் நீயு னக்குள் நான் இருக்கு மாற தெங்கனே".**[193]

என்பதன் வழி அறியபடுகிறது. இந்நிலையைச் சிவவாக்கியர், பட்டினத்தார்,[194] பத்திரகிரியார்[195] முதலானோர் எடுத்துக் கூறுவர்.

**“அப்புடனே உப்பு சேர்ந்தளவு சரியானது போல்**

**ஒப்புடனே பிரமமுட னொன்றி நில்லு மடமனமே”.**[196]

என்றும் பாடுவதால் அறியப்படுகிறது. பக்குவம் பெற்ற எள்ளில் எண்ணெய் வெளிப்படுவது போலப் பக்குவப்பட்ட ஆன்மாவினின்றும் இறை வெளிப்படுவான். அந்நிலை ஞானியர் நிலையேயாகும். தன்னையறியும் உண்மை ஞானத்தைப் பெற்ற ஞானியர் தன்னையே பிறர் வணங்கத் தான் சிவபரம்பொருளாக இருப்பதை,

**“தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை**
**தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்**
**தன்னை யறியு மறிவை யறிந்தபின்**
**தன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே”.**[197]

என்ற பாடலால் விளக்குகிறார் திருமூலர். “இறப்பிலியாகிய இறைவனைப் போலவே ஞானம் அறிந்தவர்கள் இறப்பதில்லை”.[198] என்று திருவள்ளுவரும் குறிப்பர். “இறைவனைத் தம்முள் கண்டு தாமே இறையாகி நிற்பவரின் பருவுடல் சுடர்போலத் தோன்றும்”.[199] “இறைவனோடு கலந்து சொரூப முத்தி பெறுவர்; குருக்களைப் போன்றும், அரசனைப் போன்றும், குணமான மூவரைப் போன்றும் எல்லா அவதாரங்களையும் எடுக்கமுடியும்”.[200] எனக் காகபுசுண்டரும் குறிப்பிடுகிறார்.

இப்படிப்பட்ட ஞானியரைத்தாம் அறிவர்; நிறைமொழி மாந்தர்; செயற்கரிய பெரியார்; என்றெல்லாம் இலக்கியங்கள் வியந்து போற்றுகின்றன. ஞானநிலையில் இறைவன் பேரின்பத்தைப் பெற்றதைப் பட்டினத்தார்,

**“அட்டாங்க யோகமும் ஆதாரம் ஆறும் அவத்தை ஐந்தும்**
**விட்டேறிப் போன வெளிதனிலே வியப் பொன்று கண்டேன்**
**வட்டாகிச் செம்மதிப் பாலூறல் உண்டு மகிழ்ந் திருக்க**

**எட்டாத பேரின்பம் எனை விழுங்கி இருக்கின்றதே".**[201]

என்று பாடித் தெரிவிக்கின்றார். ஞானநிலைக்கு வந்த பிறகு அனைத்துமே தேவையில்லை என்பதை,

**"சரியை ஆகாதே அகப்பேய் சாலோகம் கண்டாயே**

**கிரியை செய்தாலும் அகப்பேய் கிட்டுவது ஒன்றுமில்லை".**[202]

**"யோகம் ஆகாதே அகப்பேய் உள்ளது கண்டக்கால்**

**தேக ஞானமடி அகப்பேய் தேடாது சொன்னேனே".**[203]

என்ற பாடல்களால் அகப்பேய் விளக்குகிறார்.

இவரினும் ஒருபடி மேலே போகும் குதம்பைச்சித்தர்,

**"ஆனந்தம் பொங்கி அறிவோ டிருப்போர்க்கு**
**ஞானந்தான் ஏதுக்கடி? - குதம்பாய்**
**ஞானந்தான் ஏதுக்கடி".**[204]

என்று ஞானம் தேவையில்லை என்கிறார். அவர்கள் 'பரப்பிரமங்கள்' என்பதை நிலைநாட்டுவர்.

**"காடே திரிந்தென்ன? காற்றே புசித்தென்ன? கந்தைசுற்றி**
**ஓடே எடுத்தென்ன? உள்ளன் பிலாதவர் ஓங்கு விண்ணோர்**
**நாடே இடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்**
**வீடே இருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்பம் மேவுவரே".**[205]
**"பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்திட்ட பிச்சை யெல்லாம்**
**நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று நன்மங்கை யரைத்**
**தாய்போல் கருதித் தமர்போல் அனைவர்க்கும் தாழ்மை சொல்லிச்**
**சேய்போல் இருப்பர் கண்டீர்! ஞானம் தெளிந்தவரே!".**[206]

என்று பட்டினத்தார் பாடி, உயர்ஞான வெளி கண்டோர் நிலையை எடுத்தியம்புவர். ஞானியர் நீண்டகாலங்கள் வாழக் கூடியவர் என்பதைப் புதிய வேதாகமும் மொழியும்.

ஞானமே முக்கியம். ஞானத்தைச் சம்பாதி; எண்ணத்தைச் சம்பாதித்தாலும் புத்தியைச் சம்பாதித்துக் கொள். நீ அதை மேன்மைப்படுத்து. அ∴து உன்னை மேன்மைப் படுத்தும். நீ அதைத் தழுவிக் கொண்டால் அ∴து உன்னைக் கனம் செய்யும். அ∴து உன் தலைக்கு அலங்காரமான முடியைக் கொடுக்கும். உன் ஆயுளையும் அதிகரிக்கும். தங்களுடைய வினைகளைக் கொன்றவர்களாகிய ஞானியர் எங்கும் எதிலும் இறைவனைக் கண்டு, அதிலெல்லாம் தம்மையும் கண்டு பேரின்பப் பெருவாழ்வை அடைந்தனர் என்பதை அனைத்துச் சித்தர்களும் மேற்கண்ட வழியால் தெளிவுறுத்துகின்றனர்.

# அடிக்குறிப்புகள்

1. திருக்குறள். 22.
2. தொல். கற்பியல். 51.
3. குணங்குடி மஸ்தான் பாடல்கள், 84.
4. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 127.
5. இடைக்காடர், பா. 82.
6. பாம்பாட்டி, பா. 49.
7. மேலது, பா. 109.
8. பகவத்கீதை. சுலோகம். 21.
9. பட்டினத்தார், பா. 104.
10. மேலது, பா. 85.
11. மேலது, பா. 109.
12. திருமூலர், திருமந்திரம், பா. 450
13. சிவவாக்கியர், பா. 520.
14. மேலது, பா. 521.
15. இடைக்காடர், பா. 60.
16. பட்டினத்தார், பா. 17
17. சிவவாக்கியர், பா. 427.
18. சட்டைமுனி, பா. 58.
19. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 135.
20. சட்டைமுனி, பா. 27.
21. சிவவாக்கியர், பா. 90.
22. பட்டினத்தார், பா. 19.
23. பத்திரகிரியார், பா. 43.
24. திருவள்ளுவர் ஞானம், பா. 19
25. இடைக்காடர், பா. 65.
26. காகபுசுண்டர், பா. 25.
27. சிவவாக்கியர், பா. 529.
28. சித்பவானந்தர், வியாக்கியானம், ஸ்ரீமத் பகவத்கீதை. 17.

29. மேலது, பா. 16.
30. மேலது, பா. 13 - 14.
31. மேலது, பா. 18 - 19.
32. மேலது, பா. 20.
33. சிவவாக்கியர், பா. 264.
34. மேலது, பா. 527.
35. பத்திரகிரியார், பா. 193.
36. திருவாசகம், எண்ணப் பதிகம், பா. 1.
37. திருவாசகம், சென்னிப்பத்து, பா. 10.
38. திருவாசகம், கண்டப்பத்து, பா. 7.
39. திருவாசகம், அச்சோப்பதிகம், பா. 1.
40. பாம்பாட்டி, பா. 107.
41. கடுவெளி, பா. 18.
42. மேலது, பா. 30.
43. மேலது, பா. 2.
44. திருவாசகம், திருச்சதகம், பா. 90.
45. மேலது.
46. தாயுமானவர், சின்மயா. 31.
47. பட்டினத்தார், பா. 140.
48. மேலது. திருக்கைலாயம், பா. 80.
49. மேலது, பா. 79.
50. குணங்குடி மஸ்தான் சாயபு பாடல்கள், பா. 10.
51. புதிய ஏற்பாடு. சங்கீதம், பா. 22
52. நாலாயிரத் திவ்யபிரபந்தம், ஆண்டாள், திருப்பாவை, பா. 29.
53. திருவாசகம். சென்னிப்பத்து, பா. 31.
54. தாயுமானவர், பா. 50.
55. சீறாப்புராணம், மேலை நாகூர் புக்கபடலம், பா. 62.
56. புதிய ஏற்பாடு, சங்கீதம். 20.
57. மேலது. 30.
58. மாணிக்கவாசகர், திருக்கோவையார், கோத்தும்பி, பா. 13.
59. பட்டினத்தார், பா. 210.

60. மேலது.
61. மேலது, பா. 51.
62. தாயுமானவர், பா. 69.
63. வள்ளலார், திருவருட்பயன், பா. 372
64. பாரதியார் கவிதைகள், பக். 253,
65. மேலது, பா. 87.
66. சட்டைமுனி, பா. 56
67. கடுவெளி, பா. 31.
68. குதம்பையார், பா. 21
69. காகபுசுண்டர், பா. 18.
70. சித்பவானந்தர், இராசயோகவிளக்கம், ப. 120.
71. திருமூலர், திருமந்திரம், பா. 552.
72. சட்டைமுனி, காஞ்சிப்புராணம்.
73. திருமூலர், திருமந்திரம், பா. 554.
74. மேலது, பா. 802.
75. மேலது, பா. 556.
76. நச்சினார்க்கினியர் உரை. தொல். பொருள். 25.
77. மேலது. 75.
78. திருமூலர், திருமந்திரம், பா. 558.
79. மேலது, பா. 559.
80. இரா.சு.பத்மநாபன், பாரதி புதையல், இரண்டாம் பாகம், ப. 60.
81. ஞானம், பா. 11, உபநிடதம், பக். 22 - 28.
82. அகத்தியர் ஞானம். 8.
83. திருமூலர், திருமந்திரம், பா. 571.
84. மேலது, பா. 573.
85. மேலது, பா. 735.
86. பட்டினத்தார், பா. 143.
87. திருவுந்தியார், பா. 43.
88. திருமூலர், திருமந்திரம், பா. 576.
89. மேலது, பா. 442.
90. உரோமரிசி, பா. 3434.

91. சிவவாக்கியர், பா. 4.

92. மேலது, பா. 10.

93. மேலது, பா. 16.

94. மேலது, பா. 325.

95. மேலது, பா. 421.

96. மேலது, பா. 424.

97. மேலது, பா. 430.

98. மேலது, பா. 432.

99. மேலது, பா. 439.

100. திருமூலர், திருமந்திரம், பா. 549 - 616.

101. பத்திரகிரியார், மெய்ஞ்ஞானப் புலம்பல், பா. 96.

102. சிவவாக்கியர், பா. 67.

103. பட்டினத்தார், பூரணமாலை, பா. 1.

104. அழுகணி, பா. 1

105. பத்திரகிரியார், பா. 1

106. அழுகணி, பா. 1

107. பாம்பாட்டி, அகப்பற்று நீக்கல், பா. 115.

108. கொங்கணர். வாலைக்கும்மி, பா. 63.

109. காகபுசுண்டர், உபநிடதம், பக். 26 - 27.

110. சட்டைமுனி, பின் ஞானம் நூறு, பக். 61 - 62.

111. நச்சினார்க்கினியர் உரை. தொல். பொருள். 75.

112. சட்டைமுனி, பின் ஞானம் நூறு, ப. 63.

113. திருமூலர், திருமந்திரம். 579.

114. மேலது, பா. 580.

115. மேலது, பா. 581.

116. மேலது, பா. 582.

117. மேலது, பா. 583.

118. மேலது, பா. 584.

119. மேலது, பா. 585.

120. மேலது, பா. 586.

121. மேலது, பா. 588 - 597.

122. மேலது, பா. 592.
123. சட்டைமுனி, பின் ஞானம் நூறு, பக். 64.
124. நச்சினார்க்கினியர் உரை. தொல். பொருள். 75.
125. சிவவாக்கியர். 50
126. திருமூலர், திருமந்திரம், பா. 604.
127. சட்டைமுனி, பா. 8.
128. சிவவாக்கியர், பா. 127.
129. பட்டினத்தார், திருஏகம்பமாலை, பா. 60.
130. பட்டினத்தார், திருக்கைலாயம், பா. 80.
131. பட்டினத்தார், தலப்பாடல்கள், பா. 5
132. சிவவாக்கியர், பா. 32.
133. உரோமரிசி, ஞானம், பா. 10.
134. சிவவாக்கியர், பா. 151.
135. இடைக்காட்டுசித்தர், நாராயணக் கோனார் கூற்று. 16.
136. பத்திரகிரியார், மெய்ஞானப் புலம்பல், பா. 59.
137. பாம்பாட்டி, பொருளாசை விளக்கம், பா.44.
138. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 168.
139. போகர், சத்தகாண்டம், ப. 990.
140. நச்சினார்க்கினியர் உரை. தொல். பொருள். 75.
141. கொங்கணர், பா. 98.
142. சிவவாக்கியர், பா. 46.
143. திருமூலர், திருமந்திரம், பா. 631.
144. சட்டைமுனி, பின் ஞானம் நூறு, பக். 65.
145. மேலது, பா. 66.
146. மேலது, பா. 67 - 68.
147. காகபுசுண்டர், உபநிடதம், ப. 30.
148. சட்டைமுனி, பின் ஞானம் நூறு, பக். 71 - 72.
149. காகபுசுண்டர், உபநிடதம், பா. 22 - 23.
150. திருமூலர், திருமந்திரம், பா. 727.
151. மேலது, பா. 735.
152. உரேமரிஷி ஞானம், பா. 2.

153. கருவூரார் பூஜா விதி, பா. 4.

154. இடைக்காடர், பா. 123.

155. மேலது, பா. 130.

156. சட்டைமுனி, முன் ஞானம் நூறு, பா. 27.

157. போகர், பா. 680.

158. அழுகணிச் சித்தர், பா. 16.

159. வால்மீகர், சூத்திர ஞானம், பா. 15.

160. காகபுசுண்டர், உபநிடதம், ப. 31.

161. கொங்கணர், நடுக்காண்டம், 500, ப. 95.

162. சிவயோக சாரம், ப. 257.

163. சிவஞான போதம், எட்டாம் சூத்திரம், முதல் கரணம்.

164. சிவஞான போதம், சுப்பிரமணியதேசிகர் (உரை), ப. 9.

165. சட்டைமுனி, முன் ஞானம் நூறு, பா. 2.

166. திருவள்ளுவர் ஞானம், பா. 10.

167. சட்டைமுனி, முன் ஞானம் நூறு, பா. 27

168. சட்டைமுனி, பின் ஞானம் நூறு, பா. 25.

169. மேலது, பா. 39.

170. திருமூலர், திருமந்திரம், பா. 16.

171. திருமூலநாயனார் ஞானம், பா. 6.

172. பாம்பாட்டி, குருவணக்கம், பா. 10 - 19.

173. சிவவாக்கியர், பா. 233.

174. சட்டைமுனி, பின் ஞானம் நூறு, பா. 42.

175. இடைகாடர், நாராயணக் கோனார் கூற்று, பா. 22.

176. சுவாமி சித்பவானந்தர், பக்தி யோக விளக்கம், ப. 7.

177. காகபுசுண்டர், உபநிடதம், பக். 12 - 13.

178. சட்டைமுனி, முன் ஞானம் நூறு, பா. 4.

179. மேலது, பா. 6.

180. மேலது, பா. 11.

181. மேலது, பா. 19.

182. மேலது, பா. 15.

183. மேலது, பா. 17.

184. பாம்பாட்டிச்சித்தர், அகப்பற்று நிக்கல், பா. 105.

185. காகபுசுண்டர் ஞானம், பா. 36.

186. அகத்தியர் ஞானம், பா. 1.

187. சிவவாக்கியர், பா. 182, 46.

188. பட்டினத்தார், பா. 19.

189. மேலது, பா. 35.

190. குதம்பைச் சித்தர், பா. 1- 32.

191. சிவவாக்கியர், பா. 110.

192. மேலது, பா. 28.

193. மேலது, பா. 196.

194. பட்டினத்தார். பூரணமாலை, பா. 30 - 33.

195. பத்திரகிரியார், மெய்ஞானப் புலம்பல், பா. 160.

196. இடைக்காடர், பா. 69.

197. திருமூலர், திருமந்திரம், பா. 2355.

198. திருவள்ளுவர் ஞானம், பா. 9

199. உரோமரிஷி ஞானம், பா. 2.

200. காகபுசுண்டர் ஞானம், பா. 53.

201. பட்டினத்தார், பா. 110.

202. குதம்பைச் சித்தர், பா. 25.

203. மேலது, பா. 26.

204. மேலது, பா. 15.

205. பட்டினத்தார், பா. 20.

206. மேலது, பா. 119.

## இயல் - 3

# சித்த வைத்தியமுறைகள்

சித்தர்கள் வாதம், வைத்தியம், யோகம், ஞானம் என நான்கு வகைப் பாகுப்பாட்டில் விளக்குகின்றனர். சித்தர்கள் மருத்துவத்துடன் சோதிடம், மந்திரம், இரசவாதம், யோகம் போன்றவற்றுடன் தொடர்புப்படுத்தி சித்த மருத்துவத்தில் முழுமையான தேர்ச்சி பெற்றவர்கள் என்றால் மிகையாகாது. இச்சித்தர்களின் சித்தமருத்துவம், மொழிப்பற்று, மறைமொழி ஆளுகை, மருந்தாக்கம், இச்சாபத்தியம், காயகல்பம், இரவாதக் கருத்துகள், கற்பமுறைகள், மந்திரம், யோகம் போன்ற வைத்தியப் பெருமையை உணர இவ்வியல் ஆராயப்படுகிறது.

### சித்த மருத்துவத்தின் சிறப்பு

சங்கம், சமய காலத் தமிழ் இலக்கிய வகை தமிழர்க்கு விருந்தாக அமைந்ததென்றால், சித்தர் இலக்கியம் மருந்தாக அமைந்தது. கற்பனை, வளர்ச்சி, கருத்து, வடிவம் ஆகிய அணிகலன்களால் சிறந்த தமிழ் இலக்கியம், சித்தர்களின் மறைமொழியால் தனிச்சிறப்பினைப் பெற்றதாகும். இதனைத் தொல்காப்பியர்,

**“நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த**

**மறைமொழி தானே மந்திரம் என்ப”.**[1]

எனும் தொல்காப்பியத்திற்கு இலக்கியம் படைத்த பெருமை சித்தர்களையே சாரும். இயற்கையின் மீது கொண்ட அளவற்ற ஈடுபாடும், வாழ்வின் உண்மைப் பொருளைக் காண விழைந்த வேட்கையும் சித்தர்களை உயர்ந்த மனிதர்களாக்கியது. ‘யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்’ எனும் பரந்த நோக்கில் தாம் கண்டு கேட்டு உண்டு உயிர்த்த காட்சிகளையும், கருத்துகளையும் உலகுக்கு உணர்த்த விழைந்தனர். மெய்வருத்தம் பாராமல், பசி அறியாமல், கண் துயிலாமல், ஊனினைச் சுருக்கி, உள்ளொளி பெருக்கி, கண்டறிந்த அரிய உண்மைகளைக் கற்பனையும், உணர்ச்சியும் கலந்த எளிய காவியமாகப் படைக்க விரும்பவில்லை.

யோக, ஞான, மருத்துவ உண்மைகளைப் பதிந்து வைக்க ஓர் உத்தியைத் தேடினர். ‘மறைஅமாழி’ அவர்கள் கருத்திற்கு இணங்கியதாக அமைந்தது. வைரத்தைத் தங்கத்தில் பதிப்பதுபோல் அரிய வாழ்வியல் உண்மைகளை ‘மறைமொழி’ எனும் வடிவத்தில் பதித்து விட்டனர். வைரத்தால், தங்கம் புத்தொளி பெற்றதுபோல், சித்த மருத்துவ உண்மைகளை மறைமொழி கொண்டதால் தமிழ்மொழியும் புத்தொளி பெற்றது. உவமை, யாப்பு, சொல்லாட்சி, கற்பனை, வடிவம், உணர்ச்சி, புராண வழக்கு, ஆற்றொழுக்கான நடையெனப் பலவகை உத்திகளைச் சித்த மருத்துவத்தில் காணமுடிகின்றது என்றாலும், இவற்றை எல்லாம் விஞ்சியநிலையில், கற்போர் நெஞ்சில் கவினுறப் பதியும் தனிச் சிறப்பினை உடையது. சித்த மருத்துவத்தில் பெரிதும் காணப்படுவது மறைமொழிக் கூற்றாகும்.

‘சித்த மருத்துவம் மறைவதற்கு மறை மொழிக் கூற்றும் காரணம்’ எனும் தவறான கருத்து, மக்களிடையே, பலகாலும், பலராலும் பரப்பப்பட்டு வருகின்றது. நச்சுத்தன்மை கொண்ட இக்கருத்து களையப்பட வேண்டும் எனும் நோக்கில், சித்த மருத்துவத்தில் ‘மறைமொழி’ இடம்பெற்ற காரணம், அதன் தன்மை, பயன் ஆகியவற்றை ஆராய்தல் இன்றியமையாததாகும். அவ்வாறு ஆய்ந்தபோது சித்த மருத்துவத்தின் தளிச்சிறப்பு - மறைமொழி அமைப்பிலேயே அமைந்துள்ளது எனும் அரிய கருத்தினைப் பெற முடிகிறது. தமிழானது அறிவியல் தன்மையைக் கொண்டதற்கு, இம்மறைமொழிக் கூற்றுகள் பெரிதும் உதவியுள்ளன என்பதை இக்கால வேதியியல் அமைப்புகளை மறைமொழிக் கூற்றுடன் ஒப்பாய்வு செய்தபோது உணரமுடிகிறது.

## சித்தர்களின் தமிழ்ப்பற்று

காலம், இடம், சாதி, சமயம் ஆகியவற்றைக் கடந்து வாழ்ந்த தமிழகச் சித்தர்கள், தமிழ்மொழி மீது அளவற்ற பற்றினைக் கொண்டிருந்தனர். ஈசனோடாயிலும் பற்றினைக் கைவிடத் துணிந்தவர்களால், தமிழ்ப் பற்றினைக் கைவிட இயலவில்லை.

**“என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**

**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே”.**[2]

என்று பெருமிதம் கொள்ளும் திருமூலரின் தமிழ்க்காதல், சித்தர்களின் தமிழ்க் காதலை உணர்வதற்கு உதவும் உரைகல்லாகும்.

காலத்தை வென்று வாழும் பதினெண் சித்தர்களின் சிந்தனையில் மருத்துவம், மந்திரம், தந்திரம், சித்தாந்தம், யோகம், ஞானம், வான சாத்திரம் போன்ற கலைகளுக்கு வளம் தந்தது. தமிழில் மருத்துவ அறிவியல் இருக்கின்றது என்னும் வகையில் நூற்றுக்கணக்கான மருத்துவ நூல்களைச் சித்தர்களின் சிந்தனை உருவாக்கியுள்ளது.

## சித்த மருத்துவம்

பதினெண் சித்தர்களின் பெயரால் இன்று வழங்கப்படும் மருத்துவ நூல்களில் தேரையர், திருமூலர் எழுதிய நூல்கள் தவிர்த்து ஏனைய நூல்கள் அனைத்தும் சித்தர்களால் எழுதப்பட்டவை எனக் கூற இயலாது. செவி வழியாகக் காலந்தோறும் நிலவி வந்த மருத்துவச் சிந்தனைகளின் பிற்காலத் தொகுப்பாகவே தோன்றுகின்றன. சுவடிகளின் நடையாலும், சொல் வழக்காலும், வடசொற்கலப்பாலும், காலவழு போன்ற காரணங்களாலும் இவற்றைப் பிற்காலத்தவர் சித்தர் பெயர்களில் தொகுத்தனர் என்றே கருதவேண்டியுள்ளது.

'புகையிலை, சரக்கு, மோசம், பிளாஸ்திரி, அக்கினி பிளாஸ்திரி, சும்மா, பாரப்பா, கேளப்பா' போன்ற அண்மைக் காலச் சொற்கள் பல அகத்தியர்[3] போகர்[4] போன்ற சித்தர்கள் இயற்றியவையாகக் கூறப்படும் நூல்களில் காணப்படுகின்றன. இச்சொற்களின் கால ஆராய்ச்சியைக் கருதினால், இன்று காணப்பெறும் சித்த மருத்துவ இலக்கியங்களில் பெரும்பாலானவை கடந்த 400 ஆண்டுக்கால அளவில் தொகுக்கப்பட்டவை என்றே எண்ணத் தோன்றுகின்றது. இவை எந்தவொரு சித்தராலும் இயற்றப்பட்டவையல்ல.

## மறைமொழி

சித்த மருத்துவத்தை அறிய உதவும் பல நூல்களை எளிமையாக எவரும் கற்க இயலாது. காரணம், சித்தர்கள் பலகாலம் கண்டறிந்த மருத்துவ உண்மைகளை, எளிமைத்தமிழ் என்ற நிலையில் நேரடியாக எழுதி

வைக்கவில்லை. நேரடியாக எவருக்கும் கூறவும் இல்லை. இன்றும் சித்தர்களாகக் கருதப்படும் சிலரிடம், 'மறைமொழி' மூலம்தான் உரையாட முடியுமே தவிர, எளிமையாக உரையாட இயலாது. சித்தர்கள் மருத்துவத்தை மறை பொருளாகவே போற்றினர்.

மக்கட் சமுதாயத்திற்கு முழுமையாகப் பயன்பட வேண்டிய இன்றியமையாமை யாது என எண்ணத் தோன்றும். இந்நற்சிந்தனைக்கு விளக்கமாக, சித்தராக வாழ்ந்து மறைந்த அரவிந்தரின் கீழ்க்கண்ட கருத்தினைக் காணமுடியும்.

> **"உன்னை அறி' என்பது மறைவோர் தம் உபதேசம். அன்றியும் அவர்கள் உலகத்தில் வெளித்தோற்றங்களுக்குப் பின்புறம் உள்ளபடி கண்டனர்; அந்தச் சத்தியத்தைக் கண்டுகொண்டு கடைப்பிடித்து அகப்படுத்தி அனுபவித்தல் அவர்தம் பேரவாவாயிற்று. இயற்கையின் ரகசியங்களையும், ஆற்றல்களையும் கண்டு கொண்டனர். அவை பௌதிகமாகிய சட வுலகைச் சார்ந்தவையன்று; ஆயினும் பௌதிக உலகின்பாலும் பௌதிக பொருட்களின் பாலும் கூடமான வெற்றியைத் தந்து அளிப்பன. ரகசியமான இந்த ஞானத்தையும், சக்தியையும் ஒழுங்குபடுத்தல் அவர்கள் திடமாய் முற்பட்ட காரியங்களில் ஒன்று, இ∴தனைத்தையும் உன்னிப்புடன் கடினமான சிசையாலும், பயிற்சியாலும், சுபாவம் தூய்மை பெறுதலாலுமே அபாயமின்றிச் சாதிக்கவியலும். சாமான்ய மனிதன் இதனைச் சாதிக்க வல்லோன் அல்லன். கடுஞ் சோதனையும் சிசையுமின்றி மனிதர் இவ்விஷயங் களில் தலையிட்டால் அவர்களுக்கும், பிறருக்கும் அவை அபாயம் விளைவிக்கும். இந்த ஞானத்தையும், சக்திகளையும் துர்விநியோகம் செய்யக்கூடும்.**

> **தப்பாக விளக்கக்கூடும். உண்மையினின்று பொய்ம்மைக்கும், நன்மையினின்று தீமைக்கும் திருப்பிவிடக் கூடும். ஆதலால் ஒரு திட்டமான மறைப்பு (ஒளிப்பு) நிறுவப்பட்டது. திரை மறைவாய் குருவினின்று சிஷ்யனுக்குக் கிட்டியது. ஒரு ஸங்கேதத் திரை (மர்மங்களைத் தம்முட் கொண்ட அறிகுறி) ஏற்படுத்தப்பட்டது. அதன் மறைவில் இந்த ரகசியங்கள் பாதுகாக்கப்பட்டுத் தங்குதற்கிடங் கொண்டன. அங்ஙனமே சொற்களை, பாஷையை, மர்மப் பொருள் தருமாறு கையாளுதற்கு விதிகள் நியமிக்கப்பட்டன. அவற்றை அந்தரங்க தீட்சை பெற்றவர்கள் தாம் அறியக்கூடும். பிறர் அறியார். அறிந்தாராயின் ரகசியத்தையும் உட்கருத்தையும் மறைத்துப் போர்த்து நிற்கின்ற புறப்பொருளைத்தான் அறிந்தாராவர். இதுவே எங்கும் தவவாதிகளின் சித்தாந்தத்தின் சாராம்சம்".[5]**

என மறைமொழி (பரிபாசை) பற்றிய அரவிந்தரின் மேற்கண்ட விளக்கமாகும். சித்தர்களின் மறைமொழி பற்றிய கொள்கைக்கு உரையாகவே அமைந்துள்ளது. சித்தர்களின் இலக்கியங்களை ஆழ்ந்து ஆராய்ந்து வரும் மாணிக்கவாசகம் கீழ்க்கண்ட கருத்தாக, "சித்தர் பாடல்கள் என்று இன்று நமக்குக் கிடைக்கும் இலக்கியங்கள் அனைத்தும் எந்தத் துறையைச் சார்ந்ததாக இருப்பினும், அவ்வவ்வாசிரியரால், இயற்றப்பட்டனவல்ல என்பது உறுதி. அவர்கள் கூறியன அனைத்தும் மக்கட்சமுதாயத்திற்குத் தேவை என்றாலும், 'ஓடும் செம்பொன்னையும் ஒக்கவே நோக்கும்' மனப்பக்குவம் பெற்றவர்க்கே விளங்கும் வகையின. ஆதலின் அவை மறைவாகவே வைக்கப்பட்டன. குரு - மாணவர் வழிமுறையில் சொல்லி வந்ததே தவிர வெளிப்படையாகக் கூறி எழுதும் முறையில்லை".[6] என விளக்குகிறார். இவ்விரு கருத்துகளையும் நோக்கும்போது, சித்த மருத்துவம் பற்றிய செய்திகள் அனைத்தும் வாய்மொழியாகவே பலகாலம் வாழ்ந்து வந்தன என்பதும், அவையும் குரு - மாணவர் எனும் வழிமுறையினரிடையே மட்டும் நிலவியது என்பதும் அறியக் கிடைக்கின்றது.

**"சித்தர்களுக்காகவே இந்நூல் சொன்னேன்.**
**சிவயோகி மெய்ஞானிக் கிந்நூல் சொன்னேன்.**
**பற்றற்றாய் குருவுக்குத் தொண்டு பண்ணி**
**பன்னிரண்டு வருஷம் வரப்பாதம் போற்றி**
**கற்றோமிந்த கடைப்பிள்ளை ஞானம்**
**கல்வியறி வுள்ளோர்க்கு மீயலாகும்**
**மற்றுள்ளோர்க்கு இந்நூலை யீந்தாயானால்**
**மாண்டிடுவாய் மகத்தான சாபமெய்தே".**[7]

எனவரும் சித்தர் பாடலில், 'பன்னிரண்டு ஆண்டு' மாணவராக இருந்து பயிற்சி பெற வேண்டிய இன்றியமையாமையையும், இவ்வாறு பெற்ற அறிவைக், கல்வியறிவுடையோர்க்கே தவிர மற்றுள்ளோர்க்கும் கொடுத்தல் கூடாது என்றும், மீறிக் கொடுத்தால், 'மாண்டிடுவாய்' எனும் அச்சுறுத்தலையும் கூறி இருத்தலை நோக்கும்போது, சித்தமருத்துவத்தைக் கற்க வேண்டிய முன்னெச்சரிக்கைகள், கடமை உணர்வுகள் புலனாகின்றன. இவ்வாறு மறைபொருள் பயிற்சியாக மனப்பக்குவம் கொண்ட குரு - மாணவர் வழி மரபில், செவி வழியாக வாழ்ந்து வந்த மருத்துவம் அண்மைக் காலத்தில் அனைவருக்கும் உகந்த கலையாக! உணர வேண்டிய அளவிற்கு அச்சுகலைவடிவம் பெற்றுத் திகழ்கிறது.

சித்த மருத்துவம், மறைமொழியிலேயே பன்னெடுங்காலம் நிலவிப் பிற்காலத்தவரால் மறைமொழிப் பாடல்களாகவே தொகுக்கப்பட்டதால், சித்த மருத்துவம் முழுவதும், மறைமொழிக் கூற்றுகளிலேயே அமைவது தவிர்க்க இயலாததாகி விட்டது. பிறவகை இலக்கியங்களில் காணப்பெறும் கற்பனை, உணர்ச்சி, உவமை, வருணனை போன்றவற்றைச் சித்த மருத்துவத்தில் மிகுதியாகக் காண இயலாது. பிணி தீர்க்கும் மருந்துப் பொருட்களை நேரடியாகக் குறிப்பிடாமல், மறைபொருளாகவே குறிப்பிட்டுள்ளதை மிகச் சாதாரணமாகக் காணமுடியும். உடற்பிணியைப் போக்கும் மருத்துவப் பணியை மேற்கொள்ள விரும்புவோர் தணியாத ஆர்வத்தையும், சலியாத உழைப்பையும், அயராத முயற்சியையும், அளவற்ற பொறுமையையும், நுட்பமான புலமையையும் கொண்டிருக்க வேண்டும். இத்தகுதிகளை இயல்பாகப் பெறத்தக்க வகையில், பயிற்சியளிக்கத் தக்கவாறு சித்தமருத்துவம் அமைந்துள்ளன.

“தீ நாற்றமுடன் பரவும் இறுகிய சளியைப் போக்க, இரு குரங்கின் கையை அரைத்து உண்க”.[8] என்று குறிப்பிடும் சித்த மருத்துவப் பாடலில் மேற்போக்கான பொருளுக்கேற்ப இரண்டு குரங்குகளைக் கொன்று அதன் கைகளைச் சமைத்து உண்ண முயற்சி செய்தால், அது கடுவினையாகத்தான் முடியும். மருத்துவம் பயில வந்தவர் முயற்சியும், ஆர்வமும், உழைப்பும் உடையவராக இருப்பின், ‘இரு குரங்கின் கை’ என்னும் தொடருக்குரிய பொருளை அறிய முற்படுவார். அவ்வாறு முற்பட்டால் மறைந்திருக்கும் மூலிகையின் பெயர் புலனாகும்.

தமிழில், “குரங்கை - முசு”.[9] என்ற சொல்லால் குறிப்பர். ‘இரு குரங்கு’ என்பது ‘முசு முசு’ எனவரும். இரு குரங்கின் கை ‘முசுமுசுக்கை’ எனத் தெரியவரும். முசுமுசுக்கை எனும் பச்சிலையை அரைத்து உண்ண, இறுகிய சளி வெளியேறும் என்பது இதன் கருத்தாகும். இப்போது எளிமையாகத் தோன்றும். இந்த எளியமுறையை, முதலிலேயே கூறியிருந்தால் என்ன? என்று வினவினால், அரிதில் முயன்று கண்டுபிடிக்கும் உண்மை நெஞ்சில் பசுமரத்தாணி போல் பதியும் என்பதால் தான், ‘மறைமொழிகளில்’ மருத்துவமுறைகளைப் பதித்தனர். இவ்வாறு அருமையும், பெருமையும் கொண்ட பல்வேறு மருத்துவனின் ஆர்வத்திற்கு மறைவிடமாக அமைந்தன, நூற்றுக்கணக்கான தமிழ்ச்சொற்கள். இவையே பிற்காலத்தில் பிறரால் ‘பரிபாசை’ என்று குறிப்பிடலாயிற்று.

**மறைமொழி - வகை தொகை**

சித்த மருத்துவத்தில் காணப்படும் மறைமொழிக் கூற்று இருவகைகளில் அமைந்துள்ளது.

அ. ஆக்கச் சொற்களால் உருவானவை.

ஆ. குழூஉக் குறிச் சொற்களால் உருவானவை.

**ஆக்கச் சொற்கள்**

தாம் கருதிய பொருளை மறைத்து அப்பொருளைப் பிற வகையால் உணர்த்துவது ஆக்கச் சொற்களால் அமையும் மறைமொழியாகும். எ.கா:

‘முசுமுசுக்கையை - இரு குரங்கின் கை எனக் குறிப்பிடுவது. இது பிறிது பொருள் பற்றி வந்த ஆக்கச் சொல் மறைமொழி.

‘வாழை’யைத் தாயைக் கொன்றான் எனக் குறிப்பது. இது பண்பு வகையால் வந்த ஆக்கச் சொல் மறைமொழி.

உத்தாமணியை வேலிப்பருத்தி எனல். (உத்தாமணியின் காய் பருத்திப் பஞ்சுபோல் வெடித்துக் காற்றில் பறக்கும். வேலியோரங்களில் படர்வது இயல்பு.)

கள்ளியைத் திருடி எனல் - பிற பொருள் வகையால் வந்த ஆக்கச் சொல் மறைமொழி.

மிளகு என்பதை குளமி எனல் - இஃது எழுத்துகளை மாற்றி அமைத்தலால் வந்தது. இவ்வாறு எழுத்து மாறி அமையும் ஆக்கச் சொல் மறைமொழிகளை, முகம் பார்க்கும் கண்ணாடியால் காட்டிப் படித்துப் பொருள் கொள்ளமுடியும்.

## குழூஉக் குறிகளால் அமைந்த மறைமொழி

ஒரு குறிப்பிட்ட குழுவினரால் மட்டும் புரிந்து கொள்ளக் கூடிய அடையாளச் சொற்கள் ‘குழூஉக் குறி’ எனப்படும். சிறைச்சாலைக்குப் போவதை மாமனார் வீடு என்பதும், தப்பி ஓடுவதைக் ‘கம்பி நீட்டுதல்’ என்றும் குறிப்பிடுவதும் குழூஉக் குறியாகும். பொற்கொல்லர் பொன்னைப் ‘பறி’ என்றும், வேடர்கள் கள்ளைச் - ‘சொல் விளம்பி’ என்றும் குறிப்பது, குழூஉக்குறி என்று கருதுவர்”.[10] மருத்துவ நூல்களில் கணக்கற்ற குழூஉக் குறிகள் இடம் பெற்றுள்ளன. அவற்றில் சில:

| **குழூஉக் குறி** | **பொருள்** |
|---|---|
| இரவி | - பொன் |
| இரசம் | - வேந்தன் |
| மால்மனைவி | - அரிதாரம் |
| நாற்றம் | - கந்தகம் |
| வழலை, சோதி | - மூப்பு |
| சர்க்கரைக் கொல்லி | - சிறுகுறிஞ்சான் |
| மாங்காய்ப்பால் | - அமிர்தம் |

| | |
|---|---|
| ஓடும் குதிரை, அகக்கால் | - பிராணவாயு |
| ஆனந்தத் தேறல் | - யோக அமுரி |
| பிள்ளை வளர்த்தி | - வசம்பு |
| தாய் | - கடுக்காய் |
| கானக்குதிரை | - மாமரம் |
| தோற்பை | - உடல் |
| கல் விந்து | - சிலாசத்து |
| தண்ணீர் தேற்றி | - தேற்றான் கொட்டை |
| பழச்சாறு | - எலுமிச்சைச் சாறு |
| அமிர்தப்பால் | - தாய்ப்பால். |

இவ்வாறு வழங்கப்படும் குழூஉக் குறிச் சொற்களை[11]த் தொகுத்தால், அரிய மருத்துவ மறைமொழி அகராதியை உருவாக்கமுடியும்".[12] இவ்விருவகை மறைமொழிகளால் அமையும் பாம்பாட்டிச்சித்தர் பாடலில்,

> **"தாசி வீடு சென்ற தறுதலைக்குச்**
> **செம்மையாய்த் தருக செருப்படித்தான்**
> **காசும் அற்று விடும் கவமிளகும்**
> **கதியே சைவமென்றாடு பாம்பே".**[13]

எனும் பாடல்களில் தாசி வீடு சென்ற மகனைச் செம்மையாகச் செருப்பால் அடித்துத் தண்டிக்க வேண்டும். அவனால் காசு விரயமாகும். தன்மானம் அற்றுவிடும். அப்படிப் பட்டவர்கள் திருத்தச் சைவமே கதி என்பது இப்பாடலின் மேற்போக்கான பொருளாக அமையும். ஆயின் மருத்துவ நோக்கில் மறைமொழியாக,

| | |
|---|---|
| செருப்படி | - செருப்படை எனும் மூலிகை |
| காசு | - காச நோய் |
| கவம் | - கவநோய் |
| சைவம் | - தாளிசபத்திரி எனும் மூலிகை. |

இச்சொற்கள் தரும் விளக்கத்தால் பாடலின் பொருளைத் தொகுத்தால், 'தாசிவீடு சென்றதால் மேகவெட்டை எனும் நோய்க்குச் செருப்படை எனும் மூலிகையைக் கொடுக்கவேண்டும். மேகவெட்டை காரணமாக வரும் காசநோயும், சுபநோயும் விலக, தாளிசபத்திரியைக் கொடுக்கவேண்டும்' எனப் பொருள்

முற்றிலும் மாறி இலக்கிய நயத்தோடு ஒரு மருத்துவ முறையையும் உணர்த்தும். இவ்வாறு அமையும் மறைபொருள் சிறப்பினைச் சித்தர்களின் மருத்துவ நூல்கள் பெரும்பாலானவற்றில் காணமுடிகிறது.

**“ஆனைக் கன்றில் ஒருபிடியும்**

**அறைவன் விரோதி இளம்பிஞ்சும்**

**கானக்குதிரை புறத்தோலும்**

**காலிற் பொடியை மாற்றினதும்**

**தாயைக் கொன்றான் சாறிட்டு**

**தயவா யறைத்துக் கொள்ளீரேல்**

**மானைப் பொறுதும் விழியாளே!**

**வடுகும் தமிழும் குணமாமே!”.**[14]

எனவரும் தேரையர் பாடலில் வயிற்றில் ஏற்படும் பேதம் காரணமாக வரும் பேதியைக் குணப்படுத்தும் மருத்துவமுறை அடங்கியுள்ளது.

ஆனை - அத்தி மரத்தின் மற்றொரு பெயர்.

கன்று - பிஞ்சு

ஆனைக் கன்றின் ஒரு பிடி என்பது, அத்திப்பிஞ்சின் ஒரு பிடி எனவரும்.

அரையன் - அரசன் என்பதன் போலி

‘கோ’ என்ற சொல் அரசனைக் குறிக்கும்.

விரோதி - வைரி என்னும் சொல்லின் சுருக்கம் ‘வை’ எனவரும்.

அரையன் விரோதி - இளம் பிஞ்சு - கோவை. கோவைக் கொடியின் இளம்பிஞ்சு.

கானக்குதிரை - மாமரத்தைக் குறிக்கும் குழூஉக் குறி.

காலில் பொடியை மாற்றினது - செருப்படை எனும் மூலிகை.

தாயைக் கொன்றான் சாறு - வாழைப்பட்டையின் சாறு.

வடுகு - வடுகர் என்பது தெலுங்கு மொழி பேசுபவரைக் குறிக்கும்.

வடுகும் - தமிழும்; தெலுங்கும் - தமிழும் பேதம் உடையன.

வடுகும் தமிழும் குணமாமே என்பது வயிற்றில் பேதம் காரணமாக வரும் பேதி குணமாகும்”.[15] எனப் பொருள்படும். மீண்டும் படித்தால்,

**‘அத்திப்பிஞ்சு ஒரு பிடி**

**கோவைப்பிஞ்சு ஒரு பிடி**

**மாமரப்பட்டை, செருப்படை ஆகியன**
**ஒருபிடி எடுத்துப் பொடி செய்து**
**வாழைப்பட்டைச் சாறிட்டு அரைத்து**
**அளவுடன் உட்புகட்ட, பேதமுற்ற**
**வயிற்றில் ஏற்படும் பேதி குணமாகும்'**

என்ற பொருளில் அமையும். இவ்வாறு ஆக்கச் சொற்களாலும், குழூஉக் குறிகளாலும் அமையும் எண்ணற்ற மருத்துவப் பாடல்களை எண்ணிப் பார்த்துப் பொருள் கொண்டால் மறைமொழி தெளிவுடையும்.

## இக்கால அறிவியலில் மறைமொழி

நுட்பமும், அருமைப்பாடும் உள்ள எந்தவொரு கலையையும், எளிதாக எவரும் வெளிப்படுத்துவதில்லை. இன்றைய வேதியல் அமைப்பு முறையை நோக்கினால் அவை அனைத்தும் குறியீடுகளாலும், மறைமொழிகளாலும் அமைந்திருப்பதை எடுத்துக்காட்டாகக் காண்போம்.

'Oxygen and Hydrogen combines together to produce Water' என்னும் அரிய செய்தியைக் குறிக்க வேதியியலார் கீழ்க்கண்ட குறியீடுகளைக் கையாள்வர்.



$$2O + 2H_2 \text{ ----------- } 2H_2 O$$

என்று குறிப்பிடுவதில் $2O$, $2H_2$, $2H_2 O$ என வருபவை, இன்றைய வேதியியலார் படைத்த மறைமொழிகளாகும். வேதியியல் படித்தவர்க்கு மட்டுமே புரியக் கூடியவை. எழுதுவதற்குரிய எளிமைக்காகவே இவ்வாறு குறியீடுகளை அமைத்ததாக மேற்போக்கான காரணத்தை இன்றைய அறிவியலார் குறிப்பிட்டாலும், அரிதில் முயன்று கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகளை மறைமுகமாகவே வெளியிடவேண்டும் என்று தொடக்கக் காலத்தில், இவற்றைக் கண்டுபிடித்தவர்கள் கருதியிருத்தலையும், இக்குறியீடுகள் அமைத்த விதத்தில் காணமுடிகின்றது.

மக்களிடையே மறைமொழியும், மறைப்பும், இயல்பாக அமைந்த ஒன்று. இன்றும் மருத்துவம் போன்ற நுட்பமான அறிவியல்களில் புதிய கண்டுபிடிப்புகள்

‘மறைப்பாகவே’ இருந்து வருகின்றது. இன்றும் புதிய மருந்துகளின் செய்முறையை, ‘Patent Drugs’ என்ற முறையில் மறைப்பாகவே வைத்துள்ளதைக் காணமுடிகிறது. Patent உரிமை மறுக்கப்படாதபோது - அரிதில் முயன்று தனிமனித முயற்சியில் கண்டுபிடிக்கப்பட்ட மருத்துவ உண்மைகளை அப்படியே வெளியிட வேண்டும் என்று எதிர்பார்ப்பது மனித இயல்புக்கு மீறிய நிலையாகும்.

அரவிந்தர் குறிப்பிட்டது போல், மாணிக்கவாசகம் கருதுவது போல் மறைமொழி அமைந்ததன் ஒரே காரணம் மனப்பக்குவம் கொண்டவர்க்கு மட்டுமே புரியக்கூடிய வகையில் வெளிப்படுத்த வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கமே ஆகும்.

சித்துகளைப் பற்றியும், மரணமிலாப் பெருவாழ்வு பற்றியும் எளிமைத் தமிழில் மறைப்பின்றிப் பாடி அதற்கு விளக்கமாகத் தம் வாழ்க்கையையே அமைத்துக் காட்டிய அண்மைக்காலச் சித்தர் இராமலிங்க வள்ளலாரின், ‘கடைவிரித்தேன்; கொள்வாரில்லை’ எனும் வேதனைக் குரல் உயர்ந்த தத்துவங்களை மறைப்பின்றி மக்களிடையே, வெளிப்படையாகக் கூறுவதால் ஏற்படும் ‘புறக்கணிப்பை’ உணர்த்தும்.

முயற்சியின்றி எளிதில் கிடைக்கக் கூடிய எதையும் அற்பமாகக் கருதி ஒதுக்கும் குணம் மனிதர்க்கு இயல்பாக அமைந்ததாகும். அப்படிப்பட்ட மனப்பாங்குள்ள மனிதரிடம் அரிதின் முயன்று கண்டறிந்த உண்மைகளை வெளிப்படையாகக் கூறுவதால் பயனில்லை என்று கருதிச் சித்தர்கள் ‘மறைமொழி’யை நாடினர் எனவும் கருத இடமுண்டு. உண்மையான ஆர்வமும், முயற்சியும், புலமையும், உழைப்பும் நல்க வல்லார்க்குச் சித்தர்களின் மறைமொழியை அறிவது மிகமிக எளிமையானதாகும்.

சித்த மருத்துவத்தில் காணப்படும் மறைமொழி பற்றிய தொகுப்பும், பகுப்பும், விளக்கமும் இன்றுவரை நெறியாக ஆராயப்படவில்லை. இவ்வகை ஆராய்ச்சி ஒரு வகையில் கடலுக்கடியில் முத்துக் குளிப்பது போன்று

அமைவதாகும். முத்தும் பவழமும் அணிபவர்க்கு எளிமையாகத் தோன்றும். ஆனால் அதன் அருமையும், பெருமையும் முத்துக் குளிப்பவர்க்கேப் புரியும். அவ்வாறே சித்த மருத்துவத்தைப் பற்றிப் பேசுபவர்கள் அதனைப் பற்றி எவ்வாறும் பேசலாம். ஆனால் அதன் அருமையையும், பெருமையையும் ஆராய்ந்து அனுபவிப்பவர்களுக்கே உணரவும், உணர்த்தவும் முடியும். அவ்வகையில் சித்த மருத்துவம் என்று கருதக் கூடிய அரிய சிறப்பு, மறைமொழிக் கூற்றிலேயே அடங்கியுள்ளது என்று உறுதியாகக் கூறமுடியும்.

**பதினெண்சித்தர்கள்**

இறை அனுபவ நிலையை அரிதாக முயன்று உணர்ந்த அருளாளர்களே சித்தர்கள். காலம், இடம், சாதி, சமயங்களைக் கடந்தவர்கள். “திடம்பட மெய்ஞானம் பெறவேண்டி உடலையும், உயிரையும் அழியாது காக்கஉதவும்”.[16] வாத வைத்திய யோக முறைகளை மேற்கொண்டவர்கள் சித்தர்கள். உடல், உயிர், உலகம் எனும் இம்மூன்றுக்கும் உள்ள நெருங்கிய உறவைப் புரிந்து கொண்டு அவற்றின் உண்மைப் பொருளை உணர்ந்து அதனால் சாதாரண மனிதரினின்று மாறுபட்ட வாழ்க்கையை மேற்கொண்டவர்கள். இயற்கையின் மறைப்பை அறிந்து அதனை உணர்ந்தவர்கள். எனவே இவர்களை உயர்ந்த மனிதர்கள் என்றும் கூறுவர். ‘சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்’ எனும் நான்கும் நான்கு வகை மூத்திகள்; இவற்றில் முதல் மூன்றும் பதமூத்தி எனப்படும். “இறைவனோடு ஒன்றும் பேறாகிய ஞானபதத்தின் மூலம் அடையும். ‘சாயுச்சியமே’ சித்தி எனப்படும். அச்சித்தியை அடைந்தவரே சித்தர்”.[17] ஆவார்.

அறிஞர் தெ.பொ.மீ குறிப்பிடுகையில், “கடவுளைக் காண முயல்பவனைப் பக்தன் என்றும், கண்டு தெளிந்தவனைச் சித்தன்”.[18] என்றும் குறிப்பர். சித்த மருத்துவ முறை உருவாகத் தம் சிந்தனைகளை வரையறையின்றி வாரி வழங்கிய ஞான வள்ளல்களான ‘பதினெண் சித்தர்கள்’[19] தொழில் வகையிலோ வேறு எவ்வகையிலோ மருத்துவர் அல்லர். பதினெண் சித்தர்களின் பெயர்ப்பட்டியல்: அகத்தியர், புலத்தியர், காகபுசுண்டர், நந்தி, திருமூலர், காலாங்கிநாதர், போகர், கொங்கணர், சட்டைமுனி,

உரோமமுனி, மச்சமுனி, கருவூரார், தன்வந்தரி, புண்ணாகீசர், கோரக்கர், யூகிமுனி, தேரையர், இடைக்காடர்".[20] என சி.பாலசுப்பிரமணியன் தமிழ் இலக்கிய வரலாறு எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார். சித்தர்கள் மருத்துவத்தைச் சோதிடம், மந்திரம், இரசவாதம், யோகம் போன்றவற்றுடன் தொடர்புப் படுத்திய முறையை,

**"சோதிடம் பஞ்சபட்சி துலங்கிய சரநூல் மார்க்கம்**
**கோதறு வகார வித்தை குறுமுனி ஓது பாடல்**
**தீதிலாக் சுக்கிலங்கள் செப்பிய கன்ம காண்டம்**
**ஈதெல்லாம் கற்றுணர்ந்தோர் இவர்களே வைத்திய ராவர்".**[21]

எனும் பாடல் இக்கருத்தினை வலியுறுத்தும். தமிழகச் சித்தர்கள் இவற்றில் ஆழ்ந்த புலமையைப் பெற்றிருந்தனர் என்பதைப் பின்வரும் ஆராய்ச்சி உறுதிப்படுத்துகிறது.

## மருந்து - சித்தர் தரும் அரும்பொருள்

மருந்து என்னும் சொல்லுக்கு

**"இருமருந்து விளைவிக்கும் நன்னாடன் பொருநன்"**[22]

உணவினையும், அமிர்தம் என்பதற்கு

**"கடல் கலக்கி மருந்து கைக்கொண்டு"**[23]

எனக் கல்லாடமும், பரிகாரம் என்பதற்கு,

**"ஆசைநோய்க்கு மருந்துமுண்டு கொல்"**[24]

எனக் கம்பராமாயணமும், கலித்தொகையில் வயப்படுத்தல. என்பதை,

**"மருந்தின்று மன்னவன் சீறினால்"**[25]

என்றும், கல்பம் என்பதற்குக் கொன்றைவேந்தன்,

**"மருந்தே யாயினும் விருந்தோடு உண்க"**[26]

எனவும், இனிமை என்பதற்கு கலித்தொகையில்,

**"மருந்தோவா நெஞ்சிற்"**[27]

எனவும், உலகவழக்கில் சிறிது என்பதற்கு,

**"மருந்துக்குக் கூட அவனிடம் உண்மையில்லை"**[28]

என இலக்கியத்திலும், உலக வழக்கிலும் பல பொருள்கள் இருக்கின்றன. ஆயினும் திருமூலர் இச்சொல்லுக்குத் தரும் பொருள் அரும்பொருளாக அமைந்துள்ளது. மேலும் திருமந்திரம் 3000 என்று எழுதியிருப்பது போல் 'மருந்து 8000' எனும் நூலும் எழுதியுள்ளார். இந்நூல் முழுமையாக இல்லையெனினும் ஆயிரம் பாடல்கள் மட்டுமே தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் சுவடி எண் 14 - இல் உள்ளதைக் கொண்டு இப்பாடல் எடுத்தாளப்பட்டுள்ளது.

**"மறுப்பது உடல் நோய் மருந்து எனலாகும்**
**மறுப்பது உளநோய் மருந்து எனலாகும்**
**மறுப்பது இனிநோய் வாரா திருப்ப**
**மறுப்பது சாவை மருந்து எனலாகும்".[29]**

எனும் பாடலில் உடல் நோயைக் களைந்து, உளநோயைப் போக்கி நோய் வராமல் காத்துச் சாவைத் தடுக்கும் திறன் கொண்டதே உண்மையான மருந்தாகும். இந்நான்கு திறங்கள் கொண்ட மருந்து வகைகளைப் படைப்பதிலேயே சித்தர்கள் தமது ஆற்றல்களைப் பயன்படுத்தி வெற்றியும் கண்டனர். "மணி, மந்திரம் மருந்து எனும் மூவகையாக அமையும்".[30] சித்தர் மருந்து மேலுள்ள நால்வகைத் திறங்களைக் கொண்டதாகும். சித்தர் மருத்துவம் சோதிடம், உடலியக்கம், நோய் நாடல், மருந்தாக்க இயல், காயகல்பம், மந்திரம், யோகம் எனும் பல்வேறு பகுப்புகளில் புலமைப் பெற்று விளங்கினர்.

## சோதிட மருத்துவப் புலமை

அண்டத்தில் இயங்கும் கோள்கள் உலகில் இயங்கும் உயிர்கள் மீது செலுத்தும் ஆதிக்கத்தை விளக்குவதே சோதிடக்கலையாகும். தமிழகச் சித்தர்கள் இக்கலையை மருத்துவத்துடனும் இயைபுப்படுத்தினர். அதன் விளைவாக நோய் கணிக்கும் முறைகளிலும், மருந்து கணிக்கும் முறைகளிலும் சோதிடப் புலமை பயன்படுவதாயிற்று. ஒருவர் பிறக்கும்போது சூரியன் எந்த இராசியில் சஞ்சரிக்கின்றதோ அந்த இராசியினால் அவனுடைய வாழ்க்கைப் பாதிக்கப்படுகின்றது. எடுத்துக்காட்டாக, மேச இராசியில் சூரியன் சஞ்சரிக்கும் போது பிறப்பவனுக்குத் தொண்டை நோய் உண்டாகும்.

| **இராசி** | **உறுப்பு** |
|---|---|
| மேசம் | கழுத்து |
| விடை | தோள்பட்டை |
| இரட்டை | கைகள் |
| கடகம் | மார்புப் பகுதி |
| மடங்கல் | இதயம், மேல் வயிறு. |
| கன்னி | குடல் மற்றும் அடிவயிறு |
| துலை | சிறுநீரகங்கள் |
| நளி | உயிர்நிலை உறுப்பு |
| சிலை | உதடுகள் |
| சுறவம் | மூட்டுகள் |
| கும்பம் | கால்கள் |
| மீனம் | அடிப்பாதம். |

இதன் அடிப்படையில் அமைந்ததே சோதிட மருத்துவமாகும். சித்த மருத்துவர்கள் நோயாளியின் (இயம்பியத்தை) அடிப்படையாகக் கொண்டே மருத்துவம் செய்வர். சித்தர்கள் சோதிட மருத்துவத்தில் அமாவாசைக்குப் பின்பு குறிப்பிட்ட திதிகள் வரும் நாட்களில் மனித உடம்பில் சில இடங்களில் அறுவை சிகிச்சை செய்யக் கூடாது என்பதைச் சாம்பசிவம் குறிப்பிடுகையில் “இரணங்களை அறுக்கக் கூடாத திதிகளாகிய கீழ்க்கண்ட நாட்களில் பிரதி தினமும் அமுதம் உடம்பில் வெவ்வேறு இடங்களுக்கு மாறி நிலைத்துள்ளதால் அவ்வமுதம் தங்குமிடத்தில் கட்டிகள், காயங்கள் ஏற்பட்டுக் கத்தி கொண்டு அறுத்தாலும் அட்டை, பாம்புகள் இவ்விடங்களில் கடித்தாலும் கொப்புளங்கள் கண்டாலும், அடி அல்லது குத்துப்பட்டாலும் மரணம் ஏற்படுவது நிச்சயம். ஆகையால் அமாவாசையை அடுத்த சில தினங்களில் கீழ்க்கண்டவாறு அவ்விடங்களில் சத்திரம் செய்யக்கூடாது. அவை:

| | |
|---|---|
| பிரதமை | - பெருவிரல் |
| துதிகை | - உள்ளங்கால் |
| திரிதிகை | - மூழங்கால் |
| சதுர்த்தி | - பெருந்தொடை. |
| பஞ்சமி | - குய்யம் (குதம்) |
| சஷ்டி | - நாபி |

| | |
|---|---|
| சப்தமி | - மூலைகள் |
| அஷ்டமி | - கால், கைகள் |
| நவமி | - கழுத்து |
| தசமி | - உதடு |
| ஏகாதசி | - நாக்கு |
| துவாதசி | - நெற்றி |
| திரியோதசி | - புருவம் |
| சதுர்த்தி | - பிடரி |
| பூரணம் | - தலை உச்சி. |

இவ்வகையான சித்தர்களின் 'சத்திர விதி விலக்கு' எனும் கோட்பாட்டிற்கு விளக்கமளித்துள்ளார்.

**உடலியக்கம்**

உடலியக்கம் பற்றிய சித்தர்களின் நுட்பமான புலமை வியப்பிற்குரியதாகும். "சித்தர்கள் 1500 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்ததாகக் கருதப்படும்".[31] திருமூலரின் திருமந்திரத்தில் கரு உற்பத்தி, அமுரிதாரணை, ஆயுள் பரிட்சை, காயசித்தி, உபாயம், தியானம், பரியங்கயோகம், பிராணாயாமம், வித்துற்பனம், விந்துசயம், போக சரவோட்டம் போன்ற அதிகாரங்களில் 'உடலியங்கியல்' பற்றி நுணுக்கமாக வெளியிட்டுள்ளார்.

**உடலின் ஆக்கம்**

உண்ட உணவின் சாரம், இரத்தம், மாமிசம், தோல், நரம்பு, எலும்பு, கொழுப்போடு மூளை பரந்துள்ள இந்திரியம் ஆகியவற்றால் உருவமாகியது இவ்வுடல்.[32]

**விந்து உற்பத்தி**

"ஏழு வகைத் தாதுக்களில் அன்னசாரம், இரத்தம், சுக்கிலம் ஆகிய மூன்றினால் உரிய நாளில் புல்நுனியில் ஒட்டிய பனிபோல் விந்துத் துளி அமையும். அது 21 நாட்கள் உடம்பில் வளரும்".[33]

### கரு உற்பத்தி

கருவிலே அமையும் குழந்தையின் குணம், பால் வேறுபாடு, ஆயுள் நிலை எனத் திருமூலர் முப்பத்து ஒன்பது பாடல்களில் நுட்பமாக விளக்கியுள்ளார்".[34]

### குழந்தையின் குணம் அறிதல்

ஆண், பெண் கூட்டுறவின்போது ஏற்படும் சுக்கில - சுரோனிதக் கலப்பில் சுக்கிலம் எதிர்த்துச் சென்றால், தாமச குணமுடைய குழந்தையும், சுரோனிதம் எதிர்த்துச் சென்றால் சத்துவ குணமுடைய குழந்தையும் இரண்டும் சமமாக இருப்பின் இராசச குணமுடைய குழந்தையும் பிறக்கும்.[35]

### பால் வேறுபாடு அறிதல்

ஆண் பெண் கூட்டுறவின் போது ஆணிடத்து உண்டாகும் சுக்கிலம் மிகுந்து, பெண்ணிடத்து உண்டாகும் சுரோனிதம் குறைந்து வெளிப்பட்டால் பிறக்கும் குழந்தை ஆணாகும். சுரோனிதம் மிகுந்து சுக்கிலம் குறைந்தால் குழந்தை பெண்ணாகும். இரண்டின் அளவும் ஒத்திருப்பின் பிறப்பது அலியாகும்.[36] மேலும், புணர்ச்சியின் போது பிராணவாயு வலநாசியில் இயங்கினால் பிறப்பது ஆணாகும். இடநாசியில் இயங்கினால் பெண்ணாகும். அக்காலத்துப் பிராணவாயுவை அபானவாயு எதிர்த்துவரின் இரட்டைக் குழந்தை பிறக்கும். பிராணவாயு இரு மூக்கிலும் இயங்கினால் பிறப்பது அலியாகும்.[37]

### கருவமையும் தாயின் உடற்கூறு

"கருவமையும் போதும், கரு வளரும் போதும் தாயின் வயிறு மலம், சிறுநீர் மிகாமல் இருக்கவேண்டும். அப்போது தான் பிறக்கும் குழந்தை ஊமை, குருடு, செவிடாக இல்லாமல் அறிவுடன் விளங்கும்.[38]

### விந்து சயம்

அன்னச்சாறு, இரத்தம், சுக்கிலம் ஆகிய மூன்றும் புல் நுனி நீர் போல் கூடி 'விந்தாக' மாறும். 21 நாட்கள் வரை உடம்பில் வளரும் இவ்விந்து. 3

நாட்கள் உடல் விந்தாக இருக்கும். காம ஆசையால் மனம் விகாரப்படும்போது 'உடல் விந்து' கீழிறங்கி அழியும். உடல் விந்து அழிவதால் உடலும் அழிகின்றது. ஞான உணர்வை வளர்த்துக் காம உணர்வை வெல்லும்போது 'குண்டலினி' எனும் மூலாக்கினி மூலம் உடல் விந்தை மேலெழுப்பினால் உடல் விந்து வற்றி 'விந்து சயம்' உண்டாகும். இவ்வாறு விந்து சயம் பெற்றவர்களே யோகிகள்".[39]

## நோய் நாடல்

நோயை அறியும் முறைகளில் 'நாடிநிலை' என்பதும் ஒன்றாகும். நோயை அறிவதற்கு மட்டுமின்றி, நோய் தீரும் நிலை, தீரா நிலை, மரண நிலை பற்றிய விவரங்களையும் யூகி முனிவர், தேரையர் போன்றோர் நன்கு அறிந்திருக்கின்றனர். 'நாடியின் நடை' என்று சித்தர்கள் குறிப்பிடுகையில், ஒரே ஒரு நரம்பில் காணப்படும் மூவகைத் துடிப்புகளை உணர்ந்தது மட்டுமின்றி அவை துடிக்கும் முறைகளை எவ்விதக் கருவிகளின் துணையுமின்றித் துல்லியமாக அறிந்து, அவற்றை விலங்கு, பறவை போன்றவற்றின் செயலுக்கு இணையாக".[40] ஒப்பு நோக்கிக் குறித்துள்ளனர்.

சித்தர்கள் குறிப்பிடும் 'நாடி' நடை பற்றி பு.மு.வேணுகோபால் விளக்குகையில் இக்கால அறிவியல் விளக்கத்திற்கும், சித்தர்களின் நோய் நாடுதல் விளக்கத்திற்கும் ஒப்புமைப்படுத்தி விளக்கியுள்ளார். நோயின் காரணத்தை அறிவதிலும் சித்தர்கள் வல்லவராக இருந்துள்ளனர் என்பதற்குப் பெண்களின் மலட்டுத் தன்மைக்கு ஆறு காரணங்கள் 'ஞான வெட்டியான்' எனும் நூலில் குறிக்கப்பட்டுள்ளது. கருக்குழியில் சூலை நோய் காரணமாகக் கருவமையாது. இதற்குக் காரணங்களாக:

1. "கருக்குழியில் சதை வளர்ந்திருப்பின் அவ்விடம் விந்து பாயாது.
2. கருக்குழியில் கிருமி கூடினால் அவ்விடம் செல்லும் விந்துவை அவை உண்டு விடும்.
3. பூநீறு பூக்கும் நிலம் போல் கருக்குழியில் உவர் பூக்கும். அவ்வுப்பால் விந்து அழியும்.
4. விந்து இடம் விட்டு இடம் செல்வதால் சரிவரப் பாய்வதில்லை.

5. கருக்குழியில் வாயு அதிகமாகச் சேர்ந்தால் விந்து அவ்விடம் செல்லாது.

6. புணர்ச்சியின்போது இருவரின் உடல் வெப்ப மிகுதியால் விந்து நீர்த்துப் போகும்”.[41]

**நோய் அணுகா விதிகள்**

நோயினை உண்டாக்க வல்ல காரணப் பொருட்களை அறிந்து அவற்றை விலக்குவதே ‘நோய் அணுகா விதி’ ஆகும். அன்றாட வாழ்வில் காணும் உணவு பழக்கவழக்கங்களில் எவைஎவை நோய்க்குக் காரணமானவை என்பதை ஆய்ந்தறிந்த சித்தர்கள் அவற்றை விலக்குவதன் மூலம் ‘நோயணுகாது’ என்று குறிப்பிடுகின்றனர். தேரையர் குறிப்பிடும்போது,

**“உண்ணுங்கால் நீர்சுருக்கி மோர் பெருக்கி**
**நெய்யுருக்கி யுண்பவர் தம்**
**பேர் உரைக்கில் போமே பிணி**
**பாலுண்போம்; எண்ணெய்பெறின் வெந்நீரில்**
**குளிப்போம்; பகற் புணரோம்; பகல்**
**துயிலோம் பயோதரமுன் மூத்த**
**ஏலஞ்சேர் குழலியரோடு இளவெயிலும் விரும்பேல்**
**இரண்டு அடக்கோம்; ஒன்றை விடோம்**
**இடது கையில் படுப்போம்**
**மூலஞ்சேர் கறிநுகரோம்; மூத்த தயிர் உண்போம்;**
**முதல் நாளில் சமைத்தகறி**
**அமுதெனினும் அருந்தோம்**
**ஞாலந்தான் வந்திடினும் பசித்தொழிய உண்ணோம்**
**நமனார்க்கிற் கேதுசுவை**
**நாமிருக்கும் இடத்தே!**

**உண்பது இருபொழு தொழிய மூன்று**
**பொழுது உண்ணோம்; உறங்குவது**
**இரவொழியப் பகல் உறக்கம் செய்யோம்;**

**பெண்கள் தமைத் திங்களுக்கோர் காலன்றி**
**மருவோம்; பெருந்தாகம் எடுத்திடினும்**
**பெயர்த்து நீர் அருந்தோம்;**
**மண்பரவு கிழங்குகளிற்**
**கருணையன்றிப் புசியோம்**
**வாழையிளம் பிஞ்சொழியக்**
**கனியருந்தல் செய்யோம்;**
**நண்பு பெற உண்டபின்பு குறுநடையுங் கொள்வோம்**
**நமனார்க்கிங் கேதுசுவை**
**நாமிருக்கு மிடத்தே!**

**ஆறுதிங்கட் கொருதடவை வமனமருந்**
**தயில்வோம்; அடர்நான்கு மதிக்கொருகால்**
**பேதியுறை நுகர்வோம்;**
**தேறுமதி யொன்றரைக்கோர் தரநசியம் பெறுவோம்**
**திங்களரைக் கிரண்டுதரஞ்**
**சவளவிருப் புறுவோம்;**
**வீறுசதுர் நாட்கொருகால் நெய் முழுக்கைத்**
**தவிரோம்; விழிகளுக்குஞ் சனமூன்று**
**நாட்கொருவர் விடுவோம்**
**நாறுகந்தம் புட்பமிவை நடுநசியின் முகரோம்**
**நமனாக்கிங் கேதுசுவை நாமிருக்கு மிடத்தே!".**[42]

என நோயணுகா விதி பற்றி நலவாழ்வு கோட்பாடாக எடுத்துரைக்கின்றார்.

## மருந்தாக்க இயல்

சித்தர்கள் உலகுக்கு அளித்த மிகச் சிறந்த கொடையெனப் போற்றத் தக்கது சித்த மருந்தாக்க முறைகளாகும்.

1. பதார்த்த குணம் (Pharmacognosy)
2. மருந்தாளுகை (Pharmacy)
3. மருந்தியல் (Pharmacology)

என மூவகை நெறிகளில் இயங்கும் சித்த மருந்தாக்க இயலைப் பல்வேறு பகுதிகளாகப் பிரித்துள்ளனர். தாவரப் பொருட்கள், சங்கமப்பொருட்கள், தாதுப்பொருட்கள், உலோகப்பொருட்கள் ஆகியவற்றிலிருந்து பெறப்படும் நூற்றுக்கணக்கான மருந்துகளின் செயல்முறைகளைச் சித்தர்கள் விளக்கியுள்ள பாங்கு போற்றத்தக்கதாகும்.

**பதார்த்த குணம்**

தாவர, சிவ, தாது, உலோக வகுப்புகளில் காணப்படும் பல்வேறு மருந்துப் பொருட்களில் நச்சுக்குணம், அவற்றின் மருத்துவக் குணம் ஆகியவற்றை வாத, பித்த அடிப்படையில் பகுத்துள்ளனர். 'பதார்த்த குண விளக்கம்' எனும் நூலில் நூற்றுக்கணக்கான மூலிகைகள், தாதுப்பொருட்கள், உலோகப்பொருட்கள், சங்கமப்பொருட்களின் மருத்துவக்குணம் நுட்பமாகக் கூறப்பட்டுள்ளன".[43] ஒரு மூலிகையை எடுத்துக்கொண்டால் அதன் சுவை செய்கை குணம் சுத்திமுறை ஆகியவற்றை விளக்கி அதன்பின் அதனை மருந்தாக்கும் முறைகளைக் கூறியிருக்கின்றனர். பண்டைக்காலச் சித்தர்களின் இத்தகுப் பகுப்பாய்வுகள், இக்கால அறிவியல் மருத்துவர்களுக்குக் கிட்டிய மிகப்பெரிய புதையலாகும். எடுத்துக்காட்டாக,

சித்திரை, வைகாசி மாதங்களில் சேகரிக்கப்படும்,

**"வெள்ளெருக்கன் செடியின் வடக்குப்புற வேர் - பெரு நோய்ப் புண் ஆற்றும் திறன் கொண்டது".**[44]

**"சீந்தில் உப்பு - குட்டநோயைப் போக்கும்".**[45]

**"தாமரை மலரின் மகரந்தம் - காது கேளாமையை நீக்கும்".**[46]

எனவரும் குறிப்புகள், சித்தர்களின் மூலிகை அறிவை வெளிப்படுத்தும். பருவமறிந்து இடமறிந்து மூலிகைகளைச் சேகரிக்கும் நுட்ப அறிவு சித்தர்களிடம் மிகுந்திருந்தது. 'கோரக்கர் மலை வாகடம்' எனும் நூலில் இவ்வகை மருந்துகள் பற்றி, "சுருளி மலையிலிருந்து நாலு நாழிகை வழி தூரம் போனால் குமுளி மலை இருக்கின்றது. அக்குமுளி மலை ஏமத்தாப்பில் கடுவெளிச்சித்தர் குகையிருக்கிறது. அக்குகைக்கு வடப்பக்கம் நுழையாமல் மேல்பக்கம் போகின்ற பாதையில் அரை நாழிகை வழி தூரத்தில் கசிவுத்

தரையில் 'கூமா' மரமிருக்கிறது. இந்த மரம் சிறியதாய் மாமரம் போலும், மாவிலை போல் மினுமினுப்பாயிருக்கும். இதன் வேரை அரைத்துச் சாறெடுத்துத் தாமிரத்தை உருக்கிச் சாய்க்கச் சுத்தியாகும். அதைச் செந்தூரம் செய்து சாப்பிடக் காய சித்தியாகும்".[47] என இடம் பெற்றுள்ளமையால் அறியமுடிகிறது. 'கோரக்கர்' குறிப்பிடுகையில், "மூலிகை விளையும் இடம், அங்குச் செல்லும் வழி, அதனை இனம் காணும் அடையாளங்கள், அதனை மருந்தாக்கும் முறை, பயன் கொள்ளும் முறை ஆகியவைக் குறிப்பிடப்பட்டுள்ளன. தமிழ்நாட்டில் காணப்படும் மூலிகைகளைப் பற்றிய விவர அட்டவணையைக் 'கோரக்கர் மலைவாகடம்' மூலம் தெளிவுபடுத்தியுள்ளார். இவ்வாறே உலோக, தாது, சங்கம வகைப் பொருட்களைப் பற்றியும் சித்தர்கள் விளக்கியுள்ளனர்.

**மருந்து செய்முறை**

சித்தர்கள் மருந்துகளைச் செய்கின்ற முறையில்,

1. காடி நீர் (Acctum)
2. நறுமணநீர் (Aqua Aromatica)
3. சத்துகள் (Extracts)
4. குடிநீர்கள் (Infusions)
5. தைலங்கள் (Liniments)
6. அஞ்சனங்கள் (Oculenta)
7. சூரணங்கள் (Powders)
8. பாகுகள் (Syrups)
9. களிம்புகள் (Unguenta)
10. லேகியங்கள் (Confections)

போன்ற இக்காலச் செய்முறைகளுக்கு இணையான முறைகளையும், கட்டு, களங்கு, மெழுகு, சுண்ணம், செந்தூரம், பற்பம், மூப்பு என மருந்தாக்க முறைகள் சித்தமருத்துவத்தில் இடம் பெற்றுள்ளமையை விளக்குகிறது.

‘குழித்தைலம்’ என்றொரு செய்முறையின் மூலம், மருந்துப் பொருட்களின் விதைகளிலிருந்து எண்ணெய் விரைவில் எளிதாக வடிப்பர். (Volatile compounds) எளிதில் ஆவியாகக் கூடிய கூட்டுப் பொருட்களை Destryctive Distillation எனும் முறையில் பிரித்தெடுப்பர். இதே முறையில்தான் சித்தர்கள் ‘குழித்தைலம்’ செய்தார்கள். எளிதில் ஆவியாகக் கூடிய வாலுழுவை, கார்போக அரிசி போன்றவற்றை ஒரு பானையிலிட்டு வெப்பப்படுத்தும்போது அ.்.து ஆவியாகி அதனுடன் இணைக்கப்பட்ட மற்றொரு பானைக்குச் சென்று அங்கு ஏற்படும் வெப்ப அழுத்தத்தினால் பானையில் உள்ள நுண்ணிய துளைகளின் வழியே வெளியேறிக் குளிர்ச்சி பெற்றுத் திரவநிலையில் கீழே உள்ள சிறிய பாத்திரத்தில் சேகரிக்கப்படுகின்றது. இதனையே ‘வாலுழுவைக் குழித்தைலம்’ என்று குறிப்பர்”.[48] மிகக் குறைந்த செலவில் எளிதில் தயாரிக்கக் கூடிய இத்தகு செய்முறைகள் சித்தர்கள் ‘சித்த வைத்தியத் திரட்டு’ எனும் நூலில் இடம் பெற்றுள்ளமையால் அறியப்படுகிறது.

**புடமிடுதல்**

செந்தூரங்கள், பற்பங்கள், கட்டு மருந்து, சுண்ணம் எனக் குறிக்கப் பெறும் மிக உயர்ந்த உலோக மருந்து செய்முறைகளில், ‘புடமிடுதல்’ எனும் முறையைச் சித்தர்கள் மேற்கொண்டனர். Calcining என்று இக்கால மருந்து வேதியியலார் குறிப்பிடும் முறைக்கு இணையானது புடமிடுதல் முறை. வெப்பமானியைப் பயன்படுத்தி வெப்பநிலையை அறிவதற்குப் பதிலாக எரிபொருள் அளவு, எரிக்கும் முறை, எரிக்கும் கால அளவு எனும் மூன்று அடிப்படையில் 700 டிகிரி வரை உயர்ந்த வெப்பநிலையில் உலோக முறை வேதியியல் மாற்றங்களைச் சித்தர்கள் செய்தனர்.

செயநீர், பூநீர், முப்பூ போன்ற ‘செயலூக்கி’களைப் (Catalysts) பயன்படுத்தி மருந்துப் பொருட்களுக்கு வலிமையை ஊட்டிப் பல்லாண்டுகள் கெடாமல் இருக்கத்தக்கப் பக்குவ குணத்தையும் அளித்தனர். மருந்தாக்க முறைகளில் சித்தர்களின் புலமை இக்கால மருந்து வேதியியலார்க்கு வழிகாட்டியாகவே அமைந்துள்ளது.

## மருந்தாளுகை

மருந்துகளைக் கையாண்ட முறைகளிலும் சித்தர்கள் மிக எச்சரிக்கையாக இருந்தனர். மருந்துகளைத் தயாரிக்க உதவும் கருவிகளாகத் தேர்ந்த கல்வங்கள், குழவிகள், மர உலக்கைகள் ஆகியவற்றைக் கொண்டு தயாரித்தனர். அவ்வாறே அவற்றைப் பாதுகாக்க, யானைத் தந்தத்தால் தயாரிக்கப்பட்ட குடுவைகள், அரைக்குடுவை, மாட்டுக் கொம்பில் தயாரிக்கப்பட்ட குப்பிகள், மண்குடுவை, ஜாடி போன்றவற்றில் மூடி வைத்துப் பாதுகாத்தனர். அவற்றைப் பயன்படுத்தும் போது அளவு, எடை போன்றவற்றின் அடிப்படையில் பயன்படுத்தினர்.

## மருந்தியல்

நோய் தீர்க்கும் மருந்து உடலில் எவ்வகை மாற்றங்களை உண்டாக்க வல்லவை என்பதை உணர்த்தும் ‘மருந்தியல்’ திறன்களைச் சித்தர்கள் மிக நுட்பமாக அறிந்திருந்தனர். ‘நஞ்சு நூல்’[49] (Toxicology) எனும் தொகுப்பில் காணப்படும் பலவகைத் தாவர, சங்கம, தாது, உலோக நஞ்சுகள் பற்றிய விளக்கங்கள் சித்தர்களின் மருந்தியல் புலமையைப் புலப்படுத்துகின்றன. நஞ்சுத் தன்மை மட்டுமன்றி மருந்தின் செயல்முறைகளையும் சித்தர்கள் அறிந்திருந்தனர். The Physiological action and Therapeutic Value என இக்கால மருந்தியலார் குறிக்கும் பொருட்செயல் முறைகளைச்”.[50] சித்த மருந்தியலில் காணமுடிகிறது.

## தட்ப வெப்பநிலை

இடபேதங்களைக் கருதி மருந்துகளை உண்ண வேண்டும் என வலியுறுத்தும் பாடலில், “கொம்புப் பாகலிலைச் சாறு, இலுப்பைப் பூச்சாறு கையாந்தகரைச் சாறு, அறுகின் சாறு, வெண்குன்றிச் சமூலச் சாறு, நிலப்பனையின் கிழங்குச் சாறு, புல்லாந்திச் சாறு, ஆவின்வேர்ப்பட்டைச் சாறு என்னும் இவற்றை விட்டுக் கந்தகத்தை அரைத்துப் புடமிட்டால் கந்தகப் பற்பம் கைகூடும். இதனை அருந்த கடற்கரையான நெய்தல் நிலத்தை வெறுப்பாயாக; இந்திரனுடைய நிலமான மருதநிலத்தைச் சேர்வாயாக; மார்கழி மாதத்தை

நீக்குவாயாக".[51] என முகம்மது அப்துல்லா சாயுபு குறிப்பிடுகிறார். துணை மருந்துகள் எனப்படும் அனுபானமுறை மூலம் மருந்துகளை நெறிப்படுத்திப் பற்பங்களை நேரடியாகப் புகட்டாமல், தேன், பால், நெய் மூலிகைக் குடிநீர் போன்ற துணைமருந்துகள் மூலம் புகட்டினர். மருந்துகளின் அளவும் அதனை உண்ணும் கால அளவும், மருந்துண்ணும் காலத்துப் பின்பற்ற வேண்டிய உணவு - பழக்கவழக்க முறைகளும் வரையறுக்கப்பட்டுள்ளன.

### இச்சாபத்தியம்

இச்சாபத்தியம் என்பது மருந்துண்ணும் காலத்து, விரும்பியதையெல்லாம் உண்ணாமல் தவிர்ப்பதாகும். வயிற்றுப்புண், காய்ச்சல் போன்றவை வரும்போது பயன்படுத்துவர்.

### குடும்பப் பத்தியம்

குடும்பப் பத்தியம் என்பது "மருந்துண்ணும் காலத்து, மனைவியுடன் புணர்ச்சி கொள்வதைத் தவிர்ப்பது. நரம்புத் தளர்ச்சி, மேகநோய் உடையவர்கள் இதனை மேற்கொள்வர்.

### கடும் பத்தியம்

கடும் பத்தியம் என்பது, உப்பு, புளி, காரம் நீக்கிய உணவை வலியுறுத்துவது. மஞ்சள் காமாலை, ஈரல் வீக்கம், சிறுநீரகக் கோளாறு போன்றவைக்கு இவ்வகைப் பத்தியம் வலியுறுத்தப்படுகிறது. இதுபோன்ற பத்தியமுறைகள் மருந்தின் குணத்திற்கேற்ப அமைந்தவை. அனைத்துக்கும் மேலாக மருந்தின் தீய விளைவினை முறிக்கக் கூடிய முறிப்பு மருந்துகளையும் அறிந்திருந்தனர்.

இவ்வாறு சித்த மருந்தியல் நெறி என்பது மருந்தின் குணம், அதற்குரிய துணை மருந்து, அதனை உண்ணத் தகுந்த காலம், இடம், அளவு, உணவுமுறை, பழக்கவழக்கம், எதிர் விளைவு, அதனை முறிக்கும் முறை என விரிவாக விளக்கியுள்ளனர். தேரையர் யமக வெண்பா, மருந்துவாங்கச் சுருக்கம் போன்ற நூல்களில் இவை பற்றிய விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன.

சாதாரண உலோகங்களைப் பொன்னாக மாற்றுவது இரசவாதம். சித்தர்கள் இதில் வல்லவர்கள். கலம்பக உறுப்புகளில் ஒன்றான சித்து என்பது இந்த இரசவாதத்தையே முதன்மையாகக் கொண்டு புலவர்களால் பாடப்பட்டது. தங்களால் எதுவும் செய்யமுடியும் என்ற தங்களின் வல்லாண்மையை உலகுக்கு உணர்த்தவும் ஏழைகளுக்கு உதவி, பொருள் ஒன்றையே பெரிதாக நினைத்து மயங்குபவர்களைத் திருத்தவும் இந்த இரசவாதக்கலையை உலக மக்களுக்குத் தெரிவித்தனர்.

**காயகல்ப முறைகள்**

நீண்ட நாள் உயிர் வாழும் கலையைக் கண்டறிந்து அதன்படி வாழ்ந்து காட்டியவர்கள் சித்தர்கள். இதனைத் திருமூலர்,

**“உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்**

**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே”.**[52]

என உடலை ஓம்புகின்றார். உடலிலுள்ள நுண்ணிய அணுப்பொருள்களை நோய்க்கு இடம் கொடாமல் இருக்கத் தக்கவாறு அவற்றுக்கு வலிமையூட்டி அவை அழியாதவாறு காக்கமுடியும் என்று சித்தர்கள் நம்பினர். இதன் வெளிப்பாடே ‘காயகல்பம்’ எனும் புதியமுறை உருப்பெற்றது. கால ஓட்டத்திற்கேற்ப முதுமையுறும் உடலை இளமையாக மாற்றமுடியும் என்பது இக்காயகல்பத்தின் கோட்பாடாகும். இதனை இரண்டு முறைகளில் கண்டறிந்தனர்.

1. பிராணாயாம யோகப் பயிற்சிகளால் உடலின் உள்ளே சிலவகைச் சுரப்பிகளைத் தூண்டி அமிர்தம் எனப்படும் (Super hormone) உயர்ந்த சுரப்பு நீர்களைச் சுரக்க வைத்து அதன் மூலம் காயசித்திப் பெறுதல். அத்துடன் காம இச்சையால் கீழிறங்கும் விந்துச் சக்தியை அவ்வாறு அழியவிடாமல் அதனை வற்றச் செய்து அதனால் ஏற்படும் சக்தியைக் காயசித்தி பெறப் பயன்படுத்துதல்.

2. மூப்பு, இரசமணி போன்ற கல்ப மருந்துகளைக் கொண்டு காயசித்தி அடைதல்.

3. ‘காய கல்ப மூலிகைகள்’ எனக் கருதப்படும் கருநெல்லி, பொற்சீந்தில், மஞ்சள் கரிசலாங்கண்ணி போன்ற 108 வகையான மூலிகைகளை முறைப்படி உண்ணல்.

இம்மூன்றின் வழியாகக் கல்ப மருந்துகளைத் தயாரித்தபோது, அவர்கள் தயாரித்த மருந்தின் வலிமையைச் சோதிக்க இரசவாதம் என்பது தாழ்ந்த உலோகங்களைச் சிலவகை வேதியியல் முறைகள் மூலம் உயர்ந்த உலோகமாக மாற்றுவதாகும். திருமூலரின் திருமந்திரம் இத்தகு இரசவாதம் அவர் காலத்து இருந்தமையைக் குழூஉக் குறியாகவும்[53] உவமையாகவும்[54] குறிப்பிடுகின்றது. இவ்வாறு சித்தர்கள் தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகமாக மாற்றுவது என்பது இக்காலத்தவர் கருதுவதுபோல் தங்கம் செய்யவேண்டும் என்னும் தாழ்வான எண்ணத்தின் வயப்பட்டதன்று. அழியக்கூடிய உடம்பை அழிக்காமல் காயசித்தியாக்கவல்ல திறனைக் காயகல்ப மருந்து கொண்டுள்ளதா? என்பதைச் சோதிக்க எண்ணிய சித்தர்கள் தாழ்ந்த உலோகத்தின் மீது அதனைச் செலுத்தி அதனால் விளையும் வேதியியல் மாற்றங்களைக் கொண்டு ‘காய கல்ப மருந்தியல்’ திறனைச் சோதிக்கும் நிலையோடு இரசவாதம் சித்தர்களின் ஆராய்ச்சியிலிருந்து விடுபடுகின்றது.

**“**வள்ளலார் ‘வகாரமூப்பு’ எனும் கல்ப மருந்தை வைத்திருந்ததாகவும், அஃது இரும்பு முதலிய உலோகங்களைப் பொன்னாக்கும் சக்தியுடையது என்பதையும் அறிந்த மழைச்சுவாமி’, ‘குருக்கள் சுவாமி’ எனும் இருவரும் அதனைப் பெற்றுத்தாம் காயசித்தி பெற விரும்பி வள்ளலாரிடம் கேட்டனர். வள்ளலார் முள்ளங்கிக் கிழங்கின் மீது ஒரு துளி மூப்புவை வைத்தவுடன் அஃது அன்று மாலைக்குள், முள்ளங்கியைக் கரைத்து விட்டதை அறிந்து அத்தகைய கடும் நெருப்புத் தன்மையுள்ள மூப்புவைத் தொடுவதற்கும் தகுதியில்லை என்று விலகினர்**”.**[55] மேற்கூறிய இருசுவாமிகளிடமும் வள்ளலார் விளக்கத்தைக் குறிப்பிட்டார். இந்நிகழ்ச்சி ‘மூப்பு’ எனப்படும் காயகல்ப மருந்தின் வலிமையைத் தெரிவிப்பதுடன் அதனை ஏற்கத்தக்க உடம்பும் வேண்டும் என்ற குறிப்பையும் தெரிவிக்கின்றது. இரசவாதத்திற்கும் கல்ப

மருந்திற்கும் உள்ள உறவை ஆ.சண்முகவேலன் குறிப்பிடுகையில், “According to Atomic theory, the number of protons and electrons in mercury is 80. If one proton and electron is removed from mercury during the solidification process the redulting substance is gold which is 79 in atomic number, Similarly by a combination of Tin and copper (25 + 50 = 79) gold may be obtained. In the metallurgical process, this is the art of making gold. In the same way Kalpa medicine prepared in alchemical process is a superior one like that of gold rather than the other ordinary medicine”.[56] Shanmugavelan, A. Siddhar's Science of Longevity and Kalpa Medicine, எனும் நூலின் மூலம் அறியப்படுகிறது.

இக்குறிப்பிலிருந்து சித்தர்களின் இரசவாதமும், காய கல்பமும் பொய்யன்று, மறைபொருள் பொதிந்த மெய்ம்மை என்பது உறுதியாகிறது.

**சித்தர்களின் இரவாதக் கருத்துகள்**

1. இரும்பைப் பொன்னாக்குதல்
2. செம்பைப் பொன்னாக்குதல்
3. துத்தநாகத்தைப் பொன்னாக்குதல்
4. வெள்ளியைப் பொன்னாக்குதல்
5. பாதரசத்தைப் பொன்னாக்குதல்
6. துருசினைப் பொன்னாக்குதல்
7. கெந்தகத்தைப் பொன்னாக்குதல்
8. தேகங்களைப் பொன்னாக்குதல்

எனப் பலவகைகளில் அமைகின்றன. அவற்றை உறுதி செய்வது இன்றைய சமுதாயத் தேவையாகும். சித்தர்கள் விருப்பம் வெறும் உலோகங்களை மட்டும் பொன்னாக்குவதில்லை; புறத்தில் இந்தச் செயற்பாடு போலவே உள்ளம் கருத்திருக்கும் மனிதர்களையும் கைலாயத் தேகமுடையவர்களாக மாற்றும் முயற்சியில் ஈடுபவதே ஆகும். எனவே, இரும்பு தேகத்தைப் பொன் தேகமாக மாற்றும் நிலையே அவர்களது உண்மையான குறிக்கோள். இதனையும் விளக்கமாகக் காண்போம்.

## இரும்பைப் பொன்னாக்குதல்

இரும்பு ஒரு பங்கு, வெளுப்பான செம்பு 1 வராகன், தானகம் ஒரு களஞ்சி எனும் 40 குன்றின்மணியளவைக் குறிக்கும். காரம் ஒரு பங்கு, பூரம் வீரம், துருசு ஒரு பங்கு, துத்தம் ஒரு பங்கு, கௌரி ஒரு பங்கு, வெடியுப்பு ஒரு பங்கு, சீனம் ஒரு பங்கு, லிங்கம் ஒரு பங்கு, நாகம் ஒரு பங்கு, சூதம் ஒரு பங்கு.

இவற்றை எருக்கம்பாலில் அல்லது காட்டாமணக்கில் அரைத்து, ஒளியில் காயவைத்தல் வேண்டும். பின்னர் தீமூட்டி உலையில் வைத்து அதனை உருக்கி எடுத்துப் பார்க்க இயக்கலிங்கம் கிடைக்கும். அதில் பத்துக் கொன்றாகச் செம்பினை உருக்கிப் போட இரும்பு செம்பாகும். அச்செம்பில் பத்துக்கொன்றாக வெள்ளியினை உருக்கிப் போட செம்பு வெள்ளியாகும். உள்ள வெள்ளியில் நாலில் ஒரு பங்கு தங்கம் சேர்த்துப் புடத்திப் போட அனைத்துமே கட்டித் தங்கமாகும். பசுமை நிறமுடைய அனைத்துமே கட்டித் தங்கமாகும். பசுமை நிறமுடைய தங்கத்தில் உலகத்தோர் மயங்குவர்.

## 2. செம்பைப் பொன்னாக்குதல்

செம்பு - 1 பலம், வீரம் - கால்பங்கு, சிற்றண்டம் - கால்பங்கு, காரம் - கால்பங்கு, மதியுப்பு - கால்பங்கு. இவற்றைச் சேர்த்து உருக்க செம்பானது கசடுகள் நீங்கும். அதனைத் தகடாக்கிக் குக்குட புடத்திலே போட சுத்த செம்பு கிடைக்கும். அதனுடன் மூன்று பங்கு வெள்ளியையும், ஒரு பங்கு தங்கத்தையும் சேர்த்து உருக்கி எடுத்துப் பார்க்க நல்ல மாற்றுடைய பொன் கிடைக்கும்.

## 3. துத்தநாகத்தைப் பொன்னாக்குதல்

நாகம் - 1 பலம், கெந்தகம் - 1 பலம். கெந்தகத்தை மஞ்சளில் நனைத்துத் தயிலமாக்க வேண்டும். அதனை நாகத்தில் விட நாகமானது கட்டிப் போகும். இதனைக் கரியோட்டில் சேர்க்க ஊதிப் போட எட்டு மாற்றுள்ள வெள்ளியாகும். 7 மாற்றாக மாறும் வெள்ளியுடன் 2 பங்கு தங்கமேற்றி தகடாக அடித்துப் புடத்தில் போட அனைத்துமே தங்கமாகும்.

### 4. வெள்ளியைப் பொன்னாக்குதல்

ஆறு பங்கு வெள்ளி, அதனுடன் நான்கு பங்குச் செம்பு, மூன்று பங்கு நாகம், இரண்டு பங்கு செம்பொன் இவற்றைச் சேர்த்து உருக்கிக் கொக்குப் புடத்திலே போட நல்ல எட்டு மாற்றுயர்ந்த பொன்னானது கிடைக்கும்.

### 5. பாதரசத்தைப் பொன்னாக்குதல்

பாதரசத்தை இரசம், சுக்கிலம் என வழங்குவர். இரசம் - 1 சேர், கெந்தி - 2 சேர். அடிகனத்த சட்டியில் ஒரு படி உப்பினை எடுத்துக் கொண்டு கீழும் மேலும் கொட்டி கெந்தகத்தை கீழும் மேலும் இட்டு இரண்டின் நடுவில் ஒரு பங்கு இரசத்தை வைத்து சுமார் 10 சாமம் வரையில் தீயினால் எரிக்க வேண்டும். 10 சாமம் கழிந்த பிறகு எடுத்துப் பார்த்தால் செந்தூரம் கிடைக்கும். அது லிங்கம் போன்று இருக்கும். அதனுடன் பத்துக் கொன்று தங்கத்தினைச் சேர்த்து செயநீரால் இரண்டுமுறை அரைக்க வேண்டும். பத்துக்கு ஒன்றான வெள்ளியையும் செம்பினையும் சேர்த்து உருக்கி எடுத்துப் பார்க்க கருப்பு நிறத்தினை உடைய பொன் கிடைக்கும். அதனை ஊதிப் பார்க்க சிவந்த பொன் கிடைக்கும். அதனைத் தகடாக்கிப் புடத்தில் போட மாற்றுடைய தங்கம் கிடைக்கும். இதனுடன் நாலில் ஒரு பங்கு தங்கம் சேர்த்து உருக்கி எடுக்க நல்ல மாற்றுடைய தங்கம் கிடைக்கும்.

### 6. துருசினைப் பொன்னாக்குதல்

கல்லுப்பு, மதியுப்பு, துருசு, காரம், சாரம், லிங்கம் பூணீறு, சீனம், துத்தம் இவற்றை முறையே கால் கால்பலம் கூட்டி செயநீரை விட்டுப் பத்துச் சாமம் அரைக்க வேண்டும். 10 சாமம் என்பது ஒருநாளைக் குறிக்கும். திரண்டு வரும் மெழுகுடன் பொன்னைச் சேர்த்துப் பூங்காவிக்குள் போட்டு ஊத செம்பானது கட்டித் தங்கமாக மாறும். கந்தகமான இதற்கு ஈடுசெய்தல் என்பது இயலாது.

### 7. கெந்தகத்தைப் பொன்னாக்குதல்

சாரம் 4 பலம், கெந்தி 5 பலம், வெண்காரம் 2 பலம், பூரம் 2 பலம், வீரம் 1 பலம். இவற்றை ஈடுதிண்ணைபாளை சித்தர்முனி பத்துச் சாமம் நன்றாகக் களிம்புபோல் அரைத்து அதை நிழலில் காயவைத்துச் சீசாவில்

அடைத்துப் புட்டிக்குச் சீரை மண்ணுச் செய்து சுத்தமான மண்தடவி வைத்துத் தயிலம் வாங்க வேண்டும். அந்தத் தயிலத்துடன் பொன்னை உருக்கிப் புடத்தில் போட கட்டித் தங்கமாக மாறும்.

## 8. தேகங்களைப் பொன்னாக்குதல்

மனித உடலைப் பொதுவாக இருள்தேகம், மருள் தேகம், சுத்த தேகம், பிரவை தேகம், ஞான தேகம் என ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கலாம். இவற்றுள் இயற்கையாகவே ஒளியுடலாக உள்ளது ஞான தேகம். இருள்தேகம், மருள் தேகம், சுத்த தேகம், பிரவை தேகம் என்பதைப் பொன் தேகமாக மாற்றுவதையும் சித்தர்கள் இரவாதம் மார்க்கம் ‘வேதை’ என்று குறிப்பிடுகின்றனர்.

## இருள்தேகம்

பரு உடலில், அபானத்தில் மலக்குற்றமும் நாவில் நாடிக் குற்றமும், கண்டத்தில் சுபக்குற்றமும், மேல் மூலத்தில் திரைக் குற்றமும், மனத்தில் ஆணவமலமும் பொருந்தி நானென்னும் அக்கியான குற்றமும் உடையதுவே இருள்தேகம். இந்தத் தேகத்தை உடையவர்கள் இயமம், நியமம், ஆசனம், பிரணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் நிலைகளைக் கடைப்பிடித்து வெற்றிகாணும் போதே கைலாய தேகமாக மாற்றத்தைப் பெறுகின்றனர். இயமநியமத்தில் வெற்றிகாணும் போதே இவர்களை இறப்பு வந்து எய்திவிடுகின்றது. எனவேதான் ஏழுவயதான குழந்தைப் பருவம் முதலே இவற்றைச் செய்யப் பழக்கினால் 30 வயதுக்குள் முழுமையான ஒளியுடைய உடலைப் பெற்றவர்களாகவும், சித்திகளைப் பெற்றவர்களாகவும் ஆவர். அவ்வாறு ஏழுவயது முதலே செய்யவேண்டுமெனில் அக்கலையில் ஈடுபடுத்தும் பெற்றோர்கள் வேண்டும். உடலில் மாற்றத்தை அல்லது இரசவாதத்தைச் செய்யவல்லது பிராணாயாமமே. பிராணாயாமத்தின் மூலமாக உடல் பொன்னிறமாகும் என்பதை,

**“உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவைக்**
**கருத்தினால் இருத்தியே சுபாலம் ஏற்ற வல்லிரேல்**

**விருத்தரும் பாலராவர் மேனியும் சிவந்திடும்**

**அருள்தரித்த நாதர்பாதம் அம்மைபாதம் உண்மையே".**[57]

என்றும்,

**"மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியே**
**நாலுநாழி உம்முளே நாடியே இருந்தபின்**
**பாலனாகி வாழலாம் பரப்பிரமம் ஆகலாம்**

**ஆலம்உண்ட கண்டர் ஆணை அம்மை ஆணை உண்மையே".**[58]

என்றும் பாடுகிறார் சிவவாக்கியர். இவ்வாசி யோகத்தையே இரசவாதமுறையில் மறைபொருட்கூற்றில்,

**"நல்ல வெள்ளி யாறதாய் நயந்த செம்பு நாலதாய்**
**கொல்லு நாக மூன்றதாய்க் குலாவு செம்பொ னிரண்டதாய்**
**வில்லி னோசை யொன்றுடன் விளங்க ஓத வல்லிரேல்**
**எல்லை யொத்த சோதியான தெட்டு மாற்ற தாகுமே**

என்று மேலும் சிவவாக்கியர் விளக்குகிறார். வாதத்தைப் பயிலும் முறை அறியாதோர் இரசவாதம் செய்யமுயன்று பாதரசத்தையும், கெந்தகத்தையும் சேர்த்தால் பொன்னைக் காண இயலாது என்பதை வலியுறுத்துகின்றார். நெருப்பு என்பது யோகப்பயிற்சி செய்பவரின் உடல் மிகுந்த வெப்பமாக இருக்கும். இரசவாதம் என்பது உடலை நிலையாக்கும் பேராற்றல். இதனையே சூரியானந்தர் காரத்தையும் சாரத்தையும் விளக்கும்போது,

**"காரம் என்பது நாதம்**

**சாரம் என்பது வித்து".**[59]

இவ்விரண்டையும் ஒன்றாக்க வேண்டும். மேலும்,

**"காரத்தைக் கட்ட அறியாதவர்கள் கடுஞ்**

**சாரத்தை நீற்றினம் செய்யாமல்".**[60]

என்பார். காரமாகிய நாதத்தினை உள்ளுக்குள்ளேயே கேட்க வேண்டும். மேல் சாரமாகிய விந்துவினை மேலேற்ற வேண்டும்.

காலச்சூழல், இடம், இருக்கும் நிலை போன்றவற்றால் தடுமாற்றம் ஏற்பட்டு உடல் வலுவிழந்து உயிரினை இழக்கும் தன்மைகள் உள்ளதால்

உயிரினை உடலோடு பிணிக்கக் கூடிய காயகல்ப முறைகளைத் தங்களின் பாடல்களில் அமைத்துச் சொல்கின்றனர். உடல் எதனையும் தாங்கும் வலிமையுடையதாக இருந்தால் நிலைத்து நிற்கத்தக்க உடல் எடுத்த பயனை அடைய வாய்ப்பாகும் என்பதால் காயகல்ப முறைகளைத் தந்துள்ளார் போகர்.

**"தானான காயத்தை நிறுத்தவேண்டும் சதாகாலம்**

**சுக்கிலத்தைக் கட்ட வேண்டும் என்றும்**

**தேகமுறும் விந்து கழன்றால் தேகம் போச்சே".**[61]

என்று எடுத்துரைத்து விளக்குகிறார்.

### சதுரக்கள்ளி கற்பம்

இம்மருந்தைக் காலையில் உண்ணவேண்டும். சதுரக்கள்ளி குமரிச் சோறு சோற்றுக்கற்றாழை இரண்டு, இவற்றையும் அமுரி (சிறுநீர்) யுடன் கலந்து உண்ண வைத்தியம், வாத யோகமெல்லாம் பலிக்கும். உடம்பிலுள்ள விசநீர் வற்றும். எலும்பில் நிற்கும் சுண்ணாம்பிலுள்ள வேகம் போகும். இருபது நாட்கள் காலையில் உட்கொள்ளவேண்டும்.

### மிளகுக் கற்பம்

இம்மருந்தை மாலையில் உண்ணவேண்டும். தானசபத்திரி சுக்கு, சீரகம், இஞ்சி, ஏலம், சுரை இவை அனைத்தையும் ஒரு வராகன் எடையளவு எடுத்துத் தட்டி சட்டியில் போட்டுக் காய்ச்சி மாலையில் ஓர் ஆழாக்கு வீதம் உண்ணும்போது எமனுக்கு எமனாகும். இதனை உண்டவர், மிளகை அமுரியுடன் கலந்து நாற்பது நாளைக்கு காலையில் உட்கொள்ள வேண்டும். அதாவது ஒவ்வொரு நாளும் 6, 5 என ஏற்றிக் கொண்டே 20 நாள் உண்டபிறகு 100 ஆகிவிடும். அந்த 20 நாட்களுக்கு 5, 6 ஆகக் குறைந்து கொண்டே வரவேண்டும். இதைக் காலை, மாலையில் பொடியாக உண்ணவேண்டும்.

### பொடி

பொடி என்பது பொற்கொன்றைப்பூ, மல்லிகைப்பூ, கொக்கு மந்தாரைப்பூ முதலியவற்றை நிழலில் உலர்த்தி நன்றாகப் பொடித்துச் சூரணம் செய்து

கொண்டு தேனில் குழைத்து 48 நாளைக்கு மாலையில் உண்ணவேண்டும். ஒரு மண்டலம் உண்ட பின்பு, தூதுவளை இலை, சாதிக்காய் கொடிவேலி, பொற்கொன்றைப்பூ, நிலப்பனையின் கிழங்கு எல்லாவற்றையும் பொடி செய்து வைத்துக்கொண்டு முன்னம் பன்றியின் நெய்யில் ஒரு மண்டலம் உண்ணவேண்டும். இதனால் உடலிலுள்ள வாதம் போகும். பித்தம் முறியும். கோழை அறும். நாடிகள் இறுகும். காமநோய் நீங்கும்.

### கரிசாலை

கரிசாலை, குப்பைமேனி, கரந்தை, வல்லாரை முதலியவற்றை நிழலில் உலர்த்தி நன்றாக இடித்துச் சூரணம் செய்து விரற்கடையளவு எடுத்துத் தேனில் இருவேளையும் உண்ணவேண்டும். இப்படி ஒரு மண்டலம் உண்ண வாதம், பித்தம், சிலேத்துமம் வழிவரும் நோய்கள் மூன்றும் போகும். இரத்தத்தில் உள்ள கிருமிகள் போகும். உடலில் மணம் வீசும். வானத்திலுள்ள விண்மீன்களெல்லாம் பகலில் கூடத் தெரியும். பாதாளத்தில் இருக்கும் புதையல்கள் கிடைக்கும்.

### நூற்றாண்டுகள் கடந்த வேம்பு

நூற்றாண்டுகள் கடந்த வேம்பினைக் கண்டு அதன் பட்டையினை வெட்டி நிழலில் உலர்த்தி இடித்து நன்றாகச் சூரணம் செய்து, கரிசாலை மல்லிகை இவற்றினது சாற்றினால் ஏழுதரம் நன்கு அரைத்து விரற்கடையளவு குறிஞ்சித் தேனில் குழைத்து நாற்பதுநாள் உண்ணவேண்டும். அந்தி, சந்தி இருவேளையிலும் உட்கொள்ள வேண்டும். உடல் முழுவதும் கருங்காலியினைப் போல் வலிமைபெறும். நரை திரையெல்லாம் போகும். விந்து மேலேறும். காலனும் அஞ்சி ஓடுவான்.

### சர்க்கரை வேம்பு

சர்க்கரை வேம்பு என்ற ஒருமரம் மலைகளில் இருக்கும். இதன் காயினைத் தின்றால் கற்கண்டு போல இனிக்கும். இலையினைத் தின்றால் மண்டலத்தில் சித்தி உண்டாகும். காய் தின்னும் பட்சத்தில் சித்தி, பூ தின்றால் வாரத்தில் சித்தி. இதனைத் தேடிக் கண்டுபிடித்து உண்ணுபவர்கள் குறைவு.

**கற்றாழை**

கற்றாழையினை 1 மண்டலம் அந்திசந்தி இரண்டு வேளையும் உண்ணும்போது உடலானது கத்தூரி மணம் வீசும். வேர்வை கசியாது. நரைதிரை எல்லாம் போகும். சோம்பல், நித்திரை, கொட்டாவி முதலியவை நீங்கும். கண்கள் செவ்வரளிப் பூப் போன்றிருக்கும். காமம் உடலில் பெருகும்.

**நெல்லிக்காய்**

நெல்லிக்காய் முற்றலை வாங்கிப் பாலைவிட்டு அரைத்துக் கொண்டு நிழலில் உலர்த்திச் சூரணம் செய்து சுத்திசெய்த கெந்தியினைச் சரியாகக் கூட்டி தேனில் குழைத்து ஒரு மண்டலம் சாப்பிட்டால் முன்னிருந்த தேகம் மாறி சிவசத்தி தேகமாகும்.

**சிவனார் வேம்பு**

சிவனார் வேம்பை நன்கு இடித்துச் சூரணம் செய்து இதனுடன் வாலுழுவைக் கூட்டி கரந்தைச் சாற்றினை ஊற்றி அரைத்து வில்லைகளாகச் செய்து நிழலில் உலர்த்திப் பூ வாங்கி (குழித்தைலம் வாங்கி) 3 கழஞ்சளவு அந்திசந்தி இருவேளையும் 1 மண்டலம் உட்கொள்ளவேண்டும். இவ்வாறு கொள்வதனால் குட்டநோய் போகும். சரீரத்தில் வாதம் போகும். உடல் மாந்தளிர் போன்ற நிறத்தைப் பெறும்.

**காயகற்பம்**

கையான் சாறு 1 நாழி, பொன்முகட்மைச்சாறு - 1 நாழி, ஆவாரைச் சாறு - 1 நாழி, தலைச்சுருளிச் சாறு - 1 நாழி, சிறியாளின் சாறு - 1 நாழி, கொடிவேளிச் சாறு - 1 நாழி, புனல்முருங்கைச் சாறு - 1 நாழி, புளியாரைச் சாறு - 1 நாழி, செங்கடுக்காய்ச் சாறு - 1 நாழி, தழுதாழைச் சாறு - 1 நாழி, குமரிச் சாறு - 1 நாழி, கொமட்டிச் சாறு - 1 நாழி, பொடுதலைச் சாறு - 1 நாழி, நொச்சியிலைச் சாறு - 1 நாழி, தக்காளிச் சாறு - 1 நாழி

இவையனைத்தையும் பாண்டத்தில் இட்டு இதனுடன் எண்ணெய் சேர்க்கவேண்டும்.

கிராம்பு, ஏலம், சுக்கு, மிளகு, வலம்புரியின் மாசிக்காய், மதுரம், கோஷ்டம், திப்பிலி, ரோசனை, பரங்கிப்பட்டை, மாசிக்காய், தான்றிக்காய், குரோசானி, ஓமம், கடுகுரோணி, விளங்கம், இலவங்கப்பட்டை, வால்மிளகு, சித்ரமூலம், வசம்பு, சித்தரத்தை, சாதிக்காய் இவைகளை வகைக்கு கால்பங்கு எடுத்துக் கொள்ள வேண்டும். இவற்றை இடித்துச் சூரணம் செய்து கொண்டு சேர்த்துப் பசுப்பாலுடன் கலந்து மெழுகு பதமாகக் காய்ச்சி சீசாவில் அடைத்து ஒரு மண்டலம் உண்ணவேண்டும்.

**காய கற்பங்கள்**

**வக்கிராந்த செந்தூரம்**

வக்கிராந்தம் ஒரு பலம், வெண்காரம் 5 பலம், கெந்தி 5 பலம், சிங்கி 4 பலம் இவற்றையும் வைத்து எடுத்து 1 மண்டலம் ஒரு காசு எடையில் எடுத்து உண்ணவேண்டும். புளி, புகைத்தல் முதலானவற்றைத் தள்ளிவிட வேண்டும். பத்தியம் இருத்தல் வேண்டும். பெண் போகம் கூடாது. வாசியோகம் பயிலுதல் வேண்டும். இவ்வாறு செய்தால் தேகமது பொன்னாக மாறும். நரைதிரை நீங்கும். உடல் கற்றூணைப் போலாகும். மூப்பு என்பது வராது. நல்ல இளமைப் பருவம் வரும். மூச்சது கீழே போகும் கெட்டிப்பட்ட விந்தானது, கழுமுனையின்கண் செல்ல மூலத்தொடு ஒடுங்கும். திரிகோண வட்டத்துள் சிலாத்துமாவைக் காணமுடியும். முத்தி பெறமுடியும். நீண்டகாலம் நிலைத்து வாழமுடியும். இவ்வாறு சிவத்தைக் கண்டவாறு உடல் பொன்னாகும் என்பதைத் திருமூலரும்,

**“கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்**
**முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்**
**பரையொன்று பூசல் பிடிப்பா னொரு**
**மறையொன்று கண்ட துருவம் பொன்னாமே”.**[62]

என்ற திருமந்திரப் பாடலால் அறியப்படுகிறது.

**தசதீட்சை**

1. முதல் தீட்சையில் ரோம துவாரங்கள் வழியாகக் கெட்டநீர் வியர்வையாகக் கழியும்.

2. முத்தோசமாகிய வாத பித்த சிலேத்துமம் நீங்கும்.

3. பழைய கெட்ட உதிரங்கள் கசியும்.

4. சர்ப்பம் தோலுரிப்பது போல் உடலில் தோலுரியும்.

5. ஐந்தாவது சட்டை கழன்று தேகம் சிவந்த நிறமாகப் பஞ்சமூர்த்திகள் கேரியத்தைத் தருவார்கள்.

6. சட்டை கழன்று சுழுமுனை வாசல் திறந்து தூர திருஷ்டி தெரியும்.

7. சட்டை வெளுப்பால் கழன்ற தேகம் தீபம் போலப் பிரகாசிக்கும்.

8. சடலத்தை உயரத் தூக்கும்.

9. தேகம் சூரியப் பிரகாசமாக அட்டமாசித்தியும், கைவல்யா மாஸ்த்தேவர் ஏவல் புரிவர்.

10. தேகம் தீபம் போல் பொலிவுபெறும். தேகத்தை வெட்டக் கத்தியோடும், சொரூப சித்தி உண்டாகும். அண்டத்தில் மௌனம், நரை, திரை, மூப்பு, பிணி, மரணம் ஏற்படாது. ஒவ்வொரு உலோகமும் வேறு ஒன்றாக மாறும்போது பல மாற்றங்களைத் தம்முள் அடைவது போன்றே உடலானது காயசித்தி பெறும் போதும் பல மாற்றங்களைத் தம்முள் அடைகின்றது. இதனைத் தசதீட்சை என்று கூறுவர். இக்கருத்தினை,

**"இருக்கவே யுகாந்தவரை யிருக்க வேண்டும்**
**யெழிலான காயத்தை நிறுத்த வேண்டும்**
**பெருக்கவே மனமாசை வெறுக்க வேண்டும்**
**பூதலத்தில் காயகற்ப மருந்த வேண்டும்**
**வருக்கவே வலுவைத் தயிலத்தாலே**
**வாகாக காயத்தை இருத்த லாகும்**
**தருக்கவே வெகுகோடி காலமட்டும்**
**தரணியிலே தானிருந்து வாழலாமே!**

**வாழலாம் பொய்யான வாழ்வைநம்பி**
**வகைதெரியா பசங்கலெல்லாங் கூட்டங்கூடி**
**வாழலாமென்று சொல்லி வாதந்தேடி**
**வையகத்தில் சுட்டிறந்தார் கோடாகோடி**
**வாழலாமென்று மல்லோ பொருளைத்தேடி**
**வையகத்தில் மோசங்கள் மிகவும்பண்ணி**

**வாழலாம் புக்கோடி காலமட்டும்**

**வாழவே தேகமதை நிலையென்றாரே!**

**நிலையென்ற இஞ்சுதின்ற குரங்கைப்போல**

**லிளிந்தேங்கி நின்றதனால் பயனுண்டாமோ**

**நிலையான காயத்தை நிறுத்த வேண்டும்**

**நெடுங்காலம் யோகநிலை யறியவேண்டும்**

**நிலையான பதவிமனை யடையவென்று**

**நீனிலத்தில் எப்போதும் யோகம்பாரே!".**[63]

பிரமகற்பம்: மண்ணில் எழுபிறப்பாகும். சுற்சுண்ணாம்பு - வாலைவிட்டுக் கீழிறங்கும்.

## சாரைப் பாம்பு

விண்ணவர்க்கு மருந்தாவது, ஆதியில் - ஒளி; மறுபிறப்பு - நீலம்; பிறப்பிறப்பு - சிவப்பு; பின்பிறப்பு - மஞ்சள்; மறுபிறப்பு - தோகைமயில் நிறம்; ஏழாவது பிறப்பு - முயற்கோழி முட்டைநிறப் படிகம். தண்ணீரும் + சுண்ணாம்பும் தானே காற்றில் சேர்ந்தால் சகலசித்தும் கைவசமாகும் மாய்கை போகும்.

மண் + விண் = வாதம், வெளி

பெண் + ஆண் = பிள்ளை

பிரம உப்பு = வழலை

அண்டபிண்டம்

மூப்பு - இடகலை, பிங்கலை, சுழுமுனை

வாதம்: காற்றின் கூறு, இன்ப கற்பத்தால் ஏற்படும் பிணி.

தாகம் : வெடியுப்பு.

## இரசவாதத்தில் சித்தர்கள் ஈடுபடக் காரணங்கள்

1. வசதி படைத்த மக்கள் தாங்கள் பெற்ற பொன்னைப் பெரிதாக மதித்தது.

2. ஏழை மக்களை வெருட்டியது.

3. மாயையில் மக்கள் கட்டுண்டு கிடந்தது.

4. தங்களை ஏளனப்படுத்தியவர்கள் உண்மைநிலை உணர வேண்டும் என்று நினைத்தது.

4. தங்களின் உண்மை வழிக்கு மக்களைக் கொண்டு வர எண்ணியது.

5. தங்களின் உண்மை வழிக்கு மக்களைக் கொண்டு வர முயன்றது.

6. தங்களது அரியதிறமையை மக்களின் முன் வெளிப்படுத்த ஆவல் கொண்டது.

7. மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் தங்களது பிறவிப்பயனை அடைதல் வேண்டும் என எண்ணியது.

8. அறிந்ததிலிருந்து அறியாததற்கும், தெரிந்ததிலிருந்து தெரியாததற்கும், புரிந்ததில் இருந்து புரியாததற்கும் இட்டுச் சென்று புரிய வைப்பது என்ற நோக்கத்தினால் கண்டறிந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

## இரசவாதக் குறிப்புகள்

இரவாதம் தாழ்ந்த உலோகத்தைப் பொன்னாக்குவதாகும்.[64]

இரசம் - பாதரசம்.

இரசமணி - பாதரசமணி

இரவாதத்தைப் பொதுவாக இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

1. உலோகங்களைப் பொன்னாக்குவது.
2. உடலைப் பொன்னாக்குவது.

போகர் இரசவாதம் 7 உருவாவதன் காரணத்தைக் குறிப்பிடுகையில்,

| | |
|---|---|
| ஸ்பரிச வாதம் | - குருசம்பந்தம். |
| ரச வாதம் | - ஓவுதி சம்பந்தம். |
| தூம வாதம் | - புகை வேதி. |
| வாக்கு வாதம் | - சொல். |
| தாதுர் வாதம் | - பஞ்சலோகங்கள். |
| அசதி வாதம் | - பார்வை. |
| சங்கல்பவாதம் | - தியானம். |

**உபரசவாதம் - 7**

| | |
|---|---|
| மந்திர வாதம் | - எழுத்து. |
| புரிவு வாதம் | - மலமூத்திரம். |
| தூளன வாதம் | - பாத தூளிகை. |
| வாயுபிரேரக வாதம் | - சுவாச சம்பந்தம். |
| தேவாங்க வாதம் | - உபாசனை. |
| பிரவேச விசிளம்பிதவாதம் | - பூதத்தாது. |
| தந்திர வாதம் | - நிரேதுவகச் செய்யப்படும். |

**"தானாக காயத்தை நிறுத்த வேண்டும் சதாகாலம்**

**சுக்கிலத்தைக் கட்டவேண்டும்".[65]**

**"தேகமுறும் விந்து சுழன்றால் தேகம் போச்சே".[66]**

**உடல் பொன்னாதல்**

**"கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்**
**முயலொன்று கண்டவர் மூலரும் உய்வர்**
**பறையொன்று பூசல் பிடிப்பா னொருவன்**
**மறையொன்று கண்ட துருவம் பொன்னாமே".[67]**

எனவரும் பாடலில் மறைந்திருக்கும் ஒன்றினைக் கண்டவனது உருவம் பொன்னாகும். தேவப் பொருளாக உள்ள இறைவனைக் கண்டவனது உருவம் மலம் நீங்கி சிவத்தோடு கலக்கும் என விவரிக்கிறார். 'சிவாய நம என செம்பு பொன்னாகும்' எனும் திருமந்திரக் குறிப்பிலும் காணமுடிகிறது. இரசவாதம் எனும் செய்தி 'சிவாயநம' எனும் மறைபொருள் குறிப்பில் உள்ளது. அவ்வாறே,

**"கற்பத்தை உண்டால் காயம் அழியாது".[68]**

என்பதும் சித்தர்களின் அனுபவத்தில் விளைந்த அரிய கருத்தாகும். போகர்[69], மச்சமுனி[70], கொங்கணர்[71], கருவூரார்[72] போன்ற சித்தர்களின் இரசவாதமும் காயகல்பமும் இணைந்த பல்வேறு முறைகளை மறைமொழியாகக் குறிப்பிட்டுள்ளனர். 'போகர் கல்பம்', 'கருவூரார் வாத காவியம்' போன்ற நூல்களில் காணப்படும் கற்ப மூலிகைகள் பற்றிய செய்முறை விளக்கங்கள்

தெளிவானவையாகும். எளிதில் மேற்கொள்ள தக்கவையுமாகும். ‘சித்தரின் காயகல்பமுறை’யானது மூப்பு, இரசமணிக் குளிகை, குரு மருந்து போன்றவை வெளிவரும். இவற்றால் சித்த மருத்துவத்தின் பெருமையும் சித்தர்களின் வேதியியல் புலமையும் உலகிற்குப் புலனாகும்.

## மந்திரம்

மனத்தை உறுதிப்படுத்திச் செந்நெறிப் படுத்துவது மந்திரம்.

**“மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டா”.**[73]

எனும் பாடல் இதனை விளக்கும். நிறை மனத்தாக விளங்கத் துணை செய்வதே மந்திரமாகும்”.[74] என்பார் மாணிக்கவாசகம். **“நிறைமொழி மாந்தர்”.**[75] எனும் தொல்காப்பிய நூற்பாவும் அதற்கு அரணாக அமைகிறது. ஒவ்வொரு தெய்வத்திற்கும் உரிய மந்திரங்கள் அவற்றின் சக்திக்கு ஒலி வடிவங்களால் குறிக்கப்படுகிறது. இவ்வொலி வடிவங்களுக்குப் பொருள் கூற முடியாத எல்லையற்ற ஆற்றல் உண்டு. சித்தர்கள் மந்திரத்தால் நோய் தீர்த்தார்கள். பஞ்சபட்சி நூல், கருவூரார் அஷ்ட மாசித்து[76], மூலிகை ஜால ரத்தினம், கோரக்கர் மாந்திரீகம் போன்ற நூல்கள் மந்திரம் மூலம் நோய் தீர்க்கும் வழிமுறைகளையும் பிற செயல்களையும் விவரிக்கிறது. “இமாலயச் சந்நியாசிகள் நடுங்கும் பனிக்குளிரில் மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு உறையும் நீரில் குளித்தாலும் அவர்கள் உடலுக்கு எந்த உபாதையும் வருவதில்லை. இதை வியந்த ரஷ்யர்கள் சைபீரியாவிலே பரிட்சித்துப் பார்க்க அந்த மந்திரங்களைச் சொன்னபோது ஏற்பட்ட ஒலி அதிர்வுகளால் உடலுக்குள் ஒரு வித மாற்றம் ஏற்படுவதையும், அதனால் நடுங்கும் குளிரைத் தாங்கும் சக்தி உடலுக்கு உண்டாவதையும் கண்டறிந்தனர்”.[77] இவ்வாறு பிணி தீர்க்கும் நெறிகளுக்குரிய மந்திரங்களைச் சித்தர்கள் ‘குரு - மாணவர்’ வழிமுறையாக விளக்கியுள்ளனர்.

## யோகம்

நீண்டநாள் உயிர் வாழும் கலையை அளிக்கவல்ல மற்றொரு முறையே ‘யோகம்’. பிராணவாயு கட்டுப்பட்டால் மனம் கட்டுப்படும். மனம் கட்டுப்பட்டால்

விந்துக் கட்டுப்படும். இம்மூன்றின் கட்டுப்பாட்டால் ஏற்படும் பேரின்பநிலையே நீண்ட ஆயுளை அளித்து வீடு பேற்றினை அளிக்கும். இதனையே யோகமகாச் சித்தர்கள் ‘மூச்சுக் காற்று’ப் பற்றிச் சில பயிற்சிகளை உருவாக்கி உள்ளனர்.

‘மூச்சுக்காற்றைக் கட்டுதல்’ (பிராணயாமம்) எனும் பயிற்சி மூலம் பிராணசக்தி வீணாகாமல் தடுத்து அதன்மூலம் மனத்தைக் கட்டுப்படுத்தினர். பூரகம், கும்பகம், இரேசகம் எனும் மூன்று நிலைகள் உண்டு. இடது நாசி வழியாக 16 மாத்திரை அளவு காற்றை உள்ளே இழுத்தல் பூரகம். உள் இழுத்த காற்றை 64 மாத்திரை அளவு உள்ளே நிறுத்தல் கும்பகம். 32 மாத்திரை அளவு மெல்ல வந்து நாசி வழியாக வெளியிடுதல் இரேசகம். இவ்வாறு பழகினால் வீணே கழியும் மூச்சுக் கட்டுப்படும்; மனம் அடங்கும்; அதனால் நரை திரை தடுக்கப்படும். உறுப்புகள் சிவக்கும்; ரோமம் சுருங்கும் என்று திருமூலர் கூறுகையில்,

**“புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை**
**நெறிப்பட உள்ளே நின்மலம் ஆக்கில்**
**உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்**
**புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே”.**[78]

**“வளியினை வாங்கி வயத்தில் அடக்கில்**
**பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்”.**[79]

**“ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்**
**ஆறுதல் கும்பம் அறுபத்து நாலதில்**
**ஊறுதல் முப்பத்தி ரண்டதி ரேசகம்**
**மாறுதல் ஒன்றின் கண் வஞ் சகமாமே”.**[80]

எனும் திருமந்திரத்தில் நீண்டநாள் உயிர்வாழக் கீழ்க்கண்ட அளவில் ‘மூச்சு’ இயங்கவேண்டும். நாழிகை ஒன்றுக்கு 360 மூச்சு வீதம் ஒரு நாள் (60 நாழிகை) முழுவதற்கும் 21600 மூச்சு நடக்கவேண்டும். இவ்விதம் நிகழும் 21600 மூச்சும், உடலில் உள்ள ஏழு நிலைகளிலும் பின்வரும் கணக்கில் பொருந்தவேண்டும்.

1. மூலாதாரம் - 600 மூச்சு
2. சுவாதிட்டானம் - 6000 மூச்சு
3. மணி பூரகம் - 6000 மூச்சு

4. அநாகம் - 6000 மூச்சு

5. விசுத்தி - 1000 மூச்சு

6. ஆக்ஞை - 1000 மூச்சு

7. பிரமரந்திரம் - 1000 மூச்சு

மொத்தம் - 21000 மூச்சு”.[81]

இவ்வாறு சுவாசம் அமையாவிட்டால் மேற்கூறிய ஏழு நிலைகளிலுமுள்ள சுரப்பிகளிலிருந்து அமுதநீர் இடகலை, பிங்கலை எனும் இரு ஏற்றங்களாகிய மூச்சுக் குழல்களினால் இழுத்து உடலிலுள்ள குருதிக் குழல்களில் முறையாகப் பாயாது. அதனால் உடல் வற்றி ஆயுள் குறைகின்றது.

**“ஏற்றம் இரண்டு ஏழுகிணறு உள**
**மூத்தாள் இறைக்க இளையாள் மடைமாறப்**
**பாத்தியில் பாயாமல் பாடிழங்கும் பாய்ந்தது**
**கூத்தி வளர்த்தோர் கோழிப்புள் ஆமே”.[82]**

என நீண்டநாள் நோயற்று வாழும் வகையில் உதவும் பிராணாயாமம் எண்வகை யோகப் பயிற்சிகளை ‘அட்டாங்க யோகம்’[83] எனும் தலைப்பில் திருமூலர் திருமந்திரத்தில் 88 பாடல்களில் உணர்த்துகிறார். யோகத்தின் எட்டுவகைச் சங்கமமே அட்டாங்க யோகமாகும். 1. தீய செயல்களில் ஈடுபடாதிருத்தல், 2.உண்ணா நோன்புகளை மேற்கொள்ளல், 3.ஆசனங்கள், 4.பிராணாயாமம், 5.புலன்களைக் கட்டுப்படுத்தல், 6.மனத்தைக் கட்டுப்படுத்தல், 7.தியானம், 8.சமாதிநிலை என அமையும் அட்டாங்க யோகமுறை நல வாழ்வுக்கு உதவும் அரிய முறையாகும். உடலும், உள்ளமும் நன்னிலை எய்திடப் பேரின்பநிலை எய்தவல்ல வழிமுறைகளைக் கூறும் சித்தர்களின் யோகம் பற்றிய விளக்கங்கள், விரிந்த நோக்கையும், ஆழ்ந்த பயிற்சியையும் அடிப்படையாகக் கொண்டவை. அட்டமாசித்திகளை அடையவல்ல ஆற்றல்களை இவ்வகை யோகமுறையில் பெறமுடியும். இவ்வாறு சோதிடம், உடலியக்கம், நோய் நாடல், மருந்தாக்கல், காயகல்பம், மந்திரம், யோகம் போன்ற பல்வேறு துறைகளில் சித்தர்கள் சிறப்புற்றிருந்தனர். இவற்றின் ஒருங்கிணைந்த முறைகளால் சித்தர்கள் உடல்நோய், உளநோய்களைத் தீர்த்தனர்; நோய் வராமல் காத்தனர்; மரணத்தையும் தடுத்தனர்.

**மருத்துவன் இலக்கணம்**

சித்தர்கள் கொண்டிருந்த இவ்வளவு மருத்துவப் புலமையும், சித்த மருத்துவர்கள் கொண்டிருத்தல் இயலாத ஒன்றாகும். இதனைத் திருமூலர்,

> **"மூன்றுகண் தலைநான்கு முகங்கள்**
> **ஆன்ற ஐந்து இங்கு ஆறுகை உடல்**
> **சான்ற எட்டுக் கால் பத்து எய்தி**
> **மாண்ட மருத்துவன் மாற்றுவான் நோயே".**[84]

என்னும் பாடல், மருத்துவன் இன்றியமையாது பெற வேண்டிய புலமையை வலியுறுத்துகிறார்.

**கண் மூன்று**

1. நோய் நீக்கும் மருந்து.
2. நோய் வராமல் காக்கும் மருந்து.
3. உடலில் குன்றிய சத்துகளை நிறைவிக்கும் மருந்து.

**தலை நான்கு**

நோயாளியின் நாடிநடைகளாகிய வாதநாடி, பித்த நாடி, ஐ - நாடி, ஆகிய மூன்றுடன் இவற்றின் ஒத்த நாடியாகியன சேர்ந்து நான்கையும் அறிந்திருத்தல் மருத்துவனின் தலை நான்காகும்.

**முகம் ஐந்து**

1. ஐம்பூதங்களின் இயக்கம் அறிதல்.
2. கருவின் தோற்றமும் - உள் உறுப்புகள் பற்றியும் அறிதல்.
3. நோயின் குறி குணங்களையும் தக்க மருத்துகளையும் அறிதல்.
4. மரணநிலை, மரணமில்லா நிலை அறிதல்.
5. உடலில் உள்ள சத்துப் பொருள்களையும், கழிவுப் பொருள்களையும் அறிதல்.

**மருத்துவனின் கைகள் ஆறு**

வாதம் - புளிப்பு பித்தம் - கைப்பு
கார்ப்பு துவர்ப்பு
ஐ - இனிப்பு உவர்ப்பு எனும் அறுசுவை பற்றி அறிதல்.

**மருத்துவனின் உடல் எட்டு**

பிணி அறியும் எட்டுவித முறைகள்

1. நாடி
2. கண்

3. நாக்கு 4. நிறம்
5. மலம் 6. சிறுநீர்
7. குரல் 8. தொடு உணர்ச்சி

எனும் எண்வகைத் தேர்வுமுறைகளை அறியமுடியும்.

**மருத்துவனின் கால் பத்து**

உடலில் தொழிற்படும் முக்கிய வாயுக்களான தச வாயுக்களைப் பற்றி அறிதல் எனும் இவ்இன்றியமையாதப் புலமை மருத்துவனிடத்தில் அமைய வேண்டும் என்கிறார்.

மேற்கண்ட ஆய்வின் மூலம் சித்தர்களின் வைத்தியமுறைகள் எனும் தலைப்பில் மிகச் சிறந்த நிலையில் சித்த மருத்துவம் அடிப்படையிலும், வேதியியல் அடிப்படையிலும் சித்தவைத்தியம் அமைந்துள்ளது. சித்த மருத்துவ வேதியியல் எனும் புதிய வேதியியல் துறையை உலகுக்கு அறிமுகப்படுத்தும் வகையில், சித்தர்களின் சித்த வைத்தியப்புலமை விரிந்துள்ளமையும் இவ்வாய்வின் வழி அறியமுடிகிறது.

# அடிக்குறிப்புகள்

1. இராமசுப்பிரமணிய நாவலர், மான் முருகியம் எனும் தமிழ் மருத்துவ நூல், பக். 23 - 24.
2. திருமூலர், திருமந்திரம், பா. 152.
3. சாமி, சி.பி., அகத்தியர் குணவாகடம்.
4. போகர் ஏழாயிரம்.
5. அரவிந்தர், ரிக் வேதம் அக்னி சூக்தங்கள், பக். 6 - 7.
6. இரா. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், ப. 220.
7. இரசவாதம், 521.
8. முருகேச முதலியார்,.க.ச., பொருட்பண்பு, ப. 600.
9. முசு - குரங்கு, கழக அகராதி, ப. 767.
10. வேங்கடேசன்,க., (ப.ஆ), சித்த மருத்துவ அறிவியல், மாணிக்கவாசகம், சித்தர்களின் மறைமொழி, ப. 51.
11. க. வேங்கடேசன், தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம், 343.
12. இரா. மாணிக்கவாசகம், சித்தர்கள் பரிபாஷை அகராதி.
13. பாம்பாட்டிச் சித்தர்கள் பாடல், ப. 150.
14. வேங்கடேசன்,க., (ப.ஆ), சித்த மருத்துவ அறிவியல், மாணிக்கவாசகம், சித்தர்களின் மறைமொழி, ப. 52.
16. திருமூலர், திருமந்திரம், பா. 703.
17. இரா.மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், பக். 29 - 30.
18. கலைக் களஞ்சியம், தொகுதி - 4, ப. 643.
19. இரா. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், ப. 30.
20. சி. பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 157.
21. பதினெண் சித்தர்கள், நாடி சாஸ்திரம், பா. 7.
22. புறம், பா. 70.
23. கல்லாடம், பா. 7.
24. கம்பராமாயணம்.
25. கலித்தொகை. மருதக்கலி, பா. 24.
26. கொன்றை வேந்தன், பா. 82.
27. கலித்தொகை. மருதக்கலி. 16.

28. உலக வழக்கு.

29. சரசுவதிமகால் நூலகம், சுவடி எண். 14.

30. சரசுவதிமகால் நூலகம், வைத்திய நூல், சுவடி எண். 21.

31. இரா. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், ப. 186.

32. திருமூலர், திருமந்திரம், பா. 2125.

33. மேலது, பா. 1934.

34. மேலது, பா. 458.

35. மேலது, பா. 462.

36. மேலது, பா. 482.

37. மேலது, பா. 481.

38. மேலது, பா. 1941.

39. மேலது, பா. 1961.

40. வேணுகோபால், உடல் தத்துவம், பக். 175 -176.

41. திருவள்ளுவர், ஞான வெட்டியான், பா. 1112, 1113.

42. தேரையர் பாடல்.

43. கண்ணுசாமி பிள்ளை, (ப. ஆ.,) பதார்த்த குணபாடம், ப. 142.

44. முருகேச முதலியார், க.ச., பொருட்பண்பு நூல் குணபாடம், ப. 120.

45. மேலது, ப. 366.

46. மேலது, ப. 405.

47. சுந்தரமகாலிங்கம், கோரக்கர் மலைவாகடம், ப. 97.

48. கிருட்டினன், க.ரா., மருந்துகளும் பயன்களும், பக். 34 - 52.

49. முருகேச முதலியார், க.ச., நஞ்சு நூல்.

50. முருகேச முதலியார், க.ச., பொருட் பண்பு நூல், ப. 683.

51. முகம்மது அப்துல்லா சாயுபு, தேரையர் யமக வெண்பா, ப. 211.

52. திருமூலர், திருமந்திரம், பா. 703.

53. மேலது, பா. 883.

54. மேலது, பா. 2013.

55. இராமலிங்க அடிகளார், திருவருட்கொடை, ப. 70

56. Shanmugavelan, A. Siddhar's Science of Longevity and Kalpa Medicine, PP. 105 - 106.

57. சிவவாக்கியர், பா. 4.
58. மேலது, பா. 69.
59. சூரியானந்தர் சூத்திரம். 2.
60. வாலைச்சாமி, ஞானக்கும்மி, பா. 124.
61. போகர் பா. 56
62. திருமூலர், திருமந்திரம், பா. 2869.
63. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், பக். 236 - 237.
64. சித்தர் பரிபாசை அகராதி, ப. 158.
65. போகர் 7000, ப. 771.
66. அகத்தியர், கர்மக்காண்டம், ப. 300.
67. திருமூலர், திருமந்திரம், பா. 2869.
68. சட்டமுனி, கற்பவிதி, பா. 17.
69. போகர் ஏழாயிரம், போகர் சரக்கு வைப்பு.
70. மச்சமுனி வைப்பு, மச்சமுனி திராவகம் 8000.
71. கொங்கணர் சரக்கு வைப்பு.
72. கருவூரார் வாத காவியம்.
73. பதினெண் சித்தர்கள் பாடல்.
74. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், பக். 29 - 278.
75. தொல்காப்பியம், நூற்பா. 178.
76. அங்கமுத்து முதலியார், கருவூரார் அட்டமா சித்து.
77. சாவி, வார இதழ், 16. 08. 1979.
78. திருமூலர், திருமந்திரம், பா. 556.
79. மேலது, பா. 551.
80. மேலது, பா. 550.
81. சண்முகவேலன், பாலயோகி, பக். 33 - 34.
82. திருமூலர், திருமந்திரம், பா. 553.
83. மேலது.
84. சண்முகவேலன், சித்த வைத்திய வினா விடை, பக். 18 - 21.

## இயல் - 4

# தத்துவமும் அற்புதமும்

தத்துவ விளக்கம், உயிர் தத்துவம், உடல் தத்துவம், மனிதத் தத்துவம், மனத்தின் இயல்பு, சித்தர்களின் முக்திநிலை, மரணமிலாப் பெருவாழ்வு, இறவாநெறி, இறந்தாரை எழுப்புதல், இறந்தார் எழுதல், சாகாக்கலை என ஆராய்ந்து விளக்குதல், மேலும் இறப்பு முதல் பிறப்பு வரை எனும் வகையில் உலகச் சுழற்சியிலிருந்து விடுபடும் தத்துவப் பொருளாகவும் இவ்வியல் ஆராயப்படுகிறது.

### தத்துவ விளக்கம்

'தத்துவம்' என்பது ஒன்றின் உண்மைத் தன்மையினை எடுத்துக்காட்டுவதாகும். வழக்கில் 'கொள்கை' என்ற பொருளிலும் 'தத்துவம்' என்ற சொல் வழங்கி வருகின்றது. "பொருள் தன்மைகளை ஆராய்ந்து மெய்ம்மையினை நிலைநாட்டும் அறிவுக் கலைக்குத் தத்துவம் என்ற குறியீடு வழங்கியது".[1] எனச் சோ.ந.கந்தசாமி குறிப்பிடுகிறார். "சமயத்தோடு தொடர்புடைய ஆன்ம அனுபவத்தைப் பெறும் வழியினைத் தத்துவம்".[2] என இரா.மாணிக்கவாசகம் விளக்குகிறார். தத்துவம் என்பது குறிக்கப்படும் பொருள் எதுவோ அதன் தன்மை என்று பொருள்படும். இதனைப் பொருளின் மெய்ம்மை நிலை எனக் கூறுவர். அதாவது, யாதொரு பொருள் அது பருப்பொருளாயினும், நுண் பொருளாயினும், காட்சிப்பொருளாயினும், கருத்துப் பொருளாயினும் அதனுடைய பண்பு பிறவற்றால் அழியாததாகவும் நிலைபேறு உடையதாகவும் அதற்கே உரிய தனித்தன்மை கொண்டதாகவும் ஓங்கி நிற்பதாகும்.

சித்தர் தத்துவம் என்பது நிலையாத பொருளைக் கொண்டு ஆன்மா நிலைபேறான இன்பத்தை எய்தி ஆன்மா என்னும் தன்னிலையை அழித்து இன்பமயமாதலாகும். ஆதலின், நிலையாதன நிலையாமை பற்றி விளக்கி நிலையுடையவை நிலைத்தலை அறிவுறுத்தல் அதன் கோட்பாடும் செயல்களுமாம்".[3] என்று இளமதி சானகிராமன் தன் நூலின் மூலம்

எடுத்துரைக்கின்றார். இக்கருத்துகள் தத்துவத்திற்கு ஏற்புடையதாக அமைகின்றன.

**தத்துவங்களின் எண்ணிக்கை**

தத்துவங்களின் எண்ணிக்கைக் குறித்தும், தன்மைகள் குறித்தும் அகத்தியர் தத்துவம் - 300 என்னும் நூலில் அகத்தியர் விவரித்துள்ளார். "சைவம், பாசுபதம், மாகாளம், காளாமுகம், வாமம், வைரவம் என்ற இந்த ஆறு சமயத்தின் தத்துவங்கள் முப்பத்தாறு; வைதீக சமயத்தவர்க்குத் தத்துவங்கள் இருபத்து நான்கு; சமணர், மாயாவாதி, புத்தர், கூடு மட்டவாதி இவர்களுக்குத் தத்துவங்கள் பதினைந்து; வேதாந்திக்கு இருபத்தெட்டு; மற்றபடி தத்துவங்கள் தொண்ணுற்றாறும் எல்லாருக்கும் பொதுவானது என்றும், சிவதத்துவம் இருபத்து நான்கு, வித்தியாதத்துவம் ஏழு; சுத்த தத்துவம் ஐந்து; இம்முப்பத்தாறு தத்துவங்களையும் 'உட்கருவி' என்று சித்தர்கள் அழைப்பர். கோசமைத்து, வாயு பத்து, அவத்தை ஐந்து, குணம் மூன்று, ராகம் எட்டு, தாது ஏழு, நோய் மூன்று, ஆதாரமாறு, நாடிப் பத்து, மண்டலம் மூன்று என்று பல தத்துவங்களையும் 'புறக்கருவி' என்றும் அழைப்பர். இத்தொண்ணூற்றாறு தத்துவங்கள் சித்தர் கூறும் தத்துவங்களாகும். பிறவகையெல்லாம் உலக நூல்களின் வேறான வழியாகும்".[4] என அகத்தியர் தத்துவத்தின் மூலம் அறியப்படுகிறது.

மனிதனது உடல், உயிர், கருவி கரணாதிகள் முதலானவற்றைத் தத்துவக் கோணத்தில் விளக்கியமையால் சித்தர்கள் மனிதனையே தத்துவ அடிப்படையில் காண்கின்றனர். இக்கருத்தினைப் பத்திரகிரியார் கூறுகையில்,

**"தூரோ அசைந்து சுழன்றுவரும் தத்துவத்தை**
**வேரோ டறுத்து விளங்குவது மெக்காலம்?"** (பத்திர. 19)

எனும் மெய்ஞ்ஞானப் புலம்பலின் பாடல் வழியாக உடலையே தத்துவமாக்கிப் புலப்படுத்துகிறார். சிவவாக்கியரும் இத்தத்துவத்தை,

**"படையுடைய தத்துவமும் பாதகங்க ளல்லவோ?"** (சிவவாக்கியர். 436)

என்று வினைகளைத் தத்துவமாக்கித் தருகின்றார். பட்டினத்தார் பாடலில்,

**“தத்துவத்தைப் பார்த்து மிகத்தன்னை யறிந்தறிவால்**

**உய்த்து னைத்தான் பாராம லுய்வாரோ பூரணமே”** (பட்டின. 67)

எனப் பூரணமாலையில் கருவி கரணாதிகளைத் தத்துவமாக்கி உரைக்கும் என்று தெரிவிக்கின்றார். சித்தர் பாடல்களை முழுமையாகக் காணும்போது இந்தியத் தத்துவங்களிலுள்ள அனைத்துக் கூறுகளையும் எடுத்தாண்டுள்ளமைப் புலனாகிறது. அதேநேரத்தில் சித்தர் தத்துவம், பிற தத்துவத்திலிருந்து வேறுபட்டிருப்பதையும் உணரமுடிகிறது. சித்தர்கள் தங்களுடைய உள்ளுணர்வில் ஏற்பட்ட அனுபவங்களையே, நன்கு ஆழ்ந்து சிந்தித்து அச்சிந்தனையின் விளைவாகத் தோன்றிய உண்மைக் கருத்துகளையே விளக்குவதால் உலகினையும், உயிரினையும், உடலினையும், மனத்தினையும் குறித்த சித்தர்களின் சிந்தனைகள் தத்துவக் கருத்துகளாக வெளிப்படுகின்றன.

## உலகத் தத்துவம்

உயிர், உடல் மற்றும் பல பொருள்களும் தோன்றுவதற்கு நிலைக்களனாக உள்ள உலகத் தோற்றத்தைச் சித்தர்கள் தங்கள் பாடல்களின் வழியாக வெளியிட்டுள்ளனர். காகபுசுண்டர் சிவனிடத்தில் உரைப்பது போல், தன்னுடைய காவியப் பகுதியில் உலகத்தின் தோற்ற ஒடுக்கத்தைப் பாடியுள்ளார். “காலச் சக்கரங்கள் சுழலும்போது பத்து நாதங்களும் மவுனத்தில் பாயும். மவுனம் பரத்தில் பாயும். அடுக்குகள் அனைத்தும் இடிந்து வீழும். அண்டங்கள் எல்லாம் கவிழ்ந்து போகும். காகபுசுண்டர் நிமிர்த்தி வைக்க, அதிலிருந்து அக்கினி போன்ற கம்பம் தோன்றும். சிவந்த நிறத்துடன் நீலவுருவினையுடைய சுடர் கிளம்பும். அதிலிருந்து அக்கினி போன்ற கம்பம் தோன்றும். அதிலிருந்து ஐந்து எழுத்துகள் வரும்.

நகாரம் மகாரத்தில் புகும். மகாரம் சிகாரத்தில் புகும். சிகாரம் வகாரத்தில் புகும். வகாரம் யகாரத்தில் புகும். யகாரம் சுடரில் புகும். சுடர் மணியில் புகும். மணி பரத்தில் புகும். பரம் சிவத்தில் புகும். சிவம் அண்டத்தில் பாயும். அண்டம் திரும்பிப் பாயும். அண்டத்தில் கம்பத்தூண் நிற்கும். அந்தக் கம்பத்தில் காகபுசுண்டர் செல்லச் சக்கரம் புரண்டு போகும். அத்தம்பத்துள் அழகான பெண் இருப்பாள். முன்பக்கம் வாலைப் பெண்

போலவும், பின்பக்கம் ஆணைப் போலவும் அத்தம்பம் தோற்றம் தரும். அத்தம்பத்திலிருந்து சக்தி தோன்றிச் சிவத்தைப் படைப்பாள். சிவத்தில் பரம் காணப்படும். பரத்தில் மணி பிறக்கும். மணியில் பரம் நிற்கும். கூடத்தில் யகாரம் காணும். சிகாரத்தில் மகாரம் காணும். மகாரத்தில் நகாரம் காணும். இவ்வைந்தும் வந்தவுடன் பூமியானது உண்டாகும்”.[5] என்று காகபுசுண்டர் விரித்தும் கூறுகின்றார்.

மேலும், “முன் பார்த்தால் பெண் உருவும், பின் பார்த்தால் ஆண் உருவுமாகி நிற்கின்ற அத்தம்பத்துடன் சேர்ந்து காகபுசுண்டரும் பலகாலம் நிற்கப் பிரமம் மனமிரங்கி அண்டத்தைப் படைக்கவேண்டும் என்று அருளும்போது விமலரென்றும் உமையென்றும் தோன்றுகின்ற அவன் சக்கரத்தில் நின்று கொண்டு திருமாலை அழைப்பாள். திருமாலும் தம் உந்திக் கமலத்தில் இருந்து பல்லாயிரம் கோடி அண்டவுயிர்களை அழைத்து முக்குணங்களைக் காட்டி நிலையான சமுத்திரங்கள், பூமி, சூரியன், திங்கள், மலை, காடு, சீவசெந்துக்கள், நவக்கிரகம், நட்சத்திரங்கள், நால்வேதம் முதலானவற்றை வகுப்பார்.

தெய்வம், பூதம், வானம், பூமி, மாமேடு, மலைகள், கோயில், குளம் முதலான பலவற்றையும் பிரமத்தினைச் சாட்சியாக வைத்துப் படைத்துத் தானும் அதற்குள் நிறைவார். மவுனம் வைத்துப் பார்த்தால் இவற்றை அறியலாம். இப்படியாகவே ஏழு இலக்கம் கோடிப் பிரளயங்கள் தோன்றியுள்ளன. ஒடுக்கக் காலத்தில் அரி, அயன், உயிர்கள் அனைத்தும் பிரமத்தில் அடங்கும்”.[6] என்று காகபுசுண்டர் தெளிவான விளக்கம் அளிக்கின்றார். சிவன் கேட்கத்தான் கூறியதாகக் காகபுசுண்டர் கூறியவற்றை உள்வாங்கிய இராமதேவரென்ற யாகோபு வாதசூத்திரம் 400 - இல் இராமதேவர் உலகின் தோற்ற ஒடுக்கங்களைக் காகபுசுண்டர் வழியில் விளக்குகின்றார். அக்கருத்தைப் பாடலாக,

**“வேண்டுமென்று பரமசிவ னென்னைக் கேட்க**
**வெளியிட்டேன் யென்சாமி கடவுளானே**

ஆண்டியெனு மென்தேவ சிவமே கேளு
அரசரா பிரளயந்தான் வருகும்போது
மாண்டுவிடு வார்சித்தர் யோகி யெல்லாம்
மகாதேவர் தேவர்முதல் பிரம்மா விட்னு
தாண்டுவார் மானிடரு மழிந்து போவார்
நற்பரனே யுலகமெல்லாம் சலமாய்ப்போமே.

போருமே சீவசெந்து புற்பூண் டெல்லாம்
புண்ணியனே அடியேனுங் காக்கைபோல
ஏருவே னாகாயந் தன்னில் நாதா
என்ன சொல்வேன் பார்த்துக் கொண்டிருக்கும் போது
வாருடைய வாழியிலே யாலின் மேலே
வளருதே அக்கினியாந் தம்பம்சுவாமி
காருத்தன் நீரல்லோ கம்பந்தன்னில்
கலந்துகொண்டீ ரப்போது பார்த்தேன் தானே

அப்போது தம்பமது சிவப்புப் பச்சை
அரகரா போலவல்லோ சோதிகண்டேன்
அப்போது மூன்றுமுக்கால் நாழிகைக்குள்
அதிலிருந்து பச்சைநிறப் பெண்ணணங்கு
அப்போது தூண்வெடித்து வெளியில்வந்து
அய்யனே கையமர்த்தி நின்றாள் பாரு
அப்போது அவளருகில் நீரும் வந்து
ஆண்டவரே நிற்கின்றீர் அறிவேன்றானே.

ஆண்டவரே அவள்வந்து உலக மெல்லாம்
ஆகாகா உண்டுபண்ணி பிரம்மா விட்னு
தாண்டவனே புற்பூண்டு சீவசெந்து
தன்மையுடன் மனிதர்களை யுண்டுபண்ணி
ஈண்டவனே யுந்தனையுங் கடவுளாக்கி
இடப்பாகந் தானமர்ந்தா கொந்தனாந்தாள்

**ஆண்டவனே சத்தியவள் சிவமும் நீரே**
**அய்யனே நீரவளு மொன்று தானே.**

**தானான சோதிமயம் நீர்தானென்று**
**தற்பரற்குத் தானுரைத்தார் புகண்டர்தானும்**
**கோனான புகண்டரவர் சொன்ன சொல்லைக்**
**கொற்றவனே யுந்தனுக்குச் சொன்னே னப்பா**
**தேனான என்மகனே தெளிவு ளானே**
**தேவமதில் புசுண்டர்போ லாருமில்லை**
**மானான அம்பாளி னருளி னாலே**
**மகாகோடி யுகம்வரைதா னிருக்கலாமே.** (101-105)

என இராமதேவரும் எழுதியதன் மூலம் உலகத்தைப் படைத்தும், காத்தும், அழித்தும் வருபவள் சக்தியே என்பது வெளிப்படுகின்றது. உலகம் சக்தியில் தோன்றி சந்தியில் ஒடுங்குவதைச் சிவவாக்கியர், கொங்கணர் முதலான சித்தர்களும் குறிக்கின்றனர். இவ்வாறாக உலகத் தோற்ற ஒடுக்கங்களைக் காட்டியவர்கள் உயிர்த் தத்துவத்தை இயம்பியுள்ளனர்.

## உயிர்த் தத்துவம்

உலகப் பொருள்களின் இயக்கத்திற்குக் காரணமாக அமைவது உயிர்த் தத்துவமாகும். இவ்வுயிர்த் தத்துவம் உடல், உயிர், ஆன்மாவை அணுகும் முறை முதலான பலவற்றையும் விளக்குகின்றது. “உடலுக்கு அப்பால் உயிர் என்ற ஒன்று தனியே இல்லை. பூதங்களின் சேர்க்கை உடைந்து உடல் அழியும்போது உயிரும் அழியும். உடலை நிலைக்களமாகக் கொண்ட ஒரு பண்பே உயிர்”.[7] என்பது சாருவாகத் தத்துவம். இத்தத்துவம் ஏற்புடையதாகத் தோன்றவில்லை. உடல் அழிந்து விட்டாலும் அவ்வுடலின் ஆவிகள் அழியாமல் பலர் முன் தோன்றுவதை நோக்கும்போது சாருவாகத்தின் கூற்றைப் பொய்யாகக் கூறுவதும் உண்டு. இதனைச் சிவவாக்கியர் குறிப்பிடுகையில்,

**“உடம்பு யிறந்தபோ துயிரிறப்ப தில்லையே**
**உடம்பு மெய்ம்மறந்து கண்டுணர்ந்து ஞானமோதுமே!”**

(சிவவாக்கியர். 87)

என்ற பாடலின் மூலம் உயிர் அழியாது என்ற சித்தர் சிந்தனையை வெளிப்படுத்திக் காட்டியுள்ளார்.

**உயிரின் பிறப்பும், செயலும்**

உயிரின் பிறப்பும் செயலும் பற்றிச் சிவவாக்கியர் குறிப்பிடுகையில்,

**"உருத்தரிப்பதற்கு முன்பே உயிரில் புகுந்தது நாதம்"**

(சிவவாக்கியர். 216)

என்றும், கொங்கணர் வாலைக்கும்மியில் கூறும்போது,

**"ஓம் எனும் பேசுமெழுத்தால் அமைந்தது உயிர்"** (கொங்கணர். 14)

என்றும், பட்டினத்தார் குறிப்பிடுகையில், **"**இவ்வுயிர் முற்பிறவியில் செய்த வினையின் பயனாக உடலை எடுக்கின்றது. வினை முடிந்துவிட்டால் சிறிது நேரம் கூட நிற்காது**".**[8] என்றும் சொல்லுகிறார். உடலைவிட்டு நீங்கிய பிறகு உயிரானது எந்த உருவத்தில் இருந்து தோன்றியதோ அந்த உருவத்தைச் சென்றடைந்து விடும். உயிர் சிவத்துடன் சேரும்பொழுது தன்னையே அழித்துக் கொள்ளும். சிவமும் அதன் தன்மையினை அழிக்கும். சிவத்தினால் அழிக்கப்பட்ட உயிரானது சக்தியினை அடையும். சக்தியும் தன் தன்மைகளை ஒழித்து உயிரினைத் தன்னுள் ஒன்றாக்கிக் கொள்ளும். சீவன் ஈசத்துவம் பெற்று ஒன்றுதலே 'சீவேச ஐக்யம்' என வழங்குவர்.

மாயையே இவ்வுடலைத் தோற்றுவித்து உயிரினைக் கூட்டிப் பேசவைக்கின்றது. உயிரினை ஆசைகள் மயக்குகின்றன. ஆணவ மலம் உயிரின் அறிவினை மறைக்கின்றது. கன்மமலம் கருவிலேயே உயிரினைப் பற்றிக் கொள்ளும். நால்வகை யோனியில் ஏழுவகைத் தோற்றத்தினை எடுக்கும். உடம்பினை எடுப்பதற்கு முன்பு உயிர் 'அகத்தில்' நிற்கும். உயிர் 'அ' கரம் ஆகும். உடல் 'உ' கரம் ஆகும். இவ்அகரத்தையும் உகரத்தையும் ஒன்றுவிப்பது சிவமாகும். இவ்வுயிர்தான் தரிப்பதற்கு முன் 'காற்றில்' நின்றது என்று சிவவாக்கியர் விவரிக்கின்றார். இவ்வுயிரினைப் பட்டினத்தார் 'குருடு' என்றும், கடுவெளி 'ஆண்டி' என்றும், பாம்பாட்டி 'சூத்திரம்' என்றும், பத்திரகிரியார் 'பொம்மை' என்றும் குறிப்பிடுவர். உயிர் உண்டு என்பதனையும், அதன் தன்மைகளையும் சிவஞானபோதம் விரிவாகக் கூறுகிறது.

**சிவனும் சீவனும் ஒன்றாய் நிற்றல்**

உயிரின் தன்மைகளை உணர்ந்த சித்தர்கள், அது சிவத்தினின்றும் வேறுபட்டதன்று. என்பதனையும் மக்களுக்கு உணர்த்துகின்றனர். சீவனே சிவமாகவும், சிவமே சீவனாகவும் இருப்பதைப் பட்டினத்தார்,

**"எனக்குள்ளே நீயிருக்க உனக்குள்ளே நானிருக்க"** (பட்டின. 68)

எனவும், சிவவாக்கியர்,

**"எனக்குள் நீயுனக்குள் நான் இருக்குமாற தெங்ஙனே"**(சிவவாக்கியர். 7)

எனவும், மேலும்,

**"என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்தது இல்லையே**
**என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்து கொண்டபின்**
**என்னிலே இருந்த ஒன்றை யாவர் காண வல்லரோ**
**என்னிலே இருந்திருந்து யான் உணர்ந்து கொண்டனே"** (சிவவாக்கியர்.6)

என்றும்,

**"பாலுள் நெய் கலந்தவாறும்**
**கண்ணிலே கண்மணியுள்ளது போலும்"** (சிவவாக்கியர். 15)

என்றும்,

**"நமசிவாய என்ற எழுத்தாகி நம்முளே இருப்பது"** (சிவவாக்கியர். 77)

என்றும்,

**"என்னுள்ளே யிருப்பவளே யெங்குமாகி நிற்பனே"** (சிவவாக்கியர். 234)

என்றும் குறிப்பிட்டுக் காட்டுகிறார். பத்திரகிரியார் குறிப்பிடுகையில்,

**"என்னை விட்டு நீங்காமல் என்னிடத்து நீயிருக்க**
**உன்னை விட்டு நீங்கா தொருப்படுவ தெக்காலம்?"** (பட்டின. 160)

என்னும் பாடலால் உயிரும், உடலும் ஒன்றாகும் தன்மையினை எடுத்துரைப்பதால் அறியப்படுகிறது.

யோகச் செயல்முறைகளினாலும் ஞானத்தினாலும் இவ்வுயிரை வெட்டவெளியில் இணைக்கவேண்டும் என்பதே சித்தர்களின் குறிக்கோள். வெட்டவெளி என்பது உச்சிக் கபாலத்தில் இருப்பது. இவ்வெளியினில் உயிர் கலப்பதையே பேரின்பம் என்றும், முத்தியடைதல் என்றும் கருதுவர். வெட்டவெளியில் உயிர் கலக்கவில்லை எனில், அவ்வுயிர் மீண்டும் மீண்டும் பிறவிகளை எடுக்கும். மனிதப் பிறவியே இறையுடன் ஒன்ற உதவி புரியும்

பிறவியாகும். எனவே இறப்பினைச் சித்தர்கள் விரும்புவதில்லை. இவ்வுடலிலிருந்து உயிர் பிரிந்து விட்டதெனில் இறைவனை எய்துதல் இயலாது. இவ்வுடலுடன் உயிர் இருக்கும் பொழுதே உடலைத் திடப்படுத்தி உயிரினை வெளியில் கலக்கவேண்டும். அதுவே சீவன் முத்தி நிலையாகும். சட்டைமுனி இக்கருத்தை உள்ளடக்கி,

**“விண்ணேது வெளியேது வொளியங்கேது?**

**விரைந்திந்த மூன்றுங்கே சரிதா னாச்சு**

**கண்ணேது காதேது மூக்கங் கேது?**

**கண்டிப்பாய்க் கண்டவெல்லாம் அழிந்து போச்சே**

**ஒன்றிரண் டேது சமரசந் தானேது?**

**உற்றுப்பார் வெட்டவெளி யொன்று மில்லை**

**எண்ணேது நினைவேதிங் கறிவு மேது?**

**ஏகமாய்க் கலந்துத்தி யிடத்தைக் காணே”** (சட்டைமுனி. 30)

என்று பாடுவதன் மூலம் அறியப்படுகிறது. உயிர் வெட்டவெளியில் கலக்கும்போதே துன்பங்கள் நீங்கும்; தத்துவங்கள் மறையும்; தத்துவங்களால் விளையும் துன்பங்கள் போகும்; வெட்டவெளிக்குள் நுழைந்து தாங்கள் கண்ட அனுபவங்களைச் சித்தர்கள் பாடியுள்ளனர். இக்கருத்தினைப் பட்டினத்தார் கூறுகையில்,

**“அட்டாங்க யோகமும் ஆதாரமாறும் அவத்தையைந்தும்**

**விட்டேறிப்போன வெளிதனிலே வியப்பொன்று கண்டேன்**

**வட்டாகிச் செம்மதிப் பாலூற லுண்டு மகிழ்ந்திருக்க**

**எட்டாத பேரின்பம் எனைவிழுங்கி யிருக்கின்றதே”** (பட்டின. பொது. 25)

என்னும் பாடலின் வழியாக ஆதி, அந்தம், நாலுவேதம். சோதி, சொல் முதலான ஏதுமில்லாதது வெளி; அவ்வெளியில் சக்தியும் சிவமும் நிற்பர் என்கிறார் சிவவாக்கியர். தன்னைத் தானறியும் ஆன்மா தத்துவங்களைக் கடக்கிறது. தனித்திருக்கிறது; இந்நிலையே தத்துவார்த்த நிலை எனப்படும். ஆன்மா இறையுடன் கலந்த பிறகு எந்த ஆசையும் தேவையில்லை என்பதை,

**“தன்னை அறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்குப்**

**பின்னாசை ஏதுக்கடி?”** (குதம்பை. 31)

என்று குதம்பைச்சித்தர் குறிப்பிடுகிறார். யோகப்பயிற்சியினால் உயிரை ஒலியாக்கி வெளியில் செல்லும்போதே சித்தர்களின் ஆன்மப் பயணம் முடிவடைகிறது. பத்திரகிரியார் கூறுகையில்,

**“ஒளியி லொளியாம் உருப்பிறந்த வாறதுபோல்**

**வெளியில் வெளியான விதமறிவ தெக்காலம்?”** (பத்திர. 121)

என்று தன் உள்ளக்கிடக்கையைத் தெரிவிக்கின்றார். இவ்வாறாக உயிரினது தன்மை, செயற்பாடுகள் போன்றவற்றைத் தங்கள் சீரிய சிந்தனையின் மூலம் தெளிந்து வெளிப்படுத்திய சித்தர்கள் அவ்வுயிர் தான் எடுக்கின்ற உடல் தத்துவத்தையும் தமது சிந்தனைகளையும் வெளிப்படுத்துகின்றார்.

## உடல் தத்துவம்

பஞ்சபூதங்களின் சேர்க்கையால் உண்டாவது மனித உடல். உயிர் தன் வினைக்கீடாக எடுத்த உடல் தொண்ணூற்றாறு தத்துவங்களை உடையது. அவை வாசல் ஒன்பது. ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கு. தாதுக்கள் ஏழு. கோசங்கள் ஐந்து, குணங்கள் மூன்று, மலங்கள் மூன்று, பிணிகள் மூன்று, விகாரங்கள் எட்டு, ஆதாரங்கள் ஆறு, மண்டலங்கள் மூன்று, நாடிகள் பத்து, வாயுக்கள் பத்து, அவத்தைகள் ஐந்து இத்தொண்ணூற்று ஆறையும் சித்தர்கள் பாடியுள்ளனர். முப்பத்தாறு தத்துவத்தைப் பட்டினத்தார் குறிப்பிடுகையில்,

**“மூன்று வகைக்கிளையும் முப்பத்தாறு வரையும்**

**கான்றுவிழச் சுட்டுக் கருவே ரறுத்தான்டி”** (பட்டின. 12)

எனும் அருட்புலம்பல் பாடலில் பதிவிடுகின்றார். மேலும் பத்திரகிரியார் கூறுகையில்,

**“ஐயாறும் ஆறும் அகன்று வெருவெளியில்**

**பையிருளில் நின்றுமனம் மாள்வதினி எக்காலம்”** (பத்திர. 225)

என்றும், இடைக்காடர் தாண்டவராயக் கோனார்க் கூற்றுப் பாடலில், “பஞ்சபூதங்கள் ஐந்து, மாயா விகாரங்கள் ஆறு, பஞ்ச கர்மேந்திரியங்கள் ஐந்து, மாயை சம்பந்தங்கள் ஐந்து, கோசங்கள் ஐந்து, ஆதாரங்கள் ஆறு, அந்தக்கரணங்கள் நான்கு என்றும் முப்பத்தாறு தத்துவங்களைத் தெரிவிக்கின்றார். அகப்பேய் ‘ஆறாறுமாகுமடி’ என்று பாடுவர். இச்சித்தர்கள் அனைவரும் தங்கள் அனுபவங்களைக் கூறும்போது, இத்தத்துவங்களைப் படைக்கின்றனர். இத்தத்துவங்கள் அகலும் முறையையும் காட்டுகின்றனர்.

இவ்வுடல் பருவுடல், நுண்ணுடல், காரண உடல் என்ற மூன்று உடல்களையுடையது. கண்ணில் தெரிகின்ற உருஉடல் பருவுடல் எனப்படும். இப்பருவுடலுக்குள் கண்ணுக்குப் புலனாகாத நுண்ணுடல் உள்ளது. காற்றுடல், மனவுடல், அறிவுடல் ஆகியவற்றிற்குக் காரணமாக அமைவதாகும். காரணஉடல், வினைப்பயனின் தொகை காரண உடலாக அமைந்து, அக்காரண உடலுக்கேற்ப நுண்ணுடலும், நுண்ணுடல் அமைப்பிற்கேற்பப் பருவுடலும் அமைகின்றன.

இப்பருவுடல் வினையின் பொருட்டே மலங்களால் அமைகின்றது. வினை ஒழியுமானால் உடலும் நில்லாது. உணவினையும் அல்ப சுகத்தினையும் விரும்புகின்ற இவ்வுடலை ஞானம் பெற்ற சித்தர்கள் விரும்புவதில்லை. அவர்களுக்கு இவ்வுடலினை விரும்பி அழகுபடுத்திப் பொய்மையில் உழலுகின்ற மக்களின் செயல்கள் வெறுப்பினையே தோற்றுவிக்கும். உடல் பெற்றதன் உண்மை நிலையினை உணராமல், உடலின் அமைப்பினை எண்ணி மேற்செல்லாமல் ‘இதுவே மெய்’ என நம்பி வீண்வாழ்க்கை வாழ்வதனால் சித்தர்கள் இவ்வுடலை இழித்தும், பழித்தும் பேசுவர். பொய்மையில் உழல்பவர்க்கு இது பொய்யுடலாக்கும் தன்மையினையும் கூறுவர். மாயையில் உழலும் மக்களுக்காக உடலைப் பழிப்பர். இப்பருவுடல் மீண்டும் மீண்டும் வினைகளாற்றி, வினைப்பயன் ஏற்று, பிறப்புச் சங்கிலித் தொடரை நீட்டிக் கொண்டே செல்லும். இதனை நம்புவது கூடாது (பட்டின. 59) என்றும் பாடுவர். பட்டினத்தாரும், “இந்த உடலோடு இருப்பது அருவருப்பே’ எனக் கொங்கணர் வாலைக்கும்மியில் (14), சிவவாக்கியர் கூறுகையில், ‘இவ்வுடல் ஊமை எழுத்தால் ஆகியது; இரு கரத்தினை உடையது’ (194, 208) எனவும் குறிப்பிடுகிறார்.

“உயிர் இயக்க இயங்குவது; மலங்களில் கட்டுண்டது; உயிருடன் இணைவதற்கு முன்பு சுரோணிதத்தில் இருப்பது; நாதவிதத்தினால் தோற்றம் பெறுவது; எழுவகைத் தோற்றம் நால்வகை யோனியில் பிறப்பெடுப்பது எனவும், தெய்வத்தைக் காண்பதற்கு வாயிலாக இருக்கும் உடலை யோகச் செயல்முறைகளுக்கு ஆட்படுத்தினால் சித்திகளைப் பெறலாம்”.[9] எனவும்

திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். சித்திகள் பெறுவதற்கும், மேனிலை அடைவதற்கும், இறைவனுடன் இரண்டறக் கலப்பதற்கும் ஏதுவாக இவ்வுடல் இருப்பதால் கொங்கணர்,

**"ஊத்தைச் சடலம் என்றெண்ணாதே**
**உப்பிட்ட பாண்ட மென்றெண்ணாதே**
**பார்த்த பேருக்கே ஊத்தையில்லை இதனைப்**
**பார்த்துக் கொள் உந்தன் உடலுக்குள்ளே"** (கொங்கணர். 24)

எனக் கூறுவதன் மூலம் அறியப்படுகிறது. உடலில் ஆதாரங்கள் உள்ளன. அந்த ஆதாரங்கள் தோறும் தெய்வங்கள் உறைகின்றன. அந்தத் தெய்வங்களை முறைப்படி வணங்கினால் சித்திகளைப் பெறமுடியும். சாவாமூவாப் பெருவாழ்வு வாழமுடியும் எனப் பட்டினத்தார், பத்திரகிரியார், கொங்கணர் முதலானோர் ஆறாதாரங்களையும் அவற்றிற்குரிய தெய்வங்களையும் விவரிக்கின்றனர். உடலே கோயில் எனவும் காட்டுகின்றனர். மனித வடிவிலேயே இறைவன் இருக்கின்றான். எனவே, பசித்து வந்தவர்களுக்கு அன்னமிட்டு மனிதனைக் காப்பாற்றி உதவ வேண்டும் என்பதே சித்தர்களின் உரையாகும்.

## மனிதத் தத்துவம்

மனத்தினைக் குறித்த சித்தர்களின் சிந்தனை மிகவும் பரந்து காணப்படுகின்றது. அனைத்துச் செயல்களுக்கும் மனமே மூலகாரணமாக இருக்கின்றது என்பது சித்தர்களின் கணிப்பாகும். மனமே செயலுக்குக் காரணமாகவும் இருப்பதால் செயல் நிகழச் சக்தி வீணாகிறது. மனத்தினைச் செயலற்று இருக்கச் செய்தால் சக்தி வீணாவது தடுக்கப்பட்டு அச்சக்தியைச் சேர்த்து வைக்கவும் முடிகின்றது. மனம் அடங்கிவிட்டால் மற்ற அனைத்தும் அடங்கும். இடைக்காடர் மனத்தினை மாடாக உருவகித்து, "மனமாகிய மாடு அடங்கினதால் முத்தி வாய்த்தது".[10] என்று நாராயணக்கோனார் கூற்றில் கண்ணியாகக் கூறியுள்ளார். அகப்பேய், மனத்தினைப் பேயாகவும், ஐந்துதலை நாகமாகவும் உருவகித்துப் பாடியுள்ளார். ஐந்துதலை என்பது பொறிபுலன்களையும் குறிக்கும். அதனால் பயன் ஏதுமில்லை. ஐம்புலன்களால் மகிழ்வும் அறிவும் பெறப்பட்டாலும் அதன்வழிப் பெறுகின்ற இன்பம்

நிலையானதன்று. அறிவும் புத்திக்குப் புறனானதன்று. இவ்விரண்டிற்காகவும் மனிதரின் வாழ்நாட்கள் வீணாகின்றன. ஐம்புலன்களின் வழிசெல்வது நஞ்சு அருந்துவது போலாகும். இந்த விடத்தைப் போக்குபவன் இறைவனே ஆகும். எனவே, இறைவனை மனம் நாடும்படிச் செய்ய வேண்டுகின்றார். இக்கருத்தைக் கொங்கணர், "மனம் என்பது காளையைப் போன்றது".[11] என வாலைக்கும்மியில் சுட்டியுள்ளார். பாம்பாட்டிச் சித்தர் குறிப்பிடுகையில் மனமானது, "குதிரையைப் போன்றது".[12] என அகப்பற்று நீக்கல் எனும் பாடலில் சுட்டுகின்றார். இவைதம் விருப்பத்திற்கு இணங்கத் திரியும்; ஓடும்; அவற்றை அடக்க வேண்டும்; முயற்சி செய்யின் அடக்கலாம்; குதிரையை அடக்கியவன் அதில் ஏறிச் சவாரி செய்வதைப் போல மனத்தை அடக்கியவன் வெட்டவெளிக்குள் அதனைச் செலுத்தப் பழகிக் கொண்டால் கூடைக்குள் பாம்பு போவதைப் போல மனமும் யோகச் செயல்முறைகளுக்குக் கட்டுப்பட்டு அடங்கிச் செல்லும் என விளக்குகிறார்.

### மனத்தின் இயல்புகள்

இடைக்காடர் மனத்தின் இயல்பினை எடுத்துரைக்கையில், "பூமி முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆளவேண்டும் என்ற எண்ணமுடையது; பெண்ணாசை கொண்டது; பொறிகளின் வயப்பட்டு அவை நடத்திச் செல்வது; பொன்னாசை கொண்டு பூமி முழுவதும் திரிவது; பொய்யான கல்வி கற்றுப் பொருள் பெறவேண்டும் என்ற மயக்கமுடையது; பேய்க்குரங்கு போல இவ்வுலகில் ஆசை வைத்து நாய் நரிகள் போல் அலைவது; பல்பொருளை விரும்புவது; உண்மை நிலையினை அறியாதது; தவம், செபம் முதலாகப் பலவற்றையும் செய்யும்; ஆனால் யோகத்தினை மட்டிலும் செய்ய முன்வராது. இறவாமல் இருக்க வைக்கும் உண்மைக் கல்வியினைக் கற்கும் வகையறியாதது".[13] என்று மனத்தின் இயல்புகளை நெஞ்சோடு கிளத்தல் என்னும் பாடலின் வழி மனத்தின் இயல்பினை விளக்குகின்றார்.

பட்டினத்தார் மனத்தின் இயல்பினை குறிப்பிடுகையில், 1. "போனதை மீள நினைப்பது; பல்கலைகளை ஆயாது; தன்னைத் தானறியாது; தன்னை ஆய்ந்தவரையும் அணுகாது; தனக்கான நிலையினையும் பற்றாது; குருவைப்

பணியாது; பரத்தையர்மாட்டுச் செல்லாது; இதனைப் போன்ற ‘பித்தன் எதுமில்லை”.[14] என்றும்,

2. “இந்தப் பிறப்பை நம்பியிருக்கும்; இவ்வுலகில் வாழ விரும்பும்; இறைவனது தன்மையை அறியாது; உடலின் மீது அன்பு கொண்டது; மேலும் மேலும் பிறவிகள் எடுக்க விரும்புவது; பொய்யை ஒழிக்காது; புலால் உண்ணுவதை விடாது; அறம் செய்யாது; சினத்தை ஒழிக்காது; திருவைந்தெழுத்தை ஓதாது”.[15]

3. “அங்காடி நாய்போல் அலையாது”.[16]

4. “ஏற்பவருக்கு ‘ஈயாமல் வினைகளைச் சூழாது”.[17]

5. “பொருள் தேடி மண்ணில் புதைக்கும் குணமுடையது”.[18]

6. “இறைவனை மலர் சார்த்தி வணங்காமல் கை, கால், உடல் முதலானவற்றில் போட்டிருக்கும் நகைகளே மெய் என்றிருக்காது”.[19]

7. “வஞ்சகமுடையது”.[20]

8. “பிறவிக்கே வித்திடுவது”.[21] முதலான பல தன்மைகளையும் எடுத்துரைக்கின்றார்.

மனம், ஐம்புலன்களை ஆளவிடுமானால் அழிவு தவிர்க்க முடியாததாகி விடும். மனம் பொன்னுக்காக அலையுமேயானால் நிரந்தரத்தினை அ.்.து அடைய முடியாது. தவறான முறையில் மனம் தவறான பொருள்களை எண்ணுகிறது. தவறான கல்வி பந்தத்திற்குக் கொண்டு செல்லும்; அறிவார்ந்த மெய்க் கல்விக்கு மனம் முயலவேண்டும். உண்மைக் கல்வி இறப்பைத் தவிர்க்கும்; மனத்தின் கடமை முத்திக்குரிய சரியான பாதையைத் தேர்ந்தெடுப்பதாகும். ஒருவர் ஓங்காரத்தை அனுபவித்து விட்டால் மனம் அதைவிட்டு அகலாது; மனம் ஓங்காரத்தில் கலந்து விடும்; ஒரு நிலையில் மனமே மறைந்து விடும்; உலக நிகழ்ச்சிகள் தொடங்கும்போது மனம் மறுபடியும் வரும். ஓங்காரத்துள் உள்நோக்கிக் கலந்து வெளியே வராமல் போகுமானால் அந்த நிலையே முத்தியாகும்.

**மனத்தின் இருநிலைகள்**

மனத்தை இருநிலைகளில் பகுத்துக் காட்டுகின்றார் சட்டைமுனி.

1. உலக பந்தங்களோடு தொடர்புடையது.
2. யோகத்தின் மூலம் உயர்நிலைக்கு மாறுவது.

**1. உலக பந்தங்களோடு தொடர்புடையது**

“மனம் ‘பேய்’ போன்றது; எதனையும் எளிதில் பற்றிவிடும். மனம் உலக மாயையில் விரைவில் அழுந்தக் கூடியது; காம உரலில் ஐம்புல உலக்கைகளால் குத்தப்படுவது. எப்பொழுதும் எதையாவது சிந்தித்துக் கொண்டே இருப்பது. அதனால் நரகத்தில் உழல வேண்டியதாகிறது. நல்லது, கெட்டது சிந்திக்காதது; எல்லாச் செயல்களுக்கும் அதுவே காரணம்”.[22] என விவரிக்கிறார்.

**2. யோகத்தின் மூலம் உயர்நிலைக்கு மாறுவது**

யோகம் பயில்வதன் மூலம் மனம் ஆறு நிலைகளைக் கடந்து மேலே சென்று கழுமுனையை அடைகிறது. இதற்கு மேலுள்ளது சத்தி. மனம் சத்தியோடு சேர்கிறது. இந்நிலையில் தத்துவம், புலன், பொறி முதலான அனைத்தும் கெடுகின்றன. மனம், ஆசை எனும் பாம்பினால் அலைக்கழிக்கப் படுகின்றது. இந்நிலையைக் கடப்பது மிகவும் கடினம். மனத்தின் தெரு தூய்மையானது. இவ்வழியைக் கடந்தால் அறிவை அடையமுடியும். அதற்குக் கற்பம் அருந்துதல் வேண்டும். கற்பம் உண்ண வாசியோகத்தில் ஈடுபட வேண்டும். இதன்வழி கேசரத்தை அடையமுடியும். வாசியினைப் பயிலும்போது ‘யான்’ எனும் அகங்காரத்தை எதிர்கொள்ளவேண்டி வரும். அதனுடன் போராடி அதனை மாய்த்து வெற்றி கொள்ள வேண்டும்; வெற்றி கொண்ட மனத்தில் அறியாமை இருப்பதில்லை; இறைவன் மட்டும் நடனமிடும் இடமாகி விடும். வெளியைப் பார்க்கமுடியும். அறிவுநிலைக்குச் சற்றுத் தாழ்ந்தநிலை இதுவாகும்.

“பிராணாயாமம் பயில்வோர் உலகப் பந்தநிலைகளிலிருந்து நீங்கி மனத்தில் எந்த உணர்வுமில்லாமல் இருத்தல் வேண்டும். விருப்பு, வெறுப்பு முதலான எவையுமின்றி இவ்வுலக வாழ்வினைக் கனவுகளாக எண்ணி விடுத்தல்

வேண்டும். இந்நிலை அடைந்தால் சச்சிதானத்தை அடையமுடியும். பின் 'தான்' ஆகமுடியும்"[23] இதனையே 'முத்திநிலை' என்பர். மனத்தின் விளையாட்டுகளைப் புரிந்து கொண்டு அவற்றைவிட்டு விலகி இருக்கவேண்டும். மனம் தூய்மையானால் தான் ஞானத்தைப் பெறமுடியும். ஞானம் சின்மயத்தின் நடுவில் உள்ளது. அது வெட்டவெளியாகும். அவ்விடம் சூனியமாகும். அங்கு நான், நீ எதையும் அடையமுடியும்.

## மனமும், மௌனமும்

தத்துவங்கள் விளைக்கும் எண்ண அலைகளால் இடையறாது தாக்குண்டு அதிர்ந்து கொண்டிருக்கும் மனத்தால் நிலையான தெளிந்த கண்ணாடியாக நின்று உண்மையான ஆன்ம இயல்பினைப் பிரதிபலிக்க முடிவதில்லை. எண்ணங்கள் என்ற அலைகள் நிறுத்தப் பட்டால்தான் மனம் அதிர்வின்றி அமைதியாகத் தெளிவாக இருக்கும். அமைதியாக இருக்கும். "மனத்தினால்தான் உண்மையைக் கண்டறிந்து அதன்படி நடக்கஇயலும். மனம் தெளிவாக, அமைதியாக இருக்க வேண்டுமெனில் அதனை வாசிவரும் இடத்தில் பதியவைத்து வாய் மூடியிருக்க வேண்டும். அவ்வாறிருந்தால் நினைவு அடங்கி வரும்; மௌனம் வாய்க்கும்".[24] என அறியமுடிகிறது.

மௌனம் என்பது வாய் பேசாத ஊமையைப் போலிருப்பதில்லை. பேச்சியின்மையுடன் சிந்தனையும் இன்மையாம்; இவ்வித்தையினை அளிப்பது 'ம' காரம்; இவ்வித்தையே யதீத வித்தை, இவ்வித்தையினால் மௌனத்தைக் கண்டவர்கள் எவருடனும் தொடர்பு வைத்துக் கொள்வதில்லை. வாய்மூடி மௌனத்திலிருந்து நாதங்களையும் கேட்காதிருப்பர். இம்மௌன வித்தையினை ஆசிரியர் எனப்படும் குருவே தூண்டிக் காட்டவேண்டும். அவ்வாறு காட்டும் பொழுது மணி முதலாகிய திசை நாதங்கள் கேட்கும்.

நாதங்களைக் கேட்கும் பொழுதே சந்திரகலையின் அமுதம் இறங்கும். துவாச முர்த்தங் கடந்து தோன்றும். "வாழ்க்கையிலே ஆசையறும், நினைவும் போகும். அண்ணாக்கில் அமுதம் ஊறும். சூரியனின் கோடி கதிர்களைப் போன்ற ஒலி தோன்றும். 'சச்சிதானந்தவொளி'யும் தானே தோன்றும். உலகக்

கிரியினைக் கொண்டு மூட்ட விண்ணுள் கிரி வந்து காக்கும். மகாரத்தை அறிந்து கூட்ட நாதத்துடன் கூடி ஏறும். அறிவோடு மனத்தினைச் சேர்த்து மறுபடியும் நாதத்தைக் கூர்ந்து கேட்க வேண்டும். நாதத்துடன் சேர்ந்து மனமும் ஒரு வழியாக ஓடினால் அதுவே 'சின்' முத்தியாகும்".[25] என விளக்குகிறார். "இம்மௌன வித்தையே 'கேசரி' எனப்படும்".[26] அது "விண், வெளி, ஒலி மூன்றும் சேர்ந்தது".[27] மனம் ஒன்றாகவில்லை எனில் வாசி, ஞானம் முதலான எதுவும் ஆகாது. "விண்'ணில் மனத்தை நிறுத்தி, முத்தி கண்ட இடத்தையும் மூச்சற்று நின்ற விடத்தையும் நோக்கிப் பார்க்கவேண்டும். ஆணவம், கோபம், சுகபோகம், சையோகம் முதலானவற்றை விடுத்து மௌனத்தில் இருந்து ஞானத்தை உண்ண மனம் அடங்கவேண்டும்".[28] "மௌன ஞானமே கன்னியாகும். வாலையது பீடம். மகாரவரை நாதவோசை உடையது. வெளியும் கோடி சூரிய ஒளியும் வன்னியும் சேர்த்து கண்கொள்ளாத காட்சியினை நல்கும்".[29] இவ்வொளியினை,

**"காணிந்த கேசரத்தின் தாயின் காந்தி**
**கண்கொள்ளாவிண்கொள்ளா கரையுங் கொள்ளா**
**ஆணிந்தப் பரையென்பார் அம்பரந்தா னென்பார்**
**அவருக்குள் மவுனமுண் டறிவாற் பாராய்**
**காணிந்த மௌனத்தை நிட்களமாய்ப் போவாய்**
**ஓகோகோ அம்பரத்தி லேதோ வேதோ**
**தோணிந்தப் படியிருந்தால் லயத்தின் நேர்மை**
**சொல்லரிதாம் அப்புறத்தே சோதி தானே".[30]**

என்பதால் பராபரத்தின் அறுவரை எனும் வகையில் இந்தச் சோதியுள்ளது என்று அறியப்படுகிறது. கொங்கணர், "ஒருவரே குளிகையிட்டுப் பூரணத்தில் அறுவரையினைக் கண்டவர். தம்முடைய மனத்தினைத் திடப்படுத்திப் பெற்ற சத்தியினால் இந்நிலையினை அடைந்தார்".[31] என விவரிக்கிறார். "பரம் மனத்தைப் படைக்கிறது; பூரணம் பரத்தை உண்டாக்குகிறது; பூரணம் ஆறு ஆதாரங்களுக்கும் மேலே உள்ள ஆறு நிலைகளைக் கடந்துள்ளது. திரோமான சக்தி அறியாமையினைச் செயற்பாடாக்குகிறது. ஆனால் மனம் பேயாகும்.

இசுபரங்களையும் மகிழ்ச்சிகளையும் மனம் நினைக்கத் தூண்டும். இதுவே வாசனையாகும். வாசனை குரங்கைப் போன்று பிடித்தால் விடாது; மனத்தைத் துண்டுகளாக்கி இந்திரியங்களைக் கருவிகளாக்கும். மனத்தால் மட்டுமே இந்திரியங்கள் இயங்குவதில்லை. உடல் தேவைகளாலும் நிகழ்வதுண்டு. தேவையான முறைகளைக் கொள்ளாமல் போனால் திருந்தும் மனம் மீண்டும் வாசனையால் தூண்டப்பட்டுக் கெடும். ஞானத்தினை அடைய முடியாத நம்மைப் பிடிக்கும் முழு மோசச் சனியன் வாசனை வரும். நம்மைத் தொடர்ந்து வருகின்ற மலவாசனைகளை அடக்கிப் பார்த்தால் குருடனுக்கும் ஞானவழி கூடும்".[32]

"மௌனத்தில் இருந்தால்தான் குரங்காகிய வாசனையைக் கொல்ல முடியும்; வாசனை போனதெனில் ஏதுமில்லை. இருளும் போய்விடும்; சுத்த வெளியே எங்கும் காணமுடியும். அவ்வாறு காண்பதற்கு அண்டத்துள் உள்ள ஆறு வரைகளையும் உடலுடனேயே மருவ வேண்டும்".[33] என்ற வழிகளைக் கூறும் சட்டைமுனி, "தன்னால் மூன்று வரைகளைத் தான் கடக்க முடிந்தது. ஆறு வரைகளையும் கடக்க இயலவில்லை".[34] குருவிடமிருந்து தசதீட்கைப் பெற்றுக் கொண்ட பின்னர், ஆசான் தூண்டிவிட்ட மௌனத்தினைக் கடைப்பிடித்தலே உண்மையான மௌனமாகும். அகாரம் முதல் உகாரம் என்றும், தலைமேல் வேதாந்தக் காட்சி என்றும், அதிலே 'யும்' என்று நிறுத்துங்கள் என்றும், பிறவாறும், போக்கறியாதார்கள் சொல்லுவார்கள். அவை நாதமல்ல.

**"தானென்ற விடங்காட்டி நாதங் காட்டிச்**
**சாற்றுகின்ற மௌனத்தின் சார்பு காட்டி**
**வானென்ற வெளியோடறு தலமுங் காட்டி**
**வாய்மூடி யாதிக்க வகையும் காட்டி**
**ஊனென்ற வுடம்பைவிட்டுக் கேசரியுங் காட்டி**
**ஊமைநின்ற விடங்காட்டி யுரைக்கப் பண்ணிக்**
**கோனென்ற குருவெனும்வாய் பேச லாமோ**
**குறும்பரே குருசொல்ல விரண்டு மாமே".**[35]

எனச் சட்டைமுனியின் கூற்றாக, "குருவின் மூலமே அனைத்தும் அறியமுடியும் என்பது தெளிவாகிறது. "மௌனத்தைக் கற்றுத்தரும் குரு, சடையின் மேல் மதியினைச் சூடியவர்; நெற்றியிலே தீயை வைத்திருப்பவர்; பாம்பினை அணிகலன்களாய்ப் பூண்டவர்; கரித்து நிலை மேலே போர்த்தியவர்; புலித் தோலை இடையில் கட்டியவர்; சுடுகாட்டில் பலியெடுக்கக் குடியிருப்பவர். இவரது இடப்புறத்தில் நிற்பவள், அட்டமாசித்தியினை அளிப்பவள்; இவளது திருவடிகளைக் காண்பதற்கு நவகோடி தேவர், சித்தர் முதலானோர் நிற்பர். எருதின் மேல் ஏறுகின்ற அப்பன் ஏழை. எனவே, அவரிடம் செல்லாமல் இவ்வம்மையினை முன்னே வைத்துக் கேட்டால் நாம் கேட்பதையெல்லாம் அருளிச் செய்வாள். அவளின்வழி அவரைப் பெற்று மௌனத்தைப் பெறவேண்டும்".[36] என்பர். இங்குக் குருவாகக் காட்டுபவர் குருவாகிய முழுமுதற் பொருளாகிய சிவபெருமானே ஆவான். அவனே எல்லாவற்றையும் உணர்த்தும் பேரறிவாளன். திருவாசகத்தில் - சிவபுராணத்தில் 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என மணிவாசகர் குறிப்பிடுவது கருத்தில் கொள்ளவேண்டும்.

பாம்பாட்டி, "மனம் என்கிற குதிரையினை வாகனமாகக் கொண்டு அறிவாகிய கடிவாளத்தை வாயினில் பூட்டி, கோபம் மீது ஏறி நின்று தெளிந்த விடத்தை நோக்கி வாசியாகிய பாம்பு செல்ல வேண்டும் என்பர். இங்கு மனக்குதிரையை அடக்கவேண்டும்".[37] என்பதே தத்துவமாகும். "வாசியின் நடுவில் சுழுதியில் மனத்தினைச் செலுத்தினால் கண்டுகொள்ளாத போதம் கிட்டும். மனத்தினை அடக்கி அண்ட உச்சியில் செலுத்தினால் மனம் பரத்தில் சென்று ஆதாரவிதி வழியினை ஆட்டும். ஆசை அறும். தன் முனைப்பு நீங்கும். அன்னை தந்தை முதலான சுற்றம் மறக்கும். மனம் அண்டத்தில் நுழையும். உடலின் ஒன்பது துளைகளை மூடும்; பொறிகள் ஐந்தும் புனிதமாகச் சேரும். காடாயிருப்பினும் நாடாயிருப்பினும் கவலையில்லை. இத்தகைய மௌனத்தைக் கண்டுவிட்டால் காமதேனு, கற்பகமரம் முதலான அனைத்தும் சித்திக்கும்".[38]

"தேவனுக்கு முக்கால பூசை செய்து, தெளிவு பெற்று மனத்தில் அன்புடன் குருபரனை நோக்கித் தவம் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் பராபரரும் கைவசமாவாள். மனம் விருப்பமின்றிச் செய்யின் எதுவும்

நடக்காது".[39] என்பது காகபுசுண்டரின் வாக்காகும். "மனத்தினைப் பரத்தில் செலுத்தினால் மந்திரங்கள், விதி, மதி, கெதி முதலானவை எதுவும் வேண்டாம். மனம் ஒன்றி சுத்தமுடன் இருந்து தவம் செய்யவேண்டும்".[40] "கேசரம்தான் அண்டவுச்சி' அதனைக் கண்டவர்களுக்கே மௌனம் வாய்க்கும். பரப்பிரம யோகத்தைச் செய்யப் போதம் உயரத் தூக்கம், கௌனமணி, விந்துநாதம் முதலானவை கெட்டியாகத் திரண்டு போகும். அண்டமெல்லாம் சக்தியோடு நடனமிடும். சிலம்பொலியைக் கேட்கலாம்".[41] என்பது காகபுசுண்டரின் விளக்கமாகும்.

"எதனையும் மனம் ஒன்றிச் செய்யவேண்டும். பலர் மனம் ஒன்றாமல் தொழிலைச் செய்வர். மனத்தினை நிலைப்படுத்தத் தெரியாமல் பல நூலைப் படித்துப் படுகுழியில் வீழ்வர். மனத்தினை அதன் விருப்பப்படி விட்டால் புத்தியும் போய்விடும். மனத்தினை ஒருமைப்படுத்திப் புத்தி சித்தம் முதலானவற்றையும் ஒரு நிலையில் நிறுத்தி வாசியோகம் புரியத் தத்துவங்கள் கெடும். ஐம்பொறிகளும் அந்தக் கரணங்களும் அகப்புறக் கருவிகளும் போகும்".[42] என்கிறார் கருவூரார். மனமாய்கை நீங்க வேண்டுமானால், "கருவி கரணாதிகள் போக, மனமும் இறந்து விடும். 'அங்' என்ற சொல்லால் மனம் அடங்க மௌனத்தில் இருக்கும்போது கனியினைக் காணமுடியும்".[43] என அழுகுணிச் சித்தர் விவரிக்கிறார்.

மனத்தினை அடக்குவது அவ்வளவு எளிதான செயலன்று. அடக்க முயலும்போது கோடியிடி மின் முழங்கும். கண்கள் மூடப்பட்டிருத்தல் வேண்டும்; மனமடங்காத பூதம் தோன்றும்; 'சிங்' என்ற சொல்லைக் கூறி மனத்தின் நடுவே நிறுத்தி நோக்க வேகமெல்லாம் ஒடுங்கிச் சத்தமும் போய்விடும். திருடர்களைப் போல மயங்காமல் மௌனத்தில் நிற்கவேண்டும். கண்களையும் திறக்காமல் கருத்தில் நோக்க ஆதி வந்து வினை அறியமுடியும்".[44] என்று மனம் பற்றிய கருத்தினைக் கருவூரார் பூஜாவிதி எனும் நூலின் வாயிலாக விளக்குகிறார். 'வந்து' என்பது வேதத்தின் பொருளாகவும், வேதத்துக்கும் போகத்துக்கும் அப்பாற்பட்டதாகவும் உள்ளது. சுற்றத்துடன் வாழ்ந்தாலும் மனம் தனித்திருக்க

வேண்டும்; இவ்வாறு செய்வது சற்குருவின் கடமையாகும். இந்நிலையில் புளியம் பழமும் ஓடும் போல் இருக்கச் செய்யவேண்டும். கனவில்லாத உறக்கம் காரணமாக மனம் தன் இடத்தை அடைகின்றது. இது முழுமையான செயற்பாடற்ற நிலையன்று. ஆனால் சமாதிநிலையில், பிராணன் அல்லது சுவாசம் யோகப் பயிற்சியின் மூலம் தன் இடத்திற்குச் செல்கின்றது. பத்திரகிரியார் இக்கருத்தினை, "உறக்கமற்ற உறக்கநிலை".[45] என்கிறார். 'தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்' எனப் பாடியுள்ளதன் வழி அறியப்படுகிறது.

**மனத்தின் வன்மை**

மனமே உயிராகும். "இம்மனம் அண்டத்தில் சேர்ந்தால் முத்தி கிட்டும்; பஞ்சமாபாதகங்கள் போகும்".[46] மனம் அண்டத்தில் சென்றதெனில் கலை நான்கும் எட்டினையும் சேர்ந்து போகும். மனம் வேறானது எனில் "தற்பரத்தை எப்போதும் அறியமுடியாது. மன அடக்கம் மெய் நூலினது பொருளைப் பெரியவர்கள் சொல்லாவிடினும் சொல்லும்".[47] தான் மனமொன்றினால், "நிருவிகற்ப சமாதியில் இருந்ததால் அனைத்தையும் அறிந்து கொள்ளமுடியும்".[48] எனக் காகபுசுண்டர் தன் நிலையை விளக்கிக் காட்டுகின்றார்.

"அண்ணாக்கிற்கு நேரே மனத்தினைச் செலுத்தும்போது சுழுமுனையில் மனம்புகுந்து ஐந்து பூதமும் ஒன்றாகப் போகும். அண்ணாக்கின் நேரே குறிப்பறிந்து பார்த்தவர்கட்கு முத்தி கிட்டும்".[49] மந்திரத்தை நினைத்தால் மோசத்தால் மனம் இரண்டாகப் போய்விடும்[50] மனத்தினை ஏகமாக்கித் தனியாக இருந்து நித்திரையினை ஒதுக்கிப் பிரமத்தில் புகுந்தால் பூலோகமெல்லாம் பணியும்[51] என்பர். வள்ளலார் இக்கருத்தினை ஏற்கும் வகையில் பசித்திரு, தனித்திரு, விழித்திரு என்ற கோட்பாடுகள் மூலம் குறிப்பிட்டுள்ளார். மனம் மௌனத்தில் இருக்கத் தத்துவங்கள் விடுபட்டுத் தனிமையில் இருக்கின்ற தன்மையினை,

**“எழுந்திட்டா ரெல்லாரு மோடிப் போனார்**

**என்ன செய்வேன் தனித்திருந்தே ஏங்கினேனே”.**[52]

என்றும்,

**“உற்றாரும் பெற்றாரும் ஊரைவிட்டுப் போகையிலே**

**கற்றாரு மில்லாமல் - என் கண்ணம்மா**

**துணையிழந்து நின்ற தென்ன?’.**[53]

என்றும்,

**“என்னொடு உடன் பிறந்தார் எல்லோரும் பட்டார்கள்**

**தன்னந் தனியே தனித்திருக்க மாட்டேன்டி”.**[54]

என்றும் சித்தர்கள் குறிப்பிடுகின்றனர். தனித்தநிலை எப்பொழுதும் வேண்டும். இவ்வாறு இருத்தலே சித்தர்கள் பார்வையில் ‘வாழ்ந்திருத்தல்’ எனப்படும். இந்நிலையில்,

**“. . . ஆருமில்லா வேளையிலே**

**குத்து விளக்கேற்றி - ஏன் கண்ணம்மா**

**கோலமிட்டுப் பாரேனோ”.**[55]

என்று ஏங்கி ஆன்மப் பசியினை ஈடேற்றிக் கொள்ள வேண்டும். மனத்தினைச் செம்மைப்படுத்தினால் மட்டுமே எல்லாம் நிறைவேறும்;

## சித்தர்களின் முக்திநிலை

உலக உயிர்கள் அடைய வேண்டிய உயர்ந்த நிலையாகிய பேரின்ப வாழ்வினைத்தான் முத்தி என்று சித்தர்கள் கூறுகின்றனர். ஆன்ம வளர்ச்சி என்பது மனித உடலைச் சாதனமாகக் கொண்டு ஆன்மா திருவருளில் கலந்து பரிபூரண நிலையை அடைவதாகும். இதனை ஔவையார் குறள் வழியாக,

**“சுத்தபோடு ஒன்றி மனமும் இறந்தக்கால்**

**முற்றும் அழியாது உடம்பு”.**[56]

என எடுத்துரைக்கின்றார். கிடைத்தற்கரியது மானிட யாக்கை. இதனை வீணாகக் கழிக்காமல் மனித வாழ்வினும் மேம்பட்ட ஒரு வாழ்க்கையினை அடையப் பயன்படுத்திக் கொண்டனர் சித்தர்கள்.

உலக சுகபோகங்கள் ஒரு நிலையில் சலிப்பை ஏற்படுத்துகின்றன. இந்தச் சுகங்களின் மேலான அமரவாழ்வில் எல்லா உயிர்களுக்கும் ஓர் உள்நாட்டம் ஏற்படுகிறது. அங்குப் பேரின்ப வாயில் புலனாகும். சர்க்கஸ் கூடாரத்தில் ஊசலாடும் கலைஞரைப் போன்று முக்திநிலை இருக்கிறது. சிலருக்கு இறைவனைப் போன்று தான் உலகப்பற்று அறும் என்ற நிலை. வேறு சிலருக்கோ உலகப்பற்றை விட்ட பிறகே இறைவன் திருவருள் சித்திக்கும் நிலை. இது நாயன்மார்களின் வரலாற்றில் புலப்படுகிறது. இறைவன் சிலருக்குத் தாமே உவந்து முக்தியளித்துள்ளார். சிலரோ வலிந்து வருந்திய பிறகே முக்தியடைவதும் வெளிப்படையாகப் புலனாகிறது. இக்கூற்றினை வள்ளுவர்,

**"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**

**பற்றுக பற்று விடற்கு".**[57]

இக்குறளில் இறைவனைப் பற்றினால் தான் உலகப்பற்று அறும் என்று தீர்ப்பளிக்கின்றார். இறைவனால் அளிக்கப்பட்ட இந்த உடலைச் சாதனமாகக் கொண்டு சரியை, கிரியைகளைச் சாதித்து யோகப் பயிற்சியினால் கந்த, நித்திய, மங்களமான திவ்ய சரீரத்தைப் பெற்று சிவலோகத்தில் சித்தராயிருப்பதைச் 'சித்தர்கள் முத்தி' என்று கூறுகின்றனர். ஆனால் மதவாதிகளோ முத்தி என்பதற்குப் பல்வேறான பேதங்களைக் கொண்டிருக்கின்றனர்.

ஆணவம், மாயை, காமியம் இம்மும்மலங்களும் நீக்கி ஆத்துமா அருளோடு கூடி நிற்பதே முத்தி; பிரமாத்தும் ஐக்கிய ஞானத்தால் விவகாரதி சமுசார பந்த நிவர்த்தியே மோட்சம் என்பார்கள் வேதாந்திகள்.

"1. யோக அப்பியாசப் பலத்தால் மனோலயத்தால் இஞ்ஞான மழிந்ததே முத்தி என்பர் பதஞ்சலி முனிவர்.

2. பிரகிருதி புருச விவேகத்தில் அவித்தை நாசமானதே மோட்சம் என்பர் சாக்கியர்.

3. பசு சாணம் கெட்டுச் சீவகரணமாகிறதே, கர்த்தருவான சமுசார பாவத்தை விட்டு நெப்தி மாத்திரம் இருப்பது முத்தி என்பர் சாங்கிராந்த வாதி மற்றும் பாலிகமா வாதிபர்.

4. சரீர தொந்தனைப்பட்டு நிற்கின்ற சிவாத்துமாவிற்கு விவேக ஞானம் உண்டாகிறதே முத்தி என்பர் பர்மாயாவாதியர்.

5. ஆத்மா கெடுகிறதென்று ஆணவமலம் கெடுகிறதே முத்தி என்பர் பார்க்கரியன் மற்றும் பேதவிதியர்.

6. எங்கு முக்குணங்களும் கெடுகின்றதோ அவ்விடமே முத்தி சித்திக்கும் என்பர் பிரபாகரன் அமணன்.

7. உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் கெடுகிறதே முத்தி என்பர் புத்தர்.

8. சுத்தமாயா சரீரம் அழியாதாகையால் நித்தியமாக இருப்பதே முத்தி என்பர் சர்வாதியர்.

9. ஆத்மா கேவலத்தில் கிடக்கும் தன்மையைப் போல முத்தியிலும் ஒன்றுமறியாமல் இருப்பதே மோட்சம் என்பர் பாஷாணவாதியர்.

10. ஆனந்த பிராப்தி மரணமே மோட்சம் அல்லது முத்தி என்பர் சாத்துவிக சார்வாக லொகீகர்.

11. முத்தி என்பது சுவந்திகரலோக பிராப்தி என்று மகளிரிடத்து உண்டான போகமென்றும் கூறுவர் பூர்வபீமாங்சிகர் உலகாயதர்.

12. சைனரும், கௌளயாழ்மளரும் மோட்சம் ஆகாய மத்தியத் துளுத்திரோத்ர கமனம். ஆகாசகமனாதி சித்தி பிராத்தி என்பர்.

13. சுகதுக்காதிகளால் மயக்கப் படாமலிருக்கும் சுத்த புத்தி சித்தியே முத்தியாகும் என்பர் மௌத்தர்.

14. வாசு தேவாத்துமகப் பிரகிருதியில் சொரூப ஆளியில்லாமல் மடங்குவது முத்தி என்பர் பாஞ்சராத்திரிகள்.

15. இகத்தில் புத்திராதிகளுடன் கூடிய வியாதி துக்கமில்லாமல் சகத்திலிருப்பது மோட்சம் என்பர் இலௌகீகர்.

16. ஆத்துமந் சரீரேந்திராதி 211 துக்க ஆத்யந்த நாசத்தால் பாசாணம் போல இருப்பது முத்தி என்பர் நியாயவை சேடிகர்.

17. பிரவா கேஸ்வத்தால் ஈஸ்வரத்துவம் அன்னியருக்குக் கொடுத்து ஆத்துமன் நெப்தி மாத்திரமிருப்பது முத்தி என்பர் பாசுபதர்.

18. ஆத்துமன் சடத்துவா தீச சீவ சமானத்துவமாவதே முத்தி எனப் புகழ்வர் மாந்திரசாமி மாஞ்ஞா சித்தாதிகள்".[58] என உலக வழக்கிலுள்ள

முக்திநிலையினை எடுத்துரைக்கின்றார் சி.எஸ்.முருகேசன். இந்த முக்தி நிலையைப் பதினொரு விதமாகச் சித்தர்கள் பிரிக்கின்றனர் என்பதை,

**"அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்தும்**
**அனுமுத்தி திரிகுணமும் அடங்கு முத்தி**
**விரிவு வினை கெடுமுத்தி மலம்போல் முத்தி**
**விக்கிரம நித்திமுத்தி விவேக முத்தி**
**பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி**
**பாடாண முத்தி இவை பழிசேர் முத்தி**
**திரிமலமும் அகலவுயிர் அருள்சேர் முத்தி**
**திகழ்முத்தி யிதுமுத்தித் திறந்த தாமே".**[59]

எனச் சிவப்பிரகாசர் பாடல் விவரிக்கிறது. இதில் பத்து முத்திகள் பழிசேர் முத்தி என்றும் பதினொன்றாவது முத்தி மும்மல நீக்கம் பெற்று அருளோடு கூடி சிவானுபவமாக நிற்கும் நிலையான சுத்தமுக்தி என்றும் சொல்லப்படுகிறது. இந்த முக்திகளில் ஆறாவதாக உள்ள விக்கிரக நித்தமுக்தியானது 'முக்தியிலும் உடம்பு அழியாது இருக்கும்' என்று சொல்லும் அகச்சமய சிவசம வாத முக்தியாகும். அ.்.தாவது உச்சிக் காலத்தில் கதிரும் உருவும் இரண்டறக் கலந்து நிற்பது போல ஆருயிரும் பிறவாநிலை எய்தும் பக்குவம் பெற்றபோது திருவருளில் கலந்து விடும் நிலையாகும்.

நீரில் தோன்றிய நீர்க்குமிழி, நீரிலேயே மறைந்து விடுவது போன்று இவ்வுடம்பு தான் காரியப்பட்டுத் தோன்றிய மாயையில் ஒடுங்கி விடும். அவ்வுடம்பினுள் இருந்த உயிர் என்றும் புகலிடமாக உள்ள திருவருளில் கலந்துவிடும்**".**[60] எனத் திருமூலர் கூறுகின்றார்.

ஆன்மா முத்தியடைய உடம்பு அதற்கு ஒரு கருவியாக வந்தது. முத்தியடைவது ஆன்மா. இந்த ஆன்மா முத்தியடையும் நெறியைச் சைவசமயம் நான்கு நிலைகளாகப் பிரிக்கின்றது. அவை: சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவை ஒவ்வொன்றும் நன்நான்காக மேலும் விரியும். சரியை என்பது சரியையில் சரியை, சரியையில் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என்று வகைப்படுத்தப்படுகிறது.

அ. சரியை முதல்வனுடைய திருவுரு நோக்கிச் செய்யும் வழிபாடாகும்.

**1. சரியையில் சரியை**

திருக்கோயிலில் அலகிடல், மெழுகுதல், மாலைத் தொடுத்தல் முதலிய தொழில்களை அன்போடு செய்தல்.

**2. சரியையில் கிரியை**

ஐயைந்து மூர்த்திகள் விநாயகக் கடவுள் முதலிய ஆவரண மூர்த்திகளில் ஒரு மூர்த்தியை வணங்குதல்.

**3. சரியையில் யோகம்**

நெஞ்சில் உருத்திரக் கடவுளைத் தியானித்தல்.

**4. சரியையில் ஞானம்**

தியான பாவனையில் உறைப்பான் ஞானத்தில் பல உணர்வுகளை நிகழ்த்துதல்.

ஆ. கிரியை புறத்தொழில் அகத்தொழில் மாத்திரையால் முதல்வனது அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடாகும். கிரியை என்பது கிரியையில் சரியை, கிரியையில் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் என்று வகைப்படுத்தப்படுகிறது.

**1. கிரியையில் சரியை**

சிவபூசைக்கு வேண்டப்படும் சிவ அடையாளங்களை எல்லாம் தரித்துக் கொள்ளுதல்.

**2. கிரியையில் கிரியை**

சிவாகமத்தில் விதித்தவாறே ஐவகைச் சுத்தி முன்னதாகச் சிவலிங்க வடிவத்தில் செய்யும் பூசை.

**3. கிரியையில் யோகம்**

மனத்தில் பூசை, ஓமம், தியானம் மூன்றற்கும் மூவிடம் வகுத்துக் கொண்டு செய்யப்படும் அந்தரி யாகம்.

**4. கிரியையில் ஞானம்**

அந்தர்யாக உறைப்பின் கண்ணி கழும் பல உணர்வு நிலை.

இ. யோகம் கரணங்களைச் சிவ அர்ப்பணம் செய்து ஆறாதாரங்களில் அகத்தொழிலால் தியானித்தல். இதனை யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் என்று வகைப் படுத்தப்படுகிறது.

**1. யோகத்தில் சரியை**

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்பன.

**2. யோகத்தில் கிரியை**

பிரத்யாகாரம், தாரணை முதலியன.

**3. யோகத்தில் யோகம்**

தியானம்.

**4. யோகத்தில் ஞானம்**

சமாதி கூடியிருத்தல்.

ஈ. ஞானம்: கேட்டல், சிந்தித்தல், தெளிதல், சமாதி முதலியன. இவை ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்று வகைப் படுத்தப்படுகிறது.

**1. ஞானத்தில் சரியை**

திரிபதார்த்த உண்மையைக் கேட்டல்.

**2. ஞானத்தில் கிரியை**

கேட்டதைச் சிந்தித்தல்.

**3. ஞானத்தில் யோகம்**

சிந்தித்ததைத் தெளிதல்.

**4. ஞானத்தில் ஞானம்**

நிஷ்டை (சமாதி) கூடியிருத்தல்.

இந்த நான்கு நெறிகளையும் அடையும் நிலைகளையும் நான்காக வகுத்தனர். அவை: சாலோகம், சாரூபம். சாமீபம், சாயுஜ்யம் என்பன. சரியை நெறியாளர்

சாலோகம். கிரியை நெறியாளர் சாமீபம். யோக நெறியாளர் சாரூபம். ஞான நெறியாளர் சாயுஜ்யம் நிலைக்கு உரியவராவர்.

1. சரியை நெறியே சாலோகம்[61] எனப்படும்.

2. பசுப்போல் நெகிழ்ச்சியுற்ற நிலை சாமீபம்[62].

3. அஷ்டாங்க யோகங்களால் அடைவது சாமீபம்

4. சிவயோகியர் சித்திப் பயிற்சி பெற்றவர். சிவனுடன் தொடர்புற்றுச் சிவனைச் சார்ந்து அவனும் இரண்டற கலந்து நிற்றல் திருவடிப் பேறாகிய சாயுஜ்யம்[63] ஆகும். இம்முறைப்படி சரியை முதலிய நான்கும் தாசமார்க்கம் சத்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என நான்கு நெறிகளாக்கப்பட்டன.

**தாசமார்க்கம்**

இறைவனை ஆண்டவனாகவும் நம்மை அடிமையாகவும் கருதி வழிபடுவது. இதை உலகிற்கு எடுத்துக்காட்டியவர் திருநாவுக்கரசர்.

**சத்புத்திர மார்க்கம்**

இறைவனைத் தந்தையாகவும், தம்மைக் குழந்தையாகவும் நினைத்து வழிபடும் நிலை சத்புத்திர மார்க்கம் எனப்படும். இதனைப் பின்பற்றியவர் திருஞானசம்பந்தர்.

**சகமார்க்கம்**

இறைவனைத் தமக்குத் தோழனாகக் கருதி வழிபடுதல் சகமார்க்கம் எனப்படும். இதற்கு உதாரணம் சுந்தரர்.

**சன்மார்க்கம்**

இறைவனை ஆன்மாவுக்கு உயிராய் நினைத்து வழிபடும் நெறி சன்மார்க்கம். இந்த ஞான மார்க்கத்தில் நின்று அதனை உலகிற்குப் போதித்தவர் மாணிக்கவாசகர் மற்றும் இராமலிங்க அடிகளார்.

இந்நான்கு நெறிகளில் ஒன்றை மட்டும் பின் பற்றினாலும் முடிவில் உயர்ந்த ஞானம் பெற்று சிவானந்தப் பேறும், முத்தியும் பெறமுடியும். ஒருவன் தவத்தால் விளையும் சத்திரு பாதத்தில் உண்டான அன்பின் மிகுதியால் தேகம் முதலியவற்றை நீங்கித் தன் உண்மையை உணர்ந்து தன்னை யாரும் சிவனைக் கண்டு ஒன்றுபட்டுத் தற்போதம் அற்று இருப்பான் எனில் முற்பிறப்பின் வினைக் கொடுமை தணிந்து கழியும். முடிவில் உடல் நீங்கத் திருவடியில் இரண்டறக் கலப்பர். இவ்விதம் கலந்தவர் மீண்டும் உடலினைப் பற்றமாட்டார்.

உடல் நீங்கியபோதே திருவருளில் ஆன்மா சேர்ந்து விடும். மறு உடல் எடுக்காது. இதனைத் திருக்களிற்றுப்பாடியார்,

**“தம்மில் சிவலிங்கம் கண்டதனைத் தாம்வணங்கி**
**தம் மன்பால் மஞ்சனநீர் தாமாட்டித் தம்மையொரு**
**பூவாகப் பூவழியா மற்கொடுத்து பூசித்தால்**
**ஓவாமை யன்றே உடல்”.**[64]

என விவரிக்கிறார்.

**மரணமிலாப் பெருவாழ்வு**

**மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்!**
**புனைந்துரையேன் பொய் புகலேன் சத்தியஞ் சொல்கிறேன்**
**பொற் சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே”.**[65]

எனப் பாடியுள்ளார் இராமலிங்க வள்ளலார். சைவ சித்தாத்தத்தின்படி கடவுளைப் போன்று ஆன்மாவும் நிலையானது. அது கடவுளால் படைக்கப்பட்டது. ஆதலால் விதேகமுத்தி அடைகின்ற போது இந்த உடலை விட்டு ஆன்மா சாயுச்சிய பதவியில் இறைவனுடன் கலந்து விடுகிறது. இறைவனுடன் கலந்த தன்மையை முழுவதும் பெற்று இறைவனாகவே மாறி விடுவதில்லை. ஏனென்றால் ஒவ்வோர் ஆன்மாவுக்கும் ஒரு தனித் தன்மையுண்டு.

உயிர் இறைவனுடன் சேர்ந்த பிறகு அ∴து அழிவதில்லை. அது மனித உடல் எடுத்துப் பிறப்பதுமில்லை. அதனால் அ∴து இறப்பதில்லை என்று இராமலிங்க அடிகளார் விவரிக்கிறார். சாகாக்கலையை அறிமுகப்படுத்தும்

முன்பு தனக்கு முன்னே திருவள்ளுவரும் இக்கலையை அறிமுகப்படுத்தியுள்ளார் என்பதைக் குறிப்பிடுகையில்,

**“மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**

**நிலமிசை நீடுவாழ் வார்”.**[66]

என்றும்,

**“பொறிவாயில் யந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**

**நெறிநின்றார் நீடுவாழ் வார்”.**[67]

என்றும் குறட்பாக்களில் வாழும் நெறியின் முக்கியத்துவத்தைக் கூறியுள்ளார். மேலும் இக்குறட்பாவின் இறுதியில் வந்துள்ள ‘நீடுவாழ்வார்’ என்பதற்கு ‘இறவாமல் நித்திய தேகத்துடன் என்றென்றும் வாழ்வார்’ என்று வள்ளலார் பொருள் கொள்கின்றார். இது வேறெந்த உரையாசிரியரும் கூறாத நுண்பொருளாகும். இறப்பும், பிறப்பும் மற்ற மரணமில்லா பெருவாழ்வு எனும் நெறியே வள்ளலாரின் நெறியாகும். இந்தக் கொள்கையை இறைவனிடம் திருமுன் விண்ணப்பமாக பத்து வேண்டுகோள்களை இராமலிங்க அடிகளார் தம் பதிகத்தில்,

1. “இந்தப் பிறவியிலேயே நீ எனக்குக் குருவாக இருந்து அருள் புரியவேண்டும்.

2. என்னுடைய எண்ணம் நிறைவேறுவதற்குரிய வகையில் என் தேகம் நல்லொளி பெற்று இயல்பான உருவுடன் திகழவேண்டும்.

3. இந்தப் பிறவியிலேயே என் உடல் அழியாத சுக உடலாக நிலைபெற வேண்டும்.

4. வழக்கமாக மண்ணில் வீழ்ந்து மறைகின்ற உடலை இறவா உடலாக நிலைத்து இருக்கும்படி அருள் செய்தல் வேண்டும்.

5. துன்புற்று அழிகின்ற தன்மையுடைய மருள் உடலை அழியாத அருள் உடலாக மாற்றவேண்டும்.

6. பிறந்த இவ்வுடல் மீண்டும் பிறந்துவிடாமல் பெருநலத்துடன் நிலைபெற்று இருக்கவேண்டும்.

7. அழிந்து போகின்ற இந்தப் பூத உடல் அழியாத பொன் உடலாக மாறவேண்டும்.

8. இந்தப் பிறவியிலேயே என் உடல் தெய்வத்தன்மை வாய்ந்த உடலாக ஓங்கவேண்டும்.

9. எரிகின்ற காற்றினாலான இந்த உடலை எரியாத காற்றினால் ஆன இயங்கும் உடலாக மாற்றி அருளவேண்டும்.

10. என்னை ஆட்டிப் படைக்கும் இந்த உடல் இந்தப் பிறவியிலேயே அழியாத வளம்பெற்ற உடலாக மாறவேண்டும்”.[68]

வள்ளலாரின் இந்தப் பத்து விண்ணப்பங்கள் மரணமிலாப் பெருவாழ்வு நெறிக்கு இருபத்தெட்டுப் பாடல்களில் அடிப்படைத்தளம் அமைப்பதாக இருக்கிறது. பூதவுடம்பு நுண்மை பெற்று ஒளி நிலையை அடைந்தது. இவ்வாறு தாம் பெற்ற பெருநிலையை உலக மக்கள் யாவரும் பெறவேண்டும் என்னும் கருணையால் தம்முடன் வந்து சேருமாறு சமுதாயத்திற்கு அறைகூவி அழைக்கின்றார்.

வள்ளலாருக்கு இறைவன் அவரது மல உடலை விமல வடிவாக்கிக் கொடுத்து ஆட்கொள்ள ஓரே சாதனம் சுத்த சன்மார்க்கந்தான் என்று கூறி அழைக்கின்றார்.

**“சிறந்திடு சன்மார்க்கம் ஒன்றே பிணி மூப்பு மரணம்**

**சேராமல் தவிர்த்திடுங் காண் தெரிந்து வம்மின் இங்கே”.**[69]

இந்த அழைப்புக்குச் செவி சாய்க்காத நிலையில் அவர்களுக்கு மிகப் பொறுமையாக இந்நெறியை விளக்கவும் முற்படுகின்றார்.

## தனித்திரு

தனிமை மனத்திற்கு இன்பம் தருவதாகும். சிவ சிந்தனையுடன் தனித்திருந்தால் பேரின்பம் துய்க்கலாம் என வள்ளலார் குறிப்பிடுகிறார். ஆரவாரச் சூழ்நிலையில் மனத்தில் இறையுணர்வு பிறக்காது. அப்படிப் பிறந்தாலும் அது நிலைக்காது. இதனால் சாகாக்கலைக்குத் தனித்திருத்தல் அவசியம். ஒரு மனிதனின் வளர்ச்சி ஒரு பெண்ணுடன் துணை சேரும் போதுதான் முழுமை பெறுவதாகச் சான்றோர் கூறுகின்றனர். பெண் மனித வாழ்வில் பிரிக்க முடியாத ஓர் அங்கம். இந்த மானுடத்தை உருவாக்கிக் கொடுப்பதே பெண். மனிதன் இந்தப் பெண் துணையை ஒரு காம வாயிலாக

உணரும் போது அஃது அவனது வீழ்ச்சிக்கே வித்திடுகின்றது. பெண்ணுறவில் ஏற்படும் இன்பம் காமம். இந்தக் காமத்தை மெருகூட்டி மயக்குபவன் கவிஞன். அதன் மெருகைக் குலைத்து உண்மை வடிவத்தை உணர்த்துபவன் ஞானி. இந்த இருவருமே இன்பத்தைச் சுட்டி நின்றாலும் ஒருவர் சுட்டுவது சிற்றின்பம். மற்றவர் சுட்டுவது பேரின்பம். சிற்றின்பத்திற்கு முடிவுண்டு. பேரின்பத்திற்கு முடிவில்லை. இதனை வள்ளலார்,

**"தனித் தலைவன் வருகின்ற தருணமிது தோழி**

**தனித் திருக்க விடுநீயும் தனித் தொருபால் இருத்தி".**[70]

என்று கூறுவதன் மூலம் அறியப்படுகிறது.

## விழித்திரு

சாவாநிலை பெற்ற சித்தர்கள் துக்க மொழிந்தவர்களாகச் சதா பேரின்பத்தில் ஆழ்ந்திருப்பார்கள். அதனால் தான் சாகாக்கலையின் இரண்டாவது மந்திரமாக விழித்திரு என்று வள்ளலார் குறிப்பிடுகிறார். மரணப் பிடியிலிருந்து ஒவ்வொரு மனிதனும் தப்பிக்கவே இறைவனால் அறிவு தரப்பட்டுள்ளது. மரணத்தின் பிடியிலிருந்து தப்பிக்க விழிப்புநிலை அவசியம்.

**"தூங்காது பெருஞ்சுகமே சுகித்திடவில் வுலகைச்**

**சுத்தசன்மார்க்க கந்தனிலே வைத்தருள்க விரைந்தே".**[71]

எனும் பாடல்வழி தூக்கம் கெட்டால் உடல் நலம் கெட்டுவிடும். தூக்கம் என்பது மனிதன் புத்துணர்ச்சி பெறும் நிலைக்குத் தேவையான ஓர் ஓய்வு நிலை. இதில் இருவித கருத்து வேறுபாடில்லை. ஆனால் எத்தனை மணிநேரம் என்பதில் தான் நமக்கும் சித்தர்களுக்கும் வேறுபாடு அதிகரிக்கின்றது.

தூக்கத்தை ஒழித்தால் ஆயுள் விருத்தியாகும் என்பது சித்தர் கொள்கை. ஒருவன் ஒரு நாளைக்கு ஒரு மணி நேரம் மட்டுமே தூங்கிப் பழக்கம் கொண்டால் ஆயிரம் வருடம் வாழலாம் என்பது வள்ளுவர் கருத்தாகும். நம் உடலின் ஆயுள் சுவாசத்தால் கணக்கிடப்படுகிறது. அதனால் விழிப்பு நிலையே ஆயுளை விருத்திச் செய்யும். உறக்கத்தைச் சுத்தமாக ஒழித்தநிலையே தேவர் நிலை. இதனால் இமையை மூடாதவர் என்று புராணம் சுட்டுகிறது. உறக்கமற்ற நிலை தவம் செய்வோரின் இறுதி முயற்சியாகும்.

தூக்கம் பலத்தைக் குறைக்கும். மிகுதூக்கம் சோம்பலை வளர்த்துவிடும். சோம்பல் இந்த உடலை எதற்கும் பயன்படாத தாக்கிவிடும். அதனால் பகலில் தூங்கக் கூடாது என்றும், இரவில் 6 மணிநேர அளவே உறங்கவேண்டும் என்றும் கூறுகின்றனர்.

**பசித்திரு**

வயிறு வீங்கச் சாப்பிடுபவனுக்கு யோகம் கிடைக்காது. காலவரையின்றிப் பட்டினி கிடப்பவனுக்கும் யோகம் வராது என்று பகவத்கீதைக் குறிப்பிடுகிறது. வயிற்றுப் பசிக்கும், ஞானப்பசிக்கும் தீர்க்கும் மார்க்கங்களைக் குறிப்பிடும் சித்தர்கள் எல்லா பசிக்குமே உணவு நம் உடலிலேயே இருக்கிறது என்று குறிப்பிடுகின்றனர். சாகாத வாழ்வைப் பெற தனித்திரு, விழித்திரு, பசித்திரு என்ற மூன்று மகா மந்திரங்களைத் தாயுமானவரும் கடைப்பிடித்தார் என்பதை,

**"கற்றேன்சிற் றம்பலக் கல்வியைக் கருமை தெறி**
**உற்றேன்எக் காலமும் சாகாமல் ஓங்கும் ஒளிவடிவம்**
**பெற்றேன் உயர்நிலை உலகில் பிறநிலையைப்**
**பற்றேஞ் சிவானந்தப் பற்றேஎன் பற்றெனப் பற்றினேனே".**[72]

என்று சாகாவரம் பெற்றதை அறிவிக்கின்றார். இறைவன் கருணையால் தாம் மரணமில்லாப் பெருவாழ்வு பெற்றதைத் தம் பாடல்களில் சின்னம் பிடித்தும், சங்கு ஓதியும், முரசு அறைந்தும் உலகுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவிக்கின்றனர்.

**பிறவாநெறி**

உயிர்கள் அடையும் முத்தி நிலையை நான்கு வகையாகச் சாத்திரங்கள் கூறுகின்றன. அவை. சாலோகம், சாரூபம், சாமீபம், சாயுஜ்யம் என்பனவாகும். தவசிகளும், ஞானிகளும் சாவதில்லை. அவர்கள் இறைவனின் திருவடி நிழலை அடைகின்றனர்.

**"தீயாக உள்ளே தெறிவுற நோக்கினால்**
**மாயாது பின்னை உடம்பு".**[73]

என்று ஔவையும்,

**"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்**
**மற்றீண்டு வாரா நெறி".**[74]

என்று குறளும் எடுத்துள்ள பிறவியிலேயே கற்க வேண்டிய ஞான நூல்களைக் கற்றுத் தெளிந்து மெய்யுணர்வு பெற்றவர்கள் மீண்டும் இப்பிறவிக்கு வரமாட்டார்கள் என்பதை விளக்குகிறது. மரணத்திற்குப் பிறகு மனிதனுடைய உடல் என்னவோ அதை ஆக்கியுள்ள மூலப்பொருள்களின் மண், நீர், தீ, வளி என்னும் அடிப்படைப் பொருள்களாகப் பிரிவடைந்து விடுகின்றன.

ஆனால், அவனுடைய ஆன்மாவின் நிலை அவனுடைய செய்கைகளையும் அவன் பெற்ற அறிவையும் சார்ந்துள்ளது. அவன் மெய்யான ஆன்மவியல் அறிவு அடைந்திருந்தால் அவன் தேவயானம் என்னும், ஒளிப்பாதை வழியாகச் சென்று, மீண்டும் இந்தப் புவிக்குத் திரும்புவதில்லை. அவனுடைய ஆன்மா இறவாநிலையை எய்து விடுகிறது என்பது சித்தர்களின் கூற்றாகும். மனிதப் பிறவி மட்டுமே இறைவனை அடைவதற்கு ஏற்றப் பக்குவம் உடையதாகும். மற்றப் பிறவிகள் அதற்கேற்றதில்லை. இந்த மனிதப் பிறப்பு கிடைத்தற்கரிது. அரிதிற் கிடைத்த இம்மனிதப் பிறப்பைப் பாழடித்துக் கொள்ளாமல் இப்பிறப்பிலேயே பிறப்பை அறுத்துக் கொண்டு மற்றீண்டு வாராநெறியை அடைய வேண்டும் என்று சித்தர்கள் முயன்றனர். அதற்காகப் பலவித உபாயங்களையும் மேற்கொண்டனர். காயசித்தி, காயகல்பம் செய்து உடம்பைப் பலப்படுத்தினர். இறைவனைத் தொழும் போதுகூட பிறவாநெறியையே வேண்டினர். மனிதன் இறந்தால் பிறப்பு வரும். பிறப்பு உண்டென்றால் இறப்பும் உறுதியாகும். எனவே, இறவாமலிருந்தால் பிறவாமையும் உறுதி. ஆகவே ஞானிகள் பிறவாமையை இறைவனிடம் வேண்டினர்.

**"பாழ்த்த பிறப் பறுத்திடுவான் யாறு முனைப் பரவுவனே"**

**"பிறவி வேரறுத்த என் குடிமுழுதாண்ட**

**"இப்புழுக் கூடு நீக்கெனைப் போற்றிப்**

**பொய்யெல்லாம் விடவேண்டும்".**[75]

என மாணிக்கவாசகரும் பிறவாமை வேண்டும் என்கிறார். காரைக்காலம்மையாரும் பிறவாமையே வேண்டி,

**"உயிரு நன்மையால் உடலெடுத்து வந்து இருந்திடும்**

**உயிர் உடம்பை ஒழித்த போது ரூபமாயிடும்**

**“வஞ்சகப் பிறவியை வதைத்திடவும் வல்லிரேல்”.**[76]

என்று சிவவாக்கியரும்,

**“நல்ல வாசலைத் திறந்து ஞானவாசல் ஊடுபோய்**

**எல்லை வாசல் கண்டபின் இனிப் பிறப்பதில்லையே”.**[77]

என்று இடைக்காடரும்,

**“தொல்லைப் பிறவி தொலைக்கார்க்கு முத்திதான்**

**இல்லை யென்று ஊதுகுழல்”.**[78]

என்றும் பிறவியை வேரறுக்கும் பிறவாமை நெறியை துறக்க வேண்டினர்.

**“அழிகின்ற சாயா புருடனைப் போலக்**

**சுழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்**

**எழுகின்ற தீயிற் கற்பூரத்தை ஒக்கு**

**பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே”**

என்று ஞானானந்தர் கூற்றினை முருகேசன் எடுத்துரைக்கின்றார். இந்நிலைக்கு நாயன்மார்களின் முத்தியை உதாரணமாகக் கூறமுடியும்.

நான்கு நாயன்மார்கள் நான்கு பூதங்களின் வழி இறைவனின் திருவடியை அடைந்தனர்.

1. திருஞானசம்பந்தர், அவருடைய அடியார்களையும் அழைத்துக் கொண்டு இறைவனின் தீயாகிய சோதியில் கலந்தார்.

2. சிவலிங்கம் மண்ணின் வடிவம். திருநாவுக்கரசர் மண்ணின் வழி தம் உடம்பைக் கரைத்துக் கொண்டு திருவடி அடைந்தார்.

3. சுந்தரரையும், அவருடன் சென்ற சேரமான் பெருமானையும் காற்றின் வழி ஏற்றுக் கொண்டார். அதற்காக வானுலகத்தில் இருந்து யானையையும். தேவர்களையும் அனுப்பினார். பூதங்களில் காற்று சூக்குமமானது.

4. சிதம்பரம் ஆகாயத்தலம். இங்கு மாணிக்கவாசகரை இறைவன் ஏற்றுக் கொண்டார். உடம்பு வானில் கலக்க வாசகர் திருவடி நிழலை அடைந்தார்.

இவ்வாறு நால்வர் பெருமக்களை நான்கு பூதங்களின் வழி இறைவன் ஏற்றுக் கொண்டதைப் பார்க்கும் போது பூதவுடம்பு தமது நுட்பங்களில் கலக்கும் என்பதும், ஆன்ம இறைப்படி அடையும் என்பதும் தெளிவாகிறது.

**இறவாநெறி**

சித்தர்களின் சாகாக்கலையில் இறவாநிலை ஓர் அங்கமாகும். இறவாநிலை என்றால் உயிர் தான் பெற்ற இந்த உடம்பை விட்டு எப்போதும் பேசாதிருத்தல் ஆகும். உயிர்கள் துன்பங் கலப்பில்லாத நிறைந்த இன்பத்தை அடைய விரும்புகின்றன. உடம்போடு கூடிய இந்த உலக வாழ்க்கையில் விரும்புகின்ற நிறைந்த இன்பத்தை உயிர்கள் அடைய முடியவில்லை. திருவருளைப் பற்றியன்றி நிறைந்த இன்பத்தைப் பெற முடியாது.

பரநிலையில் இறைவன் அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்று நிலைகளையும் கடந்துள்ளான். அந்நிலையில் சச்சிதானந்தமாக இருக்கின்றான். இது சச் சித் ஆனந்தம் என்பதாகும். இது தத்துவ நீதனாய் உருவங் கடந்த அகண்ட நிலையில் இன்ப வடிவாக உள்ள நிலையாகும். இப்படிப் பரநிலையில் உள்ள பரம் பொருளுடன் இரண்டறக் கலந்து பேரின்பத்தை அடைவது சாயுஜ்யம் அல்லது பரமுத்தியாகும்.

முத்தியில் உருவம் கடந்துதானே தானாகவுள்ள அவனுடன் இரண்டறக் கலக்கவேண்டும். உருவமற்ற அவனுடன் உடம்போடு கூடிய உயிர் கலப்பது என்பது, நிறைந்த அறிவு அவன் வடிவம். இறைவன் முற்றறிவினன். உயிர்கள் சிற்றறிவுடையன. மலத்தோடு பொருந்தி இருப்பன. அதனால் அறியாமை வயப்பட்டு இருக்கிறது. இந்த மலம் நீங்கவே மாயையிலான உடம்பு இறைவனால் கொடுக்கப்பட்டது.

உயிர் இந்த உடலைக் கருவியாகக் கொண்டு வினைகளைச் செய்து மலபரியாகம் பெற்று அறியாமை நீங்கி அறிவைப் பெறுகிறது. அறியாமை வயப்பட்டிருந்தால் துன்புற்று வந்த உயிர் அறியாமை நீங்கி திருவருள் விளங்கப் பெற்றதும் இன்பம் அடைகிறது. உயிர் இன்பம் துன்பமடைவதற்கு உடம்பு கருவியாக இருக்கிறது.

இறப்பு என்பது சாதாரண மனிதனைப் பொருத்த வரை அது மரணம். அதாவது இந்த உடலுடன் கூடியிருந்த உயிர் அதனைவிட்டு நீங்கும் நிலையாகும். சாயுஜ்ய முத்தி என்பது உடம்பில்லா சுத்த நிலையில் உயிர்

அடையும் முடிந்த முத்திப் பேறாகும். இத்தகைய நிலையைச் சித்தர்கள் உடம்போடும் முத்தியடைய முடியும். இறவாநிலையில் இவ்வுடம்பை வைத்திருக்கும் நெறியைக் கையாளத் தொடங்கி உடம்போடு இறைவனுடன் கலக்கமுடியும் என உரைத்தனர்.

சித்தர்களைப் பொறுத்தவரையில் இறப்பு என்பது முத்திநிலை. பிறவிக்கு வந்த உயிர் பிறவியை அறுத்துக் கொண்டு திருவடிப் பேற்றினை அடையும் நிலையாகும். மரணமோ, பிறவியோ சாதாரண உயிர்களுக்கு ஒரு தொடர் கதையாக அமைந்து விடும். ஆனால் சித்தர்களோ அதனைத் தமக்கு ஒரு முற்றுப்புள்ளியாக வைக்கும் நிலையாக்கி விடுகின்றனர்.

இந்தப் பிறவியை விட்டுச் செல்லும் உயிர் மறுபிறவியை அடைவது திண்ணம். ஆகவே தேகத்துக்கு முடிவு கூறுவது இயலாது. ஆன்மாக்களுக்கு உடம்பு அநாதியாகத் தொடர்ந்து கன்மத்துக்கேற்ப ஆவதும் பின் அழிவதுமாக இருக்கும். ஆதலால் ஏதேனும் ஒரு தேகம் இல்லாமல் ஆன்மா இருப்பதில்லை. "உடம்போடு இறைவனை அடைவதே பரமுத்தி. மாறாக உடம்பை உலகில் கிடக்கவிட்டு அடைவது முத்தியன்று. அவ்வாறு போனவர்களுக்குப் பிறப்பு உண்டு. இவ்விதம் உடம்போடு இறையடியை அடைவதே பரமுத்தி".[79] எனக் குமாரதேவர் குறிப்பிடுவதை முருகேசன் தன் நூலில் விளக்குகின்றார். பெரும்பாலான சித்தர்கள் இறவாநெறியையே இறைவனிடம் வேண்டிப் பெற்று உடம்பு வீழாமல் உடம்புடனே சித்தியடைந்தனர்.

மக்கள் உலக போகங்களை நுகர உடலை விரும்புவர். ஆனால் சித்தர்களோ உடம்புள் உத்தமனைக் காண உடம்பை விரும்பினர். இவ்வுடம்பின் மீதுள்ள பற்றினை நீக்கினால் ஞானம் மிகும். ஞானம் பெறுவது பிறவியின் நோக்கம். எங்குமாக உள்ள இறைவன் இவ்வுடம்பில் உள்ளான். உள்ளே உள்ள இறைவனைக் காண உடம்பைப் பேண வேண்டும் என்பதைத் திருமூலர்,

**"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞானம் சேரவு மாட்டார்**

**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே**

**உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே".**[80]

என்றும்,

**"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்**

**உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்**

**உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று**

**உடம்பினை யானிருந்து ஓம்புகின் றேனே".**[81]

என்றும் திருமந்திரம் உடம்பின் பெருமையைக் கூறுகிறது.

இளமை நில்லாது, யாக்கை நிலையாது என்ற கருத்தைச் சித்தர்கள் அறியாதவர்கள் அல்லர். இந்த உடம்பு அழியக் கூடியது. ஆனால் அழியும் இதனை அழியாத உடம்பு ஆக்கினால் இறவாநிலையையும் எய்தலாம் என்று சித்தர்கள் கண்டறிந்தனர். ஆன்மாவின் பக்குவத்திற்கேற்ப உடம்பிலும் உணர்வுகள் உண்டாகின்றன. இன்பதுன்ப நுகர்வுகளுக்கு உடம்பு கருவியாகவுள்ளது. ஆன்மா பரிபக்குவம் அடைய உடம்பு உயிருக்குக் கருவியாகவுள்ளது.

மாணிக்கவாசகர் பாண்டியநாட்டின் பெருமை மிகு அமைச்சர் பாண்டிய மன்னனுக்குக் குதிரைகள் வாங்கப் பெரும் செல்வத்துடன் திருப்பெருந்துறைக்குச் சென்றார். அங்கு முற்பிறவியின் பயனாக ஞானசாரியாரைச் சந்தித்தார் உபதேசம் பெற்றார். உலகப் பந்தங்களினின்றும் விடுபட்டு மெய்ஞானியானார். அதீத ஆனந்த அனுபவத்தைப் பெற்றதும், தீயிலிட்ட மெழுகென உருகி ஞானாசாரியாரைப் பாடிப் பரவினார். 'மாணிக்கவாசகர்' என்ற பட்டப் பெயரையும் பெற்றார்.

இறைவனைப் பிரிய மனமில்லாமல் உடம்பை மாய்த்துக் கொள்ள துடித்த மாணிக்கவாசகர், 'இறைவன் கொடுத்த உடல் என்பதால் அவ்வுடலைச் சிதைக்க மனம் பெறாமல் துடித்து தன்னை உடம்போடு முத்திக்கு அழைத்துக் கொள்ள வேண்டிக் கெஞ்சுகிறார்.

**"வஞ்சவினைக் கொள்கல னாமுடலைத் தீவாய்**

**மடுக்கிலேன், வரையுருண்டு மாய்ப்பே னல்லன்**

**நஞ்சொழுகு வாளாலும் குறைப்பே னல்லேன்**

**நாதனே அதுவும் நினதுடைமை யென்றே**

**அஞ்சினேன், தானேயு மழியாதாவி ஐயனே**

**நினைப் பிரிந்து ஆற்ற கில்லேன்**

**என் செய்கோ எந்தாயோ என்றிருங்கினார்**

**புரண்டதோர்".**[82]

என்றும் மரக்கொம்பால் அரும்பாய், போதாய், மலராய், காயாகிக் கனிந்து உதிர்வதைப் போல் இந்த உடம்பும் இருக்கின்றது. வீணே பழுத்து, முதிர்ந்து பயனற்று அழிந்து போகாதபடி நான் நம்பித் துணையாகக் கொண்ட கடவுளை என் மனம் சேரும்படி அழகிய பொன்னாலான தில்லைக்கண் இருந்து ஆண்டானைப் பற்றிக் கொண்டேன் என்பதை,

**"கொம்பி லரும்பாய்க் குவிமலராய்க் காயாகி**

**வம்பு பழுத்து உடலம் மாண்டிங்ஙன் போகாமே**

**நம்புமென் சிந்தை நணுகுவண்ண நானணுகும்**

**அம்பொன் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே".**[83]

என்றும், உடம்பு முதிர்ந்து மாய்ந்து போகாதபடிக் கடவுளைப் பற்றிக் கொண்டேன் என இறவாநெறியை மாணிக்கவாகரின் மூலம் சித்தர்களின் நிலையை இன்று அறிவுறுத்துகின்றார்.

இறைவன் இடங்கொண்ட உடம்பு புரை புரை கனிய பகுத்து நின்ற உடம்பு, புகுந்து ஒழியாவண்ணம் நிறைந்த உடம்பு பிணமாக விழுமோ? என்பதை மாணிக்கவாசகர்,

**"கண்ணகர் நுதமுலாய் கழிலிணைகள்**

**மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துனுக் கழற்கே**

**புகுமாறும் அண்ணா என்னைக் கடவேனோ**

**அடிமைசால் அழகுடைத்தே".**[84]

என்ற திருவாசகத்தில் மண்ணில் உடம்பு விழாது திருவடிப் பேற்றை அடையும் நிலை கூறப்பட்டுள்ளது.

திருவாசகத்தின் வேறு பாடல்களிலும் இந்த இறவாநிலையும் 'உடம்போடு முத்தி' அடைவதை,

**"ஆவியோடு ஆக்கை புரை புரைகனியப்**

**புகுந்து நின்று உருக்கி".**[85]

என்றும்,

**"புன்புலால் யாக்கை புரை புரை கனியப்**

**பொன்னெடுங் கோயிலாப் புகுந்து".**[86]

எனவரும் பாடலில் கொள்கையும் எடுத்தாளப்பட்டுள்ளது.

மாணிக்கவாசகர் இறைவனிடம் உபதேசம் பெற்றார் அப்படி உபதேசம் பெறும்போது உடல் பொருள் ஆவி மூன்றையும் இறைவனிடத்தில் ஒப்படைத்தார் என்பதை,

**"இறைவனே நீயேன் உடலிடங் கொண்டாய்".**[87]

என்றும்,

**"எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்".**[88]

என்றும் கூறுவதன் மூலம் மாணிக்கவாசகர் அருள்நிலையில் நின்று அருள் வாழ்க்கை வாழ்ந்து முடிவில் அம்பலத்தில் அருள் வெளியில் கலந்து விடுவதை அறியமுடிகிறது.

உயிர் முக்தர்களின் உடம்பு பிரணவ வடிவமாகும். அதனால் பிராப்தம் அனுபவிக்கும் பிரச்சனை அவர்களுக்கு இல்லை. அவர்கள் உடம்பு சூச்சுமம் அடைந்து அவர்கள் சிவனது அங்கமாகச் சேர்ந்து விடுவர்.

மாணிக்கவாசகர் தூலத்தோடேயே அம்பலத்தில் கலந்தார். ஆனால் பட்டினத்தார் தூலம் சூச்சுமமாக அருவமாக மாறிச் சிவலிங்கமாகவே தத்துவமாகியவர்.

“பட்டினத்தடிகள் தம் வாழ்நாளின் இறுதியில் திருவொற்றியூர் கடற்கரையில் மணற்குழியில் இறங்குவதும் வெளியில் வருவதுமாக விளையாட்டுக் காட்டினார். முடிவில் குழியில் இறங்கி சிவலிங்கமாக நின்றுவிட்டார். தம் உடலைச் சிவலிங்கமாக மாற்றி முத்தியடைந்தார்”.[89] எனப் பட்டினத்தடிகளின் முத்திநிலையை முருகேசன் சுட்டிக்காட்டுகின்றார்.

**திருஞானசம்பந்தர்**

திருஞானசம்பந்தர் இறைப் பணியாற்றித் தமது 16- ஆவது வயதில் திருமணம் முடிக்க நல்லூருக்கு வந்தார். மணம் முடிந்ததும் மணவறையில் மணப் பெண்ணின் கையைப் பற்றித் தீவலம் வந்தார். இந்த மணவாழ்க்கையானது எம்மை வந்து அடைந்தது. யாம் தேடியதன்று. ஆகவே இவளுடன் முடிவில்லாச் சிவபெருமானின் திருவடிகள் அடைவேன் என்று ஆர்வம் பொங்க அடியார்களுடன் திருக்கோயிலை அடைந்தார். அதுசமயம் அவர் உள்ளத்தில் ஒரு குறிப்பு உண்டாக, ‘பிறவி நீங்க என்னை முன்னாளில் அடிமை கொண்ட திருவருள் நன் மலர்ப்பாதம் கூட்டும்’ என்றார். அந்நிலையில்,

**“கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்**
**பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாத்தில**
**சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்**
**நல்லூர்ப் பெருமண மேயநம் பானே”.**[90]

எனும் பாடலில் திருமணத்தில் தரிசிக்க வந்தவர்களது தீய பிறவிக்குக் காரணமான மல, மாயா, கன்மங்களை ஒழித்தலையே பொருளாகக் கொண்டு திருநல்லூரிலுள்ள பெருமணமென்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள நம்பனே! தேவரீர் திருவடி நிலை அடையும் பருவம் இதுவெனக் குறிப்பிட்டுள்ளார். இறைவனும், நீயும், நின் பத்தினியும் உன் மணத்துக்கு வந்துள்ள யாவரும் எம்மிடம் தோன்றும் இந்தச் சோதியில் புகுந்து எம்மை அடையுங்கள் என்று சொல்லி அங்கோர் சோதியாய்த் தோன்றினார். அதில் ஒரு வாயிலும் காட்டினார். இதுகண்ட சம்பந்தர் அச்சோதியை வணங்கி நமசிவாயப் பதிகம் ஓதி, மணங்கான வந்த நீங்கள் யாவரும் குற்றமற்ற உங்கள் பிறவி நீங்கும்படி இச்சோதியுள் பிரவேசியுங்கள் என அருளினார்.

திருநீலக்கர், முருகனார், சிவபாத இருதயர், பெரும்பாணர், சிவிகை தாங்குவோன், மாதர்கள், பணியாளர், முனிவர், அடியவர், வைதிகர், திருமணம் காண வந்தவர்கள், முத்திக்குரிய பக்குவம் பெற்று முத்தியடைய வந்தவர்களுமான அனைவரும் சோதியுள் புகுந்தபின், ஞானசம்பந்தர் தன் மனையாளுடன் தீயினில் தோன்றிய அவ்வாயிலினுள் உட்புகுந்து இரண்டறக் கலந்தருளினார். சோதியில் புகுந்த பருவுடம்பு அக்னியில் கரைந்தது. ஆன்மா சிவனடி அடைந்து பிறவியை அறுத்துக் கொண்டது.

## திருநாவுக்கரசர்

அன்பின் வடிவான அப்பர் தன் இறுதி நாட்களில் திருப்புகலூரில் உழவாரப்பணி புரிந்து கொண்டு இருந்தபோது,

**"எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ**
**எம் பெருமான் திருவடியே எண்ணி னல்லங்**
**கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்**
**கழலடியே கை தொழுது காணின் அல்லால்**
**ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்**
**ஒக்க அடைக்கும் போதுரை மாட்டேன்**
**புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்**
**பூம்புகலூர் மேவிய புண்ணி யனே".**[91]

என்னும் திருத்தாண்டகம் பாடியபடி வில்வமும் கொன்றை மாலையும் ஏந்திச் சென்று இறையடியிலிட்டுப் புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் எனக் கூறி சிவானந்த ஞான வடிவமேயாகிச் சிவத்துள் கலந்தருளினார். இவர் திருமேனி கற்பூர சோதிபோல் கரைந்து போயிற்று. ஆன்மா சச்சிதானந்த சொரூபமாகிய சிவப்பதத்தை அடைந்தது.

## சுந்தரர் மற்றும் சேரமான் பெருமான்

அவிநாசியில் முதலை விழுங்கிய பிள்ளையைப் பதிகம்பாடி உயிர்ப்பித்துக் கொடுத்த சுந்தரர் திருவஞ்சைக் களத்தில் இருந்த தன் நண்பர் சேரமான் பெருமான் நாயனாருடன் தங்கியிருந்தார். ஒருநாள் திருவஞ்சைக் களத்துத் திருக்கோயிலுள் சென்று உலக வாழ்க்கையில் தமக்கு இருந்த

பொறுப்பைத் திருப்பதிகம் பாடித் தெரிவித்தார். சிவபெருமான் தேவர்களோடு வெள்ளை யானையை அனுப்பிச் சுந்தரரைக் கயிலாயத்திற்கு அழைத்து வரச் சொன்னார். இத்தருணத்தில் சுந்தரர் தன் நண்பரான சேரமானை நினைக்க, சேரமானும் குதிரை மீதேறி திருவஞ்சைக்களம் வந்து, சுந்தரர் திருக்கயிலாயத்துக்கு எழுந்தருளுவதைக் கண்டு, குதிரையின் காதில் ஸ்ரீ பஞ்சாட்சத்தை ஓதிச் சுந்தரரைப் பிரதட்சணம் செய்து குதிரையின் மீதேறி சேரமானும், வெள்ளையானையில் சுந்தரரும் திருக்கயிலாயத்துக்குச் சென்றனர்.

சுந்தரர் வெள்ளையானை மீது கயிலாயத்திற்குச் சென்றதற்கு அவரது திருநொடித்தான் மலைத் திருப்பதிகம் முழுவதும் அகச்சான்றாக விளங்குகிறது.

**“இந்திரன் மால்பிரமன் எழிலார் மிகு தேவரெல்லாம்**
**வந்தெதிர் கொள்ளஎன் னைமத்த யானை அருள்புரிந்து”**
**“மண்ணுல கிற்பிறந்து நும்மை வாழ்த்தும் வழியடியார்**
**பொன்னுலகம் பெறுதல் தொண்டனே னின்று கண்டொழிந்தேன்**
**விண்ணுல கத்தவர்கள் விரும்பவெள்ளை**
**யானையின்மேல் என்னுடல் காட்டுவித்தான்”**
**“வானை மதித்து அமரர் வலஞ் செய்தனை**
**ஏற வைக்க ஆனையருள் புரிந்தான்”.**[92]

எனும் பாடல்கள் சுந்தரர் தம் உடலோடு கயிலாய மலைக்குச் சென்றதற்கு அகச்சான்றாக விளங்குகிறது. சுந்தரருடன் சேரமான் பெருமானும் கயிலைக்கு உடன் சென்றதைப் பெரிய புராணமும் வெள்ளையானைச் சருக்கத்தில்”.[93] சான்றுரைக்கிறது.

## இறந்தாரை எழுப்புதல்

சித்தர்கள் சாகாக்கலையின் முதல் முயற்சியாக இறந்தவர்களை உயிர்ப்பித்தலாகிய இறந்தாரை எழுப்புதல் ஆகிய நெறியைக் கைக்கொண்டனர். இதனை ஔவைக்குறள்,

**“நெற்றிக்கு நேரே நிறைந்த ஒளி காணில்**
**முற்றும் அழியாது உடம்பு”.**[94]

எனும் குறளால் விவரிக்கிறது. சித்தர்கள் யோக வலிமையின் மூலம் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களிலும் வல்லவர்களாகத் திகழ்ந்தனர். இறைவன் அருளாலும் இந்த ஐந்தொழில் சித்தர்கள் கிடைத்தது. இராமலிங்க அடிகளாரும் இறைவனிடம் வேண்டியே இச்சக்திப் பெற்றார் என்பது புலனாகிறது.

**“படைத்தல் முதலைந்தொழில் நான்புரிதல் வேண்டும்**

**ஐந்தொழில் நான் புரிந்துலகில் அருள்விளக்கல் வேண்டும்”.**[95]

என்று இறைவனிடம் வேண்டிய இராமலிங்க அடிகளார் அதனைப் பெற்றுவிட்டதையும் தம் பாடலில்,

**“ஓத உலவா ஒரு தோழன் தொண்டருளன்**
**சாத லொழித் தென்னை தானாக்கு - பூதலத்தில்**
**ஐந்தொழில் செய்யென்றே அருட்சோதிக் கோலளித்தான்**
**வெந்தொழில் போய் நீங்க விரைந்து”.**[96]

என்றும்,

**“சிருட்டி முதலைந் தொழில் நாண் செய்ய வெனக்”.**[97]

என்றும்,

**“ஆக்கி யளித்ததன் முதலாந்தொழி லோரைந் தினையும்**
**தேக்கி மகிழ்வோடு நீ செய்யென்றான்”.**[98]

என்றும்,

**“ஐந்தொ ழிலும் நீயேசெய் யென்றெனக்கே**
**நேர்ந்தளித்தான்”.**[99]

என்றும்,

**“சிந்தையில் துன்பொழி சிவம் பெறுகெனத் தொழில்**
**ஐந்தையும் எனக்கருள் அருள்பெருஞ் சோதி”.**[100]

என ஐந்தொழிலும் தான் அடைந்த நிலையை எடுத்துரைக்கின்றார். அட்டாங்கயோகம் முடித்த யோகிகளும் இந்த ஐந்தொழில் செய்யும் வல்லமை தமக்குண்டு என மெய்ப்பித்துள்ளனர். மாயை என்னும் நுண்ணாற்றல் இறைவனது சத்தியாக உந்தப்பட்டு 36 தத்துவங்களைப் பெற்று விரிக்கின்றன. இறைவனது படைப்பால் உலகில் உயிர்களாகவும், அதில் கருவி

கரணங்களாகவும், நுகர்பொருள்களாகவும் உருப் பெறுகின்றன. யோகிகளும், சித்தர்களும் இறைவனருளால் சித்தி வல்லபங்களைப் பெற்றவர்கள். ஆதலால் அவர்களும் இறைவனுக்குச் சமமாக ஐந்தொழில் செய்ய முன்வரவில்லை. சில சித்துகளோடு நின்றுவிட்டனர்.

“பரமுத்தியடைந்த உயிர்கள் இறைவனோடு கலந்து இறைவனை ஒத்த சுயம்பிரகாசம், வியாபகம், முற்றறிவு பெற்றாலும் இறைவனைப் போல் படைப்பாதி ஐந்தொழில்கள் செய்யாது இறை அனுபவத்தால் உண்டாகும் பர இன்பத்தை மட்டும் அனுபவிக்கும். அங்கு உயிர்கள் ஐந்தொழில் செய்யும் எனில், அது அநேக ஈஸ்வரத்தினால் சிவபெருமானுக்கு அத்துவிதீயத்துவ பங்கம் உண்டாகும்”.[101] எனப் பிரம்மசூத்திரம் கூறுவதாக முருகேசன் தன் நூலில் சுட்டியுள்ளார்.

சித்தர்கள் சாகாக்கலை இந்த ஐந்தொழிலின் ஒரு கூறு என்றால் மிகையாகாது. ஆனால் இந்த ஐந்தொழிலை இயற்கை நியதிக்கு மாறாகச் சித்தர்கள் பயன்படுத்தியதே இல்லை. அ∴தாவது ஐம்பூதப் படைப்பு ஏதும் உருவாக்காமல் ஐம்பூத கலப்பு பொருட்களையே உருவாக்கியுள்ளனர்.

சித்தர்கள் புதிய உயிரை ஏதும் படைக்கவில்லை. ஆனால் இறைவனால் படைக்கப்பட்ட உயிரை இறைவன் கருணையால் காக்கின்றனர். இறைவனின் ஆணைப்படி அவ்வுயிரை ‘அருளல்’ என்னும் தயவால் காக்கின்றனர். இறைவனின் ஆணை சித்தர்களின் சில அற்புத சத்தியால் நிறைவேற்றப்படுகின்றதே ஒழிய இறைவன் கருணையல்லாது சித்தர்களால் தனித்து இவ்வாற்றலைப் பெற்றுவிட இயலாது.

இறந்தவர்களை எழுப்புதல் என்னும் கொள்கையைக் கைவரப் பெற்ற சித்தர்கள் உயிர்கள் பெருந்துன்பம் அடையும்போது அவ்வுடலால் நிகழ வேண்டிய பெருஞ்செயல் ஒன்றைக் கருத்தில் கொண்டு அவ்வுடலை உயிர்ப்பித்து அளித்தனர்.

இந்த அற்புத ஆற்றலைத் தான் பெற்றிருந்ததால் தம் பாடல்களில் இராமலிங்க அடிகளார்,

**“செத்தாரை எழுகெனச் சிந்தைசெய் முன்னம் சிரித்தெழவே**

**இத்தாரணியில் அருட்பெருஞ் சோதி எனக்களித்தாய்”.**[102]

என்றும்,

**“செத்தாரை எழுப்புதல் நான் திண்ணம் உணர்மனனே”.**[103]

**செத்தாரை மீட்கின்ற திண்மையைப் பெற்றேன்”.**[104]

என்றும்,

**“இறந்தாரை எல்லாம் எழுப்புதல் வல்லேன்”.**[105]

எனவும், “ஞானி தயவோடு ஓர் உயிரற்ற உடலைக் கண்டபோது அஃதுதானே உயிர் பெற்று எழும்”.[106] இவ்வுலகில் செத்தாரை எல்லாம் எழுக எனின் எவ்வுலகும் போற்ற எழுந்திருப்பர். செத்தவர்களை நானல்ல எனது உடல் மீதுள்ள உரோமமே உயிர்ப்பிக்கும் என்று நெஞ்சு நிமிர்த்திக் கூறும் இராமலிங்க அடிகளார் இச்சத்திகள் யாவும் இறைவன் திருவருளால் தமக்கு வந்தவையே என்றும், அவரிடம் வேண்டிப் பெற்ற இவ்வற்புத ஆற்றலை அவன் ஆணைப்படியே செயல்படுத்துவேன் என்றும் கூறுகிறார்.

**“தேகம் எப்போதும் சிதையா வண்ணம்**

**செய்வித் தெலாம் வல்ல சித்தியும் தந்தே**

**மடிந்தாரை மீளவும் நான் வருவித்தல் வேண்டும்**

**செத்தாரை மீண்டும் இங்கே எழுப்பிப் பாடல் வேண்டும்”.**[107]

என்றும்,

**“செத்தாரை யெல்லாந் திரும்ப எழுப்புதலின்**

**ஏகத்தால் முடியுமென லெம்மவரே சித்தாம்**

**அருட்பெருஞ்சோதி யதனான் முடியும்**

**தெருட் பெனஞ் சத்திய மீதே”.**[108]

என்றும்,

**“யான் புரிதல் வேண்டுங்கொல்**

**இவ்வுலகில் செத்தாரை**

**ஊன் புரிந்து மீள உயிர்ப்பித்தல் - வான்புரிந்த**

**அம்பலத்தான் நல்ல ளொலந்தோ நான் மேற்போந்த**

**கம் பலத்தா லாகுங் களித்து".**[109]

என்று கூறி இத்தகைய அருளாற்றல் பெற்றவன் எல்லா உயிரையும் தன் உயிர் போல் கருதுபவனாக இருப்பான் என்று அடையாளமும் கூறுகின்றார். "எல்லா உயிர்களையும் தன்னுயிர் போல் பார்க்கும் உணர்வு உடையவன் இறந்தவரை எழுப்புவான்".[110] என்றும்,

**"இவ்வுலகில் செத்தாரை யெல்லாம் எழுக எனில்**

**எவ்வுலகும் போற்ற எழுந்திருப்பர் - செவ்வுலகில்**

**சிற்றம்பலத்தான் திருவருள் பெற்றார் நோக்கம்**

**உற்றவரை யுற்றவர்க ஒற்று".**[111]

என்றும், எல்லா உயிர்களையும் தம் உயிர்போல் கருதி இறைவனிடத்தில் அருள்பெறல் வேண்டும் என்று சித்தர்களும் சித்தர் வழிகாட்டிய நாயன்மார்களும் வழி செல்கின்றனர்.

## இறந்தார் எழுதல்

'ஆன்மா என்பது அழிவு இல்லாதது' வாளால் கீறினால் வாடுவது உடல் தான், வளரும் நெருப்பில் இட்டாம் வதங்கப் போவதும் மேனி தான்! மனம் மட்டுமே இன்ப துன்பத்தில் எப்போதும் மூழ்கும்.

**"அஞ்சு புலனின் வழியறிந்தால் பின்னைத்**

**துஞ்சுவதில்லை உடம்பு".**[112]

என்று ஔவைக்குறள் விவரிக்கிறது. இறப்பதும் பிறப்பதும் ஆன்மாவின் முடிவன்று. உடல் மாயை அழியக் கூடியது. ஓர் உடலில் வாழும் உயிர் அதன் எல்லை முடிவுற்றதும் மற்ற உடலுக்குத்தாவி விடும். ஆகவே அழிவு என்பது உடலுக்குத் தாவி விடும். ஆகவே அழிவு என்பது உடலுக்குத் தானே ஒழிய, ஆன்மாவுக்கு இல்லை. குளிர், வெப்பம், இன்பம், துன்பம், சோகம், வருத்தம், பாசம், அன்பு, அறம், மறம் இவையாவும் இயற்கையாக இறைவனுடைய படைப்பு. ஆனாலும் எதுவும் நிலையானதன்று. இவைகளில்

யௌவனம் வரும் போகும். ஆனால் நிலைத்து விடுவதில்லை. இயற்கையின் மாற்றங்களால் எவன் மனம் கலங்காது பரிசுத்தமான ஆத்மாவுடன் இருக்கிறானோ அவனே உத்தமன். உயிர்களில் மேலானவன். மரணத்தையே வென்றவன். அந்தச் சரீரம் அழிந்த பின்பு அவன் பரமாத்ம நிலையைப் பெற்று என்னை வந்தடைகின்றான். இந்த அமைதி நிலையை எய்தாத ஜீவாத்மாக்கள் அந்த உடல் அழிந்ததும் வேறு உடலில் புகுந்து வெகுநாள் வரை இவ்வுலகில் உலவும். இவை இறந்தாரைக் கூட எழுப்புதல் முடியும் என்று தீர்க்கமாகக் கூறும். சித்தர்கள் அத்தகைய வல்லமை பெற்ற யோகியர் இறந்தாலும் உயிர் பெற்றெழுதல் கூடும் என்று இராமலிங்க அடிகளார் குறிப்பிடுகிறார்.

உடம்பு தோன்றித் தோன்றி அழியும் தன்மையது. ஆனால் உயிரோ அழிந்து தோன்றுவதில்லை. ஓர் உடம்பைப் பிரிவதும் பிரிதோர் உடம்பில் புகுவதும் தான் ஆன்மாவின் செயல் அதனைத்தான் இறத்தலும், பிறத்தலும் என்று நாம் கூறி வருகின்றோம். எண்ணற்ற உடம்புகளில் சார்ந்து பயின்ற பயிற்சி முதிர முதிர மனித உடம்பில் ஆன்மா புகுகின்றது. மேம்பட்ட நிலைக்கான வழியைத் தேட ஆரம்பிக்கின்றது. பிறவிதோறும் வளர்ச்சியுறும் ஆன்மா முடிவில் தெய்வீக நிலையை அடையும்.

ஓர் உடம்பைப் பிரிந்த ஆன்மா தானிருந்த இடத்தை விட்டு வேறிடத்தில் பிறக்கின்றது. முன்பு தானிருந்த ஊர், பேர், உற்றார், உறவினர் முதலிய அனைத்தையும் எடுத்து விடுகிறது. புதியபிறவி எடுப்பதால் தன்னைப் புதிய மனிதனாக நினைத்துக் கொள்ளும். உயிர் அறிவிலும் வேறுபாடு அடைகிறது. பழைய நினைவுகள் இருந்தால் ஆன்மா உற்சாகமாக இருக்காது என்ற காரணத்தால் திரோதான சத்தி அவற்றை மறக்கச் செய்கிறது. ஆனால் ஆன்மா வேறுபடுவதில்லை. ஆகையால் தக்க முறையில் ஓர் ஆன்மாவைச் சந்திக்க நேர்ந்தால் அவனுடைய பழைய நினைவுகளை நாம் அறிதல் கூடும்.

ஆன்மா இப்படியிருக்க அதனைச் சார்ந்து இயங்கும் உடல் இறந்தாலும் உயிர் பெற்றெழ ஒரு சந்தர்ப்பமும் இருக்கிறது என்று சித்தர்கள் கூறுகின்றனர்.

நம் உடலில் இயங்கிக் கொண்டிருக்கும் காற்றைச் சித்தர்கள் ஐம்பூத நோக்கில் தசவாயுக்களாகப் பகுத்தனர். அவை: பிராணன், அபாணன், விபாணன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகன், தேவதத்தன், தனஞ்செயன் என்பனவாகும். இந்த, **“**தசவாயுக்கள் உடலில் ஓடும் இடகலை, பிங்கலை, சுழுமுனை, சிருவை, அந்தி, அலம்புடை, புருடன், காந்தாரி, சங்கிணி, குரு எனும் பத்து முக்கிய நாடிகளுடன் இணைந்து உடலை இயக்குகிறது**”.**[113] என முருகேசன் சுட்டிக்காட்டியுள்ளார்.

இந்தப் பத்து நாடிகளுள் நடுநாடியை ஒழித்து ஏனைய ஒன்பது நாடிகளிலும் தனஞ்செயல் தவிர மற்றைய ஒன்பது காற்றுகளும் முறையே கூடியிருக்கும் நிலையில் உடலும் உயிரும் நெடுநாள் நீங்காது ஓங்கி வாழும். சித்தர்களின் கட்டுப்பாட்டுக்கும் அப்பாற்பட்டதாக விளங்கும் தனஞ்செயன் வாயு ஏனைய ஒன்பதும் போலவே இருக்கும். இது பிரிந்து செயல்படும் இடத்தை நாற்சந்தி என்றழைப்பர்.

**“**இருநூற்று இருபத்து நான்கு உலகங்களிலும் வாழும் உயிர்களின் உடலில் வீங்கற்காற்றான தனஞ்செயன் பாங்குற நிற்கும். இதன் நிலைதிரிந்தால் உடலில் நோய் அவத்தைகள் உண்டாகும். இக்காற்று உடலைவிட்டு வெளிப்பட்டு விட்டால் உடலானது உடனே வீங்கி வெடித்துவிடும்**”.**[114] என முருகேசன் தன் நூலில் சுட்டிக்காட்டுகிறார். இது தனஞ்செயன் காற்று உயிர் போனாலும் உடனே உடலைவிட்டுப் போகாமல் உயிரற்ற உடலையும் வீக்கமுறச் செய்து கபாலம் வழியாக வெளியேறும் சத்தியுடையது.

இது மூன்று நாட்களுக்குப் பிறகும் தாமதமாக வெளியேறுவதற்குக் காரணம் வயிரவன், முக்கியன், அந்தரியாமி, பிரவஞ்சன் முதலிய இதன் நாற்சத்திகளுள் ஒன்றான அந்தரியாமி பிராணவாயுவை உடலினுள்ளே இரத்தத்தினூடே தோற்றுவித்துக் கொண்டு இருப்பதால் மரணவிரைப்பு தோன்றுவதற்கு முக்கிய காரணமாகவும் இவ்வாயு செயல்படுகிறது. இதனைத் திருமூலர்,

**“உயிர் போகினும் போகாதுடலினை வீங்கித்**

**தலைகிறுத்த கல்வது தனஞ்செயன்”.**[115]

எனத் திருமந்திரப் பாடலால் விவரிக்கிறார். மரணம் ஏற்பட்டும் மூன்று நாள் வரை தங்கியிருக்கும் தனஞ்செயன் வாயுவில், பிராணவாயுவை உண்டாக்கும் அந்தரியாமி என்ற கூறுபாடு இருப்பதால் ஆற்றல்வல்ல சித்தர்கள் அதன் வாயிலாகப் பிராணவாயுவை அதிகரிக்கச் செய்து திரும்ப உயிர் பெற்றெழுதலும் சாத்தியமான காரியமாகும் என்று கூறும் சித்தர்கள் இதன் காரணமாகவே இறந்த உடலைச் சமாதி செய்ய வற்புறுத்துகின்றனர். இக்கருத்தினை இராமலிங்க அடிகளார்,

“இறந்தார் உயிர் பெற்றெழுவர்;[116] இறந்தவர் மீண்டும் எழுந்து வந்திருப்பார்கள்;[117] இறந்தவர்களையெல்லாம் எழுப்பிக் கொடுத்தருள்வார் புதைத்து கைக்க[118] சித்தர்கள் பலர் இறந்த உடலைச் சமாதி செய்வதற்குக் கொண்டு செல்லும்போது உயிரோடு எழுந்ததற்குச் சான்றுண்டு.

சமாதி செய்யப்பட்ட சித்தர் உடலைப் பல ஆண்டுகளுக்குப் பின் தோண்டியெடுத்து அவர் உயிரோடு இருப்பதைக் கண்டுள்ளனர். “வேலூருக்கு அருகேயுள்ள வள்ளிமலையில் திருப்பணி நடந்தபோது படிக்கல்லை நகர்த்த கீழே சித்தர் ஒருவரின் அமர்ந்திருந்த திருக்கோலத்தைக் கண்டதாக கிருபானந்த வாரியார் கூறியுள்ளார். மண்ணுக்குள் அடக்கமான யோகியர் தேகத்தை மண்கூட தீண்டுவதில்லை என்ற வாக்குக்கு வால்மீகியும் எடுத்துக் காட்டாகத் திகழ்கிறார்”.[119] என முருகேசன் குறிப்பிடுகிறார்.

சித்தர்கள் மற்றும் ஞானிகள் தவிர ஏனையோர் இறந்த பின் இவ்விதம் மறுபடியும் உயிர்பெற்று வருதலை மக்கள் ஏற்றுக் கொள்வதில்லை. தம் உறவினர்களாலேயே இத்தகைய கடுமையான புறக்கணிப்பை அடையும் அந்த நபர் உயிர் பெற்று எழுந்திருக்கவே வேண்டாம். பந்த பாசங்களால் கட்டுண்ட நபர் மேலுலகம் சென்று திரும்பி வந்த தீட்டு தம்மையும் தீண்டிவிடுமோ அல்லது அவருக்கு ஏற்பட்ட மரண வலிகள் தம்மையும் அல்லது தங்கள் குடும்பத்தாருக்கும் பற்றித் தொடருமோ அல்லது அவரால் ஏதேனும் பழி

வாங்கப் படுவோமோ துர் ஆவிகள் தம்மை இனங்கண்டு விடுமோ என்ற அச்சங்களின் காரணமாக இவ்விதம் அவரை வெறுத்து ஒதுக்குகின்றனர்.

இக்கருத்தை ஊரன் அடிகளார் குறிப்பிடுகையில், “சாதாரண உயிரைப் பொருத்தவரை புதைத்த உடம்பில் இருந்து தனஞ்செயன் எவ்விதத் துன்பமுமின்றி தானே இயல்பாய் வெளியேறிவிடும். ஆனால் எரியூட்டிய உடலிலிருந்து தனஞ்செயன் பொறுக்க இயலாத வேதனையுடன் வலிய வெளியேற்றப்படுகிறது. ஆகவே உயிர்களைத் துன்புறுத்தாத வண்ணம் உடலை எரிக்காமல் சமாதி செய்தல் வேண்டும்”.[120] என இறுக்கம் இரத்தின முதலியாருக்கு அடிகளார் எழுதிய கடிதம் வாயிலாக அறியப்படுகிறது.

வள்ளலார் தாம் எழுதிய கடிதத்தில், “கர்மகாலம் முதலிய பேதங்களால் யாருக்காயினும் தேகஆனி நேரிட்டால் தகனம் செய்யாமல் சமாதியில் வைக்கவேண்டும். இறந்தவர்கள் திரும்பவும் எழுந்து நம்முடன் இருக்கப் பார்ப்போம் என்கிற முழு நம்பிக்கைக் கொண்டு, எவ்வளவு துயரப்பட்டாலும் அழுகுரல் செய்யாமல் சிற்றம்பலக் கடவுள் சிந்தையுடனிருக்க வேண்டும். நிச்சயமாக இறந்த தேகம் உயிர்ப் பெற்றெழும். இந்நிலையில் கணவன் இறந்தாலும் மனைவி தாலி வாங்க வேண்டாம்”.[121] என்று இராமலிங்க அடிகளார் கூறுகின்றார்.

**“இந்நாளே கண்டீர் இறந்தா ரெழுகின்ற**
**நன்னாளென் வார்த்தை தனை நம்புமினோ இந்நாள்**
**அருட்பெருஞ் சோதி யடைகின்ற நார்மெய்**
**அருட்பெருஞ் சத்தியம் தாம்”.**[122]

என்று உறுதிப்படக் கூறும் வள்ளலார் இறந்தார் எழும் கொள்கையில் வெற்றியடைந்தவர்கள் ஐம்பூதங்களாலும் அழியமாட்டார்கள். உள்ளே மண்ணினது திண்மையால் தறிக்கப்படார்கள். புறத்தே மண், கல் முதலியவற்றால் எறியினும் அவை அவர் வடிவைத் தாக்குவன வல்ல. உள்ளே நீரினது தன்மையால் குளிரப்படார்கள். புறத்தே நீரிலெழுத்தினும் அவர் வடிவம் அழுந்தாது. உள்ளே நெருப்பினது வெம்மையால் சுடப்படார்கள். புறத்தே நெருப்பில் சுடினும் அவர் தேகத்தில் சூடும் வதவும் தோன்றுவனவல்ல. உள்ளே

ஆகாயத்தின் கலப்பினால் அந்தரிக்கப்படார்கள்; புறத்தே காற்று அவர் வடிவைப் பரிசித்தசைக்காது என்பதை,

**“காற்றாலே புவியாலே சுகனமத னாலே**

**கனலாலே புனலாலே கதிரா தியாலே**

**கூற்றாலே பிணியாலே கொலைக் கருவியாலே**

**கோளாலே பிறஇயற்றும் கொடுஞ் செயல்களாலே**

**வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்**

**மெய் அளிக்க வேண்டும் என்றேன்”.**[123]

என இறந்தார் எழுவதைப் பற்றி ஒரு புதுவிளக்கத்தை வள்ளலார் சுட்டிக்காட்டியுள்ளார்.

**சாகாக்கலை**

சாகாக்கலையினைப் பற்றி ஔவைக்குறத்தில்,

**அகம், புறம் பேராப் பொருளை அறியில்**

**உகம் பல காட்டும் உடம்பு”.**[124]

எனவும், பட்டினத்தடிகள் குறிப்பிடுகையில்,

**“முடி சார்ந்த மன்னரும்**

**மற்றுமுள்ளோரும் முடிவிலொரு**

**பிடி சாம்ப ராய்வெந்து மண்ணாவதுங்**

**கண்டு பின்னுமிந்தப்**

**படி சார்ந்த வாழ்வை நினைப்ப**

**தல்லாற் பொன்னம்பலவர்**

**அடிசார்ந்து நாமுய்ய வேண்டு**

**மென்றேயறி வாரில்லையே”.**[125]

என்று மரணத்தின் நிச்சயத் தன்மையைப் பட்டினத்தார் கூறினாலும் சாகாக்கலை சாத்தியமென்று சித்தர்கள் அனைவருமே கூறுகின்றனர். இதனை அருணகிரியார்,

**“மரணப் பிரமாதம் நமக்கு இல்லையாம்”.**[126]

என்றும், திருவள்ளுவர்,

**“தேக மொழியாமல் சித்திபெறு ஞானம்**

**போக சித்தி பூசை விதியுண்**

**. . . . . .**

**முத்தி யடையார்க்கு நமன்**

**கால பைரவர்க்கே மரணங் காண்”.**[127]

என்றும் கொங்கணர் குறிப்பிடுகையில்,

**“இத்தனை சாத்திரம் தாம் படித்தோர்**

**செந்தூர் என்றாலுலகத்தோர் தாம் சிரிப்பார்**

**செத்துப் போய்க் கூடக் கலக்கவேண்டும்**

**அவன் தேகங்களுடனே சேர வேண்டும்”.**[128]

எனவரும் பாடலில் சாகாக்கலையை மரணமில்லாப் பெருவாழ்வாக இராமலிங்க அடிகளார் பிரபலப்படுத்தினார். இவருக்கும் முன்னர் ஔவையார் தம் குறள்நெறி வாயிலாக இக்கலையை எளிமையாகப் புரியவைக்கின்றார்.

மனிதன் மரணமிலாப் பெருவாழ்வு வாழ இயலும் என்பதனைப் பாரதியார் ஏற்றுக்கொள்ளும் வகையில்,

**“மலிவு கண்டீர் இவ்வுண்மை பொற்கூறேன்யான்**

**மடிந்தாலும் பொய்கூ றேன்மா னுடர்க்கே**

**நலிவுமில்லை, சாவு மில்லை! கேளீர் கேளீர்**

**நாணத்தைக் கவலையினைச் சினத்தைப் பொய்யை**

**அச்சத்தை வேட்கைதனை அழித்து விட்டால்**

**அப்போது சாவுமங்கே அழிந்து போகும்**

**மிச்சத்தைப் பின்சொல்வேன் சினத்தை முன்னே**

**வென்றிடுவீர், மேதினியில் மரணமில்லை”.**[129]

எனச் சாகாக்கலைக்கு அங்கீகாரம் அளிப்பவர் முயற்சி செய்தால் சாகாமலிருக்கத் தம்மாலும் முடியுமென்று சத்தியம் செய்து கூறுகின்றார்.

**“பார் மீது நான் சாகாதிருப்பேன், காண்பீர்”.**[130]

என வாலைக்கும்மியில் குறிப்பிட்டுள்ளது. “வெயிலின் ஒளியிலே காய்ந்த பொருள் பல காலம் சிதையாமலிருக்கக் காண்கிறோம். கோடி சூரியப்

பிரகாசமான சிவசோதியிலே திளைப்பவருக்கு உடலில் அழிவில்லை. ஒருபோதும் மறவாமல் சிவபரம் பொருளைத் தரிசித்தபடியிருக்கும் வகையினை அறிந்து கடைப்பிடிக்கும் நெறியாளருக்கும் என்றும் இறவாதே வாழ்ந்திருக்கும் படியான சக்தியும் உண்டாகிவிடும். இவர்களுக்கு இறத்தல் இல்லை என்பதால் பிறப்பும் இல்லை".[131] என்கிறார் ஔவையார். முத்திக்கு வழி அறிவால் ஐம்புலனைக் காத்து வாழ்வதுதான். ஐம்புலன்களின் உணர்வுகளை வழிமுறையோடு தெரிந்து தன் கட்டுப்பாட்டுக்குள் பொறிவாயில் ஐந்து அளித்தல் என்னும் சிவநெறியைச் சார்கிறது. அறிவுபெற்று வரும்வழியைத் தெரிந்து கொண்டால் அதன்பின் இந்த உடம்பு சாவை அடைவதில்லை என்றும், ஐந்து புலன்களின் அவாவைக் கட்டுப்படுத்தியிருந்தால் இந்த உடலுக்குச் சாவேயில்லை என்றும் உரைக்கின்றார்.

குண்டலி யோக சாதனையால் மூலாதாரத்தினின்று எழுப்புகின்ற குண்டலினி சத்தி சுவாதிட்டானத்தை அடைந்து மேலேறி உத்தித்தானத்தைக் கடக்கின்றது. இது பஞ்சபூதத் தத்துவங்களுள் நீரின் தத்துவமாகும். உந்திக்கமலம் என்பது ஆறு ஆதாரங்களில் மணிபூரகம் ஆகும். ஆயிரத்தெட்டு நாடிகளும் சூழ்ந்திருக்க நாடிகளுக்கு எல்லாம் வேராக விளங்கும் இடமாகும். இந்த நாபியகத்தில் ஆன்ம நலம் பெறுவதனை நோக்கமாகக் கொண்டு நோக்கினைச் செலுத்தினால் இவ்வுடலானது சாவையே அடைவதில்லை.

சீவனானது கழுத்திலே நின்று, ரேசக, பூரகங்களை நடத்துகின்றது. இவ்விதம் மூச்சு விடுதலும், இழுத்தலும் உயிர் வாழ்வை நிலை நிறுத்துவன. சித்தர்கள் இதனை விசுத்தம் என்பர். பேரொளியைத் தரிசித்தால் இந்தப் பஞ்சபூத உடம்பான மனிதசரீரம் ஒளியுடலாக மாறிவிடும்.

உடம்பினை முழுவதும் அழியாமல் காத்துக் கொள்ள முடியும். அதற்குவழி ஒன்றுதான். அது நெற்றிக்கு நேராக சுழிமுனையிலே வியாபித்திருக்கும் ஞானாக்கினியைக் காணவேண்டும். அப்படிக் கண்டுவிட்டால் உடம்பானது என்றைக்கும் அழியாமல் இருக்கும். உணர்வும் நினைவும் ஒடுங்கிய பின்னர் மனமானது சுத்த சூனியமான பரவொளியிலே

நிலைத்திருக்கும். இந்நிலையில் மனம் செயலற்று வெறுமையாக இருக்கும். மெய்யுணர்வாக விளங்கும் பரம்பொருளைத் தரிசிப்பதற்கு இந்த மனவெறுமைநிலையே தேவையாகிறது. "எங்கும் பரவியுள்ள நெருப்பின் சொரூபமாகப் பரந்திருக்கின்ற பரவொளியை உள்ளத்தில் மனவெறுமையில் தரிசிக்க வேண்டும். அப்படித் தரிசிப்பவர்களுக்கு இந்த உடலே தனது பஞ்சபூதத் தன்மையினை விட்டு ஒளியுடன் உடம்பாக மாறி, திருமாலினை ஒத்த சரீரமாகிவிடும். சரீரமானது இந்த ஒளியுருவை அடைகின்ற பொழுது அதனுள்ளிருக்கின்ற சீவனும் சூச்சும சரீரமும் ஒளியையும் பெற்றுவிடும்".[132] என்கிறார் ஔவையார்.

உள்ளத்தே சிவத்தைச் சிவசோதியாகவே கண்டு மனம் ஒன்றிவிட வேண்டும் என்று கூறி இப்படி ஒன்றிவிடுகின்றபோது அச்சிவசோதி சூச்சும தூல தேகங்களிலும் புகுந்து, பரவி அவற்றையும் ஒளியுடையதாக்கும். அப்போது சாவும் வருவதில்லை. அப்படி எங்கும் பரவியிருக்கும் பரம்பொருளை உணர்ந்து விட்டால் உடம்பும் அழிவில்லாமல் என்றும் நிலைத்து இருக்கும்".[133] என்றும், சித்தர்கள் கூறிய அனைத்துச் சாகாக்கலை செய்திகளையும் திரட்டித் தம் ஈற்றடியில் புலப்படுத்தி அக்கலைக்குப் புதியதொரு அறிமுகமும் செய்து வைக்கிறார் ஔவையார்.

மூச்சுப்பயிற்சியைப் பிரணாயாமம் என்று சித்தர்கள் கூறுகின்றனர். இதனை வாசியோகம் என்றும் அழைப்பர். உயிர்க்காற்றை உயிர்த்து, இருத்தி, அடக்கி வெளியிடுவது என்ற மூன்றுபடி நிலைகளை உடையது. உயிர்ப்பு அடிப்படையில் தான் அனைத்து உயிர்களுக்கும் ஆயுள் அமைகின்றது. விரைந்து சுவாசிக்கும் உயிர்களுக்கு வயது குறைவு. நமது உடம்பில் 72 ஆயிரம் நரம்புகளும் பத்து நாடியில் அடங்கும். இதனைத் தச நாடி என்பர். இந்தப் பத்தும் மூன்று நாடியில் ஒடுங்கும். சந்திரநாடி மூக்கின் இடது பக்கம் பொருந்தியுள்ளது. சூரிய நாடி மூக்கின் வலது பக்கம் பொருந்தியுள்ளது. நாடி புருவ நடுவில் அமைந்துள்ளது.

சந்திரநாடியை இடகலை என்பர். சூரியநாடியைப் பிங்கலை என்பர். சந்திரநாடி - சக்தி, சூரியநாடி - சிவம். பூரணம் ஆண், சூனியம் பெண். பிரணாயாமத்தில் வெளி வாயுவை உட்கொள்வது பூரகம். அவ்வாயுவை உள்ளே நிறுத்துதல் கும்பகம். கும்பித்த வாயுவை வெளிப்படுத்துதல் இரேசகம் எனப்படும். சித்தர்கள் இந்தப் பிராணாயாமா யோகத்தை நன்கு கவனமுடன் அதிசிரத்தை உடன் பயிலவேண்டும் என்று உபதேசிக்கின்றனர். காரணம் எல்லா யோக சித்திகளை அடைவதற்கும் இதுவே முதல் படிக்கலாகும். யோகத்தின் போது முதல் தீட்சை ரோம துவாரங்கள் வழியாகக் கெட்ட நீர்கள் வியர்வையாகக் கசியும். இரண்டாவதில் முத்தோசமாகிய வாத, பித்த, சிலேத்தும தோசங்கள் நீங்கும். மூன்றாவதில் பழைய கெட்ட உதிரங்கள் கசியும். நான்காவதில் சரீரம் தோலுரிப்பது போல சரீரத்தில் தோலுரியும், ஐந்தாவதில் சட்டைக் கழன்று தேகம் சிவந்த நிறமாகப் பஞ்சமூர்த்திகள் கோரியதைத் தருவார்கள்.

ஆறாவதில் சட்டை சுழன்று சுழுமுனை வாசல் திறந்து, தூரதிருஷ்டி தெரியும். ஏழாவதில் சட்டை வெறுப்பாய்க் கழன்று தீபம் போலப் பிரதிபலிக்கும். இலாகிரியுமாகும். ஒன்பதாவதில் தேகம் சூரியப் பிரகாசமான அட்டமாசித்தியும் கைவல்யமாகத் தேவர்கள் ஏவல் புரிவர். பத்தாவதில் தேகம் தீபம் போல் பிரதிபலிக்கும். பதினொன்றாவதில் சொரூப சித்தி அண்டத்தில் மௌனம், நரை, திரை, மூப்பு, பிணி, மரணம் ஏற்படாது. சுடரான சுழுமுனையில் சந்திரன் சேரும்போது பஞ்சபூதமும் அறிவும் ஒடுங்கும். இரவி சேரும்போது ஐம்புலனும் அறிவும் ஒடுங்கும். இரவி, மதி ஒன்றாகக் கூடிச் சுழுமுனையிடத்தில் ஒடுங்கில் அறிவும் தச வாயுவும் ஒடுங்கும். இந்த வாயுவை நடுநிலையிலும் மூலத்திலும் நாபியிலும் கண்டத்திலும் சுழியிட்டும் சாகாமல் நிற்கப் பெற்றவர்களே சித்தர்கள் ஆவர். மேற்கண்ட முடிவுகளால் திருமூலர் தத்துவமாக,

**“பட்டிப் பசுக்கள் இருபத்தி நாளுள**
**குட்டிப் பசுக்களோ ரேழுள ஐந்துள**
**குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்**
**பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே”.**[134]

எனும் பாடலில் ஆருயிர்கள் சீர் பெற்றுய்ய உடன்மெய் இருபத்து நான்கு முழுமுதலால் படைத்தளிக்கப்பட்டன. அவற்றை ஆன்மத் தத்துவம் என்பர். பட்டிப்பசுக்கள் 24 என்று குறிப்பிடுவதும் இறையே உணர்வு மெய்யாகிய ஏழும் குட்டிப் பசுக்கள் என்று கூறப்பட்டன. மேலும் உணர்ந்து மெய்யாகிய ஐந்தும் குட்டிப் பசுக்கள் பசுக்கள் என்றே கூறப்படும் உணர்வு மெய் - வித்தியாதத்துவம் உணர்ந்து மெய் - சிவத்தத்துவமாக விளங்குகிறது.

குட்டிப் பசுக்கள் அளவில்லாத பால் சொரியினும் என்பார் குடப்பால் சொரியினும் என்றனர். இவ்வொப்பால் உணர்வுமெய் உணர்ந்து மெய்கள் வாயிலாக வரும் அகமும் இன்பம் அளவில்லனவாகும். அங்ஙனம் இருப்பினும் ஆருயிர்கட்கு அவற்றின்கண் நாட்டமின்று புறமுக நாட்டமே மிக்குப் போலிகின்றது. ஆன்மத் தத்துவங்கள் 24, வித்தியா தத்துவங்கள் 7, சிவத்தத்துவங்கள் 5 ஆக 36 தத்துவங்கள் என்பர். இதனை,

**"ஆறாறு தத்துவத்தும் ஆணவத்துங் கன்மத்தும்**
**மாறா தெந்நாளும் மயங்காமற் பேறாக**
**நித்தனே! நிமலனே; நின்பாதத்தில் ஆன்மதுரை**
**அத்தனே சொக்கநாதா!".**[135]

**"ஆறாது தத்துவமும் ஆணவமும் நீங்கியுயிர்**
**பேறாக ஆனந்தம் பெற்றாலும் - வேறாகப்**
**பாரித் திருப்பதன்றிப் பாழான கன்மத்தை**
**நீத்திருக்க லாமோ நித்து".**[136]

என்று சித்தர் சிவபோகசாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆன்மாவைச் சத்துப் பொருள் எனக் குறிப்பர். சத்தும் அன்று, அசத்தும் அன்று என்பது இதன் பொருளாகும். சார்ந்த தன் வண்ணம் பெறும் ஆன்மாவின் இயல்பு தனித்திருத்தல் அன்று. தத்துவங்கள் சூழ நின்ற ஆன்மா. அத்தத்துவங்களின் வயமாக நிற்கும். இந்நிலையுடைய ஆன்மாவினால் தத்துவம் தீதமாகிய இறைமையை அடைதல் இயலாது.

அறிவிக்க அறியும் அறிவு பெற்ற ஆன்மா போக முறையினால் அறிவு பெற்றுத் தன்னைச் சூழ்ந்த தத்துவங்கள் அனைத்தையும் தனித்தனியே கடக்கும் என்றும், அனைத்தையும் கடந்த நிலையாகிய தத்துவ ஆதீத நிலையே தனித்திருத்தல் என்றும் கூறுவர்.

களிம்போடு கூடிய செம்பு களிம்பு நீக்கப் பெறப் பொன்னாதல் போன்றதாகும். இத்தத்துவத்தை இராமலிங்க அடிகளார்,

**"தத்துவ மனைத்தும் தனித்தின கடந்தோம்**
**தத்துவ தீதமேல் நிலையில்**
**சித்தியல் முழுதும் தெரிந்தனம் அவைமேல்**
**சிவநிலை தெரிந்திடச் சென்றோம்".**[137]

**"தத்துவம் அனைத்தும் தவிர்த்துநான் தனித்த**
**தருணத்தில் கிடைத்த தொன்றென்கோ".**[138]

**"தன்னரசே செலுத்தி நின்ற தத்துவங்கள் அனைத்தும்**
**தனித்தனிஎன் வசமாகித் தாழ்ந்தேவல் இயற்ற".**[139]

எனவரும் பாடல்களால் அடிகளார் தெளிவாகத் தத்துவங்கள் அற்ற நிலையைப் பாடுகின்றார். இதையே தமக்குரிய மறைபொருட் கூற்றாகப் பாடுகினறனர் சித்தர்கள்.

**"எழுந்திட்டா ரெல்லாரு மோடிப் போனார்**
**என்ன செய்வேன் தனித்திருந்தே".**[140]

**"உற்றாரும் பெற்றோரும் ஊரைவிட்டுப் போகையிலே**
**கற்றாரு மில்லாமல் என் கண்ணம்மா**
**துணை இழந்து நின்றதென்னே".**[141]

**"என்னோடு உடன் பிறந்தார் எல்லோரும் பட்டார்கள்**
**தன்னம் தனியே தனித்திருக்க மாட்டேன்டி"**

**"ஆருமில்லா வேளையிலே**
**குத்து விளக்கேற்றி - என் கண்ணம்மா**
**கோலமிட்டுப் பாரேனோ - என் கண்ணம்மா"**

**"வீட்டில் ஒருவரில்லை வெட்ட வெளியானேன்டி**
**காட்டுக் கெரித்தநிலா கனவாச்சே கண்டதெல்லாம்".**[142]

**"வெட்ட வெளிதன்னை மெய்யென் றிருப்போர்க்குப்**
**பட்டய மேதுக்கடி - குதம்பாய்**
**சாகாமற் றாண்டித் தனிவழியே போவார்க்கு**
**ஏகாந்த மேதுக்கடி - குதம்பாய்".**[143]

மேற்காட்டிய பாடல்களைப் பார்த்தால் யாரோ ஒருவர் துணையான பெற்றோர், உற்றார், உடன் பிறந்தார் முதலியோரை இழந்து புலம்வது போலத் தோன்றும்.

**"பேய் பிடித்தார் எல்லோரும் புறந்திருக்க**
**நான்போய்ப் பொது நடம்கண்டு உளம்களிக்கும்போது"**

என இராமலிங்கர் குறிப்பதும் இப்பொய்மை நிறைந்த தத்துவங்களைத் தவிர்த்த தனித்திருக்கும் நிலையேயாகும்.

அடிகளின் திருவருட்பாவில் தத்துவ வெற்றி என்ற பகுதியில் இதனை தத்துவங்கள் அற்ற தத்துவாதீத நிலையில் நிற்கும் ஆன்மா அறநிலையை உடைய இறைமையில் ஒன்றும் இதனையும் அடிகள் நான்காம் திருமுறையில் ஆளுடையபிள்ளையார் அருள்மாலை எனும் பகுதியில்,

**"நினைத்தபோதெல்லாம் நின்னையே நினைத்தேன்**
**நினைப்பற நின்ற போதெல்லாம்**
**தனித்தனி யாக்கி நின்கணே நின்றேன்".**[144]

எனக் குறிப்பிடும் ஒன்றிய நிலையை ஆன்ம தரிசனத்தில் காணமுடிகிறது. அடிகளார் நாயக நாயகி முறையில் பாடிய பாடல்களிலும் இத்தத்துவத்தைக் கூறுகின்றார்.

**"தனித் தலைவன் வருகின்ற தருணமிது தோழி**

**தனித் திருக்க என்ன விடுநீயும் தனித்தொருபால் இருத்தி".**[145]

**"துணிந்து நான் தனித்தபோது வந்தென் கை**

**தொட்டனன் பிடித்தனன்".**[146]

எனச் சுட்டிக்காட்டுகின்றார். தனித்த ஆத்மாவின் இயல்பு அறியும் தருணத்தைக் குறிப்பிடுகையில்,

**"முன்னை வினையெல்லாம் முழுதும் அறுத்தான்டி**

**தன்னை யறியவே தான்ஒருத்தி யானேன்டி".**[147]

எனவே தத்துவங்கடத்தல் தனித்திரு என்றும் தன்னையறிதல் என்று குறிப்பிடுவதன் மூலம் அறியமுடிகிறது.

மனத்தினைக் கட்டுக்குள் அடக்கிக் கோபத்தினை வென்று இவ்வுலகம் உயிர், உடல், மனம் முதலான தத்துவங்களைக் குறித்து அறிந்து கொண்டால் பிறப்பு, இறப்பு என்ற உலகச் சூழற்சியிலிருந்து விடுபடமுடியும் என்ற தங்களது ஆழ்ந்த அனுபவங்களைச் சிந்தனையாக மக்களுக்கு வழங்கி மனத்தின் வன்மையையும் உணர்த்துகின்றனர்.

# அடிக்குறிப்புகள்

1. சோ.நா.கந்தசாமி, தமிழும் தத்துவமும், ப. 1.
2. இரா. மாணிக்கவாசகம், திருமந்திர ஆராய்ச்சி, ப. 312.
3. முனைவர் க. இளமதி சானகிராமன், சித்தர் இலக்கியம், ப. 38.
4. அகத்தியர் தத்துவம் 300, பா. 111 - 116.
5. காகபுசுண்டர் காவியம், பக். 19 - 32.
6. காகபுசுண்டர் ஞானம், பக். 45 - 48.
7. சு.நாராயணன், தத்துவமும் உயிர்க்கோட்பாடும், ப. 3.
8. பட்டினத்தார், பொது, பா. 7.
9. திருவள்ளுவர் ஞானம், பா. 59.
10. இடைக்காடர், பா. 13.
11. கொங்கணர், பா. 43.
12. பாம்பாட்டி, பா. 78.
13. இடைக்காடர், பா. 57 - 66.
14. பட்டினத்தார், பா. 45, 53,
15. மேலது, பா. 60.
16. மேலது, பக். 15 - 20.
17. மேலது, பா. 1
18. மேலது, பா. 3.
19. மேலது, பா. 10.
20. மேலது, பா. 9.
21. மேலது, பா. 11.
22. மேலது, பா. 31.
23. சட்டைமுனி. முன் ஞானம் நூறு, பக். 35, 17.
24. வால்மீகர், பா. 12.
25. சட்டைமுனி. பக். 39 - 42.
26. மேலது, பா. 13.
27. மேலது, பா. 30.
28. மேலது, பா. 31 - 32.

29. மேலது, பா. 38 - 39.
30. மேலது, பா. 48.
31. மேலது, பா. 49 - 50.
32. சட்டைமுனி, முன் ஞானம் நூறு, பா. 51.
33. மேலது, பா. 56 - 57.
34. சட்டைமுனி, பின் ஞானம் நூறு, பா. 33
35. சட்டைமுனி, முன் ஞானம் நூறு, பா. 73 - 74.
36. மேலது, பா. 76 - 78.
37. பாம்பாட்டி, அகப்பற்று நீக்கல், பா. 78.
38. காகபுசுண்டர் ஞானம், பக். 61 - 63.
39. மேலது, பா. 69.
40. மேலது, பா. 4.
41. மேலது, பா. 6.
42. கருவூரார், பூஜாவிதி, பக். 9 - 10.
43. மேலது, பா. 8.
44. மேலது, பா. 9 - 10.
45. பத்திரகிரியார், மெய்ஞ்ஞானப் புலம்பல், பா. 2.
46. காகபுசுண்டர் ஞானம், பா. 28.
47. மேலது, பா. 29.
48. மேலது, பா. 20.
49. மேலது, பா. 11.
50. மேலது, பா. 14.
51. மேலது, பா. 15.
52. கருவூரார், பூஜாவிதி, பா. 29.
53. அழுகுணி, பா. 19.
54. பட்டினத்தார், அருட்புலம்பல், பா. 5.
55. அழுகுணி, பா. 3.
56. ஔவைக்குறள். பா. 222.
57. திருக்குறள்.
58. சி.எஸ்.முருகேசன், சித்தர்களின் சாகாக்கலை, பக். 86 - 87.
59. சிவப்பிரகாசம், சிவப்பிரகாசர் பாடல், பா. 50.

60. திருமூலர், திருமந்திரம், பா. 2587 -2588.
61. மேலது, பா. 1507.
62. மேலது, பா. 1508.
63. மேலது, பா. 1509.
64. மேலது, பா. 1512, 1513.
65. திருக்களிற்றுப் பாடியார், பா. 44.
66. இராமலிங்க ஆடிகளார், பா. 85
67. திருக்குறள். 446.
68. மேலது. 90.
69. வள்ளலார், இரண்டாம் திருமுறை, ப. 41.
70. வள்ளலார், திருவருட்பா, உரைநடைப்பகுதி, ப. 307.
71. மேலது. அனுபவமாலை, பா. 18.
72. மேலது, பா. 20.
73. ஔவைக்குறள், பா. 115.
74. திருக்குறள். 670.
75. மாணிக்கவாசகர், திருவாசகம், பா. 79.
76. சிவவாக்கியர், பா. 69.
77. இடைக்காடர், பா. 80.
78. சி.எஸ்.முருகேசன், சித்தர்களின் சாகாக்கலை, ப. 105.
79. மேலது, பா. 110.
80. திருமூலர், திருமந்திரம், பா. 1530.
81. மேலது, பா. 1520.
82. மாணிக்கவாசகர், திருவாசகம்,
83. மேலது, பா. 502.
84. மேலது, பா. 388.
85. மேலது, பா. 543.
86. மேலது, பா. 390.
87. மேலது, பா. 395.
88. சி.எஸ்.முருகேசன், சித்தர்களின் சாகாக்கலை, ப. 115.
89. திருஞானசம்பந்தர், மூன்றாம் திருமுறை, திருநல்லூர் பதிகம்.
90. திருநாவுக்கரசர், ஆறாம் திருமுறை, திருப்புகலூர் பதிகம்.

91. சுந்தரர் தேவாரம், திருநொடித்தான் மலைப்பதிகம்.
92. பெரிய புராணம், வெள்ளையானைச் சருக்கம், பா. 28-31.
93. ஔவைக்குறள், 225.
94. சன்மார்க்கவேண்டுகோள். 22
95. இராமலிங்க அடிகளார், குறையிரத்தல், பா. 99: 11.
96. இராமலிங்க அடிகளார், திருவருட்கொடை, பா. 1 -10.
97. இராமலிங்க அடிகளார், பாமாலை ஏற்றல், பா. 71: 12
98. இராமலிங்க அடிகளார், சுத்தசிவநிலை, பா. 109: 23
99. இராமலிங்க அடிகளார், அருட்பெருஞ்சோதி, பா. 164.
100. சி.எஸ்.முருகேசன், சித்தர்களின் சாகாக்கலை, ப. 125.
101. இராமலிங்க அடிகளார், திருவருட்பா, பா. 98: 6.
102. இராமலிங்க அடிகளார், நெஞ்சோடு கிளத்தல், 4575.
103. இராமலிங்க அடிகளார், திருவருட்பா, பந்தாடல், 4958.
104. மேலது, பா. 4959.
105. இராமலிங்க அடிகளார், திருவருட்பா உரைநடைப்பகுதி, ப. 316.
106. மேலது, ப. 35: பா. 4.
107. மேலது, ப. 109: 37.
108. மேலது, ப. 109: 39.
109. இராமலிங்க அடிகளார், திருவருட்பா, சன்மார்க்க சாதனம், 14.
110. இராமலிங்க அடிகளார், திருவருட்பா உரைநடைப்பகுதி, ப. 109: 38.
111. ஔவைக்குறள், பா. 227.
112. சி.எஸ்.முருகேசன், சித்தர்களின் சாகாக்கலை, ப. 128.
113. மேலது, ப. 129.
114. மேலது. ப. 130.
115. இராமலிங்க அடிகளார், திருவருட்பா, அற்புத பத்திரிக்கை.
116. இராமலிங்க அடிகளார், திருவருட்பா, கடைசி வார்த்தை உபதேசம், ப. 13.
117. இராமலிங்க அடிகளார், திருவருட்பா, சமாதி, பா. 11.
118. சி.எஸ்.முருகேசன், சித்தர்களின் சாகாக்கலை, ப. 130.
119. மேலது, ப. 131.
120. இராமலிங்க அடிகளார், திருவருட்பா உரைநடைப்பகுதி, ப. 430.
121. மேலது, ப. 109: 43.

122. மேலது, ப. 77.

123. ஔவைக்குறள், பா. 228.

124. பட்டினத்தார், பா. 79.

125. வள்ளலார் பெருமையும் சுத்த சன்மார்க்க விளக்கமும், ப. 90.

126. கந்தரலங்காரம்.

127. திருவள்ளுவர் ஞானம்.

128. பாரதியார், பாரதியார் கவிதைகள்.

129. வாலைக்கும்மி, பா. 70.

130. ஔவைக்குறள். 229, 232, 233, 234, 238, 239, 240, 246.

131. மேலது, பா. 241, 243, 244.

132. மேலது, பா. 247,

133. மேலது, பா. 249.

134. திருமூலர், திருமந்திரம், பா. 2834.

135. சொக்கநாத வெண்பா. 30.

136. சிவபோகசாரம், பா. 19.

137. திருவருட்பா, அருட்பெருஞ்சோதி அட்டகம்

138. திருவருட்பா, இறைவனை ஏத்தும் இன்பம்

139. திருவருட்பா, அருள் விளக்கமாலை

140. அழுகுணி, பா. 10.

141. பட்டினத்தார் அருட்புலம்பல்

142. மேலது.

143. குதம்பைச் சித்தர், பா. 57.

144. இராமலிங்க அடிகளார், நான்காம் திருமுறை, ஆளுடையபிள்ளையார் அருள்மாலை.

145. திருவருட்பா, அனுபவமாலை.

146. திருவருட்பா, நற்றாய்.

147. பட்டினத்தார் அருட்புலம்பல்.

## இயல் - 5

# சமுதாயநிலை

தமிழ்நாட்டின் தவப்பேறாகத் தோன்றியவர்கள் சித்தர்கள். உலகமெங்கும் இருக்கக் கூடிய மனித குலத்தில் அனைவரையும் பேணிக்காக்கும் பேரருளாளராகத் திகழ்ந்தவர்கள் சித்தர்கள் என்றால் அது மிகையாகாது. உலகமக்கள் அனைவரும் பிணி நீங்கி உடல் நலத்துடன் நெடுங்காலம் இனிதே வாழ்தல் வேண்டும் என்ற சமுதாயச் சிந்தனையைக் கண்டு உணர்த்திய மருத்துவமே சித்தமருத்துவமாகும். உலக மக்களின் நலனுக்காகவே சித்தர்கள் தங்களின் வாழ்வையும், ஞானத்தையும் பயன்படுத்தினர். உலகமே தாம் பெற்ற இன்பத்தையும், உயர்ந்த சிந்தனையோடு ஆற்றுப்படுத்தியவர்கள் சித்தர்கள். இதனால் சித்தர்களின் சமூகப் பார்வை நன்கு புலனாகிறது. மானிடத் தொண்டு நெறியாகச் சித்தர்கள் வளர்த்த சமயம், ஞானம், யோகம், மருத்துவம் ஆகியவற்றுடன் மனித சமுதாயத்திற்குப் பெருமை சேர்க்கும் முகமாக சமுதாயநிலையை விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

### மக்களிடத்தில் கடவுள் நம்பிக்கை அற்றுவிடக் காரணம்

1. பணத்தினைக் கொடுத்தால் கிடைக்கின்ற பொருள்களைப் போல காசினைக் கொடுத்தால் கடவுள் கிடைப்பதில்லை.

2. வாழ்க்கையில் துன்பங்களும், துயரங்களும் நிறைய அனுபவிக்க வேண்டியுள்ளது.

3. அறிவியல் சாதனங்களின் பெருக்கம் தொலைக்காட்சி, திரைப்படம், பத்திரிகைகள், நாவல்கள் போன்றவை இருப்பதால் கடவுளை நினைக்க நேரமில்லை.

4. வயதானவர்களுக்கு மட்டுமே இருக்க வேண்டிய கவலை என்று இளந்தலை முறையினர் எண்ணுவது.

5. வஞ்சனையும், பொய்யும், சூதும், களவும், கொலையும் நிறைந்துள்ளமை.

6. போலித் துறவியர்களின் பெருக்கம்.

7. அற்புதங்களைச் செய்யும் ஆத்மஞானிகள் இல்லை.

8. உண்மையான பக்தர்கள் இல்லை.

9. கல்வி கற்றல் அதிகமாக உள்ளதால் கற்றுவிட்டோம் என்ற செருக்கும், அனைத்தையும் சாதித்து விடுவோம் என்ற நினைவும் அதிகமாக இருத்தல்.

10. இல்வாழ்வினர் காணமுடியாது; துறவிகளால் மட்டுமே இயலும் என்ற பொய்க்கூற்று.

மேற்கண்ட கூற்றுகளே கடவுள் இல்லை என்பதற்குச் சான்றாகிறது. இன்றைய நிலையில் கடவுள் வழிபாட்டினைக் குறித்து மக்களிடம் கேட்டால்,

1. முன்னோர்கள் வழிபட்டனர். அதனால் தொடர்ந்து செய்யவேண்டியதாக உள்ளது. செய்யாவிட்டால் ஏதேனும் தீங்கு நேருமோ என்ற அச்சம் காரணமாகவே செய்கின்றோம்.

2. சிலர் பக்திப் பாடல்களை மனப்பாடம் பண்ணுதல், மொட்டை அடித்துக் கொள்ளுதல், மதச்சின்னங்களை அணிந்து கொள்ளுதல், காவி அணிதல் போன்ற இறை அருளைப் பெறச் செய்கின்றனர்.

3. மற்றும் சிலர் சடங்காக வழிபாட்டினை நடத்துதல். மனம் அதில் ஒன்றாமல் சொல்லுகின்ற மந்திரங்களுக்கு என்ன பொருள் என்பதை உணராமல் மனப்பாடம் செய்வதை வைத்து வயிற்றுப் பிழைப்புக்கு வழிகளைத் தேடுகின்றனர்.

4. சொல்லும் செயலும் ஒன்றா நிலையில் நல்லொழுக்கமும் இன்றிக் கடவுள் நேரிலா வந்து பார்க்கப் போகிறான் என்ற எண்ணத்தில் சிலர் வழிபாடு செய்தல் போன்றவை கடவுள் வழிபாட்டின் பொருளை மிகவும் கீழ்மைப்படுத்தி விட்டன.

திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஆண்டாள், மீரா . . . போன்ற பலர் வாழ்ந்த வாழ்க்கை இன்று நமக்குப் பொய்யாய், பழங்கதையாய்ப் போய்விட்டது.

## கல்விநிலை

எழுத்துகளெல்லாம் ‘அ’ கரத்தை முதலாகக் கொண்டது போல் இந்த உலகமானது ஆதிபகவனையே முதலாகக் கொண்டது என்று கூறுவதும் உண்மையானதாகும். என்றைக்கோ எழுதிய வள்ளுவம் இன்றைக்கும்

அனைத்துத் துறையினராலும் அலசி ஆராயப்பெறுகிறது. இன்னும் பலவற்றிற்கு விடையே கிடைக்கவில்லை. இப்படியிருக்க அனைத்துமாய், அகண்டமாய், அப்பாலுக்கு அப்பாலாய், நின்று இயங்கிப் பேரொளியினை வழங்கிப் புரக்கும் இறையினை, இல்லையென்பார் 'இல்லை' என்று கொள்வது நன்று.

எத்தனையோ பட்டங்களை வாங்கி மருத்துவராய் வந்தவர் கூட 'எங்களால் முடிந்ததைச் செய்துவிட்டோம். இனிமேல் இறைவனை வேண்டிக் கொள்ளுங்கள்' என்று கூறுவதைக் கேட்டு கொண்டிருப்பதையும் காணமுடிகிறது. வசதி வாய்ந்தோர் அலங்கார அறையில் செய்வதை வசதியற்றவர் தெருத்திண்ணையில் நடத்துகின்றனர். வசதி வாய்ந்தோரின் தூய உடல் அலங்கார வண்டியில் பலரும் பின் வர எடுத்துச் செல்லப்படும். வசதியற்றோர் பிணம் அனாதையாய், நடுத்தெருவில் கிடந்து எடுத்துச் செல்லப்படும். எனினும் இரண்டு உடல்களுமே அடுத்த நாள் கற்கும் கல்வி எல்லாம் பொய்க்கல்வி. உடலை மெய்யாக்கும் கல்வியே, மெய்க்கல்வி. இதனை மெய்ப்பிக்கும் வகையில் இடைக்காடர் பாடுகையில்,

**"சாகாதிருப்பதற்குத் தான் கற்ற கல்வியன்றோ**

**வாகான மெய்க்கல்வி வகுத்தறிநீ புல்லறிவே".**[1]

என்றும்,

**"பொய்யான கல்விக்கற்றுப் பொருண்மயக்கம் கொள்ளாமல்**

**மெய் ஞானக்கல்வி விரும்புவாய் கள்மனமே".**[2]

என்று குறிப்பிடுவதால் பொய்யான கல்வியைக் கற்பவர் நிலையை அறியமுடிகிறது. பொய்க்கல்வியை மெய்க் கல்வியாக்குவது இறைச்சக்தியே என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும்.

**இறைநிலை**

இல்லறத்தார் ஒவ்வொருவரும் துன்பங்களை நீக்கும் பரம்பொருளைக் குறித்து அறிந்து கொள்ளுதல் மிகவும் இன்றியமையாததாகும். பல்வேறு கடவுளர்கள் இருக்கின்றனர். இவர்களில் எவரை வணங்குவது என்ற வினாவே முதற்கண் எழுவதாகும். ஒருவருக்கு இனிப்பு பிடிக்கின்றது. மற்றொருவருக்குக் காரம் பிடிக்கின்றது. இப்படியாகவே அவரவர்களுக்குப் பிடித்தமானது எதுவோ

அதனை அவர்கள் அடைவர். உங்கள் தெய்வம், எங்கள் தெய்வம் என்ற பிரிவினையே குறுகிய மனப்பான்மையினைக் காட்டும் கண்ணாடியாகும்.

இறைத் தன்மையில் உயர்வு தாழ்வு என்பதில்லை. என் தெய்வம் உயர்ந்தது, உன் தெய்வம் தாழ்ந்தது எனும் பேச்செல்லாம் வீணானவர்களின் பேச்சே. சாதிப் பிரிவுகளும், சடங்கு முதலான சம்பிரதாயங்களுமே இறை உணர்வை இருக்கும் இடம் தெரியாமல் ஆக்கிவிட்டன.

“மனித வர்க்கம் தற்போது இருக்கும் நிலைமையில் இச்சக்தியைப் பற்றி அறியவோ, தெரிந்து கொள்ளவோ சக்தியற்றதாகவே இருந்து வருகின்றது. ஏனெனில் மதம் மதம் என்று சொல்லி பிரம்ம ஞானத்தைப் புறக்கணித்து, அறியாமையால் மனித வர்க்கம் ஒன்றை மற்றொன்று ஏமாற்றியே வயிறு வளர்க்க, விஞ்ஞானிகள் என்று சிலர் அரைகுறை ஞானத்தால் தெய்வம் இல்லை என வாதாட, உண்மையான தெய்வம் மனிதனால் அறியப்படவே இல்லை எனலாம்”.[2] என்று பி.எ. சுப்பிரமணியம் சுட்டிக்காட்டுகின்றார்.

வாழ்க்கையில், ‘எப்படியோ வசதியாக வாழ்ந்தால் போதும்’ என்ற நிலையில் வாழ்க்கையினைக் கொண்டு செல்லும் நமக்கு . . . இதனைப் பற்றிய உண்மையினை எப்படி உரைத்தாலும் ஏற்கும் மனவலிமை இருப்பதில்லை. யோகத்தினையோ, ஞானத்தினையோ அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் வருவதில்லை. எண்ணம்வரினும் நம்முடைய வாழ்க்கை முறைகள் வசதிகளைத் தருவதில்லை. பொறுமையாக அமர்ந்து அகவழிப் பாடாற்றி இறைவனைக் காணுகின்ற மன ஒருமைப் பாட்டை நாமே ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.

ஏதேனும் ஒன்றின் மீது முழு நம்பிக்கையினை வைத்து வழிபடும்போது நம்முடைய குறிக்கோளை நாம் கண்டிப்பாக அடைந்து விடுவோம். தெய்வம் பல என்ற எண்ணத்தைக் கொள்ளவேண்டாம். பொய்கையாழ்வாரின் கூற்றின்படி,

**“பொன்திகமும் மேனிப் புரிசடையெம் புண்ணியனும்**
**நின்றுலகந் தாய நெடுமாலும் - என்றும்**

**இருவரங்கத் தால் திரிவரேனும் ஒருவன்**

**ஒருவரங்கத் தென்றும் உளன்".**[4]

என்றும், திருமூலர் குறிப்பிடுகையில்,

**"ஒன்றே குலம் ஒருவனே தேவனும்".**[5]

என்றும், அகத்தியர் கூறுகையில்,

**"ஒருவனென்றே தெய்வத்தை வணங்க வேண்டும்".**[6]

என்றும் வரும் பாடல்களில் ஒன்றினைப் பிடிப்பதற்கு உண்மை வசப்படும் என்பதை அறியமுடிகிறது.

உயர்வு தாழ்வு கற்பிக்கும் மக்களைக் கண்ட சிவவாக்கியர்,

**"நாழியப்பும் நாழியப்பும் நாழியான வாறுபோல்**
**ஆழியோனு மீசனு அமர்ந்து வாழ்ந்திருந்திடல்**
**ஏறிலேறு மீசனு மியங்கு சக்ர தரனையும்**
**வேறு கூறு பேசுவார் வீழ்வர் வீணரகிலே".**[7]

என்றும்,

**"தில்லை நாய கன்னவன் திருவரங்க னும்மவன்**
**எல்லையான புவனமும் ஏக முக்தியானவன்**
**பல்லு நாவு முள்ளபேர் பருந்து கூறி மகிழுவார்**
**வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து மாய்வரே".**[8]

என்றும் பாடி இறையின் உண்மைத் தன்மையை உணர்ச்சிக் கொந்தளிப்புடன் விளக்குகிறார்.

இவ்வுலகில் நல்ல நண்பர்களைத் தேர்ந்து தெளிய வேண்டியதைப் போலவே தெய்வத்தையும் தெளிதல் வேண்டும். தெளிந்தபின் அவ்வொரு தெய்வத்தையே போற்றுதல் வேண்டும் என்றும் சித்தர்கள் நமக்கு அன்புக்கட்டளையாக விடுக்கின்றனர். பட்டினத்தார் ஐம்புலன்களை ஒருமித்து இருக்கவேண்டும் என்பதை,

**"கையொன்று செய்ய விழியொன்று**
**நாடக்கருத் தொன்றெண்ணப்**

**பொய்யொன்று வஞ்சக நாலொன்று**

**பேசப் புலால்கமழும்**

**மெய்யொன்று சாரச் செவியொன்று**

**கேட்க விரும்புமியான்**

**செய்கின்ற பூசை யெவ்வாறு**

**கொள்வாய்வினை தீர்த்தவனே".**[9]

என்னும் பாடலில், நன்கு தேர்ந்த தெய்வத்தினை நாள்தோறும் தரையிலே தலைபடக் கும்மிடுதல் வேண்டும். கை ஒன்றினைச் செய்ய, கண் ஒன்றினைப் பார்க்க, கருத்து ஒன்றினை எண்ண, வஞ்சகமுடைய நாக்கு ஒன்றினைப் பேச, உடல் ஒன்றினைச் சார, சொல் ஒன்றினைக் கேட்க நாம் இறைவனை வணங்கக் கூடாது. ஐம்புலன்களும் அவனையே நினைத்து, அவனது உணர்விலேயே ஆழ்ந்திருக்கச் செய்தல் வேண்டும் என்னும் கருத்தினை முன்வைக்கின்றார். பாரதியோ, இன்றைய நிலைக்கேற்ப கடவுள் கொள்கையை,

**"தவறா துணர்வீர் புவியீர் மாலும்**

**சிவனும் வானோர் எவரும் ஒன்றே**

**ஒன்றே புலவாய் நின்றோர் சக்தி**

**என்றுந் திகழும் குன்றா வொளியே".**[10]

என்றும், 'அறிவே தெய்வம்' என்பதை,

**"மாடனைக் காடனை வேடனைப் போற்றி**

**மயங்கும் அறிவிலிகாள் - எத**

**னூடு நின்றோங்கு மறிவொன்றே தெய்வமென்**

**றோதி அறி யீரோ".**[11]

எனும் பாடலால் விளக்குகிறார். எனவே அனைத்தையும் படைத்தாய், அனைத்திலும் உள்ளதாக அனைத்தையும் கொண்டதாகவும் அறிவினுக்கறிவாக நிற்கும் ஆனந்தப் பேரொளியை நம் மக்கள் உணர்ந்து தெளிவுபடும்படி நாம் செய்தல் வேண்டும். உள்ளத் தெளிவுடனும் உண்மை அறிவுடனும் அன்புப் பெருக்குடனும் நம்முள் ஆழ்ந்து வழிபடும்போது நமக்குள்ளேயே அவ்வுண்மைப் பொருளை நாம் கண்டு பேரின்பத்தை அடையமுடியும்.

ஒரு மனிதனின் செயற்பாடுகளை, அவன் வாழ்வாங்கு வாழும் நெறிகளை வகுத்துத் தருகின்றது. ‘ஒருவன் தனக்கு நிகழ்கால எதிர்காலங்களில் உறுதியான இன்பத்தை விளைவிப்பதும், தான் இறந்தபின் தனக்கு வீட்டு வாழ்க்கையைத் தருவதும், நிலையான நல்ல புகழை உண்டாக்குவதும் ஆகிய காரியத்தைத் தெரிந்து செய்தல் வேண்டும்.

ஒருவன் எப்பொழுதும் அன்பினாலும், அருகிருத்தலாலும் புகழ்ந்து கூறுவதலாலும், வணக்கத்தலாலும், பணி செய்வதலாலும், திறமையாலும் இசை முதலிய பல்வகைக் கலைகளாலும், கதைகளாலும், உபதேசத்தாலும், ஆதரவாலும், நேர்மையாலும், வீரத்தாலும், கொடையாலும், கல்வியாலும், இருக்கையினின்று எழுதலாலும் எதிர் செல்லுதலாலும் இன்பம் விளைவிக்கும் புன்முறுவலோடு கூடிய இன்சொற்களாலும், உதவி புரிதலாலும் நல்ல உள்ளப் பண்பாலும் உலகத்தின் நன்மைகளைத் தன் வயப்படுத்திக் கொள்ளவேண்டும் என்றும் எடுத்து இயம்புகின்றது.

இவ்வாறு தான் வாழும் வாழ்க்கையைப் பொறுத்தே தனக்குச் சொர்க்கமோ அன்றி நரகமோ கிடைக்கும் என்பதை அவன் அறிந்து கொள்ளவேண்டும். “மரணத்தின்பின் சுவர்க்கமோ நரகமோ கிட்டுவது மரணத்திற்கு முன்னால் நீ வாழ்ந்த வாழ்க்கையைப் பொறுத்தது”.[12] என்று கண்ணதாசன் தெளிவுபடுத்துகின்றார். நம்முடைய இந்துமதம், இல்லறத்தைத் துறந்தார்க்கே பேரின்பம் கிடைக்கும் என்று கூறவில்லை. மாறாக, வாய்மையும் நேர்மையும் அன்பும் அரவணைப்பும் கொண்ட காதல் வாழ்வினையே கடவுளாகக் காட்டுகின்றது. நாயன்மார்கள், ஆழ்வார்கள் அனைவரும் இக்கருத்தினையே ஒத்து வாழ்ந்தனர்.

## பேதமற்ற சமுதாயம்

சித்தர்கள் மக்கள் சமுதாயத்தில் ஒருவராகப் பிறந்து, கூட்டு வாழ்க்கை முறையினையும் சமூக அமைப்பிலும் இணைந்து, வாழ்ந்து மனித வாழ்வின் நிலையாமையை அறிந்தனர். இதனால் சமூக அமைப்பில் வெறுப்புற்று இயற்கையோடு இணைய விரும்பியே காடுகளிலும், மலைகளிலும்,

குகைகளிலும் சித்தர்கள் வாழ்ந்தனர். நாம் விரும்பிய இவ்வியற்கைச் சூழலை வென்று உயர்ந்து நின்றனர். “மனிதன் இயற்கையை மிகவும் சார்ந்திருக்கிறான். தொல்கதையும், மதமும் கருத்துகளில் அதன் பிரதிபலிப்பின் வடிவங்களாகப் பயன்படுகின்றன. சிறுமனிதன் மாபெரும் பயங்கரமான இயற்கைக்கு முன்னால் மிக அற்பமானவனாகக் காட்சியளிக்கிறான். மனிதனுடைய வாழ்க்கைக்குத் தேவையான உயிர் ஆற்றலை இயற்கையிடமிருந்து வென்றெடுக்க முடியாத நிலையில் அவன் எப்பொழுதும் பயந்து கொண்டே வாழ்கின்றான்”.[13] என்று அறிஞர் நோவிக் அவர்களின் கருத்துக்கு ஏற்ப, சித்தர்கள் சாமான்ய மனிதர்களிலிருந்து மாறுபட்டு இயற்கையை வென்றவர்கள் என்றறிய முடிகிறது.

தாம் இன்ன குடியில் பிறந்தவர்கள், இன்ன தொழிலுக்கு உரியவர்கள் என்ற பேதமற்ற நிலையைத் தாண்டி வாழ்ந்தனர். எனவே மக்கள் சமுதாயமும் சாதி, சமய, தொழில் அடிப்படையில் பேதமில்லாமல் வாழவேண்டும் என்று விரும்பினர். ஆண், பெண் பேதம் உயர்வு, தாழ்வு கொண்டதாக இருக்கக் கூடாது என்பதை வற்புறுத்தினர். சமயங்களின் பெயராலும், கடவுளர்களின் பெயராலும் பேதங்கள் ஏற்படுவதை விரும்பாத சித்தர்கள்,

**“ஒன்றே குலம் ஒருவனே தேவன்”.**[14]

என்று சுட்டிக்காட்டித் தாம் சுட்டியவாறே வாழ்ந்தும் வந்தனர். தாம் வாழும் ஊர், நாடு என்ற பேதத்தையும் அவர்கள் ஏற்கவில்லை. உலகம் முழுவதும் தன்னுடைய நாடே என்றும், உலக மக்கள் அனைவரும் மனித குலமாகிய ஓரே குலத்தவர் என்றும் சித்தர்கள் கருதினர். சித்தர்களின் வாழ்க்கை முறையை அயல்நாடுகளிலும் அறிஞர்கள் ஏற்றுக்கொண்டு வாழ்ந்துள்ளனர். தமிழ்ச் சித்தர்களும் அயல்நாடுகளுக்குச் சென்று வாழ்ந்து வந்துள்ளனர். சாதி, சமயம் பற்றிய சித்தர்களின் பார்வை அவற்றைப் பெரும்பாலும் மறுப்பதாகவே அமைகின்றது.

**“காணப்பா சாதிகுலம் எங்கட் கில்லை”.**[15]

என்று காகபுசுண்டரும்,

**“சமயபேதம் பலவான சாதிபேதங்கள்**

**சகத்தோர்க்கே யில்லாது சாதுக்களுக்கோ?”.**[16]

என்று பாம்பாட்டிச் சித்தர் தொடர்ந்து கூறுகையில்,

**"சாதிப் பிரிவினிலே தீமூட்டுவோம்".**[17]

என்று தமது மறுப்பை வெளிப்படுத்துகின்றனர்.

**"ஆதிகபிலர் சொன்ன ஆகமத்தின் சொற்படியே**

**சாதிவகை இல்லாமல் சஞ்சரிப்பது எக்காலம்".**[18]

என்று பத்திரகிரியார் ஏக்கப்பட்டுக் கூறுகின்றார்.

**"சாதியாவது ஏதடா? சலந்தி ரண்ட நீரெலாம்**
**பூதவாசல் ஒன்றலோ? பூத மைந்தும் ஒன்றலோ?**
**காதில் வாளி வானரகம்பி பாடகம்பொன் ஒன்றலோ?**
**சாதி பேதம் ஓதுகின்ற தன்மை என்ன தன்மையோ?".**[19]

என்று சிவவாக்கியர் சாதி பேதம் கூறுபவர்களை வினாக் கணைகளால் துளைக்கின்றார்.

**"சாதி பேதங்கள் சொல்லுகிறீர் தெய்வம்**
**தான் என்று ஒருஉடல் பேதமுண்டோ?**
**ஓதிய பால்அதில் ஒன்றாகி அதிலே**
**உற்பத்தி நெய்தயிர் மோர் ஆச்சு!".**[20]

என்று கொங்கணரும் பேதத்தின் இயல்பைச் சுட்டுகின்றார். இதனையே குணங்குடி மஸ்தான் சாகிபுக் குறிப்பிடுகையில்,

**"மண்ணான வஞ்சநெஞ் சத்தினர்க் கேறாது**
**மறைவுதரு புதையலாகி**
**மதபேதம் ஓதிமதி கெட்டவர்க் கெட்டாத**
**வான் கருணை வெள்ளம்".**[21]

சாதி, மத, பேதங்களைக் கடுமையாகச் சாடுகிறார். சமய தர்க்கம் புரிபவர்களை மதிகெட்டவர் என்று திட்டுகிறார்.

## வீடுபேறு (முத்தி) பெறும் வாழ்க்கை

பிறத்தல் - வளர்தல் - இறத்தல் என்ற இயல்பான நிலையில் அமைகின்ற மனிதவாழ்வு சமுதாயத்தில் நிகழ்ந்து கொண்டே இருந்தாலும் நினைவில் நிற்பது இல்லை. சமுதாயத்தின் நினைவில் நிற்கும் நிலையை

'பேறு' என்று வழங்குவர். பேறடையும் வாழ்வே பெருவாழ்வு என்பது சித்தர்களின் கொள்கை. பேறடைவதற்கு உடல், மனம் இரண்டும் பக்குவப்பட வேண்டும். அவற்றைப் பக்குவப்படுத்தும் முறைகளைக் கண்டுபிடித்து வாழ்ந்து - வாழ்ந்த முறையை விளக்கிக் கூறியவர்களே சித்தர்கள்.

மனித மனத்தின் விருப்பே வாழ்வின் அடித்தளம். அந்த விருப்பமானது நேரிய வழியில் சென்று சமுதாயத்திற்கு நன்மை பயப்பதாக அமைய வேண்டும். இழிந்த விருப்பமானது மனித வாழ்வை நாசப்படுத்துகின்றது. உணவு, பொருள், காமம் ஆகியவற்றின் மீது விருப்பம் கொண்டு வாழ்பவன் பேறுபெற இயலாது என்பதே சித்தர்களின் முடிவாகும்.

**"ஓயாமற் பொய்சொல்வர் நல்லோரை**
**நிந்திப்பர் உற்றுப் பெற்ற**
**தாயாரை வைவர்; சதியா**
**யாரஞ் செய்வர்; சாத்திரங்கள்**
**ஆயார்; பிறர்க்கு உபகாரஞ்**
**செய்யார்தமை அண்டினார்க்கு ஒன்று**
**ஈயார் இருந்தென்ன போயென்ன".**[22]

என்று பட்டினத்தார் பயனுற வாழ்தல் வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றார். தீய வழிகளில் விருப்பங்கள் அமைவதை விதைக்காமல் அறுக்க நினைக்கும் நிலைக்கு ஒப்பாக வேமன் கூறுகிறார்.

**"செல்வம் தனைவிரும்பல் செல்பிறப்பில் நல்லறத்தைப்**
**புல்லா ஒருவன் புலமதனில் நல்விதையை**
**வித்தாமல் வேமாகேள் வீணே பயன்விழைதல்**
**ஒத்திடுதல் ஆகாதோ ஊங்கு".**[23]

என்று குறிப்பிட்டுக் காட்டுகிறார். கால் என்பது காற்று. அதாவது மூச்சுக்காற்று. இது வாசி எனப்படும்.

**"உள்ளத்தால் அங்கி ஒழுங்கக் கொழுஊறில்**
**மெள்ளத்தான் வீடாம் விரைந்து".**[24]

என்று ஔவையார் குண்டலினி யோகத்தால் விரைந்து வீடுபேறு அடையலாம் என்று காட்டுகின்றார். இதேபோல் குணங்குடியும்,

**“நாடுமோ முத்திவழி கூடுமோ நெற்றிவிழி**

**நல்லறிவு வந்தா டுமோ”.**[25]

என்றும்,

**“சாதிவரை யற்றகுரு நாதனே முத்திநிலை**

**தருவதினி எக்கா லமோ”.**[26]

என்று வீடுபேறு அடைவதற்கு இறைவன் அருள்புரிய வேண்டும் என ஏக்கத்தோடு தம் கருத்தைப் பதிவு செய்கின்றார்.

**ஆசைகளை அறுத்தல்**

மனிதர்கள் படுகின்ற துன்பங்களுக்கு எல்லாம் ஆசையே காரணம் என்பதை அறிந்து ஞானம் பெற்ற புத்தபிரான், ஆசையைத் துறக்க வேண்டும் என்று கூறி அறிவுரை செய்தும், இன்றுவரை ஆசை உலகை ஆட்டுவித்துக் கொண்டுதாள் இருக்கின்றது. சித்தர்கள் முற்றிலும் ஆசையைத் துறந்தவர்கள் தமிழ் வேதமாக விளங்கும் திருமந்திரத்தில் திருமூலர்,

**“மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே**

**கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லும் கலம்போல்**

**அவிழ்கின்ற ஆக்கைக்கோர் வீடுபே றாகச்**

**சிமிழொன்று வைத்தமை சேர்ந்தறி யாரே”.**[27]

என்ற பாடலால் விளக்குகிறார். அதாவது செல்வமும், பொன்னும் நீரின்மேல் செல்லுகின்ற மரக்கலம் போல எக்கணத்தும் உடைந்து போகின்ற உடலிது என்று ஆசைகளை அறுத்தெரிய வலியுறுத்துகிறார். அவர்கள் தங்களுக்கு என்று எதையும் தம்முடன் வைத்துக் கொள்ளவில்லை. பெரிய செல்வந்தராக வாழ்ந்த பட்டினத்தார் ஒரே நொடியில் அத்தனை செல்வத்தையும் துறந்து, ஏக, சுகபோக வாழ்க்கையையும் துறந்து, உயிரை மட்டும் உடைமையாகக் கொண்டு வாழ்ந்தார். துறவிகளே பட்டினத்தாரையே, ‘பெருந்துறவி, மெய்யான துறவி’ என்றும் புகழ்ந்து கூறுகின்றனர். சிறந்த துறவியாகிய தாயுமானவரே பட்டினத்தாரைப் போன்று துறப்பதற்கு யாருக்கும் அரியதாகும் என்று வியந்து கூறுகின்றார்.

**“பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளைப்போல்**

**ஆரும் துறக்கை அரிதுஅரிது - நேரே**

**மனத் துறவும் அப்படியே மாயா! - இவற்றில்**

**உனக்கு இசைந்த வாறு ஒன்றேஓர்!”.**[28]

என்றும் அவர் பாடும்நிலை உள்ளார்ந்த மெய்யுணர்வால் உண்டாகிய நிலையாகும். தான் துறந்து நின்று பெற்ற அனுபவத்தைப் பட்டினத்தார் நம்மிடம் பகிர்ந்து கொள்கின்றார்.

**“விட்டேன் உலகம் விரும்பேன் இருவினை வீணருடன்**
**கிட்டேன் அவர்உரை கேட்டும் இரேன்மெய் கெடாதநிலை**
**தொட்டேன் சுகதுக்கம் அற்றுவிட்டேன் தொல்லை நான்மறைக்கும்**

**எட்டேன் எனும்பரமன் என்னிடத்தே வந்துஇங்கு எய்தியதே”.**[29]

என்று தான் துறந்து நின்றதனால் நான்கு மறைகளை ஓதினாலும் எட்டமாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கின்ற பரம்பொருளானது தானாகவே தம்மை வந்தடைந்த விதத்தை விளக்குகிறார். அவர் சீடரான பத்திரகிரியார்,

**“ஆசைவலைப் பாசத்து அகப்பட்டு மாயாமல்**

**ஓசைமணித் தீபத்தில் ஒன்றி நிற்பது எக்காலம்?”.**[30]

என்றும்,

**“ஊன்றுஆசை வேண்டி அடி ஊடறுப்பது எக்காலம்?”.**[31]

என்றும்,

**“பற்றற்று நீரில் படர்தாமரை இலைபோல்**

**சுற்றத்தை நீக்கி மனம் தூரநிற்பது எக்காலம்?”.**[32]

என்றும் பலவாறாக ஆசையை அறுத்தெறிந்து வாழ மக்களுக்கு அழைப்பு விடுக்கின்றார்.

**“வீணாசை கொண்டு திரியாதே இது**

**மெய்யல்ல பொய்வாழ்வு பொய்க்காடு”.**[33]

என்றும்

**“ஆசை வலைக்குள் அகப்பட்டதும் வீடு**
**அப்போதே வந்து அழிந்திட்டதும்**
**பாசவலை வந்து மூடியதும் வாலை**

**பாதத்தைப் போற்றடி வாலைப் பெண்ணே”.**[34]

என்றும் கொங்கணர் கூறுகின்றார். குணங்குடிக் குறிப்பிடுகையில் ,

**"ஆசாப சாசவலை யுள்ளகப் படுவனோ**

**அல்லது வெளிப்ப டுவனோ".[35]**

**"பொல்லாத காமக் கடற்புலா லென்னுமோர்**

**பூவைகைப் பட்டு ழல்வனோ".[36]**

**"வண்டாய்ப் பறந்தெழுந் திடுவனோ சிற்றின்ப**

**வாரியில் விழுந்திடு வனோ**

**மண்ணான காமக் குரோதமுன் டிடுவனோ**

**மாயைதனை வென்றி டுவனோ**

**பெண்டாசை யென்றபேய் கொண்டுசெத் திடுவனோ**

**பேரின்ப முற்றிடு வனோ".[37]**

**"ஆசைக்கடல் மீதிலோடிஅக் கரைகாணும்".[38]**

**"பொன்னாசை பெண்ணாசை மண்ணாசை மண்ணான**

**பூரண நந்தர் கோடி".[39]**

எனும் மேற்கண்ட பாடல்களில் பொன், பெண் ஆசைகளை துறந்தும், உலகத்தில் வாழும் காலத்தில் தடையாக இருக்கும் உறவுகளையும், தீய குணங்களையுடைய மனிதப் பதர்களையும் வெறுக்கின்றார்.

## பெண்ணாசை மறுத்தல்

ஆன்மா பேரின்ப நிலையை உணரும் வரை அமிழ்தாகத் திகழ்கின்றாள் பெண். சிற்றின்பங் சுகங்காட்டி பேரின்ப நிலையை உணர்வதற்குத் துணை நிற்பவள், பேரின்ப நிலையை உணரத் தொடங்கியதும், இனி அவள் துணை தேவையில்லை. ஆதலால் அவள் நீக்கத் தக்கவளாகக் கருதப்படுகிறாள். ஆசைகளில் துறப்பதற்கு அரியது பெண்ணாசை ஒன்றே. மண்ணாசை, பொன்னாசை அற்றவரும் பெண்ணாசையால் பேதலித்து நிற்கின்றனர். அத்தகைய பெண்ணாசை மிகவும் இழிவானது. அருவருப்பானது என்று பட்டினத்தார் வற்புறுத்திப் பாடியுள்ளார்.

**"சிற்றம் பலமும் சிவனும் அருகிருக்க**

**வெற்றம் பலம் தேடி விட்டோமே - நித்தம்**

**பிறந்த இடம் தேடுதே பேதைமட நெஞ்சம்**

**கறந்த இடம் நாடுதே கண்".**[40]

என்றும்,

**"வாய் நாறும் ஊழல்; மயிர்ச்சிக்கு நாறிடும்; மை இடும் கண்**

**பீ நாறும்; அங்கம் பிணவெடி நாறும்; பெருங் குழிவாய்ச்**

**சீ நாறும்; யோனி அழல் நாறும்; இந்திரியச் சேறு இந்திப்**

**பாய் நாறும்; மங்கையர்க்கோ இங்ஙனே மனம் பற்றியதே".**[41]

என்றும்,

**"சீயும் குருதிச் செழுநீர் வழும்பும் செறிந்து எழுந்து**

**பாயும்; புடைவை ஒன்றில்லாத போது பகல்இரவாய்**

**ஈயும் எறும்பும் புகுகின்ற யோனிக்கு இரவுபகல்**

**மாயும் மனிதரை மாயாமல் வைக்க மருந்து இல்லையே".**[42]

என்று பட்டினத்தார் பாடுவதிலிருந்து பெண்ணாசை என்பது எவ்வளவு அருவருப்புடையது என்பது புலனாகிறது.

**"பெண்ணாசையைக் கொண்டு பேணித் திரிந்தக்கால்**

**விண்ணாசை வைக்க விதியில்லையே கல்மனமே".**[43]

என்று இடைக்காட்டுச் சித்தர் மனத்தைத் திட்டுகின்றார்.

**"சாதி பேதத்தையும் மாதர்போ கத்தையும்**

**தள்ளிநிற் பதுச மாதி".**[44]

**"பெண்டாசை யென்றபேய் கொண்டு செத்திடுவனோ**

**பேரின்ப முற்றிடு வனோ".**[45]

**"தையலர்கள் ஆசையெனு மையலில் விடாய்கொண்டு**

**தாகித் தலைந்த வம்பன்".**[46]

**"வேசியர்க ளாசைவினை யகலாத பாவிதீ வினையுமக லாத பாவி".**[47]

**"எமனைப் பழித்தமட வார்அல்குல் என்றபாழ்**

**இடிகிணறு வீழ்ந்த முழுவனோ**

**இருகொங்கை யென்றதேள் கொட்டிமண் டைக்கேறி**

**எரியுதே யென்ற முழுவனோ".**[48]

மேற்கண்ட பாடல்களால் குணங்குடியும் பெண்ணாசை மட்டுமன்றி பிற ஆசைகளும் மனிதனைப் பல தீய பாதையை நோக்கி இட்டுச் செல்கிறது. இவ்வாசைகள் அனைத்தும் இறைவனை அடைவதற்கு தடைக்கற்களாக இருக்கிறது என்று புலம்புகிறார்.

**நிலையாமைக் கருத்தறிதல்**

உலக நிலைமையும் மானிட வாழ்வையும் படம்பிடித்துக் காட்டுவன சித்தர் பாடல்கள். ஆசைகளை நீக்க, நிலையில்லா வாழ்வை உணர்த்தும் நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, இன்பம் நிலையாமை எனப் பல்வேறு நிலையாமை கருத்துகளைக் காணமுடிகிறது. அவற்றில்,

**"ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்**
**பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்**
**சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு**
**நீரினில் மூழ்கி நினைப் பொழிந் தார்களே".**[49]

என்ற பாடலில் யாக்கை நிலையாமையும்,

**"அருளும் அரசனும் ஆனையும் தேரும்**
**பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னம்**
**தெருளும் உயிரொடும் செல்வனைச் சேரின்**
**மருளும் வினையவள் மாதவ மன்றே".**[50]

என்ற திருமூலரது பாடலில் செல்வம் நிலையாமையும்,

**"கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே**
**விழக்கண்டும் தேறார் விழியிலா மாந்தர்".**[51]

என்ற திருமூலர் பாடலில் இளமை நிலையாமையும் தெளிவாக விளக்குகிறார். இதுபோன்ற நிலையாமைக் கருத்துகளைச் சித்தர்கள் வலியுறுத்துகின்றனர்.

**"ஊரும் சதம் அல்ல உற்றார்**
**சதம் அல்ல உற்றுப் பெற்ற**
**பேரும் சதம் அல்ல பெண்டீர்**
**சதம் அல்ல பிள்ளைகளும்**
**சீரும் சதம் அல்ல செல்வம்**

**சதம் அல்ல தேசத்தில்**

**யாரும் சதம் . . . ”.**[52]

என்று பட்டினத்தார் உலகத்தில் எதுவுமே நிலைத்து இருப்பதில்லை என்று கூறுகிறார்.

**“பொண்ணாட்டி ஆவதும் பொய்யல்லவோ? பெற்ற**

**பிள்ளைகள் ஆவதும் பொய்யல்லவோ**

**கொண்டாட்டம் ஆன தகப்பன் பொய்யே முலை**

**கொடுத்த தாயும் நிசமாமோ”.**[53]

என்று கொங்கணர் நிலையாமையைக் கூறுகின்றார். குணங்குடி இக்கருத்துப் பாடலாக,

**“நாசச் சரீரத்தை நான்நான் எனக்குளறு**

**நாசம் பிடித்த பாவி”.**[54]

**“ஆரிருந் தென்னஆர் போயென்ன என்றுமனம்**

**அற்றிருப் பதுச மாதி”.**[55]

**“நாசச் சரீரத்தை நேசித்த பாசத்தை**

**நாசமாக் கினவர் கோடி”.**[56]

என்று நிலையாமைக் கருத்தை முன் வைக்கும் முகமாக, இவ்வுலகத்தில் மனித உயிர், உடல், பெருஞ்செல்வம், உறவு போன்ற எவையும் நிலையற்றது. இத்தகைய நிலையில்லா வாழ்வை எண்ணிப் பாராமல் மக்கள் தங்கள் மனம் சொன்னபடிக் கேட்டு அலைந்து திரிகின்றனர் என்கிறார்.

### போலிக் குருக்களைச் சாடுதல்

சித்தர்கள் வேதாந்த மகாவாக்கிய ஆராய்ச்சி செய்து அசிபதப் பொருளாகிய சிவத்தை உணர்ந்தவர்கள். சிவத்தை உணர்ந்தாலும் சுத்த மாயை, அசுத்தமாயை என்னும் இரண்டாலாகிய உலகத்தில் தாங்கள் வாழ்ந்திருந்தாலும் தாமரை இலைத் தண்ணீர் போல ஒட்டாதவராகவே இருப்பர்; பற்றற்றவர்; முத்திக்கு வழியாக இரந்து மூலமான உண்மைப் பொருளாக இருப்பர்; தத்துவமாகி மகாவாக்கியத்துள் அசிபதத்தையும், சதாசிவத்தையும்

உணர்ந்த தன்மையுடையவர்கள் என்று திருமந்திரம் குறிப்பிடுகிறது. திருமூலர் போலி அந்தணர்களைச் சாட நினைத்து,

**“சத்தியம் இன்றித் தனிஞானத் தானின்றி**
**ஒத்த விடையம்விட் டோரும் உணர்வின்றிப்**
**பத்தியும் இன்றிப் பரனுண்மை இன்றிஊன்**
**பித்தேறும் மூடர் பிராமணர் தாமன்றே”.**[57]

என்ற பாடலில் சத்தியம், ஞானம், பொறி இன்பத்தை விட்ட புத்தி, பத்தி, கடவுள் உண்டு என்ற உண்மை உணர்வு இவைகள் ஒன்றும் இன்றி உண்பதில் பேராசை கொண்ட அறிவிலிகள் பிராமணர்களில் போலி என விளக்குகிறார். போலிவேடம் பூண்டு மக்களை ஏமாற்றுபவர்களைச் சித்தர்கள் மிக வன்மையாகச் சாடுகின்றனர்.

**“சட்டையிட்டு மணிதுலுங்கும் சாத்திரச் சழக்கரே**
**பொத்தகத்தை மெத்தவைத்து போதம்ஓதும் பொய்யரே**
**நிட்டை ஏது? ஞானம்ஏது? நீரிருந்த அட்சரப்**
**பட்டை ஏது? சொல்வீர் பாதகக் கபடரே”.**[58]

என்று சிவவாக்கியர், அவர்களைப் பொய்யர், பாதகர், கபடர் என்ற பல சொற்களால் சாடுகின்றார்.

**“எல்லாம் அறிந்தவர் என்று சொல்லி இந்த**
**பூமியிலே முழுஞானி யென்றே**
**உல்லாசமாக வயிறு பிழைக்கவே**
**ஓடித் திரிகிறான் வாலைப் பெண்ணே”.**[59]

என்று கொங்கணர் போலிச் சாமியார்கள் உல்லாச வாழ்க்கை வாழ்வதைத் தோலுரித்துக் காட்டுகிறார். இதனைப் போல் குணங்குடியும் போலிகளைச் சாடுகிறார். இதனை,

**“சந்யாச மென்றபொய் வேடந் தரித்தவர்கள்**
**தம்மைநிகர் சொன்ன வம்பன்**
**செபமாலை கைக்கொண்டு வாய்முணு முணுத்தும்உப**
**தேசிநா னென்ற வம்பன்”.**[60]

**“தொழுதெழாப் பாவி”.**[61]

**"தொழுந் துறைகளற்ற பாவி".**[62]

**"ஏதமில் லாதகுரு அடிசென்னி மீதெடுத்து**

**ஏந்துவது மெக்கா லமோ".**[63]

**"விசனமொடு துக்கமே குடிகொண்ட பாவிபொய்**

**வேடந் தரித்த பாவி**

**வித்தகன் திருவடி தனைத்தொழுது தொழுதழுது**

**மெய்யரு ளுறாத பாவி".**[64]

எனச் சமுதாயத்திற்குப் போலிகளை அடையாளம் காட்டுகின்றார்.

## இறைக் கோட்பாடு

சித்தர்கள் பல தெய்வ வழிபாட்டில் இருந்தாலும் அனைத்திற்கும் ஆதாரமான காரணகர்த்தா ஒன்றே என்ற கருத்தில் உறுதியாக உள்ளவர்கள், ஆதலால் இறைவன் ஒருவனே என்ற கொள்கையைத் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். திருமூலர் இக்கருத்தை,

**"ஒன்றே குலம் ஒருவனே தேவனும்".**[65]

என்று திருமந்திரத்தில் இறைக்கோட்பாட்டை வலியுறுத்துகிறார். அகத்தியன், தம்முடைய ஞானம் - 9 என்னும் பாடல் தொகுதியில்,

**"சத்தியே பராபரமே ஒன்றே தெய்வம்".**[66]

என்று இறைவன் ஒருவன் என்ற கருத்தை வலியுறுத்திக் காட்டுகின்றார். பட்டினத்தார் தம் பாடலில், **"ஒன்றென் றிருதெய்வம் உண்டென்றிரு".**[67] தெய்வம் உண்டு என்றும் அ∴து ஒன்று என்றும் விளக்குகிறார். அகத்தியர் இறைக்கோட்பாட்டை வலியுறுத்தும் போது,

**"ஒருவனென்றே தெய்வத்தை வணங்க வேணும்".**[68]

என இறைவனைச் சுட்டுகின்றார். ஆதியில் பிரம்மம் எனப்படும் இறை ஒன்றுதான் இருந்துள்ளது. பின்னர் அப்பிரம்மமே பல்வேறு வடிவங்களைக் கொண்டது. பல்வேறு சீவன்களாகவும் வடிவெடுத்துள்ளது. இக்கருத்தைச் சிவவாக்கியர்,

**"ஆதியான தொன்றுமே யனேகரூப மாயமாய்ப்**

**பேதபேத மாயெழுந்து சர்வசீவ னானபின்".**[69]

எனப் பதிவிட்டுள்ளதால் அறியப்படுகிறது. பல இடங்களில் பல்வேறு இறை வடிவங்களை முன்னிறுத்தி வழிபடுவதும், அவ்வாறு வழிபடுவதால் ஏற்படும் பேதங்களும் சித்தர்களின் கண்டனத்திற்கு உட்படுகின்றது. வேறுவேறு கடவுள் இருக்க முடியாது என்றும், அவ்வாறு உள்ளது என்பவரை சிவவாக்கியர்,

**"எங்கள் தெய்வம் உங்கள் தெய்வம்**

**என்றிரண்டு பேதமோ**

**உங்கள் பேதம் அன்றியே உண்மை**

**இரண்டும் இல்லையே".[70]**

என்றும்,

**"அங்குமிங்கு மாகின்ற ஆதிமூர்த்தி ஒன்றலோ**

**வங்கவாரம் சொன்ன பேர்கள் வாய்புழுத்து மாள்வரே".[71]**

என்றும் கடுமையான வார்த்தைகளால் தம் பாடல் மூலம் சாடுகிறார். இறைவன் இரண்டல்ல. ஒன்றே என்பதைக் கூறும்போது,

**"ஒன்றும் ஒன்றும் உலகனைத்தும் ஒன்றுமே**

**அன்றுமின்றும் ஒன்றுமே அனாதியான தொன்றுமே".[72]**

என்று இப்பிரஞ்சம் எதிலிருந்து வெளிப்பட்டதோ அதனுள்ளேயே அடங்கும் என்பதால் பிரம்மாவாகிய இறை ஒன்றே என்கிறார். இதனையே குணங்குடியும் ஓர் இறைக் கோட்பாட்டைத் தமது பாடலில்,

**"நீக்கமற எங்கெங்கும் நின்று நிறைகின்ற பொருள்**

**நேரில் என்முன் நிற்கவே".[73]**

**"அண்டகோ டிகளையுந் தன்னுள்வைத் தணுவினுக்**

**கணுவான கார ணத்தை**

**அறியாம லென்றெய்வ முன்றெய்வ மென்பார்க்கும்".[74]**

**"ஏகறப் பில்ஆல மீன்அருட் காளான**

**ஏழைபங் காளர் கோடி".[75]**

எனும் பாடல்களில் இறைவன் ஒருவனே எனும் கருத்தை அறியாமையை எடுத்துக் கூறுகிறார்.

## சோதி வழிபாடு

எல்லாம் வல்ல இறைவனைச் சோதியாக வணங்குவது உலகோர் இயல்பு. சித்தர்களும் இறைவனைச் சோதி வடிவில் வணங்கி மகிழ்ந்து, போற்றிப் புகழ்ந்துள்ளனர். இறைவனைச் சோதி வடிவில் உள்ளான் என்பதற்கு, சித்தர்களின் இலக்கியங்கள் பல இடங்களில் சான்று பகர்கின்றன. எல்லாம் வல்ல இறைவன் சோதிவடிவில் உள்ளதை வடலூர் வள்ளலார்,

**"சோதி சோதி சோதி சுயஞ் சோதி சோதி சோதி பரஞ்**

**சோதி சோதி சோதி யருட் சோதி சோதி சோதி சிவம்".**[76]

என்று இறைவனே சுயமாகவும், பரமாகவும், அருளாகவும், சிவமாகவும் சோதி வடிவில் உள்ளதைத் தெளிவாக்குகிறார். திருமூலரும், சிவனாகிய இறைவனே சோதி வடிவில் நின்றான் என்பதை,

**"சோதித் தனிச்சுட ராய்நின்ற தேவன்".**[77]

என்று தெளிவாக விளக்குகிறார். சிவன் ஒப்பற்ற ஒளிவடிவில் இருளை நீக்குபவன் என்பதை,

**"தனிச்சுட ரெற்றித் தயங்கிருள் நீங்க".**[78]

எனும் திருமந்திரத்தால் விளக்குகிறார். குணங்குடியும் குறிப்பிடுகையில்,

**"குருநாத னாகமெய்ப் பிரணவ சொரூபக்**

**கொழுந்தெனது முன்னிற் கவே".**[79]

**"சோதிப்பிர காசச் சுயஞ்சோதி".**[80]

எனும் பாடலில் இறைவனைச் சோதியாக வழிபடுவதை எடுத்துரைக்கின்றார்.

## அட்டாங்க யோகம்

யோகங்களில் தலையாயது இராசயோகம் என்று அழைக்கப்படும். சிவராசயோகம் எனவும் வழங்குவர். அட்டாங்க யோகம் என வழங்கும் இவ்யோகத்தைப் பற்றிக் கடுவெளியார் குறிப்பிடுகையில்,

**"ஒப்பரும் அட்டாங்க யோகம்".**[81]

என்று பெருமையாகப் பாடியுள்ளார். திருமூலர் அட்டாங்க யோகத்தை,

**“பிரைச்சதம் எட்டும் பேசியே நந்தி**

**நிரைத்த இயமம் நியமஞ்செய் தானே”.**[82]

என்று குறிப்பிடுகிறார். பிரைச்சதம் எட்டு என்பதற்கு ‘அட்டாங்க யோகம்’[83] என்று பொருள் தருகிறார். திருமந்திரத்தின் தெளிவுரை ஆசிரியர் நாராயணவேலுப் பிள்ளை காகபுசுண்டரின் இராசயோகத்தின் பெருமையைக் குறிப்பிடுகையில்,

**“நேரப்பா ராசாங்க யோகப் பார்த்து**

**நிலையறிந்து கண்டவனே கோடிக்கு ஒன்று”.**[84]

என்று பாடியுள்ளார். மேலும் இராசயோகத்தினை அருளியது ஆதிசக்தியான வாலை என்பது இவரது கருத்தாகும். அக்கருத்தினை,

**“தாரணத்தில் நின்றிலங்கும் மவுன வாலை**

**நாட்டினாள் சிவராச யோகங் கேளு”.**[85]

எனும் பாடல் வழி அறியப்படுகிறது.

அட்டாங்க யோகம் என்பது எட்டு அங்கங்களைக் கொண்டது. அவை:

1. இயமம் : தீயவைத் தவிர்த்தல் (தீ தகற்றல்)
2. நியமம் : நல்லன செய்யல் (நன்றாற்றல்)
3. ஆசனம் : அமர்தல், இருத்தல், நிற்றல் (இருக்கை).
4. பிரணாயாமம் : மூச்சுப்பயிற்சி (வளி நிலை)
5. பிரத்தியாகாரம் : புலனடக்கம் (தொகை நிலை)
6. தாரணை : ஒன்றை நினைத்தல் (பொறை நிலை)
7. தியானம் : அதனையே தொடர்ந்து நினைத்தல் (நினைப்பு).
8. சமாதி : சிவம் உணர்தல் (நொசிப்பு).

என்பனவாகும். இவ்வங்கங்களை உள்ளடக்கிய அட்டாங்க யோகத்தினைத் திருமூலர் தமது திருமந்திரத்தில்,

**“இயம நியமமே எண்ணிலா ஆதனம்**

**நயமுறு பிராணாயா மம்பிரத்தி யாகாரம்**

**சயமிகு தாரணை தியானம் சமாதி**

**அயமுறும் அட்டாங்கம் ஆவதும் ஆமே”.**[86] என்று குறிப்பிட்டுள்ளார்.

குணங்குடி அட்டாங்க யோகத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

**“எற்றாத மாயைதனை பெற்றுபே ரெற்றுபேர்**

**இன்பமென் முன்னிற் கவே**

**ஏகமா யொருகாலம் அழியாத ஒளியான**

**எம்பிரான் முன்னிற் கவே**

**புத்திக்கும் எட்டாத அட்டாங்க யோகமழை**

**பொழிவதென் முன்னிற் கவே”.**[87]

மாயை முதலானவற்றை ஒழித்து பேரின்ப நிலையின் சிறப்பை அடைய இறைவனிடம் அட்டாங்கயோக மழையில் நனைந்து அருள்புரிய வேண்டுகிறார்.

**சமாதி (சம + ஆதி)**

ஆதியாகிய இறைவனோடு இரண்டற ஒன்றி நிற்கும் நிலையே சமாதி ஆகும். சிவத்தை உணரும் இந்நிலை அட்டாங்க யோகத்தின் இறுதி அங்கமாகும். நொசிப்பு என்ற பெயர் சமாதிக்கு உண்டு. ‘மனத்தை ஓரே வழியில் செலுத்துதல்’ என்று நொசிப்பிற்குப் பொருள் காட்டுகிறது கழகத்தமிழ் அகராதி. நொசிப்பாகிய சமாதியைப் பற்றி, பத்திரகிரியார் தம் மெய்ஞானப் புலம்பலில்,

**“பேரறிவி லேமனத்தைப் பேசாம லேயிருத்தி**

**ஓரறிவி லெந்நாளும் ஊன்றிநின்ப தெக்காலம்?”.**[88]

என்றும்,

**“பலவிடத் தேமனத்தைப் பாயவிட்டுப் பாராமல்**

**நிலவரையி னூடேபோய் நேர்படுவ தெக்காலம்?”.**[89]

என்றும் சுட்டிக்காட்டுகிறார். இச்சமாதியினைப் பற்றி சட்டைமுனி தமது பின் ஞானம் 100 எனும் நூலில்,

**“தானென்ற அதிட்டான சைதன் யத்தைத்**

**தனையளித்து நிலவரையில் தீபம் போல**

. . . . . . .

**விளங்கியதோர் தத்வலயச் சமாதி யாச்சு”.**[90]

என்று விளக்குகிறார். சிவபெருமானின் அழகிய பெருஒளியில் ஒன்றுகின்ற சமாதியைப் பற்றித் திருமூலர்,

**“விந்துவும் நாதமும் மேருவில் ஓங்கிடிற்**

**சந்தியி லான சமாதியிற் கூடிடும்”.[91]**

என்று குறிப்பிடுகிறார். குணங்குடி இறைவனுடன் இரண்டறக் கலக்க அட்டாங்கயோகம் புரிந்து சமாதி என்னும் நிலைப்பேற்றைப் பெறுவதைக் குறிப்பிடுகிறார். இதனை,

**“பாயும்ஈ ராறுகலை பாயாது பக்குவம்**

**பண்ணிவைப் பதுச மாதி”.[92]**

**“நாலிரண் டெட்மெட் டெட்டாகி யழியமுன்**

**நாலாக்கு வதுச மாதி”.[93]**

**“நிதியாசை யற்றுதுற வதியாசை யுற்றுநன்**

**னிட்டைபுரி வதுச மாதி”.[94]**

**“ஆழியென அருள்பொங்கும் ஆசையற் றழுதழுது**

**அகங்களிப் பதுச மாதி”.[95]**

**“உச்சிவெளி சென்றுதமொளி கண்டுமிரு விழியையும்**

**உட்குவிப் பதுச மாதி”.[96]**

என்று சமாதியடையும் நிலையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றார். இவ்வாறாக, சித்தர்கள் தங்கள் சமூகத்தின் வாயிலாக, தீது அகற்றலாகிய இயமத்தையும், நன்றாற்றலாகிய நியமத்தையும், மூச்சுப் பயிற்சியாகிய பிராணயமத்தையும், இருத்தலாகிய ஆசனம் என்பது பற்றியும் குறிப்பிட்டுள்ளார். மேலும் புலனடக்கமாகிய பிரத்தியாகாரத்தினையும், ஒன்றை நினைக்கும், தாரணையும், அதனையே தொடர்ந்து நினைக்கும் தியானத்தையும், சிவத்தோடு ஒன்றி உணரும் சமாதியையும் எட்டு அங்கங்களாக விளக்கி அட்டாங்க யோகங்களைப் பாடியுள்ளனர்.

### அட்டமாசித்திகள்

சித்தர்களும், ஞானிகளும் தன்னையே தானறிந்து, தன் சிரசில் வீற்றிருக்கும் கடவுள் அருளால் தம்முடைய உடலை, ஆதாரமாகக் கொண்டு அட்டமாசித்தியை சிவயோகத்தின் பயனாகப் பெற்று உறுதவம் செய்து

உன்னதமான பேரின்ப நிலையை அடைந்தவர்கள் சித்தர்கள் ஆவர். திருமூலர் திருமந்திரத்தில்,

**“அணிமாதி சித்திகள் ஆனவை கூறில்**

**அணுவில் அணுவின் பெருமையின் நேர்மை**

**அணுகாத வேகார் பரகாமம் மேவல்**

**அணுவத்தன் எங்கும் தானாதல் என்று எட்டே”.**[97]

என்று தெளிவுபடுத்துகிறார். காகபுசுண்டர் தமது ஞானம் 80 - எனும் நூலில்,

**“ஆச்சென்ற அபுரூப மா போதே அட்டமா சித்திவகை யெட்டு மாடும்”.**[98]

என்று வரையறுக்கின்றார். இச்சித்திகள் எட்டும் எட்டெட்டாக விரியும் தன்மையுடையது. இதனைச் சட்டைமுனி குறிப்பிடுகையில்,

**“சித்தாகுஞ் சித்தியுமா மெட்டுட்ட டாகுந்**

**திறமாக நின்றவர்க்கு மத்தரஞ் சித்தி”.**[99]

என்று விளக்குகிறார். சித்தர்கள் தங்களின் யோக அனுபவங்களைக், குறிப்பாக அட்டாங்க யோகம், சித்திகள், யோக முத்திரைகள் முதலியவற்றையே தளமாக வைத்துப் பல்வேறு பாடல்களைச் சித்தர்கள் இயற்றியுள்ளனர். குணங்குடியும் இக்கருத்தினை மெய்பிக்கும் வகையில்,

**“நாடுமோ முத்திவழி கூடுமோ நெற்றிவிழி**

**நல்லறிவு வந்தா டுமோ**

**நற்குணங் குடிமீது வீடுதர என்றன்ஜய**

**நாதனரு ளுந்தே டுமோ**

**ஆடுமோ அட்டமா சித்தியும் புத்தியும்**

**அந்தவழி யைச்சா டுமோ”.**[100]

**“நாலிரண் டெட்டுமெட் டெட்டாகி யழியமுன் நாலாக்கு வதுச மாதி”.**[101]

என்று முத்தியடையும் நிலைபேற்றையும் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

**சித்தர் அறவியல்**

சித்தர் அறவியல் இருகூறுகள் உடையது. ஒன்று தன்னை உணர்வதற்கு உதவுவது. மற்றது அந்தத் தன்னுணர்வின் விளைவாகப் பின்தொடர்வது. தன்னை உணரும் முயற்சியில் வலியுறுத்தப்படும் அறவியல் கூறுகள் இரண்டு.

ஒன்று, தன்னலத்திலிருந்தும் ஆணவத்திலிருந்தும் ஒருவன் தன்னை விடுவித்துக் கொள்ளவேண்டும் என்பதாகும். “தன் தந்தை, தன் தாய் என்ற பற்றுதல் கூட இருக்கக் கூடாது”.[102] என்கிறார் திருமூலர். “எனது என்றும் தான் என்றும் இல்லாதிருக்க வேண்டும்”.[103] என இடைக்காடர் குழலூதுகிறார்.

தன்னை உணர்தல் என்பது, ‘நான் - எரிகிறேன், நான் - எரிகிறேன், நான் - எரிகிறேன்’ என்பதன்றி வேறன்று’ தன்னை உணர்வதற்கு உதவுகின்ற இரண்டாவது அறவியல் கூறு ஆசைகளை அறுத்தல்.

**“ஆசையறு மின்கள் ஆசையறு மின்கள்**

**ஈசனோ டாயினும் ஆசையறு மின்கள் . . .”.**[104]

என்று உறுதியாகக் குறிப்பிடுகிறார் திருமூலர். “முத்தியடைய வேண்டும் என்கின்ற ஆசையைக் கூட விட்டுவிட வேண்டும். அது வேண்டும் இது வேண்டும் என்கின்ற வேட்கையை விடாமல் வேதாந்தம் படித்து என்ன புண்ணியம் என்றும் அவர் கேட்கிறார்”.[105] “வேண்டும் வேண்டும் என்கின்ற வேட்கையை விட்டால் வேண்டப்பட்ட பொருள் தானாகவே வந்து அடையும்”.[106] என்பது சிவவாக்கியர் கூற்றாகும்.

தன்னை உணர்ந்தபின் சித்தன் சமூகத்தைவிட்டு வெளியேறுவதில்லை. சமூகத்திற்குள்ளேயே வாழ்ந்து மக்களின் நலனில் அக்கறை கொண்டவனாக அருட்பணி ஆற்றுகின்றான். இந்த அருள் நிலையில் அவனது அறச்செயல்கள் மற்றவர்களுடைய நல்வாழ்விற்கான வழிகாட்டிகளாக அமைகின்றன. “அஷ்ட புஷ்பாஞ்சலி அல்லது எண்மலர்ப் பூசை என்று ஒன்றுண்டு. இந்தப் பூசையில் பயன்படுத்தப்படும் பூக்கள் இன்னா செய்யாமை, புலனடக்கம், அருள், பொறை, அறிவு, தவம், வாய்மை, பிறிதின் நோய் தன்னோய்போல் போற்றும் உண்மை உணர்ச்சி ஆகியனவாகும். சடங்கு வழிப்பட்ட பூசையைக் காட்டிலும் அறச்செயல்களே பூக்களாகக் கொண்டு செய்யும் இந்தப் பூசையையே சித்தர்கள் பெரிதும் விரும்பினார்கள்”.[107]

இன்னாசெய்யாமை என்ற அறச்செயல் தான் எல்லா அறங்களுக்கும் முதுகெலும்பு போன்றது என்றும், அதைப் பயில்வதன் மூலம் சமத்துவம் பெறமுடியும் என்றும் சித்தர்கள் கருதினார்கள். "ஈரம் உடையவர் காண்பர் இறைவன் திருவடி".[108] என்று திருமூலரின் அனுபவக் கூற்றாகும். இதனை,

**"யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை**
**யாவர்க்கு மாம்பசு வுக்கொலு வாயுறை**
**யாவர்க்கு மாம் உண்ணும் போதொரு கைப்பிடி**
**யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே".**[109]

எனத் தான் உண்பதற்குமுன் மற்றோர் உயிருக்கு ஒரு பிடிச்சோறு போடவேண்டும் என்னும் திருமூலரின் கருத்தே பிடியரிசித் திட்டத்தின் முன்னோடி என உறுதியாகக் கூறமுடியும்.

## சித்த மருத்துவம்

சித்தர்களின் சமூக நோக்கு அவர்ளது மருத்துவ முறையில் தெளிவாகப் புலப்படுகிறது. மனித குல வரலாற்றின் தொடக்கம் முதல் இன்றுவரை ஆன்மீகத்திற்கும் உடல் நலத்திற்கும் இடையே கண்ணுக்குப் புலப்படாத தொடர்பு ஒன்று தொடர்ந்து இருந்து வந்திருக்கிறது. நலம் என்ற சொல் ஆன்ம நலத்தைக் குறிப்பதாகவும் உடல் நலத்தைக் குறிப்பதாகவும் இருந்து வந்திருக்கிறது. சித்தர் மெய்யியலில் சிவனுக்கும் சீவனுக்கும் ஒரு தொடர்பு இருப்பது காட்டப்பட்டுள்ளது. அது அவர்களது மருத்துவ முறைகளிலும் உறுதி செய்யப்படுகிறது. சீவன் உடல் சார்ந்த நிலையில் வாதம், பித்தம், கபம் என்பதை தமிழில் வளி, அழல், ஐயம் என்பர். இம்மூன்று செயல்பாடுகளை உடையதாக இருக்கிறது".[110] இம்மூன்று செயல்பாடுகளும் சிவனது முத்தொழில்களான படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றோடு ஒப்பிடத்தக்கதாக அமைந்திருக்கின்றன.

அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் என்ற தந்திர மூதுரைதான் சித்த மருத்துவத்தின் இயற்கையிலிருந்து பிரிக்கமுடியாதவை என்ற எண்ணத்தின் மேல் எழுதப்பட்டது என்பது கருத்தாகும்.

சித்தர்களைப் பொறுத்தவரை உடம்பில் பல்வேறு மண்டலங்கள் ஒன்றோடொன்று இயந்து செயல்பட்டால் உடல் நலமாயிருக்கிறது என்று பொருள். அம்மண்டலங்களாவன: நரம்பு மண்டலம், சுரப்பி மண்டலம், மூச்சு மண்டலம், நோய் எதிர்ப்பு மண்டலம், சீரண மண்டலம் ஆகியனவாகும். மனிதனை எல்லைப் படுத்துகின்ற தொந்தரவு ஐந்து. அவை: நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு ஆகியன. இவற்றை வென்றுவிட்டால் ஒருவன் என்றும் பதினாறாக இளமையோடு இருக்கமுடியும்.

தமிழ்ச் சித்த மருத்துவத்தில் அகத்தியர், தேரையர் மிகவும் புகழ் வாய்ந்தவர்கள். சித்த மருத்துவ முறையில் மருந்தைத் தயாரிப்பதற்கு உப்புகள், உலோகங்கள், கனிமங்கள், நஞ்சுகள் மற்றும் வேறுபல கனிமவேதிப் பொருள்களும் மூலிகைகயும் பயன்படுத்தப்படுகின்றன. மருந்துச் சரக்குகளை ஆண் சரக்கு, பெண் சரக்கு என்று வகைப்படுத்தும் தன்மையும் சித்த மருத்துவத்தில் காணப்படுகிறது. மருந்து காலாவதியாகின்ற நேரங்களும் சித்தர்களால் வரையறுக்கப் பட்டிருக்கின்றன. சில சித்த மருந்துகள் ஐந்து நூற்றாண்டுகள் வரையிலும் கூடக் கெட்டுப் போகாமல் இருக்கும்.

சித்தர்களின் மருத்துவ நூல்கள் எண்ணற்றவை. அவை: நோய்க் குறியீடு, நோயறிதல் மருந்துவம், மருந்தியல், நச்சியல் முதலிய பல்வேறு செய்திகளை உள்ளிட்டவை. சித்த மருத்துவம் நோய்களைத் தீர்ப்பதற்கு மருந்துகள், இயற்கை மருத்தும், யோகம் முதலிய வழிகளைப் பின்பற்றுகிறது. நோயைத் தீர்ப்பதற்கு மட்டுமல்லாமல் நோயே வராமல் தடுப்பதற்கும் சித்தமருத்துவம் வழிக் காட்டுகிறது.

இவற்றைச் சித்தர்கள் தவநெறியில் வீடுபேற்றை அடைவதற்குப் பல்வேறு சித்துவகைகளைக் கூறி, அதன் மூலம் ஞானவழியில் இறைவனின் அருளைப் பெற்று விளக்கியுள்ளனர். உண்மையைத் தேடுகிறவர்கள் விடுதலையையும், சாவாநிலையையும் அடைவதற்காக அயராத முயற்சியை மேற்கொண்டவர்கள் சித்தர்கள். அந்நிலையை மனிதச் சமூகத்தினரும் பெறவேண்டும் என்னும் முற்போக்கு சிந்தனையை வளர்த்து பதியவைத்து சென்றுள்ளனர் என்பதற்கு இவர்களின் வாழ்வியலே மகத்தானதாக அமைந்துள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. இடைக்காடர், பா. 60.
2. மேலது, பா. 55.
3. பி.எ. சுப்பிரமணியம், திராவிட சிற்ப ரகசியம், பக். 328.
4. பொய்கையாழ்வார், நாலாயிரத்திவ்யபிரபந்தம்.
5. திருமூலர், திருமந்திரம், பா. 1253.
6. அகத்தியர் ஞானம், பா. 90.
7. சிவவாக்கியர், பா. 53.
8. மேலது, பா. 54.
9. பட்டினத்தார், பா. 4.
10. பாரதியார், பாரதியார் பாடல்கள், பா. 9.
11. மேலது, பா. 10.
12. கண்ணதாசன், அர்த்தமுள்ள இந்துமதம், ப. 105.
13. நோவிக். இ, சமூகமும் இயற்கையும், பா. 141.
14. திருமூலர், திருமந்திரம், பா. 2104.
15. காகபுசுண்டர் ஞானம், பா. 66.
16. பாம்பாட்டிச் சித்தர், அகப்பற்று நீக்கம், பா. 99.
17. மேலது, பா. 123.
18. பத்திரகிரியார், திருப்புலம்பல், பா. 126.
19. சிவவாக்கியர், பா. 9.
20.. கொங்கணர் வாலைக்கும்மி, பா. 95.
21. முகியத்தீன் சதகம், பா. 28.
22. பட்டினத்தார், திருஏகம்பமாலை, பா. 19.
23. ஆந்திரச்சித்தர் வேமன் பாடல்கள், பா. 26.
24. ஔவையார், ஔவைக்குறள், பா. 59.
25. முகியத்தீன் சதகம், பா. 35
26. மேலது, பா. 89.
27. திருமூலர், திருமந்திரம், பா. 173.
28. தாயுமானவர், திருப்பாடல் திரட்டு, உடல் பொய்யுறவு, பா. 57.
29. பட்டினத்தார், பா. 24.

30. பத்திரகிரியார், ஞானப்புலம்பல், பா. 47.
31. மேலது, பா. 79.
32. மேலது, பா. 54.
33. கொங்கணர் வாலைக்கும்மி, பா. 79.
34. மேலது. 51.
35. முகியத்தீன் சதகம், பா. 36
36. மேலது, பா. 37.
37. மேலது, பா. 38.
38. மேலது, பா. 95.
39. மேலது, பா. 96.
40. பட்டினத்தார், பா. 74.
41. மேலது, பா. 31.
42. மேலது, பா. 14.
43. இடைக்காடர், பா. 52.
44. முகியத்தீன் சதகம், பா. 45.
45. மேலது, பா. 38.
46. மேலது, பா. 58.
47. மேலது, பா. 63.
48. மேலது, பா. 75.
49. திருமூலர், திருமந்திரம், பா. 145.
50. மேலது, பா. 168.
51. மேலது, பா. 177.
52. பட்டினத்தார், திருஏகம்பமாலை, பா. 13.
53. கொங்கணர், வாலைக்கும்மி, பா. 80.
54. முகியத்தீன் சதகம், பா. 63.
55. மேலது, பா. 49.
56. மேலது, பா. 92.
57. திருமூலர், திருமந்திரம், பா. 231.
58. சிவவாக்கியர், பா. 236.
59. கொங்கணர், வாலைக்கும்மி, பா. 103.
60. முகியத்தீன் சதகம், பா. 51.

61. மேலது, பா. 19.
62. மேலது, பா. 61.
63. மேலது, பா. 89.
64. மேலது, பா. 67.
65. திருமூலர், திருமந்திரம், பா. 2066.
66. அகத்தியர் ஞானம் - 9, பா. 4.
67. பட்டினத்தார், பா. 20.
68. அகத்தியர் ஞானம் - 9, பா. 4.
69. சிவவாக்கியர். 513.
70. மேலது, பா. 224.
71. மேலது, பா. 133.
72. மேலது, பா. 183.
73. முகியத்தீன் சதகம், பா. 2.
74. மேலது, பா. 17.
75. மேலது, பா. 91.
76. திருவருட்பா, ஆறாம் திருமுறை, பா. 5255.
77. திருமூலர், திருமந்திரம், பா. 610.
78. மேலது, பா. 960.
79. முகியத்தீன் சதகம், பா. 8.
80. மேலது, பா. 61.
81. கடுவெளிச் சித்தர், ஞானம், பா. 32.
82. திருமூலர், திருமந்திரம், பா. 531.
83. திருமந்திரம், பன்னிரு திருமுறைகள் தொகுதி - 14, 549.
84. காகபுசுண்டர், ஞானம், பா. 80: 18.
85. மேலது, காவியம், பா. 33: 33.
86. திருமூலர், திருமந்திரம், பா. 534
87. முகியத்தீன் சதகம், 5.
88. பத்திரகிரி. ஞானம், மெய்ஞானப் புலம்பல், பா. 201.
89. மேலது, பா. 145.
90. சட்டைமுனி, முன் ஞானம் - 100, பா. 65.
91. திருமூலர், திருமந்திரம், பா. 599.

92. முகியத்தீன் சதகம், பா. 41.

93. மேலது, பா. 42.

94. மேலது, பா. 46.

95. மேலது, பா. 50.

96. மேலது, பா. 42.

97. திருமூலர், திருமந்திரம், பா. 648.

98. காகபுசுண்டர். ஞானம் - 80, பா. 56.

99. சட்டைமுனி, பின்ஞானம் 100, பா. 92

100. முகியத்தீன் சதகம், பா. 35.

101. மேலது, பா. 42.

102. திருமூலர், திருமந்திரம், பா. 1129.

103. இடைக்காடர், பா. 105.

104. திருமூலர், திருமந்திரம், பா. 229.

105. சிவவாக்கியர், பா. 135.

106. திருமூலர், திருமந்திரம், பா. 197.

107. பத்திரகிரியார், பா. 14.

108. திருமூலர், திருமந்திரம், பா. 273.

109. மேலது, பா. 252.

110. க.நா. குப்புசாமி முதலியார், சித்தமருத்துவம் பகுதி - 1, ப. iii

# முடிவுரை

சித்தர் மரபு என்பது முழுக்க இந்திய மரபுதான் என்பது அறுதியிட்டுக் கூறமுடியும். ஒருவகையில் சித்தர்கள் கடவுளை மறுக்காத கிளர்ச்சிக்காரர்கள். சமயம் என்பது ஒரு நெறிமுறைகளால் ஆன ஒரு நிறுவனமன்று; அ்.து ஓர் உள்ளுணர்வு; பரம்பொருளுடனான ஒரு நேர்முகச் சந்திப்பின் அனுபவம் என உணர்த்தப்பட்டுள்ளது.

சித்தர்கள் கூறும் கருத்தை விவரித்துப் புரியும்படி சொல்லாமல் மறைத்துக் கூறியிருப்பதால் பலருக்கு நூல்களின் உண்மை கருத்து புலனாகாமல் போகிறது. இதனால் குழப்பமடைந்து ஆன்மீகமாவது, சித்தர்களாவது என்று விட்டுவிலகி விடுகிறார்கள். அதனால் வேறு வகைகளில் சிக்கித் தவிக்கிறார்கள். வாழ்க்கை அவதிகளுக்குள்ளும் நோய்களுக்குள்ளும் அகப்பட்டு சிரமத்திற்கு ஆளாகிறார்கள். ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்வில் நரை, திரை, மூப்பு, சாக்காடு என்பது மறுக்கமுடியதாத ஒன்றாகும். இதிலிருந்து மனித உடல் உறுப்புகள் அழியாமல் சிதறாமல் பாதுகாக்கும் வழிமுறைகளை யோகம், வைத்தியம், வானியல், ஆன்மீகம் எனும் முறையில் கையாண்டு உலகிற்கு எடுத்து உரைத்துள்ளனர். சமூக நோக்கை உள்ளடக்கிய சித்தர் மெய்யியல் உலக அளவிலான ஒரு புதிய மானுடக் கொள்கையின் ஆரம்பமாக அமைந்துள்ளது என்பது நிருபிக்கப்பட்டுள்ளது.

ஆசனங்கள் பிராணயாமம் எனப்படும் வாசியோகத்திற்கு அடிப்படையாக அமைகின்றன. யோகப் பாதையில் செல்லும் யோகியர்கள் தியான விளைவுகளைப் பெறத் துணை புரிந்த ஆசனங்கள் இக்காலத்தில் உடலுக்கு வலிமையினையும், உள்ளத்திற்குப் பயிற்சியினையும் தருவதற்காகவே பயன் படுத்தப்படுகின்றன என்பது ஆராயப்பட்டுள்ளது.

ஆன்மிகத்தில் ஆழமாகக் கால்கொண்டதாக, எந்தக் கருத்துக்கும், நாட்டுக்கும், சமயத்துக்கும், சமூகக் குழுவுக்கும் கட்டுப்படாமல் ஆன்மிகக் கருவூலமாகத் திகழ்கிறது என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

தீயனவற்றை விலக்கி நல்லனவற்றைக் கொண்டு, வாசியினை நிலைப்படுத்தி, பிறசெயல்களில் கருத்தினைச் செலுத்தாது, ஒப்பற்ற ஒன்றில் நிலைக்கச் செய்து, எந்தவித அசைவுகளுமின்றித் தானே தானாக நின்று, நிருவிகற்ப வாழ்வில் நிலைக்கச் செய்வது என்னும் இவ்வெட்டு அங்கங்களையும் கொண்டதாக விளக்குகின்ற காரணத்தால் இவ்யோகத்தை ‘அட்டாங்கயோகம்’ என்ற நிலையில் சித்தர்கள் விளங்கினர் என்பது தெளிவாகிறது.

பத்திரகிரியாரைக் கள்வனென்று கழுவேற்றும் பொழுது கழுமரம் பற்றி எரிந்ததும், இறைவனின் திருவருள் பெற்ற திருஞானசம்பந்தர் பூம்பாவையின் சாம்பலை மீண்டும் பெண்ணாக்கியதும், திருமருகலில் கண் அரவு தீண்டி இறந்த வணிகன் உடலை உயிர்ப்பித்ததும், அப்பர் அரவு தீண்டிய சிறுவனை உயிருடன் மீட்டதும், சுந்தரர் முதலை உண்ட சிறுவனை வாலிபனாக மீட்டதும், கடுவெளிச் சித்தர் இரும்பை இறைவனைக் கோபித்துப் பிளந்து விழச் செய்ததும் இத்தகைய மரண மாற்றும் சக்தியாலேயே நடைபெறும் என்பது அறிந்துக்கொள்ளமுடிகிறது.

உருமற்ற இறைவனுக்குரிய ‘சிவபெருமான்’ என்ற பெயரை உருவமுள்ள ருத்திரனைக் குறிக்குமாறு சித்தர்கள் கூறிவருவதால் இறைவன் வேறு தெய்வம் வேறு என்ற உண்மை மறைந்துவிட்டது. மனித உடலை இயக்குகின்ற சீவன் என்ற உயிர் சிவலிங்கம் போன்ற ஒளி வடிவமுடையது. உண்ணாக்கு மேலே உச்சிக் குழிக்குக் கீழே அமைந்துள்ள பிரம்ம மந்திரம் என்ற நுண்ணிய நரம்பினுள்ளே சீவன் ஒளிர்கின்றது.

மனிதனுக்கு தூல தேகத்தைப் போலவே, சூக்கும சரீரம் என்ற ஒளி சரீரமும், காரண சரீரம் என்ற பஞ்சபூத தேகமும் உள்ளன. சூச்சும சரீரம் பிரம்ம மந்திரத்தினுள் சீவனுக்குக் கீழே அமைந்துள்ளது. காரண சரீரம் அமைந்துள்ள இடம் பிரம்ம ரகசியமானது.

குரு உபதேசத்தால் காரண சரீரத்தைக் கண்டு ஞானப் பயிற்சி எனும் குண்டலினி யோகத்தின் பயிற்சியினால் சூக்கும சரீரத்தை உயர்த்தி சீவனோடு

உட்புகுவதற்கு பிறப்பை அறுக்கும் நிலையே ‘முக்திநிலை’ என்பதும், சித்தர்கள் ஞானிகள் ஒடுங்குவது தூய்மையான மரணமாகும். மற்ற அனைவரும் உயிர் துறப்பது அசுத்த மரணமாகும் என்பதும் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

ஞானமார்க்கத்தில் ஈடுபடுவோர் கொலை, களவு, போதைப் பொருள் உண்ணல், மாற்றான் மனைவியை அபகரித்தல், பொய்ச் சாட்சியம் கூறுதல் ஆகிய தீச்செயல்கள் செய்தல் கூடாது. சித்தர்களும் ஞானிகளும் மண்ணுக்குள் அடக்கம் செய்யப் பெற்ற பின்னரும், சூச்சும சரீரத்தோடு உலாவருவர்.

ஆழ்வார்களும், நாயன்மார்களும், தாயுமானவரும், முகமதியர்களும், கிறித்துவர்களும் தந்து செல்வது ‘பத்தி’ தரும் ஒருமைப்பாட்டை எண்ணி வியக்கச் செய்வதாகக் கருதமுடிகிறது.

இல்லறநெறி என்னும் நல்லற நெறியில் நின்று உடல், உள்ளம் முதலானவற்றைத் தூய்மை செய்து நோய்களை நீக்கி, நம்முடைய அன்றாடச் செயற்பாடுகளைச் சீர்மைப்படுத்தி, சமுதாய நடைமுறைகளையும் நன்கு உணர்ந்து எல்லோருக்கும் நன்மையளிக்கும் விதத்தில் வாழ்வதே பேரின்பத்தை அடைய வழிவகுக்கும். நம்முடைய ‘பெருவாழ்வு’ வினையும் நிலை நிறுத்துகிறது.

மனித ஆற்றல் மாபெரும் ஆற்றல். ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ளாற்றல்கள் பல புதைந்து கிடக்கின்றன. மனித ஆற்றல், மாபெரும் ஆற்றல் என்பதை நேரடியாக உணர்த்தாமல் மறைமொழியாகச் சமுதாயத்திற்கு உணர்த்தியவர்கள் சித்தர்கள். இத்தகைய ஆற்றலை அகழ்ந்து எடுப்பதே இவ்வாய்வேட்டின் நோக்கமாக அமைந்துள்ளது.

உயிர்ப் பறவையின் கூடாகவும், உணர்வுகளின் வீடாகவும் விளங்கும் உடலை ஊறு வாராமல் காத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகப் பல இருக்கை முறைகளையும் அட்டாங்கயோகம், குண்டலினி முதலான பல யோகங்களையும் உருவாக்கித் தந்த உயிர் வளர் கலைஞர்கள் சித்தர்கள் என்பது ஆராயப்பட்டுள்ளது. மனித உடலில் 72 ஆயிரம் நாடிகள் உள்ளன.

மனிதர்களைக் காட்டும் நோய்நொடிகளும் அத்தனை உள்ளன. அந்நோய்களை நீக்கவல்ல ஒரே மருத்துவம் சித்தமருத்துவம் என்பதை உணர்த்தியவர்கள் சித்தர்கள்.

சாகாக்கலை என்னும் வாழ்க்கைக் கலையே உலகோர்க்கு உணர்த்தியதோடு தாமும் வாழ்ந்துகாட்டிய தவசீலர்கள் சித்தர்கள் என்பதை உணர்த்தும் யோகநெறிகளைக் கைக் கொண்டு வாழ்தல் முறை விளக்கப்பட்டுள்ளது.

இல்லறத்தார், துறவறத்தார் ஆகிய இருதிறத்தார்க்கும் வாழ்வியல் நெறியில் உண்மையான பக்திக்கும், போலியான பக்திக்கும் வேறுபாடு உணர்த்திய ஆன்மிக ஞானிகள் சித்தர்களே என்பதை அறிந்து அவர்தம் வழிநின்று ஒழுகுதல் வேண்டும் என்ற நெறி விளக்கப்பட்டுள்ளது. உருவவழிபாடு, ஆரவாரச் சடங்குகள், பொருந்தாத சம்பிரதாயங்கள், மூடநம்பிக்கைகள் முதலானவற்றை எடுத்துக்காட்டி, பக்திநெறியில் புத்தொளி பரப்பிய புரட்சிப் பக்தியாளர்கள் சித்தர்கள் என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

வான்வெளிச் செல்லுதல் கூடுவிட்டுக் கூடுபாய்தல், பஞ்சலோகங்களையும் பொன்னாக்குதல் முதலான சித்து விளையாட்டுகளையும் செய்து அவற்றின் மூலம் மக்களை ஈர்த்து, ஒழுக்கநெறிகளையும், உடலோம்பும் முறைகளையும் மக்களுக்குக் கற்றுக் கொடுத்த உளவியல் நிபுணர்களாகத் திகழ்ந்தவர்கள் சித்தர்கள் என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பதை உணர்ந்து, சாதிசமயச் சண்டைத் தவிர்த்து ஒருமைப்பாட்டுடன் வாழ முற்படுதல், 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் பொதுநோக்குப் பெற்று உயர்தல், எளிய அறச் செயல்களை அறிந்து பின்பற்றுதல், இன்சொல் பேசுதல் அறமெனக் கைக்கொள்ளுதல், மக்களுக்குச் செய்யும் தொண்டே இறைவனுக்குச் செய்யும் தொண்டு என்பதை உணர்ந்து, சமுதாயத் தொண்டாற்றும் மனப்பான்மையை வளர்த்துக் கொள்ளுதல் என்னும் பாங்கினை உணர்த்தியவர்கள் சித்தர்கள் என்பது வலியுறுத்தப்பட்டுள்ளது.

ஒழுக்கநெறியே உடலையும், உயிரையும் ஓம்பும் நெறி என்பதை அறிந்து பின்பற்றி வாழ்க்கையைச் செம்மையாக்கிக் கொள்ள இயலும். பகுத்தறிவு நெறி நின்று பொய்யான சடங்குகளையும், போலியான சம்பிரதாயங்களையும் புறந்தள்ளி, உண்மையான பக்திநெறியை உணர்ந்து பின்பற்றலும் இயலும் எனும் மார்க்கத்தைத் தெளிவாக உணர்த்தியவர்கள் சித்தர்கள் என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

சித்தர்களின் தத்துவமாக அட்டமாசித்தி, இரசவாதம் முதலியவற்றால் உடலின் தட்பவெப்பநிலையைச் சீர்ப்படுத்துவதோடு உற்சாகமாகச் செயல்படவும், நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு அணுகாமல் காக்கவும், தம்மைத் தாமே உணர்ந்து, தன்னம்பிக்கையைப் பெருக்கிக் கொண்டு வாழவும் வலியுறுத்தியவர்கள் சித்தர்கள் என்பது அறிவுறுத்தப்பட்டுள்ளது.

மனிதநேயமும், சமத்துவமும் சகோதரத்துவமும் பெருகி, ஓர் உலகு என்னும் இன்றைய கோட்பாடு வெற்றிபெறச் சித்தர்கள் காட்டும் வாழ்வியல் கருத்துகள் பெரிதும் தேவை என்பதே இவ்வாய்வின் வெளிப்பாடும் பயன்பாடும் ஆகும்.

# துணைநூற்பட்டியல்


## மூலச் சான்றுகள்

கோவேந்தன் த. — **சித்தர் பாடல்கள்,**
பூம்புகார் பாடல்கள்,
63, பிரகாசம் சாலை,
சென்னை, முதற்பதிப்பு - 1976.

முருகேசன் சி.எஸ். — **சித்தர் பாடல்கள் (பெரிய ஞானக் கோவை)**
சங்கர் பதிப்பகம்,
21. பீச்சர்ஸ் கில்டு காலனி,
இராஜாஜி நகர் விரிவு,
வில்லிவாக்கம், சென்னை.
முதற்பதிப்பு - 2004.

## துணைமைச் சான்றுகள்

அங்கமுத்து முதலியார், (ப.ஆ.,) — **கருவூரார் மாந்திரிக அட்டமா சித்து**
வெண்பேடு கோவிந்தநாயகர்சன்ஸ் வெளியீடு,
1923.

அப்பாதுரை, கா., (மொ.ஆ.,) — **இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு**
கில்பர்ட் சிலேட்டர் கழகம்,
சென்னை- 1, 1976.

அப்பைய தீட்சிதர் — **யோக தர்ப்பணம்**
ஓரியண்டல் ரிசர்ச் இண்ஸ்டிடியூட்
மைசூர் - சுவடி எண். B 1021/1.

அப்துல் ரகுமான் (ப.ஆ.மற்றும்கு.ஆ) — **குணங்குடியார் பாடற்கோவை**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை, 2002.

அம்பிகானந்தர் **ஞானோதயம்**
தஞ்சை சரசுவதி மகால் நூலகம், தஞ்சை.

அருணாசலம்.மு., **தமிழ் இலக்கிய வரலாறு**
மாயூரம்: காந்தி வித்யாலயம், 1969.

அலிபாவா உ. **சூ.்.பி மெய்ஞ்ஞானி குணங்குடி மஸ்தான் சாகிபு**
சாகித்திய அகாதெமி
புதுடெல்லி, முதற்பதிப்பு - 2012.

அலிபாவா உ. **தமிழில் இஸ்லாமியச் சதக இலக்கியங்கள்**
வளர்தமிழ்ப் பதிப்பகம்,
13 - 1, சையதி சாஹிப் தெரு,
காஜாநகர், திருச்சி, 620 020.
முதற்பதிப்பு - 2007.

ஆறுமுகசுவாமிகள் (பதி): **ஞானவெட்டி,**
பரப்பரம்ம முத்ராச்ரசாலை, சென்னை.

இராசமாணிக்கனார், மா., **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை, 1970.

இராமநாத பிள்ளை.ப., (உரை) **திருமந்திரம்**
கழக வெளியீடு, சென்னை

இராமநாதபிள்ளை.ப., **திருமந்திரம் மூவாயிரம் (முதல் பகுதி)**
கழக வெளியீடு, சென்னை -1. 1962.

இராதாகிருஷ்ணன் **நாடிநூல்,** சென்னை

இராதாகிருஷ்ணன் — **ஆனந்தகந்தம்**
சரசுவதிமகால் நூலக வெளியீடு,
தஞ்சாவூர், 1952.

இராஜரத்தினமுதலியார் — **புலிப்பாணி சோதிடம்,**
**தாய்மகணேசன் - 300**
மலர்மகன் விலாசம் பிரஸ்,
சென்னை - 1, 1963.

இலக்குமணன் — **வேதியியல்**
தமிழ்பாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை.

முனைவர்இளமதி
சானகிராமன், க., — **சித்தர் இலக்கியம்**
கோகுலம், 2, கலைவாணிநகர்,
பெத்திசெட்டிப் பேட்டை
புதுச்சேரி – 8, மறுபதிப்பு - 2007.

இராசாராம் துரை
**(உ.ஆ.,)** — **குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள்**
**(மூலமும் உரையும்),**
முல்லை நிலையம்,
9, பாரதிநகர், முதல் தெரு,
தி. நகர், சென்னை - 17.
முதற்பதிப்பு - 1998.

உத்தமராயன், க.சு., — **சித்தர் அறுவை மருத்துவம்,**
**தேரையர் மருந்துப் பாரதம்**
**(மூலமும் உரையும்)**
தமிழக அரசு வெளியீடு
சென்னை.

ஊரன் அடிகளார் — **திருவருட்பா**
சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம்,
வடலூர், 1989.

ஔவையார் — **விநாயகர் அகவல்**
இரண்டாம் பதிப்பு - 1958.

கண்ணப்பர், ஆ.இரா., — **நம்நாட்டு மூலிகைகள்**
**பாகம் - 1 முதல் 7 வரை,**
**வைத்திய சிந்தாமணி,**
**பரம்பரை வைத்தியம்,**
**சித்த வைத்திய பதார்த்த குணவிளக்கம்,**
மூலிகைமணி வெளியீடு, வேலூர்.

கண்ணுசாமி பிள்ளை, (ப.ஆ.,) — **பதார்த்த குணபாடம்**
பி. இரத்தின நாயகர் சன்ஸ் வெளியீடு
சென்னை.

கதிரைவேற்பிள்ளை.நா, — **தமிழ்மொழி அகராதி,**
ஏசியன் ஏஜுகேஷனல் சர்வீசஸ்,
10 ஆவது பதிப்பு, சென்னை - 1998.

கல்யாண சுந்தரனார் திரு.வி.க., — **பட்டினத்தார் பாடல்கள்**
முல்லை நிலையம்,
சென்னை, 1998.

கிருட்டினன், க.ரா., — **மருந்துகளும் பயன்களும்**
நூலாசிரியர் பதிப்பு,
சென்னை.
1977.

கிருபானந்தவாரியார் — **திருப்புகழ் தொகுதி: 1 - 9**
அமிர்தம் வெளியீடு, சென்னை -2.

கிருஷ்ணமூர்த்தி. டி., — **சித்த மருத்துவ வினாவிடை**
வளர்மதி மெடிக்கல் சென்டர்
பொதக்குடி.

குப்புசாமி முதலியார் — **சித்த மருத்துவம்,**
தமிழக அரசு வெளியீடு,
1954.

குப்புசாமி முதலியார் — **சித்த வைத்தியத் திரட்டு**
பாரி நிலையம், சென்னை. 1984.

கோவேந்தன். த. — **சித்தர் பாடல்கள்**
பூம்புகார் பிரசுரம்
சென்னை - 1976.

சண்முகவேலன், — **சித்த வைத்திய வினா விடை**
திருமூலர் மருத்துவ மன்றம் வெளியீடு
சென்னை – 1, 1958.

சண்முகவேலன் ஆ., — **பாலயோகி,**
சக்தி நிலையம்
சென்னை - 10.
1964.

சண்முகடீவலு, ம., — **சித்த மருத்துவ நோய் நாடல்,**
**நோய் முதனாடல் திரட்டு**
தமிழக அரசு வெளியீடு, 1967.

| | |
|---|---|
| சரவண முத்துப்பிள்ளை.வா (தொ.ஆ.) | **சித்தர் பாடல்கள் - பெரிய ஞானக்கோவை** திருமகள் விலாசம் அச்சகம், சென்னை - 2006. |
| சிதம்பர ராமலிங்கம் பிள்ளை. வி. & சாம்பசிவப்பிள்ளை. எம்., | **திருநான்மறை விளக்க ஆராய்ச்சி** பாரி நிலையம், சென்னை - 1969. |
| சிதம்பரனார், சாமி. | **சித்தர்கள் கண்ட விஞ்ஞானம்** இலக்கிய நிலையம், சென்னை 4 - ஆம் பதிப்பு, 1974. |
| சிவகாமி ச. | **தமிழ்ச் சதக இலக்கியம்** உலகத் தமிழ்க் கல்வி இயக்கம், 33, திருமலை நகர் இணைப்பு, பெருங்குடி, சென்னை - 96. முதற்பதிப்பு - 1985. |
| சிவப்பிரகாச தேசிகர் (உ.ஆ) | **திருமந்திரமாலை 300** அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், சிதம்பரம். 1976. |
| சிவராஜபிள்ளை | **கம்பராமாயணக் கௌஸ்துபம்** சென்னைப் பல்கலைக்கழகம் சென்னை - 1979. |
| சுந்தரமகாலிங்கம் (ப. ஆ.,) | **கோரக்கர் மலைவாகடம்** குரு. இராமசாமிக்கோன் வெளியீடு மதுரை. 1968. |

செயராமன் ந. வீ., **சதக இலக்கியங்கள்**
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம், 1966.

சோமசுந்தரம் **கலித்தொகை, குறுந்தொகை, அகநானூறு**
கழக வெளியீடு,
சென்னை, 1975, 1972, 1970.

சோமு. மீ.ப., **சித்தர் இலக்கியம் (மூன்று தொகுதிகள்)**
அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு,
அண்ணாமலை நகர், சிதம்பரம்,
முதற்பதிப்பு - 1988.

தர்மராஜ் நா. **சமூகமும் இயற்கையும்**
முன்னேற்றப் பதிப்பகம்,
மாஸ்கோ நியூ செஞ்சுரி ஹவுஸ் பி.லிட்,
சென்னை - 1983.

தாயுமானவர் **திருப்பாடற்றிரட்டு**
இரத்தின நாயகர்,
சென்னை

திருமூலர் **திருமந்திரம்**
திருவாவடுதுறை ஆதீனம்,
திருவாவடுதுறை,
மூன்றாம் பதிப்பு - 2003.

தியாகராசன். இரா., **தேரையர் மகா கரிசல், (மூலமும் உரையும்)**

| | |
|---|---|
| | **தேரையர் பாடல் திரட்டு (மூலமும் உரையும்)**<br>அன்புச் செல்வி அச்சகம்,<br>சென்னை, 1974. |
| தியாகராசர்.இரா., | **தேரையர் மருந்துப் பாரதம்**<br>எஸ். எஸ். ஆனந்தம் வெளியீடு<br>சென்னை - 17, 1975. |
| தியாகராசர்.இரா., | **தேரையர் வெண்பா (மூலமும் உரையும்)**<br>போகர் ஏழாயிரம்<br>தமிழக அரசு வெளியீடு, 1974. |
| தியாகராயர்.ஆர் | **போகர் அருளிச்செய்த வரும சூத்திரம் 131**<br>சித்த வைத்திய சங்கம், தாராபுரம். |
| திருமலைசாமி பிள்ளை | **அகத்தியர் பரிபூரணம் 400 மூலமும் உரையும்**<br>சரஸ்வதி புத்தக சாலை<br>கொழும்பு, 1960. |
| தெய்வநாயகம்,சி.கோ | **சித்தர் சிந்தனைகள்,** தஞ்சாவூர் 1979. |
| நாராயணன், க. | **சித்தர் தத்துவம்**<br>தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1988. |
| நயினார் முகம்மது சி. | **மஸ்தான் சாகிபும் தாயுமானவரும் ஓர் ஒப்பு நோக்கு**<br>உமறு பதிப்பகம்,<br>6, பேராசிரியர் குடியிருப்பு, |

புதுக்கோட்டை நெடுஞ்சாலை, திருச்சி-20.
முதற்பதிப்பு - 1993.

நாராயணசாமி ஐயர் — **நற்றிணை நானூறு**
கழக வெளியீடு
சென்னை - 1, 1967.

நாராயண வேலுப்பிள்ளை — **திருமூலர் அருளிச்செய்த அற்புதங்கள் (பத்தாம் திருமுறை), பன்னிரு திருமுறைகள்)**
வர்த்தமான் பதிப்பகம்,
சென்னை, இரண்டாம் பதிப்பு - 1998.

பாம்பாட்டிச் சித்தர் — **பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள்**
திருவாவடுதுறை ஆதீனம்,
திருவாவடுதுறை,
மூன்றாம் பதிப்பு - 2003.

பாலகிருஷ்ணமுதலியார் — **மூலிகை ஜால ரத்தினம் பாகங்கள் 1 - 2**
பூ,சு.கு. கோவிந்தராஜ் முதலியார்,
சென்னை, 1958.

பாலசந்தர், ஆ. — மெய்ஞ்ஞான வெளிப்பாட்டில்
குணங்குடி மஸ்தான் சாகிப்
முகியீத்தீன் சதகம்,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சி -24.
2013.

பாலசுப்பிரமணியன்.சி — **தமிழ் இலக்கிய வரலாறு,**
நறுமலர்ப் பதிப்பகம், சென்னை. 29.

பைகாங்.கே.எம்., **உடலியங்கியல்**
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.

பாஸ்கரன். கே., **குடும்ப வைத்தியம்**
மதுரை முதலியார் பதிப்பு
சென்னை, 1935.

மாடசாமி, ச. **பாம்பாட்டிச் சித்தர்**
'ஓ' பதிப்பகம், மதுரை, 1980.

மணவை முஸ்தபா **இளைஞர் இஸ்லாமியக் கலைக் களஞ்சியம்**
மீரா பப்ளிகேசன்,
ஏ.ஈ. 103, அண்ணாநகர்,
சென்னை - 600 040.
முதற்பதிப்பு - 1991.

மாணிக்கவாசகம், இரா. **நம் நாட்டுச் சித்தர்கள்**
அன்னை அபிராமி அருள் வெளியீடு
சென்னை - 30.
முதற்பதிப்பு - 1978.

முகம்மது அப்துல்லாசாகிபு (ப.ஆ.,) **தேரையர் யமக வெண்பா**
தமிழ்நாடு அரசு வெளியீடு, 1973.

முருகேசமுதலியார்,க.ச., **பொருட்பண்பு நூல் குணபாடம்**
தமிழ்நாடு அரசு வெளியீடு
மூன்றாம் பதிப்பு - 1969.

முருகேசன், சி.எஸ்., **சித்தர்களின் சாகாக்கலை,**
**சித்தர் கண்ட இறைமை**
சங்கர் பதிப்பகம்,

21, டீச்சர்ஸ் கில்ட் காலனி,
வில்லிவாக்கம். சென்னை - 600 049,
முதற்பதிப்பு: 2013.

ராமசந்திரன்.எஸ்.பி., (பதி.,) — **அகத்தியர் ஞான அமுதம்**
தாமரை நூலகம்,
சென்னை - 1995.

ராமசுப்பிரமணியம் — **ஸ்ரீஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை**
திருமகள் நிலையம்,
வெங்கட் நாராயணசாமி,
சென்னை – 17, 2003.

ராமநாதன் அரு. — **ஞானக்கோவையென வழங்கும் சித்தர் பாடல்கள்**
பிரேமா பிரசுரம்,
35, ஆற்காடு சாலை,
கோடாம்பாக்கம், சென்னை,
பன்னிரெண்டாம் பதிப்பு - 2004.

வடிவேலு செட்டியார் (ப.ஆ.,) — **மூலிகை ஜாலரத்தினம்**
பி. இரத்தின நாயகர் சன்ஸ் வெளியீடு
சென்னை - 1.

வடிவேலு முதலியார் மா. (உ.ஆ.), — **குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் (உரையுடன்)**
முல்லை நிலையம்,
சென்னை, 2004.

வடிவேலு முதலியார் — **சிவவாக்கியர் பாடல்கள் (உரையுடன்)**
இரத்தின நாயகர், சென்னை

| | |
|---|---|
| வரதராசனார் மு. | **திருக்குறள் (உரை),**<br>கழக வெளியீடு, திருநெல்வேலி. (ஆ.இ) |
| வில்சன் அமல்ராஜ்.ஜி | **கடுவெளிச்சித்தர் பாடல்கள்**<br>சித்தர் பாடல்கள் ஆய்வகம்,<br>வேலூர், 2005. |
| வேங்கடவன் | ஸ்ரீவிஷ்ணுப்புராணம்<br>ஸ்ரீசௌபகப் பதிப்பகம்,<br>தியாகராயநகர், சென்னை – 17, 2004 |
| வேணுகோபால்.பு.மூ. | **உடல் தத்துவம்**<br>தமிழ்நாடு அரசு வெளியீடு, 1968. |
| ஹபீப் முஹம்மத்<br>கே.வி.எஸ்.<br>(தொ.ஆ) | **வேதவரிகளும் தூதர் மொழிகளும்**<br>இஸ்லாமிய நிறுவன டிரஸ்ட்,<br>78, பெரம்பூர் நெடுஞ்சாலை,<br>சென்னை - 600012.<br>இரண்டாம் பதிப்பு - 1998. |
| ஆ.பெ.இ., | **குர்ஆன்மஜீத்**<br>திருக்குர்ஆன் (மூலமும் உரையும்)<br>ஹாஜி முஹம்மது லிட்டரி &<br>சாரிடபிள் டிரஸ்ட், ‘பர்மா ஹவுஸ்’<br>97, பவளக்காரத் தெரு,<br>சென்னை - 600 018. |
| ஆ.பெ.இ., | **பதினெண் சித்தர்கள் நாடி சாஸ்திரம்**<br>இரத்தின நாயகர் சன்ஸ் வெளியீடு<br>சென்னை, 1938. |

ஆ.பெ.இ., **அகஸ்த்தியர் பூரண சூத்திரம்**
தஞ்சை சரசுவதி மகால் நூலகம்.

ஆ.பெ.இ., **யோகஞான சாத்திரத் திரட்டு**
(சித்தர் பாடல்களின் திரட்டு முதல் பக்கம் இல்லாததால் ஆசிரியர், பதிப்பு, தேதி முக்கிய விவரமில்லை. பக். 271 - 502 வரை மட்டுமே உள்ளது) சரசுவதி மகால் நூலகம், தஞ்சை.

**தமிழ்ப் பேரகரமுதலி (ஏழு தொகுதிகள்)**
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 1979.

சித்தர் களஞ்சியம்,
நர்மதா பதிப்பகம்,
இந்திய ஆய்வியல் துறை, கலைப்புலம்,
மலாய்ப் பல்கலைக்கழகம்,
கோலாலம்பூர் 50603.
மலேசியா.

Shanmugavelan, A. **Siddhar's Science of Longevity and Kalpa Medicine,**
sakthi Nilayam, Madras - 10, 1963.

Tamil Lexicin, vol. III, Part I,
Madras University, Madras.

vidyadhar Vaman Bhlde, A cincise sanskrit - English Dictionary. Madras.

சாவி, வார இதழ், 16. 08. 1979.

# பின்னிணைப்பு

## அரிய மருத்துவ மறைமொழிகள்

| **குழூஉக் குறி** | **பொருள்** |
| --- | --- |
| இரவி | பொன் |
| இரசம் | வேந்தன் |
| மால்மனைவி | அரிதாரம் |
| நாற்றம் | கந்தகம் |
| வழலை, சோதி | மூப்பு |
| சர்க்கரைக் கொல்லி | சிறுகுறிஞ்சான் |
| மாய்க்காய்ப்பால் | அமிர்தம் |
| ஓடும்குதிரை, அகக்கால் | பிராணவாயு |
| ஆனந்தத் தேறல் | யோக அமுரி |
| பிள்ளை வளர்த்தி | வசம்பு |
| தாய் | கடுக்காய் |
| கானக்குதிரை | மாமரம் |
| தோற்பை | உடல் |
| கல் விந்து | சிலாசத்து |
| தண்ணீர் தேற்றி | தேற்றான் கொட்டை |
| பழச்சாறு | எலுமிச்சைச் சாறு |
| அமிர்தப்பால் | தாய்ப்பால் |

## மருந்து வகையும் காலக்கெடுவும்

| **மருந்து வகை** | **காலக்கெடு** |
| --- | --- |
| தைல வகைகள் | ஓராண்டு |
| மெழுகு, குழம்பு | ஐந்தாண்டுகள் |
| இரசப்பதங்கம் | பத்தாண்டுகள் |
| செந்தூரம் | எழுபத்தைந்தாண்டுகள் |
| நீறு, கட்டு, களங்கு | நூறாண்டுகள் |
| சுண்ணம் | ஐந்நூறு ஆண்டுகள் |
| கற்பம், குரு, குளிகை | காலக்கெடு கடந்தவை. |

## பாதரசப் பகுப்பு முறை

இரசம் செய்முறை - Hydrogyrum

இரசச் செந்தூரம் - Sulphide of Hydrogyrum

வீரம் செய்முறை - Subchloride of Mercury

பூரம் செய்முறை - Perchloride of Mercury

அரிதாரம் செய்முறை - Preparation of areseno sulphide

## புற மருந்து (மேனாட்டு மருத்துவம்)

கீறல் - Incission

குருதி வாங்கல் - Blood Letting

ஒற்றடம் - Fomentation

வர்த்தி வைத்தல் - Suppositors

ஊதல் - Blowing

பீய்ச்சல் - Syringing and Enemata

தொக்கணம் - Physiotheraphy

கட்டுதல் - Bandaging

கலிக்கம் - Eye drops

நாசிகாபரணம் - Snuffing

சட்டிகை - Cauterisation

பொட்டணம் - Medico Thermal application

புகை - Medicinal Fumigation

சீலை - Gauze

பொடி திமிர்தல் - Bathing Powders

மை - Eye application

பற்று - Poultice

வேது - Vapourisation

களிம்பு - Ointment.